ஞர்க்கினியர் கூறுவது அவர் காலத்திற்கு உள்ளாக எழுந்த மாறுதலைக் குறிக்கிறது. நன்னூலையும் காண்க. இதற்கேற்ற பாடபேதமும் தொல்காப்பியப் பிரதிகளில் ஏற்பட்டுவிட்டது.

**உரையாசிரியர்கள்.**—இப்போது கிடைக்கும் உரைகளைக் கொண்டு உரையாசிரியர்கள் தங்கள் உரைகளை எந்த ஆண்டில்தான் எழுதினார்கள் என்று வரையறுக்க முடியாமற்போனாலும் இவர்களை முன்பின்னாகவேனும் அவரவர்கள் வாழ்ந்த காலத்தையொட்டி வரிசைப்படுத்தலாம். இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்ற வரிசை இவர்கள் உரையிலே முன்னைய உரையாசிரியர்களைக் குறிப்பதாலேயே விளங்கிவிடுகிறது. கல்லாடரும் தெய்வச்சிலையாரும் ஒருவர் பெயரையும் குறிப்பதில்லை. இருந்தாலும் இவர்கள் எழுதிய உரைகள் மேலே கூறிய உரையாசிரியர்களுக்குப் பிந்தியே எழுந்தன எனலாம்.

**இன்றுவரை.**—இந்த உரையாசிரியர்களுக்குப் பின்னே தொல்காப்பியத்திற்குத் தொடர்ந்து உரை எழுத யாரும் முயலவில்லை. இக்காலத்தில் எழுந்த விளக்க உரைகள், மொழிபெயர்ப்புகள் முதலியவற்றை இங்கே எடுத்துக் கொள்ளவில்லை. நம் காலத்துக்கு முன்னிருந்த இலக்கணப் புலவர்கள் தம்முடைய தொல்காப்பிய ஆராய்ச்சியின் முடிவுகளை மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர், இராமானுஜ கவிராயர் முதலியவர்களைப்போலத் தாங்கள் நன்னூலுக்கு எழுதிய உரையிலேயே விளக்கி வந்தார்கள். இதற்குக் காரணம் நன்னூலை எல்லோரும் விரும்பிப் படித்ததுதான். வேறு சிலர், இலக்கண விளக்கம், இலக்கணக் கொத்து, தொன்னூல், முத்துவீரியம், பிரயோக விவேகம் முதலிய புதிய இலக்கண நூல்களை எழுதினார்கள்; இவர்களில் பலர் பழைய மேற்கோள்களைத் தாங்களே எழுதி அவற்றிற்குத் தாங்கள் எழுதிய உரைகளில் தங்கள் ஆராய்ச்சியை விளக்கினார்கள். சிவஞானசுவாமிகள் தொல்காப்பியப் பாயிரத்திற்கும், தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் உள்ள முதல் சூத்திரத்திற்கும் விரிவுரை எழுதுவதுபோலத் தொடங்கித் தாம் கண்ட ஆராய்ச்சி முடிவுகளை எல்லாம் அங்கே குறித்துவைத்துள்ளார். பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவிலே இந்திய நாட்டிலே பிரசுரங்கள் நூல்களை அச்சடிக்கக் கூடாது என்று ஆங்கிலேயர்கள் தடுத்ததால் அந்தத் தடை பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நீங்கும் வரை தமிழ்க் கல்விக்கும், தமிழ் ஆராய்ச்சிக்கும் முட்டுக்கட்டை போட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொல்காப்பியத்திற்குப் பல பதிப்புகள் தோன்றின. மகாலிங்கையர், தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், சினிவாசராகவர் முதலியோர் முயற்சியால் அவை வெளிவந்தன. தொல்காப்பியத்தைப் பற்றிய ஆராய்ச்சிகளும், மொழிபெயர்ப்புகளும், விளக்கங்களும், குறிப்புக்களும், பலபதிப்புக்களும் இருபதாம் நூற்றாண்டிலும் தொடர்ந்து வந்துகொண்டு இருக்கின்றன. அரசஞ்சண்முகனார், இலக்கணச்சாமிகள், மறைமலை அடிகள், பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரிகள், மன்னார்குடி சோமசுந்தரம் பிள்ளை, வெங்கடராஜுலு ரெட்டியார், வேங்கடசாமி நாட்டார், சோமசுந்தர பாரதியார், வையாபுரிப் பிள்ளை, மகாவித்துவான் கணேசையர், ரா. ராகவையங்கார், மு. இராகவையங்கார் முதலிய பல ஆராய்ச்சியாளர்கள் இத்தகைய தொண்டில் ஈடுபடக் காண்கிறோம். தொல்காப்பியம், வித்துவான், புலவர் முதலிய பட்டங்களுக்கும் எம்.ஏ., முதலிய கல்வித்தர நிலைகளுக்கும் பாடமாக அமைந்துள்ளது. எனவே தொல்காப்பியப் படிப்பு இன்று மிகப் பரவியிருக்கின்றது என்றே கூறவேண்டும்.

## 3. பதிப்புக்கள்

**சொல்லதிகாரப் பதிப்புக்கள்.**—தொல்காப்பியப் பதிப்புக்களில் சொல்லதிகாரத்தைப் பொறுத்தமட்டில் இங்கே குறிப்பிடவேண்டும். சேனாவரையரது உரையுடன் இதனை ஆறுமுக நாவலர் சென்ற நூற்றாண்டில் வெளியிட்டார். அதனுடைய மறுபதிப்புக்கள் நாவலர் அச்சகத்தில் இன்றும் வெளிவந்துகொண்டு இருக்கின்றன. சென்னை மாநிலக்கல்லூரியில் தமிழ்த் தொண்டு ஆற்றிய சினிவாசராகவர் அந்த நூற்றாண்டிலேயே மற்றொரு பதிப்பினை

வெளியிட்டார். வ.உ.சி. இந்த நூற்றாண்டில் எழுத்ததிகாரத்தை வெளியிட்டதோடு பிற அதிகாரங்களையும் வெளியிடத் திரு. வையாபுரிப் பிள்ளையை வேண்டிக்கொண்டதற்கு இணங்கப் பொருளதிகார உரை வெளியிடப்பட்டது. ஆனாலும் சொல்லதிகார இளம்பூரணர் உரை வாவிள்ள வெங்கடேஸ்வாரா சாஸ்திரியாரின் முயற்சியால் அச்சுக்கோக்கப் பெற்றிருந்தும் இதுவரை வெளியாகவில்லை. ஆனால் திருவாளர் கா. நமச்சிவாய முதலியார் சொல்லதிகார இளம்பூரணர் உரையை வெளியிட்டார். பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தொல்காப்பியத்தின் நச்சினார்க்கினியரின் உரையை வெளியிட்டபோது அவ்வுரையாசிரியரின் சொல்லதிகார உரையையும் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் வெளியிட்டனர். இந்த நூற்றாண்டில் பவானந்தர் கழகத்தின் சார்பில் திருவாளர் மே. வீ. வேணுகோபால பிள்ளை அவர்கள் இந்த நச்சினார்க்கினியர் உரையைத் திருத்தங்களுடன் பதிப்பித்தார். மகாவித்துவான் யாழ்ப்பாணம் கணேசையர் அவர்கள் தொல்காப்பியம் முழுவதனையும் சில பழைய உரைகளோடும் பாட பேதங்களோடும், அடிக்குறிப்புக்களோடும், ஆராய்ச்சிக் கட்டுரைகளோடும் பதிப்பித்த வகையில் தனி நூலாகச் சொல்லதிகாரத்தைச் சேனாவரையர் உரையோடு சுன்னாகம் பொன்னையா அவர்களின் உதவியால் வெளியிட்டார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் ஆசிரியராக விளங்கிய கந்தசாமியார் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வழியே சேனாவரையர் உரையைத் தம் அடிக்குறிப்புக்களோடும் பதிப்பித்தார். (1928) பின்னர் அந்தப் பல்கலைக் கழகத்து ஆசிரியராக இருந்த திரு. பூவராகம் பிள்ளையவர்களது விளக்கக் குறிப்புக்களைப் பிற்சேர்க்கையாகச் கொண்டு இரண்டாம் பதிப்பு வெளிவந்தது. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் தலைமையில் தமிழ்த் தொண்டு ஆற்றிவந்த கரந்தைத் தமிழ்ச்சங்கம் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குத் தெய்வச்சிலையார் எழுதிய உரையை வெளியிட்டது. கல்லாடரது உரையைத் திரு. மகாவித்துவான் தண்டபாணி தேசிகர் அவர்கள் தருமபுர ஆதீனத்தின் தங்கள் இதழான "ஞானசம்பந்த"த்தில் தம்முடைய குறிப்புகளோடும் வெளியிட்டு வந்தார். அதற்கு முன்னதாகவே இந்த உரையைத் திரு. கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் புத்தக வடிவில் பல பக்கங்கள் அச்சடித்தார்கள். ஆனால் முடிவு பெறவில்லை. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தனது 1008 ஆவது நூலை வெளியிட்டபோது அமைத்த கண்காட்சியில் சில அச்சிட்ட பக்கங்களைப் பலர் காண முடிந்தது.

**மொழிபெயர்ப்பு.**— சொல்லதிகாரத்திற்கு ஓர் ஆங்கில மொழி பெயர்ப்பு நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவனாக இருந்தபோது வெளியாயிற்று: இதன் மொழி பெயர்ப்பாசிரியர் திரு. பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரி.

## 4. ஆலோசனைக் குழு

இந்தப் பதிப்பு பத்தொன்பதாவது நூற்றாண்டில் தொல்காப்பிய நன்னூல் என்ற நூல் சொல்லதிகாரத்தின் பாகுபாட்டை ஆதாரமாகக் கொண்டு விளங்கியது. சென்னைத் துறைத்தலைக் கீழ்க்கலைக் கையெழுத்துச் சுவடி நூல் நிலையம் ஒன்று இருப்பது யாவரும் அறிந்ததே. இந்திய நாடு விடுதலை பெற்றதும் சுவடியாக அருகும் இப்பழம் பெருஞ் செல்வங்களைப் பாதுகாப்பதோடு அச்சிலும் வெளியிட வேண்டும் என்று நடுவட்டத் துறைத்தனமும் சென்னைத் துறைத்தனமும் கருதின. பதிப்பிக்கத்தக்க நூல்களை முடிவு செய்ய ஓர் ஆலோசனைக் குழு அமைக்கப்பட்டது. அந்தக் குழு தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்குக் கல்லாடர் எழுதிய உரையைப் பதிப்பிக்கவேண்டும் என முடிவு செய்து பதிப்பிக்கும் தொண்டினை எனக்கு அருளிச் செய்தது.

**ஏடு தேடு படலம்.**—மேலே கண்ட சுவடி நிலையம், நூல் நிலையத்துள்ள ஒரு சுவடியை நன்றாகப் பெயர்த்து எழுதி அதனை அச்சுக்கு அனுப்புமாறு என்னை வேண்டிக் கொண்டது. அவர்கள் பெயர்த்து எழுதிய பிரதி சரியான பிரதியே என்று நிலையத் தலைவர்கள் உறுதி கூறியதை ஒட்டி அப்படியே அச்சிடுவது மட்டுந்தான் பதிப்பாசிரியனுடைய தொண்டு என நான் கருதவில்லை. ஆகையால் கல்லாடர் உரைக்கு உரைச்சுவடிகள் வேறு கிடைக்குமா

எனத் தேடத் தொடங்கினேன். மேற்படி நூல் நிலையத்திலேயே வேறு பிரதியும் இருந்தது. மதுரைத் தமிழ்ச் சங்க நூல் நிலையத்தில் இருந்த பிரதி ஒன்றை மேற்படி சுவடி நிலையமே எனக்கு வரவழைத்துத் தந்தது. சென்னை அடையாற்றில் உள்ள கலாக்ஷேத்திர நூல் நிலையம் தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் கையெழுத்துச் சுவடிகளை வைத்திருப்பது அறிந்தேன். ஐயரவர்களுக்கு யாழ்ப்பாணத்தில் இருந்து வந்த கல்லாடர் உரைப்பிரதி அங்கே உண்டென அறிந்தேன். அதனை வெளியே எடுத்துச் செல்லக் கூடாதென்கையால் சாந்தி சாதனையைத் தலைத்த எறப்படுத்திய திரு. எஸ். ராஜம் அவர்களின் பேருதவியால் என்னுடைய நண்பர் திரு. சிவப்பிரகாசம் பிள்ளை அங்கிருந்த பிரதியோடு கலாக்ஷேத்திரப் பிரதியை ஒப்பு நோக்கிப் பாடபேதங்களைக் குறித்துவர முடிந்தது. பவானந்தம் பிள்ளையவர்கள் தேடிச்சேர்த்த கல்லாடர் உரையின் ஒரு பகுதியும் துரைத்தனத்தார் கையெழுத்துச் சுவடி நிலையத்தில் வந்து சேர்ந்தது. திரு. நமச்சிவாய முதலியார் அவர்களுடைய பிரதி அப்போது கிடைக்கவில்லை. திரு முதலியார் அவர்கள் அச்சுக்கு அனுப்பிய திருத்தப் பிரதியைப் பார்த்து எழுதிய தம் பிரதியைத் திரு. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் எனக்கு அன்புடன் உதவினார்கள். "ஞானசம்பந்தத்தில்" வந்த கல்லாடர் உரைப்பகுதிகளையும் தனியாகக் கட்டியிருந்ததையும் அவர் எனக்குத் தந்தார். என்னுடைய பதிப்பு முடிந்த பின்னர் நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தொண்டாற்ற வந்தபோது திரு. ரா. ராகவையங்கார் வழியாக அண்ணாமலைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திற்குக் கிடைத்த கல்லாடர் உரைப்பிரதியும் எனக்குக் கிடைத்தது. இக் காலத்துக் கிடைத்ததால் இதில் கண்ட பாடபேதங்களை இந்தப் பதிப்பின் பின்னே குறித்திருக்கின்றேன். சென்னைக் கையெழுத்துச் சுவடி நிலையத்திலிருந்து நான் பெயர்த்து எழுதித் திருத்தி வைத்திருந்த சுவடியும் என்னிடம் இருந்தது. அந்த நிலையத்தில் பழைய பிரதி ஒன்று இருந்தது. அதிலிருந்து பெயர்த்து எழுதிய மற்றொரு பிரதியும் இருந்தது. இந்த இரண்டாவது பிரதியில் ஒரு பகுதி பல திருத்தங்களுடன் விளங்கியது. இந்தத் திருத்தங்கள் அச்சில் வெளிவந்த சேனாவரையர் உரையையும் நச்சினார்க்கினியர் உரையையும் பின்பற்றி எழுந்தவை என அந்தப் பிரதியே குறிப்பிடுகிறது.

**பிரதிகளைப் பற்றி விளக்கம்.**—இந்தக் கையெழுத்துப் பிரதிகளும் அச்சிட்ட பிரதிகளும் எளிதில் குறிப்பிடப்படுவதற்காக ரோமன் எண்களால் கீழே சுட்டியுள்ளேன். அதனைக் கீழே அறியலாம்.

(i) என்ற எண்ணுள்ள சுவடி சென்னை அரசாங்கக் கையெழுத்துச் சுவடியே ஆகும். காகிதத்தில் எழுதிய பிரதி இது. சில இடங்களில் காகிதம் நொறுங்கிக் கொண்டே வருகிறது.

(ii) என்பது இதனைப் பார்த்துப் பெயர்த்து எழுதிய காகிதச் சுவடி. முன்னே நான் குறிப்பிட்டபடி இதன் முதற்பகுதியில் திருத்தங்கள் உள்ளன. ஆனால் இந்தத் திருத்தங்கள் வேறு கல்லாடர் உரைப்பிரதியைப் பார்த்து எழுதப்படவில்லை. சேனாவரையர், நச்சினார்க்கினியர் உரைகள் அச்சிற்கு வந்தனவற்றை ஒட்டித் திருத்தம் பெற்றவை. இந்தப் பிரதி நல்ல நிலையில் காப்பாற்றப் பெற்றுள்ளது. கையெழுத்தும் முன்னைய பிரதியைவிட நன்றாக இருக்கிறது. இதைப் பெயர்த்து எழுதித்தான் நூல் நிலையத்தார் அச்சிடவேண்டுமென எனக்கு அனுப்பினார்கள். இதனைப் பெயர்த்து எழுதியவர் சரியான பிரதி என்று உறுதி கூறியது ஒன்றை மட்டும் கொண்டு இதனை அடிப்படைப் பிரதியாகக் கொள்வதற்கில்லை. இதில் உள்ள திருத்தங்கள் சிலபோது கொள்ளத் தக்கன என்று தோன்றினாலும் அந்தத் திருத்தங்களை அடிப்படையாகக் கொள்வதற்கு இல்லை. மூலத்தையே அடிப்படையாகக் கொள்வதுதான் பதிப்பாசிரியனது கடமை. எனவே (i) என்ற எண்ணுள்ள பிரதியையே இந்தப் பதிப்புக்கு அடிப்படையாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த உரைப்பிரதிகள் 254 ஆவது சூத்திரத்தின் உரைப்பகுதியோடு சிதைந்து முடிகின்றன. அங்கே (ii) ஆம் பிரதி, அதற்கு மேல் உரை அகப்படவில்லை என்று குறிக்கின்றது. இருந்தாலும் பின்னையும் சில வரிகளில் அகப்பட்டுள்ள சொற்றொடர்களை (i) என்ற பிரதியை ஒட்டி எழுதியுள்ளது.

(iii) என்பது பவானந்தர் கழகத்திலிருந்து சென்னை அரசாங்கக் கையெழுத்துச் சுவடி நிலையத்திற்கு வந்த காகிதப் பிரதி. இங்கே இந்த உரையின் இரண்டாவது பாகம் கிடைக்கவில்லை. முதல் பாகம் 225-ஆவது சூத்திரத்தின் உரையோடு முடிகிறது. அதாவது இந்தப் பதிப்பில் 300-ஆவது பக்கத்தில் 12-ஆம் வரியோடு நின்றுவிடுகிறது. அங்கே 27-ஆம் எண்ணுள்ள அடிக்குறிப்பைப் பார்க்கலாம். இந்த முதற்பகுதி நல்ல நிலையில் கிடைத்துள்ளது. கையெழுத்தும் தெளிவாகவும், அழகாகவும் இருக்கக் காண்கிறோம்.

(iv) என்பது மதுரைத் தமிழ்ச்சங்க நூல் நிலையத்திலிருந்து வந்த பிரதி. இது (ii) என்பதைப் பார்த்துப் பிரதி செய்தது அல்ல. (i) ஆம் பிரதியைப் பார்த்தே எழுதியது. (ii) ஆம் பிரதியை எழுதுவதற்கு முன்னரே இந்தப் பிரதி எழுந்திருத்தல் வேண்டும். அதனால் இங்கே ஒன்றும் திருத்தங்கள் இல்லை. இது சரியாகப் பார்த்து எழுதிய பிரதி அல்ல. மூலப் பிரதியில் உள்ள பலவரிகள் இதில் விடப்பட்டு உள்ளன. (i) ஆம் பிரதி இப்போது நொறுங்கியுள்ள இடங்களில் இந்தப் பிரதி மூலவடிவத்தைக் காணத் துணை செய்கிறது.

(v) என்பது வெங்கடராஜுலு ரெட்டியார் தயாரித்த பிரதி. அவருடைய அழகிய கையெழுத்திலேயே இது அமைந்துள்ளது. அவருக்குத் தோன்றிய திருத்தங்களை அவர் செய்துள்ளார் ஆனால் அத்திருத்தங்களை வேறுபிரித்து அறியக் கூடும். இந்தப் பதிப்பின் கீழ்க் குறிப்புகளில் இத்திருத்தங்களை வேறு பிரித்துக் காட்டியிருக்கக் காணலாம். இந்தப் பிரதியோடு (iii) பெரிதும் ஒத்துள்ளது. எனவே Y என்று பின்குறிக்கப்படும் பிரதியிலிருந்து (iii) உம் இதன் மூலமும் பிரதி செய்யப்பட்டவை போலும். (v) ஆம் பிரதியும் 254 ஆவது சூத்திர உரைப் பகுதியோடு முடிவடைகிறது. எழுத்தும் பிற எல்லாப் பிரதிகளும் இந்த இடத்தோடேயே முடிவடைவதால் இவை எல்லாம் இவ்வாறு சிதைந்து முடிவடைந்த பிரதியில் (இதனை X என்று குறிப்பிடலாம்) இருந்து வெவ்வேறு பிரதி செய்யப்பட்டவையே என்றே தோன்றுகிறது. பாடபேதங்கள் பல இருப்பது கொண்டு அந்தச் சிதைந்த மூலப் பிரதி நீண்ட காலத்திற்கு முன்னதாகவே எழுந்தது எனக் கொள்ளலாம்.

(vi) என்பது 'ஞானசம்பந்தம்' என்ற திங்கள் இதழில் திரு தண்டபாணி தேசிகர் பதிப்பித்த பிரதி. திருத்தவேண்டும் என்று அவர் கருதிய இடத்தில் எல்லாம் அவர் திருத்தி உள்ளார். பொருள் விளங்குவதற்கு இத்திருத்தங்கள் வேண்டுமென அவர் கருதினார் எனத் தெரிகிறது. இது (ii) ஆம் பிரதியை ஒட்டியது.

(vii) என்பது இந்தப் பதிப்பாசிரியர் (ii) ஆம் பிரதியைப் பார்த்து எழுதி வைத்துக் கொண்டது. இங்கேயும் திருத்தங்கள் உள்ளன. 254-ஆவது சூத்திரத்தோடு இது முடிகிறது.

(viii) என்பது டாக்டர் உ. வே. சாமிநாதையர் தேடிப் பெற்றது. இப்போது கலாக்ஷேத்திரத்தில் இருக்கிறது. பிற பிரதிகளில் கிடைக்காத பகுதிகள் ஒரு சிறிது இப்பிரதியில் கிடைத்துள்ளன. இந்தப் பிரதியின் மேலுள்ள ஒரு குறிப்பில் "யாழ்ப்பாணத்துச் சதாசிவம் பிள்ளை அவர்களின் பிரதி" என்ற குறிப்பு உண்டு. இவர் ஆறுமுக நாவலரின் சீடர். இப்பிரதியும் 254 ஆவது சூத்திர உரையோடு முடிகிறது.

(ix) என்பது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து நூல் நிலையத்தில் உள்ளது. இதில் கல்லாடர் உரையின் பிற்பகுதியே கிடைக்கிறது. 107 ஆவது சூத்திரத்தோடு இந்த உரைப்பகுதி தொடங்குகிறது. எளிதில் சிதையாத நல்ல காகிதத்தில் இது அமைந்துள்ளது இந்தப் பதிப்பினை அச்சிட்டு வரும்போது இந்தப் பிரதி கிடைக்கவில்லை. ஆகையினாலே அந்த உரையில் கிடைத்த பாடபேதங்களை இந்த முகவுரையின் பின்னேயே விளக்கியுள்ளேன். இந்த உரைப் பகுதி இந்தப் பதிப்பில் 344-ஆம் பக்கத்தில் கண்ட முதல் வரியோடு நின்றுவிடுகிறது.

(x) என்பது காலஞ்சென்ற கா. நமச்சிவாய முதலியார் அச்சிட்ட உரைப் பிரதி. இது முழுதும் கிடைக்கவில்லை. சில பக்கங்களை சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் அமைத்த காட்சியில் கண்டதை முன்னரே கூறினோம்.

(xi) என்பது மேற்கூறிய (x) என்பதற்கு மூலமாக அமைந்த கையெழுத்துப் பிரதி. இதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் மேற்கூறியபடி (v) என்பது இதனைப் பார்த்துப் பெயர்த்து எழுதிய பிரதியே ஆகும்.

**பிரதிகளின் குடிவழி.**—இந்தப் பிரதிகளை மேல்வாரியாக ஆராய்ந்ததின் பயனாக எனக்குத் தோன்றியபடி அவற்றின் குடிவழியைக் கீழே குறிக்கின்றேன். மேலே விளக்கிய காரணங்களால் இந்தக் குடிவழியின்படி மூலப் பிரதியை [illegible]த்து முடிவு செய்வதற்கு இடமில்லாமற் போய்விட்டது. எனவே அத்தகைய ஆராய்ச்சியினைப் பின்னேதான் செய்தல் வேண்டும்.




**வேண்டுகோள்.**— எனக்குத் தெரிந்தவரைக்கும் இந்தப் பிரதிகள்தாம் அகப்பட்டன. வேறு பிரதிகள் இருக்கலாம். ஆனால் என் கெட்டகாலம் அவை எனக்குக் கிடைக்கவில்லை. வேறு பிரதிகள் எவரிடத்திலேனும் இருக்குமானால் அவற்றை எனக்கு அனுப்பினால் இரண்டாவது பதிப்பில் அவற்றில் காணும் பாடபேதங்களைப் பதிப்பிப்பதோடு அவர்களுக்கும் நன்றி செலுத்துவேன்.

**பாடபேதம் கொண்ட முறை.**—அடிப்படைப் பிரதிகளில் இல்லாத பாடங்கள் இந்தப் பதிப்பில் இல்லவே இல்லை. II, VI, VII என்ற இவை அத்தகைய அடிப்படை மூலங்கள் அல்ல. அவை I அல்லது II-ஐப் பெயர்த்து எழுதியவை. I, III, V, VIII இவையே இந்தப் பதிப்பிற்கு அடிப்படை. இவற்றில் கண்ட பாடங்களில் பொருத்தமெனத் தோன்றியவற்றைத்தான் கொண்டுள்ளேன்.

அப்படிப் பொருத்தமான பாடம் கிடைக்காதபோது பாடத்தை மாற்றாமல் அப்படியே விட்டுவிட்டேன். ஆனால் அடிக்குறிப்பில் பெயர்த்து எழுதியவர் திருத்தி எழுதியவை உட்பட எல்லாப் பாடபேதங்களையும் குறித்துள்ளேன். இவற்றில் சில பாடபேதங்கள் பொருத்தமாகவும் உள என இங்கே தான் குறிப்பிட்டுள்ளேன். எடுத்துக்காட்டுகளும்கூட இடையிடையே பதிப்பித்துள்ளேன். இப்போது வெளிவந்துள்ள நூல்களின் பதிப்புகளில் வேறுவகை பாடம் இருந்தாலும் நான் மாற்றத் துணியவில்லை. தவறு என்று தெரிந்தபோதும் கூட மாற்றவில்லை. படிக்கின்ற அன்பர்கள் இவற்றைத் திருத்திக்கொள்ளக் கூடும். தவறு என்று எடுத்துச் சொன்னதன்றியல்லவா அவர்கட்கு வேறு நல்ல பாடத்தைக் காட்டித்தருவோம். ஒரே நூற்றாண்டில் காலத்திலே பலவகையாக அமைந்த எழுத்து வடிவங்களைப் பயன்படுத்திக்கொள்வதாலே சுவடி பெயர்த்து எழுதுவோர் கொண்ட பாடவேறுபாடுகள் தோன்றியிருக்கக்கூடும் என்பதையும் அடிக்குறிப்பில் குறித்துள்ளேன். அவ்வாறு எழக்கூடிய மயக்க நிலையையும் விளக்கியுள்ளேன். பழைய வடிவெழுத்தை ஆராயும் பண்டை எழுத்தியலைப் பற்றி நூல் எழுத இவ்விளக்கங்கள் பயன்படலாம். இத் திட்பிரதிக்கு உதவிய எழுத்துச் சுவடிகளில் இருந்து எடுத்துக்காட்டுகளாக ஒரு பிரதிக்கு ஒரு பகுதியாகப் புகைப்படமெடுத்துக் காட்டியிருக்கலாம். அவ்வாறு செய்ய முடியாது போனமைக்கு வருந்துகிறேன். உள்ளவை என் தோன்றும் பாடபேதங்களையும் இந்தப் பதிப்பில் கொடுக்க நான் மனம்கொள்ளவில்லை. இன்றுள்ள நிலையில் பின்னெழக்கூடிய ஆராய்ச்சிக்கு இவற்றில் எவ்வளவு ஒரு பயனும் தராது போய்விடும் என்று அறுதியிட்டுக் கூற முடியாதது ஒரு காரணம். ஷேக்ஸ்பியருடைய நூல்களை அச்சிட்டோர் முன்னோர் உள்ளவைகள் என்று கொண்ட பாடங்களையும் இப்போது பொருள் நுட்பம் உள்ளவையெனக் கொண்டு பதிப்பிக்கக் காணுகின்றோம். பின்னூட்ட ஏடுகளையும் அவற்றின் வழியே பெயர்த்து எழுத வந்தவர்கள் தமிழை உச்சரித்த வழக்கத்தையும் அவர்கள் காலத்தில் வழங்கிய கையெழுத்து முறையினையும் அறியமுடியாதது என்பது இரண்டாவது காரணம். பொதுமக்கள் பேசிய பேச்சு மொழியின் வரலாற்றையும் தமிழ் வடிவெழுத்தின் வரலாற்றையும் எழுத வருவோர்க்கு இது பெரிதும் உதவும் என்று கருதுகின்றேன்.

## 5. கல்லாடர்

**பெயர்.**—இந்தப் பதிப்பிலுள்ள உரையின் ஆசிரியர் கல்லாடர். ஆனால் இவரைப்பற்றி நம்முடைய கேட்டகாலம் ஒன்றுமே தெரியவில்லை. இந்தப் பெயரை உடையவர் சங்க காலத்துப் புலவருள் ஒருவர். பின்னே பதினோராந் திருமுறையில் காணும் கண்ணப்பர் மறத்தைப் பாடிய சைவப் புலவர் மற்றொருவர். இவருக்கும் பின்னாலே வந்து கல்லாடம் என்ற அகப்பொருள் நூலைப் பாடியவரும் கல்லாடர் என்ற பெயரையே உடையவர். தமிழ் அறிவு படைத்த நான்காவது கல்லாடரே முன்னைய மூவர்க்கும் பின்னால் வந்து இந்த உரையை எழுதியவர். திருவாசகத்து மாணிக்கவாசகர் 'கல்லாடத்துக் கலந்தினிதருளி" என்று பாடுவதால் கல்லாடம் என்பது ஓர் ஊரின் பெயராகும். அந்த ஊரைச் சேர்ந்தவர் என்ற பொருளில் கல்லாடர் என்ற பெயர் வழங்கியிருத்தல் கூடும். காஷ்மீர சைவத்தைப்பற்றி வடமொழியில் எழுதிய பேராசிரியர் ஒருவர்க்குக் "கல்லாட" என்ற பெயர் உண்டு. தமிழ்ப் பெயருக்கும் வடமொழிப் பெயருக்கும் தொடர்பு இல்லாமலும் இருக்கலாம்.

**காலம்.**—பிரயோக விவேகத்தை உரையுடன் தமிழில் எழுதிய சுப்பிரமணிய தீட்சிதர் ஒருவர்தான் கல்லாடர் உரையை அந்தப் பெயரோடு சுட்டுகின்றார். தீட்சிதர் 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அந்த நூலை எழுதினார். எனவே இந்த உரை தீட்சிதர் காலத்திற்குப் பின்னால் உண்டாயிருக்க முடியாது. ஆனால் இன்னும் எவ்வளவு முன்னுக்கு இவருடைய காலத்தைக் கொண்டு போகமுடியும்? நச்சினார்க்கினியர் சேனாவரையரையும் இளம்பூரணரையும் சுட்டுகின்றார்; ஆனால் கல்லாடரைச் சுட்டவே இல்லை. ஆனால் நச்சினார்க்கினியர் தாம் மறுக்கும் கொள்கையைக் கூறியவர்கள் அத்தனை பெயர்களையும் சுட்டுகின்றார் என்று கூற முடியாது. நன்னூல் என்ற பெயரையோ பவணந்தி என்ற பெயரையோ அவர் அறிந்திருந்தும் சுட்டவே இல்லை. இருந்தாலும் நன்னூலை அறிந்திருந்தார்—குறிப்பாக நடவாமகை என்பதை அறிந்திருந்தார் என்பதில் ஐயமில்லை. எனவே கல்லாடரையும் அறிந்திருக்கலாம், இருந்தாலும்,

இன்று நமக்குக் கிடைத்துள்ள கல்லாடர் உரையில் பல உரைப்பகுதிகள் இளம்பூரணர் உரையிலிருந்தும் சேனவரையர் உரையிலிருந்தும், நச்சினார்க்கினியர் உரையிலிருந்தும் எடுத்துக்கொள்ளப்பட்டவை போலத் தோன்றுகின்றன. மொழி நடையைப் பார்த்தாலும் நச்சினார்க்கினியர் காலத்திற்கு முந்தியது என்று கல்லாடர் உரையைக் கொள்வதற்கில்லை.

**கருத்தும் எழுத்தும்** — ஆனால் ஓர் உண்மையை இங்கே விளக்குதல் வேண்டும். ஒரு நூலின் உரையாக ஓர் ஆசிரியர் காலத்தில் எழுந்தது செவிவழியாகவே தலைமுறை தலைமுறையாக வழங்கி வரலாம் என்பதை இறையனார் அகப்பொருள் உரையைப் படித்தவர்கள் நன்கு அறிவார்கள். அத்தகைய இடங்களில் இந்த உரைகள் பின்னே எழுதப் பெற்று வழங்க வரும்போது முதலில் உரை கண்டவர் கூறிய சொற்றொடர்களாகவே அமைந்து வரும் என்று கொள்வதற்கு இல்லை. அங்கு எல்லாம் பொதுவான கருத்து மட்டுமே பழையது என்று கூற முடியும். அந்தக் கருத்துக்கள் எல்லாமுமே பழையன என்றும் கொள்ளமுடியாது. அடிப்படைக் கருத்தைப் பின்வந்தோர் விளக்கியும் திருத்தியும் புதுக்கியும் மாற்றிக்கொண்டே வந்திருக்கலாம். அங்கே எல்லாம் கிடைக்கும் உரை ஒரு ஆசிரியரது என்று கொள்வதற்கு இல்லை. ஒரு ஆசிரியப் பரம்பரையின் மரபானது முடிவாகக்கொண்ட வடிவம் என்றே அந்த உரையைக் கூறமுடியும். இந்தக் கண்கொண்டு பார்ப்போமானால் இந்த உரையை அத்தகைய கல்லாட ஆசிரியர் பரம்பரைக்கு உரியது என்று கொள்ளமுடியும். பிரயோக விவேகம் கல்லாடர் உரையெனச் சுட்டுவது எழுத்து வடிவில் வந்த உரையைத்தான் எனலாம். இந்தப் பரம்பரையில் வந்த ஆசிரியர்கள் தங்கள் காலத்திற்கு ஏற்றவாறே மற்ற பிற உரையாசிரியர் விளக்கங்களை அப்படியே பெயர்த்து எழுதியிருக்கலாம். அப்படிக் கொள்ளும் போதும் இந்த உரை எழுத்து வடிவில் வந்த காலம் நச்சினார்க்கினியர் காலத்திற்குப் பிந்தியதே எனலாம். கல்லாடர் பரம்பரை முந்தியதே ஆனாலும் எழுத்து வடிவில் அது அமைந்தது 16 அல்லது 18-ஆவது நூற்றாண்டிலே தான் என்று கூறவேண்டும்.

**சொற்றொடர் வேறுபாடுகள்.**— இந்த உரையிலுள்ள முதற்சூத்திரத்தின் விருத்தியுரை இறையனார் அகப்பொருளின் உரையின் முதற்பகுதியைப் பின்பற்றியது என்பது வெளிப்படை. இந்த மரபு எவ்வளவு முந்தியது என்பதனை இப்போது நாம் முடிவு கூறுவதற்கு இல்லை. இந்த உரையின் பிரதிகளை ஒப்பிட்டுப் பார்த்தாலும் உரையில் வரும் சொற்றொடர்களையோ சொற்களையோ அப்படியே பாதுகாக்கவேண்டும் என்னும் எண்ணம் இருந்ததாகத் தோன்றவில்லை. சூத்திரங்களுக்கு முன்னுரையாக வரும் பகுதிகளிலே எளிதில் இந்த வேற்றுமையைக் காணலாம். "என்பது சூத்திரம்' என்று ஓர் இடத்தில் எழுதுகின்ற பிரதி "இச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின்........ .. உணர்த்துதல் நுதலிற்று" என்று மற்றோரிடத்தில் எழுதும். வேறு சில இடங்களில் "இதன் பொருள்.... என்றவாறு" என்று எழுதும். V என்ற பிரதி முதற்பகுதியில் "இதன் பொருள" என்றும் இரண்டாம் பகுதியில் "உரை" என்றும் குறித்துவிட்டுப் பொருள் எழுதத் துவங்கும்.

**6: உரையாசிரியர்.**—உரையாசிரியர் என்றால் இளம்பூரணர் என்றே கொள்கின்ற மரபு சேனவரையர் உரையிலிருந்து நமக்குத் தெளிவாக விளங்குகிறது. ஆனால் சேனவரையர் உரையாசிரியர் கொள்கை என்று சுட்டுகின்ற பகுதி இன்று நமக்குக் கிடைத்துள்ள இளம்பூரணர் பிரதிகளில் காணக் கிடைக்கவில்லை. ஆனால் கல்லாடர் உரையில் இவற்றில் சில நமக்குக் கிடைக்கின்றன. எடுத்துக்காட்டாகச் சூத்திரம் நான்காவதன் உரையைப் பக்கம் 17 வரிகள் 4–11-இல் காண்க. இதுகொண்டு கல்லாடரைத்தான் உரையாசிரியர் எனச் சேனவரையர் குறிக்கின்றார் என்று முடிவுகட்ட முடியாது. இளம்பூரணர் உரை இன்று நமக்கு வந்துள்ள வடிவில் அப்பகுதிகள் மறைந்து போயிருத்தல் வேண்டும். கல்லாடர் உரை எழுத்து வடிவில் அமைந்தபோது இளம்பூரணரது அந்த உரைப் பகுதிகள் வழங்கி இருந்தமையால் இந்த உரையில் இடம்பெற்று விளங்குகின்றன. இப்படி நமக்கு இன்று கிடைக்காத உரைப்பகுதிகள் கல்லாடர் உரையில் மேலும்பல இருக்கலாம்.

**ஒப்புமைப் பகுதிகள்.**—பிற உரையாசிரியர்களின் உரைப்பகுதிகளின் எதிரொலிகள் இங்கே கேட்கின்றன என்று மேலே கூறினோம். அத்தகைய இடங்களைக் கீழே சுட்டுகின்றோம். கல்லாடர் உரையில் பிற உரையாசிரியர்களுடைய உரைப்பகுதிகள் இந்தப் பதிப்பில் எந்தெந்தப் பக்கங்களில் எந்தெந்த வரிகளில் கேட்கலாம் என்பதை ஆங்கில முகவுரையில் V என்று கண்ட தலைப்பின்கீழ்த் தமிழிலேயே தந்துள்ளமையால் அதனைப் பெயர்த்தும் இங்கே எழுதிப் பக்கத்தை வளர்க்க விருப்பம் இல்லை. அங்கே வேண்டிய குறிப்புக்களையும் கொடுத்துள்ளேன். இங்கே ஒன்றை மனத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். கல்லாடர் ஓரிடத்திலாவது இந்த உரையாசிரியர்கள் ஒருவர் பெயரையும் சுட்டவில்லை. இது அவர்கொண்ட மரபு.

**பின் கிடைத்த பாட பேதங்கள்.**—இப்படியே VI எனக் கண்ட ஆங்கில முகவுரைப் பகுதியில் அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சுவடியில் கண்ட பாட பேதங்களை இந்தப் பதிப்பிற்கண்ட பாடபேதங்களோடு ஒப்புநோக்கிக் காட்டியுள்ளேன். இங்கே மூன்று வகை அடையாளங்களைக் காணலாம்.

× என்பது இந்தப் பதிப்பில் விடுபட்ட பகுதிகள் தடித்த எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளன.

\+ சில வேறு பாடத்தையும் இங்கே காணலாம்.

△ மிகச் சிறிய மாறுதல்கள் ஆனால் பொருள் மிகப் பெரிதும் சில இடங்களில் வேறுபடும். இவையெல்லாம் ஆங்கில முன்னுரையில் தமிழிலேயே உள்ளன.

7. **விளக்கங்கள்.**—என் மாணவர்கள் சில இடங்களைப் பற்றிக் கேட்டவற்றிற்கு நான் தந்த விளக்கங்களையும் திருத்தங்களையும் பிறருக்கும் பயன்படும் என்று கருதி ஆங்கில முன்னுரைப் பகுதியில் தமிழிலேயே தந்துள்ளேன். அந்த விளக்கங்களும் திருத்தங்களும் எந்தெந்த இடங்கட்கு உரியன என்பதை இந்தப் பதிப்பின் பக்கமும் வரியும் கொடுத்தே விளக்கியுள்ளேன்.

8. **பிழை திருத்தங்கள்.**—ஆங்கில முன்னுரையில் VIII என்ற பகுதியில் பிழை திருத்தங்களைத் தமிழிலேயே தந்துள்ளேன். இன்று நம்முடைய அச்சகங்கள் தவறே இல்லாமல் பதிப்பிக்கும் நிலைக்கு உயரவில்லை. இது வருந்தத்தற்கு உரியதே. ஆனால் இதன் காரணங்களை நாம் அறிவோம். இந்தப் பதிப்பை ஓத வருவோர் திருத்திக்கொள்ள வேண்டிய இடங்களை இங்கே சுட்டியுள்ளேன். இன்றியமையாத சில திருத்தங்களும் விளக்கங்களும் மட்டுமே இங்கு வந்துள்ளன.

9. **நன்றி.**—என்னுடைய நன்றியைத் தெரிவிக்கும் வாய்ப்புப் பெற்றதில் மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறேன். இந்தப் பதிப்பிக்கும் தொண்டினை எனக்கு அளித்த ஆலோசனைக் குழுவிற்கும், இதைப் பதிப்பிக்கும்போது நூல்நிலையத் தலைவர்களாய் இருந்து வேண்டிய உதவி எல்லாம் செய்த சென்னை அரசாங்கக் கையெழுத்துச் சுவடி நிலையத் தலைவர்களுக்கும், பேரறிஞர் உ. வே. சாமிநாதையரவர்களுடைய பிரதி கலாக்ஷேத்திரத்தில் இருந்ததை ஒப்புநோக்கல் முதலியன செய்ய ஏற்பாடு செய்து தந்த எனது நண்பர் திரு. எஸ். இராஜம் அவர்கட்கும், இவ்வாறு ஒப்பு நோக்க உரிமை தந்த சாமிநாதையர் நூல்நிலையத்தவர்க்கும், தம்முடைய கைப்பிரதியையும் "ஞானசம்பந்தத்தில்" வெளியான அச்சுப்பிரதிகளையும் எனக்கு அன்புடன் உதவிய காலஞ்சென்ற திரு வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களுக்கும், அச்சான பகுதியிற்கண்ட பிழைகளைத் திருத்தி உதவிய திரு. க. ஆறுமுகம் (டெல்லிப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்) அவர்களுக்கும், சொல்லதிகார உரைகளில் கல்லாடர் உரையோடு ஒத்த பகுதிகளாய் வருவனவற்றைத் தேடி வரிசைப்படுத்தித் தந்த திரு. ப. அருணாசலம் (விரிவுரையாளர் மலேயாப் பல்கலைக் கழகம்), இ. அண்ணாமலை, கோ. விஜயவேணுகோபால் (மொழியியல் விரிவுரையாளர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) ஆகியோர்

ருக்கும், அண்ணாமலைப் பல்கலைக் கழக ஏட்டுப் பிரதியோடு இப்பதிப்பினை ஒப்பு நோக்கிப் பாடபேதங்களைக் குறித்துத் தந்த திருமதி. க. பரமேசுவரிக்கும், குமாரி என். இராஜலெட்சுமிக்கும் (இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவின் மொழியியல் ஆராய்ச்சியாளர்கள்) மேற்படி ஏட்டுச் சுவடியை ஒப்புநோக்க உரிமை தந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும் என்னுடைய மனங்கலந்த நன்றி உரியதாகும். உலகத்தில் எதுவுமே துன்பம் கலவாத இன்பமாக நிகழ்வது இல்லை. சென்னை அரசாங்கக் கையெழுத்துச் சுவடி நிலையத்தில் எடுபெயர்த்து எழுதுவோராகத் தொண்டாற்றிய என் நண்பர் திரு. சிவப்பிரகாசம் பிள்ளையவர்கள் ஏடுகளை ஒத்துப்பார்த்துப் பிரதிபேதங்களைக் குறித்தும் அச்சிற்குச் செல்லவேண்டிய கையெழுத்துப் பிரதியை அமைத்தும் அச்சகத்தில் எழுத்துக்களைத் திருத்தியும் அன்போடும் ஊக்கத்தோடும் உதவி வந்தார்கள். ஆனால் இந்த நூல் முடிவான வடிவில் வெளிவருவதைக் காண்பதற்கு முன்னரே காலமாயினார். திரு. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களும் இப்போது நம்முன் இல்லை. அவர்களுக்கு என்னுடைய கடப்பாட்டினை வழிபாடாகச் செலுத்திக் கொள்கிறேன். அறிஞர் உலகத்தில் அவர்கள் மிக மிக விரும்பிய இந்த நூல் இப்போது வழங்கி வருவதை உணர்ந்து அவர்கள் ஆன்மசாந்தி பெறுவதோடு இந்தப் பதிப்பையும் வாழ்த்துவார்கள் என வேண்டிக்கொண்டு இந்த முன்னுரையை முடித்துக் கொள்கிறேன்.

**தெ. பொ. மீனாட்சிசுந்தரன்,**
முன்னாள் துணை வேந்தர், மதுரைப் பல்கலைக்கழகம்.

---

# சூத்திர முதற் குறிப்பகராதி

இந்தப் பதிப்பில் கல்லாடர் உரையும் வேறு ஓர் உரையும் உள்ளன. ஆகையால் அவ்விரண்டிலும் உள்ள சூத்திரங்களைச் சேர்த்து அகராதி தரப்பட்டுள்ளது. சூத்திர உரை அகப்படாத இடங்களில் வெற்றிடம் தரப்பட்டுள்ளது.

| | கல்லாடம். | | வேறு உரை. | |
|---|---|---|---|---|
| | சூத்திர எண். | பக்க எண். | சூத்திர எண். | பக்க எண். |
| அ ஆ வ என—படர்க்கை | 212 | 268 | .. | .. |
| அ ஆ வ என—சொல்லே | 9 | 26 | 9 | 353 |
| அ எனப் பிறத்தல் | 105 | 170 | .. | .. |
| அச்சக் கிளவிக்கு | 96 | 160 | 101 | 422 |
| அச்சம் பயமிலி | 250 | 339 | .. | .. |
| அடைசினை முதலென | 26 | 58 | 26 | 367 |
| அண்மைச் சொல்லிற்கு | 128 | 194 | .. | .. |
| அண்மைச் சொல்லே | 124 | 191 | .. | .. |
| அத்திணை மருங்கின் | 215 | 272 | .. | .. |
| அதற்கு வினையுடைமை | .. | .. | 77 | 404 |
| அதனின் இயறல் | .. | .. | 75 | 402 |
| அதுவிது உதுவென | 164 | 220 | .. | .. |
| அதுவென் வேற்றுமை | 90 | 155 | 95 | 420 |
| அதுச்சொல் வேற்றுமை | 210 | 262 | .. | .. |
| அப்பொருள் கூறின் | 36 | 73 | 36 | 372 |
| அம்ம வென்னும் | 150 | 206 | .. | .. |
| அம்முக் கிளவியும் | 227 | 302 | .. | .. |
| அயல் நெடியதாயின் | 142 | 201 | .. | .. |
| அர் ஆர் ப என | 203 | 254 | .. | .. |
| அவ்வழி, அவனிவன் | 159 | 215 | .. | .. |
| அவ்வே யிவ்வென | 116 | 186 | .. | .. |
| அவற்றுள் அ என | 105 | 170 | 110 | 426 |
| அவற்றுள் அன்னென் | 127 | 193 | .. | .. |
| அவற்றுள் இ ஈ ஆகும் | 118 | 187 | .. | .. |
| அவற்றுள் இகுமும் சின்னும் | 256 | 344 | .. | .. |
| அவற்றுள் எழுவாய் | 66 | 107 | 66 | 393 |
| அவற்றுள் செய்கென் | 201 | 251 | .. | .. |
| அவற்றுள் செய்யும் | 234 | 317 | .. | .. |
| அவற்றுள் தருசொல் | 29 | 63 | 29 | 369 |

| | கல்லாடம். | | வேறு உரை. | |
|---|---|---|---|---|
| | சூத்திர எண். | பக்க எண். | சூத்திர எண். | பக்க எண். |
| வினையெனப்படுவது | 195 | 244 | .. | .. |
| வினையே குறிப்பே | 254 | 343 | .. | .. |
| வினையே செய்வது | 108 | 174 | 113 | 428 |
| வினைவேறு படாஅ | 55 | 91 | 55 | 384 |
| வினைவேறு படூஉம் | 52 | 88 | 52 | 383 |
| வேற்றுமை தாமே | 63 | 103 | 63 | 392 |
| வேற்றுமைப் பொருளை | 78 | 143 | 84 | 414 |
| வேற்றுமை மருங்கில் | 112 | 180 | 117 | 431 |
| வேறுவினைப் பொதுச் சொல் | 46 | 82 | 46 | 378 |
| ளஃகானொற்றே | 6 | 21 | 6 | 352 |
| னஃகானொற்றே | 5 | 20 | 5 | 352 |
| னரலள வென்னும் | 125 | 192 | . | |

## சூத்திர எண்ணிக்கை—பிறவுரை யாசிரியரும் கல்லாடரும்.

| கல்லாடம். (1) | இளம்பூரணம். (2) | சேனாவரையம். (3) | நச்சினார்க்கினியம். (4) |
|---|---|---|---|
| **கிளவியாக்கம்.** | | | |
| 54 ஒனறுவினை மருங்கி ளொன்றித் தோன்றும் | 54 | 54 ஒன்றுவினை மருங்கி ளொன்றித் தோன்றும் வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல் நினையுங் காலைக் கிளந்தாங் கியலும் | 54 (Follows Iḷam pūraṇar) |
| 55 வினை வேறுபடாஅப் பலபொரு ளொருசொல் நினையுங் காலைக் கிளந்தாங் கியலும் | 55 | | 55 |
| **வேற்றுமையியல்** | **வேற்றுமையியல்** | **வேற்றுமையியல்** | **வேற்றுமையியல்** |
| 72 இரண்டாகுவதே ஐயெனப்...... .. . .. ......அதுவே. காப்பி னொப்பின்...... | 72 | 71 இரண்டாகுவதே .. .. .. .. .. .. .. ..அதுவே. | 72 (Follows Cēṉā-varaiyar) |
| | | 72 காப்பின் ஒப்பின்.... | 73 |
| 73 மூன்றுகுவதே...... .. .. .. ......முதற்றதுவே. அதனி னியறல் அதற்றகு கிளவி .. .. .. | 73 | 73 மூன்றுகுவதே. .. .. .. .. ..முதற்றதுவே. | 74 (Follows Cēṉā-varaiyar) |
| | | 74 அதனி னியறல் | 75 |

| | | | | |
|---|---|---|---|---|
| 74 நான்காகுவதே ......என்மனார் | 74 | 75 நான்காகுவதே. .. .. .. .. ..அதுவே. 76 அதற்பு வினையுடைமையின்.. | 76 77 | (Follows Cēṇā-varaiyar) |
| 75 ஐந்தாகுவதே ......என்மனார் | 75 | 77 ஐந்தாகுவதே. .. .. .. .. . அதுவே. 78 வண்ணம் வடிவே.... | 78 79 | (Follows Cēṇā-varaiyar) |
| 76 ஆறாகுவதே ......புலவர் | 76 | 79 ஆறு தவதே. .. .. .. .. ..அதுவே. 80 இயற்கையி னுடைமையின்.. | 80 81 | (Follows Cēṇā-varaiyar) |
| 77 ஏழாகுவதே ......என்மனார் | 77 | 81 ஏழாகுவதே. .. .. .. .. .. .. .. ..அதுவே 82 கண் கால் புறம்.... | 82 83 | (Follows Cēṇā-varaiyar) |
| 78 வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை ஈன்று நின்றியலும்...... பிரிந்தே. | 78 | 83 வேற்றுமைப் பொருளை விரிக்கும் காலை .. ... .. .. .. .. .. ..உரியவென்ப. | 84 | (Follows Cēnā-varaiyar) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 79 பல்லாருகப் பொருள் புணர்ந்திசைக்கும் எல்லாச் சொல்லு முரிய வெண்ப, | 79 | | | | |
| **வேற்றுமை மயங்கியல்** | **வேற்றுமை மயங்கியல்** | | | | |
| 111 அவைதாம் தத்தம் பொருள் வயின் தம்மொடு...... .. .. .. .. .. ..காலை | 111 | 115 | (ஒரே சூத்திரம்) | 116 | (Follows Iḷam-pūraṇar) |
| 112 வேற் , மை மருங்கிற போற்றல வேண்டும் | 112 | | | 117 | |
| 127 அவற்றுள் அன்னென் னிறுதி ஆ ஆகுமம். | 127 .(அவற்றுள்) என்ற தனிச்சொல இல்லை | 130 | | 130 | |
| **வினையியல்** | | | | | |
| 210 அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும் .. .. .. .. .. .. .. ..குறிப்பொடு தோன்றும் அன்மையின இன்மைபின்.... .. .. .. . ..குறிப்பே காலம் | 210 | 213 அதுச்செல் வேற்றுமை யுடைமை யானும் .. .. .. .. .. .. .. ..குறிப்பொடுதோன்றும். | | 215 | (Follows ... varaiyar) |
| | | 214 அன்மையின் இன்மையின்.. .. .. .. .. ..குறிப்பே காலம். | | 216 | |

# சொல்லகராதி

## அ

## ஆ

## இ

## ஊ



## எ

ஏ

## ஐ



## ஒ

## ஓ



## க

## ச

## த

## ந



## ப

## ம

ய



ர



ல



வ

# கல்லாடம்

## அருஞ்சொல் அகர வரிசை

### அ

## இ

எ

ஐ



ஒ

ஒ—தொடர்ச்சி.



ஓ



க

க—தொடர்ச்சி



கா

## இ



## ஈ



## கு

## கூ



## கெ



## கே

## கை



## கொ

## கோ



## கௌ



## ச



## சா

சி

## சு



## சூ



## செ

## சே

## சொ



## சோ



## ஞா



## த

## தா

## தீ

## து



## தூ



## தெ



## தே

## தை



## தொ



## தோ



## ந

## நா

## நோ



## ப

## பா



## பி

## பு

## பூ



## பெ

## பே



## பை



## பொ

## போ



## ம

## மா

## மி



## மீ



## மு

## மூ



## மெ



## மே



## மை



## மொ

யா

ர



வ

## வீ



## வெ



## வே

## வை



## ள



## ற



## ன

| எண்-பக்கம்-வரி (1) | பிழையும் (2) | திருத்தமும் (3) |
| --- | --- | --- |
| 3-9-10 | பொருள்கண் | ள் என எழுதலாம் |
| 13 | ,, | ,, |
| 16 | ,, | ,, |
| 18 | ,, | ,, |
| 11-4 | பொருள் நோக்கும் | பொருள் ஒக்கும் |
| 13-11 | | இயைபு கூறப்படாது. |
| 23. எப்.என். 7·10-ல் | ணகரத்தின் | நகரத்தின் |
| 26 சூ-9 | அ, அ என்ற எழுத்துக்கள் 8 என்னும் எண்ணின் வடிவமாக உள்ளன. | அ என்ற எழுத்து வடிவம் அமைக்கவேண்டும். |
| 28-வரி 4 | ளாஃகான | ளஃகான் என்று இருக்க வேண்டும். |
| 32- 3 | அலை | அளை |
| 33- 3 | வழுஆ | ஆ அடுத்த வரியில் இடம் பெறுதல் நல்லது. |
| 39- 8 | உலறினேன் | உ பெரிய வடிவத்தில் அமைத்தல் வேண்டும். |
| 45 | நீரவீர்த்து | ர்-ர என்று இருக்கவேண்டும் |
| 47- 9 | யாறு | யாறு |
| 57- 1 | உரித்தண | உரித்தெண |
| 61-16 | சொல் | சொல் |
| 71-13 | பிரிது | பிறிது |
| 74-23 | வத்தாண் | வந்தான் |
| 90- 6 | என்பதூவும் | என்பதூஉம் |
| 96-14 | மேல் | மேல் |
| 109-19 | தான் | தம் அல்லது தண |
| 110-18 | நீர்மைபட்டு | நீர்மைப்பட்டு |
| 111- 7 | சினவினை | சினைவினை |

| | | |
|---|---|---|
| 114–13 | நிலைமைபட | நிலைமைப்பட |
| 119–11 | என்றும் | என்று |
| 129–10 | சிறந்ததோர் | சிறந்தோர் |
| 137– 1 | பகுதிபடாது | பகுதிப்படாது |
| 137–12 | சாத்தனதுடமை | சாத்தனதுடைமை |
| 138–13 | உரிமையாகாதப்பொருள் | உரிமை ஆகாது அப்பொருள் |
| 140– 9 | ஏழவதன் | ஏழாவதன் |
| 141–13 | தேவதை | தேவகை |
| 166– 1 | உருபுதொகை | உருபுதொக |
| 168– 8 | தொக்கநில்லா | தொகநில்லா (அல்லது) தொக்கு நில்லா |
| 179– 2 | என்பது | என்பன |
| 182–11 | பெயர்ப்பொருட்காயிற்று | பெயர் பொருட்காயிற்று |
| 186–16 | என்னும | என்னும் |
| 186–18 | மெய்பொருள் | மெய்ப்பொருள் |
| 199–13 | ஏலாது | ஏலா |
| 205–12 | விளக்கும் | விளிக்கும் |
| 206– 4 | விளித்திறத்தோ | விளித்திறத்தோடு |
| 206–24 | ஆசிரியர் | ஆசிரியன் |
| 209– 6 | வினைகனை | வினைகளை |
| 212– 3 | என்நுதற்றே | என்நுதலிற்றே |
| 212–12 | எனச்சிறப்பின் கண்வந்தது | என சிறப்பின்கண் வந்தது |
| 215– 3 | யெரும் | பெயரும் |
| 221– 7 | வினைப்பெயர் விளவி | வினைப்பெயர்க் கிளவி |
| 221–19 | பொன்னனது | பொன்னன்னது |
| 224– 7 | பாற்றெரிபிலவே | பாறெரிபிலவே |
| 224–18 | சாத்தான் | சாத்தன் |
| 224–25 | சாத்தான் | சாத்தன் |
| 228–15 | என் நுதலிறறே | என் நுதலிற்றே |
| 239–16 | பால்தெரி கிளவி | பால்திரிகிளவி |
| 241– 1 | என வரும் | எனாும் வரும் |
| 260–19 | இடத்தும் | இடத்து |
| 262–22 | விணை | வினை |

| | | |
|---|---|---|
| 263–20 | ஆகுபெயான் வினை | ஆகுபெயரான்வினை |
| 276– 7 | நிறப் பணபுப் பற்றி | நிறப் பண்பு பற்றி |
| 277–10 | ஈணடு கூறுதன | ஈண்டுக் கூறுதன |
| 277–18 | அறுவகைத | அறுவகை |
| 285– 5 | சூத்சிரத்து | சூத்திரத்து |
| 291– 7 | தமக்கு காலமாக உடைய | தமக்குக் காலமாக உடைய |
| 293–16 | எதிர்தாலத்த | எதிரகாலத்த |
| 294–11 | வைக்கப்பட்டது | வைக்கப்பட்டன |
| 310–15 | சுனைப்பூத்த | சுனைபூத்த |
| 314– 9 | உண்ணுக்கடை எ–ம் | உண்ணுக்கடை என வரும் |
| 319–11 | வாய்பாடுள்ளும் | வாய்ப்பாட்டுள்ளும் |
| 326–14 | பெரும்பான்மை வடைச் சொல்–இறநத காலம். | பெரும்பான்மைக்கு இடைச் சொல் இறந்தகாலம். |
| 323–16 | தோன்றும் | தோன்றும் |
| 327–18 | மரயு | மரபு |
| 334–8 | என்தனுற் | என்றதனுற் |
| 336–11 | நுதலிற்றே | நுதலிற்றே |
| 343– 8 | ஈற்றிசை | ஈற்றசை |
| 347–15 | விளையும் | வினையும் |
| 348– 2 | உணர்த்தினுர் | உணர்த்தினுன் |
| 348–11 | பால்வழுவு | பால்வழுஉ |
| 349– 8 | சொற்களை | சொற்கள் |
| 350– 2 | நிலமை | நிலைமை |
| 351–17 | பால் பிறிந்திசைக்கும் | பால் பிரிந்திசைக்கும் |
| 352– 3 | என்றதனுற் | என்றதனுல் |
| 353– 2 | யுட்பட | யுளப்பட |
| 353– 5 | செயயார் | செய்யார் |
| 353– 9 | குற்றியலுகர | குன்றியலுகர |
| 354– 3 | மாகும் | மாரும் |
| 354–17 | இவைப் | இவை |
| 355–21 | வயறு | வயிறு |
| 356–21 | ஐயம் மறுத்தல் | ஐயம் அறுத்தல் |
| 359–5, 7 | மாதானபங்கி | மாதானுபங்கி |

| | | |
|---|---|---|
| 360–14 | மருவு வழக்கு | மரூஉ வழக்கு |
| 363–15, 17 | சாயல் | சாயல |
| 363–21 | வையிற் | வயிற் |
| 364– 5 | இருபாற்கு | இருபாற்கும் |
| 367– 5 | சொன்னிகழ்வுமாறு | சொன்னிகழுமாறு |
| 368– 5 | வழக்கினுகினறகத்து | வழக்கினகத்து |
| 368–21 | நரியினார் | நரியனார் |
| 368–24 | நிலைபெறநதோன்றும் | நிலைபெறத்தோன்றும் |
| 368–25 | முன்னிலைப் | முன்னிலை |
| 372–27 | இனமையும், | நன்மையும். |
| 374– 2 | சாந்தி | சாத்தி |
| 374– 2 | கொடுக்க | கொடுக்க |
| 377–13 | யெண்ணு | எண்ணு |
| 380–23 | தலைமையான் | தலைமையானும் |
| 381–20, 22 | இவ்வூர் பெற்றம் | இவ்வூர்ப் பெற்றம் |
| 384– 6 | இடத்து | இடத்துக் |
| 384–10 | வினையாலும் | வினையானும் |
| 384–25 | நீருட்டுக | நீருட்டுக |
| 384–26 | வினைப் | வினை |
| 385–21 | குவளை புலாஅல் | குவளைப் புலாஅல் |
| 387– 1 | தன்மைத் திரிபெயர் | தன்மை திரிபெயர் |
| 397–24 | உடையம் | உடையன் |
| 403–22 | ஆறுபிற்று | ஆறுயிற்று |
| 410–18 | மறியதாய் | மறியது தாய் |
| 410–20 | கவி | கருவி |
| 412–11 | குன்றந்துக்கட் | குன்றத்துக்கட் |
| 422– 7 | பத்துக் கோடாக | பற்றுக் கோடாக (எனலாம்) |
| 424– 8 | நின்றேடுஞ் | நின்றொடுஞ் (எனலாம்) |
| 424–18 | வத்தான் | வந்தான் |
| 425– 6 | சாத்தன் றனது | சாத்தனதனது |
| 428–2 | வினை என்றது | வினை என்றது |




# தொல்காப்பியம்[1]

## சொல்லதிகாரம்

## கல்லாடனார் விருத்தி

### முதலாவது

### கிளவியாக்கம்

1. **உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே**
**அஃறிணை என்மனார் [2]அவரல பிறவே**
**ஆயிரு திணையின் இசைக்கு[3]மன சொல்லே.**

[4]என்பது சூத்திரம். 4

---

1- 1 i 'ஸ்ரீ' எனத் தொடங்கும்.
(இவ்வாறு பாடபேதங்கள் குறிக்கப்பெறும். i. 'ஸ்ரீ' என்றல் முதற் பிரதியில் இந்தப் பாடபேதம் உண்டு என்பதாம். இவ்வாறே பின்னும் கண்டுகொள்க. முதலில் உள்ளது சூத்திரத்தின் எண். அடுத்து உள்ள எண், கீழ்க்குறிப்புக்களைத் தொடர்ச்சியாகக் காட்டும் எண். பின்னர் உரோமன் எண்களால் குறிக்கப் பெறுவன பிரதிகளின் எண்கள். இப்பதிப்புக்குக் கிடைத்த பிரதிகள் ஒன்பது. அவற்றைப் பற்றிய குறிப்புக்களை முன்னுரையிற் காண்க.)
ii பிள்ளையார் சுழியோடு தொடங்கும்.
iii பிள்ளையார் சுழியோடும் பின் 'திருச்சிற்றம்பலம்' என்பதோடும் தொடங்கும்.
vi பிள்ளையார் சுழியோடும் 'சிவமயம்' என்பதோடும் தொடங்கும்.
viii பிள்ளையார் சுழியோடும் 'ஹரி ஓம்' என்பதோடும் தொடங்கும்.

பின்னர் :
ii "தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - கல்லாடனார் விருத்தியுரை - முதலாவது கிளவியாக்கம்" என்று தொடங்கும்.
vi மேலேகண்டபடியே. ஆனால், 'முதலாவது கிளவியாக்கம்' என்பது 'க. கிளவியாக்கம்' என்றுள்ளது.
iii 'தொல்காப்பியம் கல்லாடனார் சொல்லதிகாரவுரை — கிளவியாக்கம்' என்று தொடங்குகிறது.
viii 'கல்லாடனார் சொல்லதிகாரம் கிளவியாக்கம்' என்று தொடங்குகிறது.

1- 2 iv "அவ் வல" (பொருள் விளங்கவில்லை).
I- 3 iii "மன்"
iv "மென்" (விளங்கவில்லை).
1- 4 iii-v "என்பது சூத்திரம்" இல்லை. (பின்னும் இப்படியே ஆம்.)

இவ் அதிகாரம் என்னுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதோ எனின், அதிகாரம் நுதலியதூஉம், அதிகாரத்தினது பெயர் உரைப்பவே விளங்கும்.

[5]இவ் அதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், **சொல்லதிகாரம்** என்னும் பெயர்த்து.

[6]அஃது இடுகுறியோ, காரணக்குறியோ எனின் காரணக் குறி. [7]என்னை காரணம் எனின், சொல் உணர்த்தினமை காரணத்தின் என்பது. என்னை? **கிளவியாக்கம்** [8]எழுவாயாக **எச்சவியல்** இறுதியாகக் கிடந்த ஒன்பது ஓத்துக்களுள்ளுஞ் சொல்லின்கண் கிடந்த விகற்பம் எல்லாம் [9]ஆராய்ந்தான் எனக் கொள்க.

அதிகாரம் [10]என்றதன் பொருண்மை என்னை எனின், முறைமை.

அவ் ஓத்துக்களுள்ளும் எனைத்து வகையான் உணர்த்தினனோ எனின், எட்டு வகைப்பட்ட இலக்கணத்தினான் உணர்த்தினான் என்பது.

அவை உணரச் சொல் உணர்ந்தாறும்.

அவை யாவை எனின், இரண்டு திணை வகுத்து, அத்திணைக்கண் ஐந்து பால் வகுத்து, ஏழு வழு வகுத்து, எட்டு வேற்றுமை

---

1- 5 iii-v (உரையைப் பத்தி பத்தியாகப் பிரித்து எழுதுகின்றன.)

i (பத்திகளாகப் பிரிக்காமற் போனாலும் பிரியவேண்டிய இடத்தில் கிளவியாக்கத்துக் குமட்டும் பின் எழுதிய திருத்தமாகப் பகர வளைவு இட்டிருக்கக் காண்கிறோம். சில பத்திகளை ஒன்றாகச் சேர்ப்பது சிறக்கலாம். ஆனாலும் மேற்கண்ட பிரதிகளை இப்பதிப்புப் பின்பற்றுகிறது.)

1- 6 iv "அஃதிது" (இ - தவறாகலாம்.)

1- 7 ii-vii "என்ன" (ஒருமையில் 'என்னை' என்பதும் பன்மையில் என்ன என்பதும் வருதல் பழைய வழக்கு. பின்னர் இவ்வேறுபாடு பாராட்டப் பெறவில்லை.)

1- 8 ii "எழுவாக."

1- 9 ii நீங்க மற்றவற்றில் "ஆராய்ந்தார்" (ஆசிரியரைக் குறிக்கும் பல இடங்களில் னகர ஈறும் சில இடங்களில் ரகர ஈறும் வருதலால் இப்பதிப்பு எங்கும் னகர ஈறே கொள்கிறது. ரகர ஈறு பாடபேதமாகக் காட்டப்பெறும்.)

1-10 i-ii-iii-iv-vii "என்ற"

வகுத்து, ஆறு தொகை வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டிடத்தான் [11]ஆராய்ந்தான் என எட்டாவன.

இவற்றுள் வழு என்பது அமையாச் சொல்லிற்கு இலக்கணம் ஆமாறு என்னையோ எனின், [12]இன்மை முகத்தான் [13]இலக்கணமாம் என்று உணர்க.

அவற்றுள் இரண்டு திணையாவன :—உயர்திணையும் [14]அஃறிணையும் ஆவன.

ஐந்து பாலாவன :—ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, [15]பல.

ஏழு வழுவாவன :—திணைவழூஉ, பால்வழூஉ, இடவழூஉ, காலவழூஉ, மரபுவழூஉ, செப்புவழூஉ, வினாவழூஉ என இவை.

வேற்றுமை எட்டாவன :—எழுவாய் வேற்றுமை முதலாக விளி வேற்றுமை ஈறாகக் [16]கிடந்தன.

தொகை ஆறாவன :—[17]வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் [18]தொகை.

---

1-11 iii "ஆராய்ந்தானும் என்பது. இவற்றுள்"
viii "ஆராய்ந்தான். சொல்லிற் கிலக்கணம்"
iv "ஆராய்ந்தான் என எட்டாவன. இவற்றுள் வழுவென்பதமை- சொல்லிற்கு........" (புள்ளியிட்ட இடங்கள் சிதிலம் என்பதைக் குறிக்கும்.)
i-ii "ஆராய்ந்தான் என எட்டாவன. இவற்றுள் வழுவென்பதமை........சொல்லிற்கு"

1-12 vi "இன்மை முகத்தானும் அமைந்த இலக்கணமாம் என்று உணர்க."

1-13 iii-v "இலக்கணமாம். அவற்றுள்"

1-14 vi "அஃறிணையும் என இவை. ஐந்து" (பேதமுள்ள பாடத்திற்குப் பின் வரும் சொல்லோடு பாடபேதம் காட்டப்படும். இடையே விடப்பட்ட சொற்களைக் கண்டுகொள்க. பின் வரும் சில சொற்றொடர்கள் "என இவை" என முடிந்தாலும், பல இடங்களில் இத்தகைய முடிவின்றி அமையக் காண்கிறோம்.)

1-15 ii-vii "பல என இவை ஏழு" (ii-ல் 'என இவை' என்பது பிறை வளைவுக்குள் பின் எழுதப்பெற்ற திருத்தமாம்.)

1-16 vi "கிடந்த இவை......தொகை ஆறுவன. வேற்றுமைத் தொகை, உவமத்தொகை"
viii "கிடந்தன......தொகை, உவமத்தொகை"

1-17 iii "இருபெயரொட்டுப் பண்புத்தொகை உவமத் தொகை"

1-18 vi "தொகை என இவை"
viii "தொகை........"

மூன்று இடமாவன :—தன்மை, முன்னிலை, [19]படர்க்கை.

மூன்று காலமாவன :—இறந்த காலம், நிகழ் காலம், எதிர்[20]காலம்.

இரண்டு [21]இடமாவன :—வழக்கும், செய்யுளும்.

இவ்வாறு [22]சொல்லிலக்கணங்கள் எட்டு என்றற்கு விதி உரையிற் கோடல் என உணர்க.

இனி, பிற இலக்கணம் உண்டு எனினும் [23]இவை [24]பெரும் பான்மைய என்னுதல். அவையும் இவற்றுள் அடங்கும்.

மற்றுச் சொல் [25]என்ற பொருண்மை ஓசை என்றவாறு.

ஆறுல், கடலொலியும், [26]காரொலியும், விண்ணொலியும் சொல்லாம் பிற எனின், அற்றன்று.

ஓசை எனினும், அரவம் எனினும், இசை எனினும், ஒலி எனினும், எழுத்தானும் ஓசைக்கும் எழுத்தல்லோசைக்கும் பொது.

[27]கிளவி எனினும் மாற்றம் எனினும் மொழி எனினும் இவை எல்லாம் எழுத்தொடு புணர்ந்து பொருளறிவுறுக்கும் ஓசை

---

1-19 vi "படர்க்கை என இவை"

1-20 vi "காலம் என இவை"

1-21 i-ii-iv-viii-vii "இடமாவன … … … … று"

vi "இடமாவன வழக்கும் செய்யுளுமாகிய இவை இவ்வாறு"

1-22 ii-vi நீங்கியவற்றில் "சொல்லிலக்கணங்களுள் எட்டு."

1-23 iii "அவை" ('அ' பின் திருத்தம்).

1-24 i-ii-iv-vii-viii "பெரும்பான்மைய வென்றுதல் அவையும் இவற்றுள் அடங்கு … … … … ற்றுச் சொல்."

iii "பெரும்பான்மைய வன்றுதலால் அவையும் இவற்றுள் அடங்கும். மற்றுச்சொல்" ("வ" பின் சேர்க்கப்பட்டுள்ளது.)

vi "பெரும்பான்மைய என்றுதல் அவையும் இவற்றுள் அடங்கும் என்றுதல் கொள்ளப்படும் என்க. மற்று."

1-25 i-ii-iv-vii-viii "என்ற பொரு …. …. … என்ற வாறு."

vi "என்றதற்குப் பொருண்மை என்ன எனில் ஓசை என்றவாறு."

1-26 iii-viii "காவோலை ஒலியும்"

v காய் வோலை ஒலியும். ("ய்" என்பது இரு பகர வளைவுக்குள் எழுதப் பெற்றுள்ள பின்னைய திருத்தம்.)

1-27 iii-v "சொல் எனினும் கிளவி எனினும்"

[28]மேல் நிற்கும். எனவே, எழுத்தொடு புணராது பொருளறிவுறுக்கும் [29]ஓசையும் உளவோ எனின், உள. அவை, முற்கும், [30]வீளையும் இலதையும் என்னும் தொடக்கத்தன.

அவை சொல்லெனப்படா. பொருளறிவுறுக்கும் எழுத்தொடு புணரா ஓசை மேல[31]தன்று ஆராய்ச்சி.

எனவே (1) எழுத்தல்லோசையும், (2) எழுத்தொடு புணராது பொரு[32]ள் அறிவிக்கும் ஓசையும், [33](3) எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவிக்கும் ஓசையும், (4) எழுத்தொடு புணர்ந்[34]தே பொருளை அறிவுறுத்தாது, இறிஞி, மிறிஞி என்றாற் போல்வரும் ஓசையும் என ஓசை நான்கு வகைப்படும்.

அந் நான்கினுள்ளும் பின்னின்ற இரண்டும் இவ்வதிகாரத்து ஆராயப் படுகின்ற[35]து.

மேலதிகாரத்தோடு [36]இவ்வதிகாரத்திடை இயைபு என்னையோ எனின், மேற் பாயிரத்துள் எழுத்துஞ் சொல்லும் பொருளும் என நிறுத்தா[37]ன். நிறுத்த முறையானே எழுத்துணர்த்திச் சொல்லுணர்த்திய எடுத்துக் கொண்டான்[38] என்பது.

---

1-28 v நீங்கிய பிரதிகள் "மேனிற்கும்" (பிரதிகளில் பிரித்து எழுதி இராத இடங்களிலும் சொற்களைப் பெரும்பான்மையும் இப்பதிப்புப் பிரித்தே தருகிறது. இதனை எங்கும் கண்டுகொள்க.)

1-29 iii "ஓசை யுளவோ"

1-30 i-ii-iv-vii-viii "விளையும்......தொடக்கத்தன"
vi "விளையும் இலதையும் அனுகரணமும் என்றித் தொடக்கத்தன"

1-31 i-ii-iv-vii "தை"

1-32 i-ii-iv-vi-viii "ளை"

1-33 (1) (2) முதலியன விளக்கங்கருதிப் பதிப்பிக்கப் பெற்றன.
i-ii-iv-vii (3) (4) இவற்றிற் கிடையேயுள்ள பகுதி இல்லை.
viii சிதிலம்.

1-34 i-ii-iv "த"

1-35 ii-v-vi "ன்" (ii-v-ல் "து" என்பது "ன" எனத் திருத்தப்பட்டுள்ளது. தொகுதி ஒருமையாகக் கொண்டுவரும் வழக்கு இவ்வுரையிற் பெரும்பான்மையதாம்.)

1-36 iv "இவ்வதிகாரத்திடை என்னையோ எனின்"

1-37 எல்லாப் பிரதிகளிலும் "ர்"

1-38 ஷ

[39]எழுத்தோடு சொல்லிடை வேற்றுமை என்னை எனின், தன்னை [40]உணர்த்தி நின்றவழி எழுத்து எனப்படும்; தான் இடை நின்று பொருளுணர்த்தியவழிச் சொல் எனப்படும்.

இம்முதல் ஓத்து, என் நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதோ எனின், ஓத்து [41]நுதலியதூஉம், ஓத்தினது பெயருரைப்பவே விளங்கும்.

இவ் ஓத்து என்ன பெயர்த்தோ? எனின், [42]கிளவியாக்கம் என்னும் பெயர்த்து. கிளவி என்பது சொல். ஆக்கம் என்பது சொற்கள் பொருள்[43]கண் மேலாமாறு. சொற்கள் பொருள் கண் மேலாமாறு[44] உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்று பெயர் பெற்றது. ஒருவன் மேலாமாறு இது, [45]ஒருத்தி மேலாமாறு இது, பலர் மேலாமாறு இது, ஒன்றன் மேலாமாறு இது, பலவற்றின் மேலாமாறு இது, வழுவாமாறு இது, வழுவமையுமாறு இது எனப் பொருள்கண் மேலாமாறு[46] உணர்த்தினமையின் கிளவியாக்கம் எனப் பெயர் ஆயிற்று.

மற்று, ஏனை ஓத்துக்களுள்ளும் பொருள்கண் மேலாமாறே அன்றே[47] உணர்த்தினது? பொருளல்லவற்றின் மேலாமாறு உணர்த்தியதில்லை எனின், ஏனை ஓத்துக்களுள் பொருள்கண் மேலாயும்

---

1-39 i-iv-viii "எழுத்தொ.........ன்னை எனின்"
iii-v எழுத்தோத்தினுள் உணர்த்தியது என்னை (கோடிட்ட பகுதி v-இல் பின் எழுந்த திருத்தம்.)

1-40 ii "உணர நின்ற வழி" (திருத்தம்.)

1-41 i-iv-vii-viii நுதலியதூஉ.........விளங்கும்.

1-42 iv "கிளவி யாக்கம் என்பது பேர் பெற்றது"
viii "கிளவியாக்கம் என்று பெயர் பெற்றது"

1-43 ii "ட்" (பின்னும் இவ்வாறே பிரித்துள்ளமை கண்டு கொள்க)

1-44 i "உணர்த்தி னமையின் கிளவியாக்கம் என்று" (கோடிட்டவை திருத்தம்.)

1-45 vi "ஒருத்தி மேலாமாறிது, பலவற்றின் மேலாமாறிது, வழூ அமையுமாறிது எனப் பொருட்கண் மேலாமாறு."

1-46 v "உணர்த்தினமையின் ஆக்கம் எனப் பெயராயிற்று."
vi "கிளவியாக்கம் என்னும் பெயர்த்தாயிற்று."

1-47 vi "உணர்த்தினது, மாறுணர்த்தியது இல்லை"

[48]நின்றவற்று இலக்கணம் உணர்த்தினா[49]ன். ஈண்டு அவை தம்மை ஆமாறுணர்த்தினான் என்பது.

மற்றுப் பெயர்ச் சொல்லும், வினைச் சொல்லும், இடைச்-சொல்லும், உரிச் சொல்லும் எனச் சொல்லும் நான்கே ஆதலான், ஓத்தும் நான்கே ஆகற்பால, எனின், ஆகா. என்னை? நான்கு வகைப்பட்ட சொல்லிற்குப் பொது விலக்கணம் இவ் ஓத்தினுள் உணர்த்தினா[50]ன்.

அவற்றுள் முதற்கண்ணது பெயர்ச் சொல்லாதற்கு இலக்கணம் வேற்றுமை ஓத்துள்ளும், வேற்றுமை மயங்கியலுள்ளும், விளிமரபி-னுள்ளும், உணர்த்தினா[51]ன். உணர்த்திய இலக்கணமுடைய பெய-ரைப் பெயரியலுள் உணர்த்தினா[52]ன். உணர்த்தி, அதன் பின்னே [53]கிடந்த வினையை வினையியலுள் உணர்த்தினா[54]ன். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த இடைச்சொல்லை இடைச்சொல் ஓத்தினுள் உணர்த்-தினா[55]ன். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த உரிச்சொல்லை, உரிச்-சொல் [56]ஓத்தினுள் உணர்த்தினா[57]ன். பின்னை எல்லா ஓத்தினுள்ளும் எஞ்சி நின்ற சொற்களை எச்சவியலுள் உணர்த்தினா[57]ன்.

இவ்வகையான் எல்லாம் உணர்த்தினா[58]ன் ஆகலின், இவ்வோத்-தெல்லாம் வேண்டியதூஉம் இம்முறையே கிடந்தநூஉம் ஆயிற்று.

[59]இதன் முதற் சூத்திரம் என்நுதலிற்றோ எனின்: சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துதல் [60]நுதலிற்று

---

1-48 ii "நின்றவற்றி விலக்கணம்" (வி-தி நத்தம்.)
1-49 எல்லாப் பிரதிகளிலும் " ர் "
1-50 ஷை
1-51 ஷை
1-52 ஷை
1-53 iv "கிடந்தவினைச் சொல்லை வினையியலுள்"
1-54 " ர் "
1-55 ஷை
1-56 ii "ஓத்தினுள்ளே உணர்ந்தினார் என்பது"
1-57 " ர் "
1-58 ஷை
1-59 iii-v "இம் முதல் சூத்திரம் என்நுதலிற்றோ எனின்"
iv "இதன் முதற் சூத்திரம் என்னுநவிற்றோ எனின்" ("என்னுத லிற்றோ எனின்" என்பது "எ - னின்" என்று i பிரதியிலும் "எ - ன் அல்லது என் - எனின்" என vi பிரதியிலும் குறுகி வரும்.)
1-60 i-vi-iv-viii "நுதலிற்று இதன் பொருள்"
v "நுதலிற்று உரை" (iii-ல் "இதன் பொருள்" என்பதில்லை. "இதன் பொருள்" என்று எழுதுவது பழைய வழக்கென இறையனார் அகப்பொருள் உரையால் விளங்குகிறது.)

இதன் பொருள் :—உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே [61]என்பது: உயர்திணை என்று சொல்லுப ஆசிரியர், மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை [62]என்றவாறு.

அஃறிணை என்மனார் அவரல பிறவே என்பது: அஃறிணை என்று சொல்லுப ஆசிரியர், அவரின் நீங்கிய அல்லவாகிய பிறபொருளை என்றவாறு.

ஆயிரு திணையின் [63]இசைக்குமன சொல்லே என்பது அவ் இரண்டு [64]பொருளையும் உரைக்கும் சொற்கள் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் உயர்திணைப் பொருளும் அஃறிணைச் சொல்லும் அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின.

உயர் என்னுஞ் சொல்லின் முன்னர்த் திணை என்னுஞ் சொல் வந்து இயைந்தவாறு யாதோ எனின், ஒரு சொல்முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என, இம் மூன்று [65]வகையல்லது இல்லை. இதற்கு விதி உரையிற்கோடல் என்னும் தந்திர உத்தி.

அவற்றுள் :—

தொகைநிலை வகையான் வந்தது - யானைக் கோடு என்பது.

[66]எண்ணுநிலை வகையான் வந்தது - நிலனும் நீரும் என்பது.

பயனிலை வகையான் வந்தது - சாத்தன் உண்டான் என்பது.

---

1-61 i "எ-து" ("என்பது" இவ்வாறு குறுகிவரும். "என்பது" என்பதற்கு முன் உள்ளது சூத்திரப் பகுதி. தலைகீழாகவரும் கால் புள்ளிகளிடை (inverted commas) அச்சிடுவதற்குப் பதிலாக தடித்த எழுத்தில் பதிப்பித்துள்ளமை காண்க. பின்னும் இப்படியே வரும்.)

1-62 "எ-று" ("என்றவாறு" என்பது பல இடங்களில் இப்படிக் குறுக்கப்பெறும்.)

1-63 i-iv "இசைக்கு முன சொல்லே"

1-64 i-viii "பொருளையு முன சொற்கள்"
iv "பொருளையு முன் சேர்த்துஞ் சொற்கள்"
ii-vi-vii "பொருளையும் உணர்த்துஞ் சொற்கள்"

1-65 iii "வகைய வல்லதில்லை" (இதில் "வ" என்பதனை "ல" என்று படித்தலும் ஆம்).

1-66 i-ii-vii "எண்ணுநிலை வகையான் நிலனும் நீரும்"

மற்று, எச்ச வகை, அடுக்கு வகை, பொருள் கோள் வகை, ஆக்க-வகை, இடைச்சொல் வகை, உரிச்சொல் வகை என்றாற்போலப் பிறவும் வகையுள எனின், நால்வகைச் சொல்லினும் சிறப்புடைய [67]பெயரினையும், வினையிற் சிறப்புடைய முற்றுச் சொல்லினையும் பற்றி வழக்கிடத்துப் பெரும்பான்மையும் வருவன, அவையே ஆகலின், [68]அம்மூன்றல்லதில்லை என்று[69]ன் போலும்.

அவையாவன :—

| | |
|---|---|
| எச்ச வகை | - உண்டு வந்தான், உண்ட சாத்தன் என்றாற் போல்வன. |
| அடுக்கு வகை | - [70]பாடுகோ, பாடுகோ, பாடுகோ, பாடுகோ என்பன. |
| பொருள் கோள் வகை | - சுரை யாழ அம்மி மிதப்ப என்பன. |
| ஆக்க வகை | - சாத்தன் தலைவன் ஆயினன் என்பன. |
| இடைச்சொல் வகை | - யாரே தஞ்சம் பெரும என்பன. |
| உரிச்சொல் வகை | - செய்யார் தேஎந்[71]தே மரல்கலிப்ப [72]என்பன. |

அவற்றுள், இது தொகை நிலை வகையான் [73]வந்த தொகை நிலை; தொகை நிலை வகை ஆறனுள்ளும் வினைத்தொகை; வினைத்தொகை மூன்றனுள்ளும் இறந்தகால வினைத்தொகை.

என்மனார் என்றது, என்ப என்னும் முற்றுச் சொல்லினைக் குறைக்கும் வழிக் குறைத்தல் என்பதனான் பகரங் குறைத்து விரிக்கும்

---

1-67 i-iv-v-viii "பேரினையும்" ('பெயர்' என்பது 'பேர்' எனப் பல இடத்தும் வருவது எழுதியவர் கால வழக்காகலாம்; ஆதலின் 'பெயர்' என்றே இப்பதிப்பு பாடம் கொள்கின்றது. முன் சென்ற பகுதியிலும் காண்க.)

1-68 iv "அம் மூன்றல்ல தல்ல"

1-69 ii-v-vi-vii-viii "ர்"

1-70 iv "பாடுகோ, பாடுகோ, பாடுகோ என்பன"

1-71 iv-v "தே எ மரல் கலிப்ப."

i-vi-viii "தோ மரல் கலிப்ப" ("தெருமரல்" எனத் "தேமரல்" என்பதன் திருத்தம் v-ல் உண்டு.)

1-72 vi "என்றாற் போல்வன" (இப்பத்தியில் வரும் "என்பன" எல்லாம் "என்றாற் போல்வன" என்றே vi-ல் உள்ளன.)

1-73 ii-vi-vii "வந்தது"

வழி விரித்தல் என்பதனன் [74]மன்னும் ஆரும் என்பன இரண்டிடைச்சொற் பெய்து விரித்து என்மனார் என்றாயிற்று.

இம் முற்றுச் சொற்குப் பெயராகிய ஆசிரியர் என்பது செய்யுள் விகாரத்தால் தொக்கது. இஃது எச்சவகை.

என்றார் என்றற்பாலதனைக் கால மயக்கத்தால் [75]என்ப என்றான் என உணர்க.

இனி, **உயர்திணை** [76]என்பதன்முன் என்ப என்னுஞ் சொல் முதனூலாசிரியனது கூற்றினைப் பின் தான் கூறுகிற மக்கட் சுட்டு என்பதனோடு இயைவித்தற்குக் கொண்டு கூறு நிலைமைக்கண் வந்ததாகலின், **உயர்திணை** என்னுஞ் சொல்லும், என்ப என்னுஞ் சொல்லும், பின் வருகிற மக்கட் சுட்டு என்னுஞ் சொல்லினோடு வேற்றுமைத் தொகையுள் இறுதியுருபுத் தொகைநிலை வகையான் [77]வந்தது எனப் பொருள்இயைபு கூறுவதல்லது தம்முள் சொல்இயைபு இல என உணர்க.

மக்கட் சுட்டு என்பது [78]மக்களாகிய சுட்டு; இருபெயரொட்டுப் பண்புத் தொகை. சுட்டு என்பதன் பொருள் நன்கு மதிப்பு. அஃது ஆகுபெயரான் மக்கண்மேல் நின்றது.

மக்கள் என்னாது சுட்டு என்றது, தான் **உயர்திணை** என இடுகின்ற குறியீட்டிற்குக் காரணம் இது என்பது [79]விளக்கல் வேண்டிப் போலும்.

இனி, ஆசிரியர் என்பதனோடு மக்கட் சுட்டு என்பதூஉம் பொருள்இயைபு அல்லது சொல்இயைபு [80]இன்று என உணர்க.

ஏ என்பது ஈற்றசை.

---

1-74 ii-iii "மன் (உ-ம்) ஆர் (உ-ம்)"

1-75 iii-v "என்ப எனப் படுவர் என உணர்க"
viii "என்ப என உணர்க"
vi "என்மனார் என உணர்க"

1-76 vi "என்பதற்கு முன்"

1-77 ii-vi-vii "வந்தது என்ப. பொருளியைபு" (புள்ளியிட்ட குழப்பம்.)

1-78 vi "மக்களாகிய சுட்டென்பதன் பொருள் நன்கு மதிப்பு" (எழுதும் போது இடை நின்ற சொற்கள் விடப்பட்டன என்பது தெளிவு.)

1-79 iv "விளக்கவேண்டி"

1-80 ii "அன்று"

**அஃறிணை** என்பது அல்லதாகிய திணை எனக் குணப் பண்புபற்றி வந்த பண்புத் தொகை. **உயர்திணை அல்லதாகிய** என, மேல் நின்ற உயர்திணை என்னுஞ்சொல் வருவித்துக் கொள்க. உயர்திணை என்பதற்கு ஏற்ப [81]இழிதிணை என்றிலனேனும் பொருள் நோக்கும் என உணர்க.

முன் நின்ற **சுட்டு** என்பதன் முன் **அஃறிணை** என வந்த சொல்லும், சூத்திரத்துள் பொருட்படை என்னும் வினை முடிவின் இறுதிக்கண் வந்ததாகலின், பொருள்இயைபு அல்லது சொல்இயைபு இன்று என உணர்க.

ஈண்டும் **என்மனார்** என்[82]றது மேற்சொல்லியவாறே நின்றது என உணர்க.

**அவரல** என்பது நீக்கப் பொருண்மைக்[83]கண் தொக்க ஐந்தாம் வேற்றுமைத் தொகை. **அல்ல பிற** என்பது அல்லவாகிய பிற என இருபெயரொட்டுப் பண்புத் தொகை என உணர்க.

**பிறவற்றை** என்னும் இரண்டாம் வேற்றுமை இறுதிக்கண் தொக்கு நின்றது.

**அவரல** என்றது **பிற** என்றது, அஃறிணை உயிருடையவும் உயிரில்லனவும் என இருகூறாய் அவ்இருகூறும் தத்தம் வகையானும் வேறுபட்டு நின்றமை [84]விளக்கிய என்பது.

ஏ என்பது ஈற்றசை.

---

1-81 i-ii "இழி திணை என்னின் என்னும் பொருள் நோக்கும்"

iv "இழி திணை என்னும் பொருள் நோக்கும்"

viii-v "இழிதிணை என்றில னேனும் பொருளுேக்கும்" (v-ல் "ளே" என்பது "ளொ" எனத் திருத்தப்பட்டுள்ளது. ளகர ணகர மாறாட்டம் கையெழுத்தில் உண்டு. நெடில் குறில் வேறுபாடு இல்லை.)

vi "இழிதிணை யென்று இல் என்னும் பொருள் நோக்கம்"

vii "இழிதிணை என்பது அல் என்பதன் பொருள் நோக்கம் என்பது"

1-82 i-vi-viii "ப"

1-83 "கட் டொக்க" (இப் பதிப்பு இதனைப் பிரித்துள்ளது. இவ்வாறே பதிப்பில் உடம்படு மெய்வாரா இடமும் பிற புணர்ச்சிவாரா இடமும் கண்டு கொள்க.)

1-84 iii-v "அறிய என்பது"

[85]அ என்னுஞ் சுட்டு நீடவருதல் [86]செய்யுளுள் உரித்தே என்பதனான் நீண்டு, பிறவும் வேண்டும் செய்கைப்பட்டு ஆயிருதிணை என நின்றது. இருதிணை என்பதனோடு அ என்பது பெயர் பற்றி[87]வந்த நந்நங்குறிப்பிற்பொருள் செய்யும் இடைச்சொல் என்பதல்லது மூவகையுள் சொல்இனயபு கூறப்படாது.

இருதிணை என்பது இரண்டாகிய திணை என இருபெயரொட்டுப்பண்புத் தொகை.

பிற என்பதனோடு ஆயிருதிணை என்பதூஉம் பொருட்படையாகிய வினை முடிவின்கண் வந்ததாகலிற் சொல்இயைபு இன்று என்பது.

திணை[88] என்பதனோடு இசைக்கும் என்பது [89]தொகைநிலை வகையான் வந்தது.

தொகையுள் இரண்டாம் வேற்றுமைத் [90]தொகைப் பொருள் நிற்ப உருபு தொகுதலின் உருபுத்தொகை எனப்படும்.

இனி, பெயரும் தொழிலும் என்று எழுந்த பொதுவிதியை இரண்டாவதற்கு விலக்கிச் சாரியையுள்வழித் தன்னுருபு நிலையலும் என்று சிறப்புவிதி ஓதுதலின், செய்யுள் விகாரத்தாற் சாரியை நிற்ப உருபு தொக்கது போலும்.

[91]ஆயிருதிணையினையும் என்னும் [92]முற்றும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச் சொல். அது [93]பின்நின்ற சொல் என்பதனோடு பயனிலை வகையான் வந்தது.

---

1-85 i "ஆ"

1-86 i "செய்யுளினுரைத்தே"

viii "செய்யுளுள் உரைத்தே" ("ரை" i-ல் "ரி" எனப் பின் திருத்தப் பெற்றுள்ளது).

1-87 iii "வந்து பிற பொருள் செய்யும் இடைச் சொல்"

1-88 i "என்ப னோடு" ("த" இடையே விட்டது கைப் பிழையாம்).

1-89 i-ii-iv-vi-vii "தொகை நிலையான் வந்தது"

1-90 i-ii "தொகை பொருள்"

1-91 vi "ஆயிரு திணையையும்"

1-92 iv "முற்றையும்"

1-93 iii "பின்புநின்ற"

iv-vii சிதிலம்.

இசைப்பிசையாகும் என்பதனுன் இசைக்கும் என்பதன் பொருள் ஒலிக்கும் என்பதே ஆயினும், சொல்லிற்குப் பொருள் உணர்த்தும் வழியல்லது ஒலித்தல் கூடாமையின் 'உணர்த்தும்' என்னும் தொழிலை 'இசைக்கும்' என்னும் தொழிலாற் கூறியவாறாகக் கொள்க. இதுவும் ஓர் மரபு வழுவமைதி போலும்.

பொருளை உணர்த்துவான் ஒரு சாத்தனே எனினும், [94]அவற்கு அது கருவியாக அல்லது உணர்த்தல் ஆகாமையின், அக்கருவிமேல் [95]தொழில் ஏற்றிச் சொல் உணர்த்தும் என்று கருவி கருத்தாவாகச் சொல்லிற்றாக உணர்க.

மன என்பதூஉம் வினைபற்றிய [96]அசைநிலை இடைச்சொல் ஆகலின், அதனேடு இயைபு கூறப்பட்டது. [97]மன் எனப் பாடம் ஓதுவாரும் உளர்.

இச்சூத்திரத்தாற் சொல்லிய பொருள்: [98]இவ் அதிகாரத்துச் சொல்லுகிற சொல்லது தொகை வரையறையும், அதனை வரையறுக்குங்காற் பொருளான் அல்லது வரையறை இன்மையின் அப்பொருளது [99]தொகைவரையறையும், அப்பொருட்கு [100]நூலகத்து ஆட்சி பெற்ற குறியீடும் உணர்த்தினவாறு ஆயிற்று. (க)

---

1-94 i "அவர்க்கது" (ரகர றகர மாருட்டம் பிரதிகளில் பயின்று வருகிறது.)

v "அவனுக்கு"

1-95 ii-vii "தொழிலை யேற்றி"

1-96 iv "அசைநிலை இடைச்சொல்லாகில்"

1-97 ii-vii "இனி மன் என்று பாடம்"

i-iv-v-vi "மன் என்று பாடம்"

1-98 (இவ்வதிகாரம் என்பதனை இவ் அதிகாரம் எனப் பிரித்துள்ளது காண்க. இவ் என்பதற்கு இவை எனப் பொருள் கொள்ளலாகாது. வ் புணர்ச்சியால் வந்தது. பிரிப்பதால் இத்தகைய இடர்ப்பாடு எழுகிறது. பிரியாதிருப்பது தமிழ் மொழியின் இயல்பிற்கு ஏற்றதாம். இருந்தாலும் தொன்னூற்கஞ்சித் தடுமாறும் உள்ளம் எழாதபடி, யாவரும் இந்த நூலை ஓத வருவதற்கு ஒரு வழியாகவே பிரித்துப் பதிப்பிப்பதாற்யிறு. பிரித்ததனைக் கண்டால் எளிது போன்ற மருட்சி பொது மக்களுக்கு எழுகிறது. அது வரவேற்க வேண்டியதே ஆம்.)

1-99 v-viii நீங்கியவை "தொகை வகை யறையும் பொருட்டு"

1-100 iii "நூலதத்தாட்சி"

iv "நூற்கத்தட்சாத்தி"

2. [1]ஆடூஉ - அறிசொல் மகடூஉ - அறிசொல்
பல்லோர் - அறியும் - சொல்லொடு சிவணி
அம்முப் - பாற்சொல் உயர்திணை - யவ்வே.

என்பது [2]என் நுதலிற்றோ எனின், மேல்திணை கூறு செய்தான்; இனி அத் திணைக்கண் பால்[3] கூறு செய்தல் நுதலிற்று.

[4]இதன் பொருள் :—உயர்திணை என்பது ஆண்மகனை அறியும் சொல்லும், மகளிரை அறியும் சொல்லும், பலரை அறியும் சொல்லொடு கூடி அம் மூன்று பாலினை உணர்த்தும் சொல்லும் [5]உயர்திணையன என்றவாறு.

அறிசொல் என்புழிச் [6]சொல்லிற்கு அறிதல் கூடாமையின் [7]ஒரு சாத்தன் அறியும் சொல் என ஒரு பெயர் வருவித்துக் கொள்க.

---

2-1 iv "ஆடு வறி சொல்" (சூத்திரத்தில் இடையே இடையே கோடிடப்பட்டுள்ளது அதன் இருபுறமுள்ளவற்றை ஒருசொல்நீர்மைத்தாகக் கொள்ளவேண்டும் எனக் குறிக்கவே ஆம்.)

2 i-viii "எனின்" (சூத்திரத்தின் எண், அதன் குறிப்புக்களில் முதல் வருவதற்கு மட்டும் இனித் தரப்படும்.)

iii "எ - னின்"

vi "என் - எனின்" ("என் நுதலிற்றோ என்பதன் குறுக்கமாகும்" "என்பது சூத்திரம் என்நுதலிற்றோ எனின்" அல்லது "என்பதுஎன் நுதலிற்றோ எனின்" என்பதன் குறுக்கமுமாம். இவ்வாறே சூத்திரம் தோறும் கண்டுகொள்க.)

3 i-iii-iv "கூறு செய்தனு - ற்று."

viii "கூறு செய்தற்று." ("கூறு செய்தல் நுதலிற்று" என்பதன் குறுக்கம். பின் எங்கும் இவ்வாறே ஆம்.)

4 iii-v-viii "உயர்திணை என்பது ஆண்மகனை அறியும் சொல்லும்"

ii-vi-vii "இ-ள். ஆண்மகனை அறியும் சொல்லும்"

iv "ஆண்மகனை அறியுஞ் சொல்லும்" ("இ - ள்" என்பது "இதன் பொருள்" என்பதன் குறுக்கம். பின் எங்கும் இவ்வாறே கொள்க. i-ல் "இ - ள்" என்பது பின்னர்ச் சிவப்பு மையில் எழுதப்பெற்றுள்ளது. iv-பிரதி இதனைப் பார்த்து எழுதிய பின் செய்த திருத்தம் என்பது தெளிவு.)

5 iii "உயர்திணையின"

6 iv "சொற்கு"

7 vi "சாத்தன் அறியும் சொல்"

ஏ ஈற்றசை.

அவ்வே என வ கரம் செய்யுள் விகாரத்தான் வந்தது.

சிவணி என்பது, 'பல்லோர் அறியும் சொல்லொடு கூட' என ஒரு தொகைப் பொருண்மை தோன்ற நின்றதோர் சொல் என்று சொல்லுக.

இவ்வாறன்றிச் சிவணி [8]என்பது செய்து என்னும் [9]வினையெச்சமாகி உயர்திணைய என்னும் ஆறும் வேற்றுமை [10]ஒரு வினைக்குறிப்பு நீர்மையும் உடைமையின் அதனோடு முடிந்தது [11]என முடிப்பாரும் உளர்.

இதனாற் சொல்லியது, மேற்கூறிய [12]உயர்திணை என்பது [13]விரிவரையறையான், ஆண்பால் பெண்பால் பன்மைப்பால் என மூன்று [14]கூறுபடும் என்பதூஉம், அப்பொருள் [15]மூன்று கூறுபடும் எனவே தந்திரவுத்தி வகையான் மேற்கூறிய [16]உயர்திணைச் சொல் என்பதும் விரிவரையறையான், ஆண்பாற் சொல் பெண்பாற் சொல் பன்மைப்பாற் சொல் என மூன்று கூறுபடும் என்பதூஉம் கூறியவாறு ஆயிற்று. (உ)

---

2-8 vi "என்பதைச் செய்து"

9 i-ii-iv-vi-vii-viii "வினையெச்ச மாக்கி"

10 i-ii-iv-vii "ஒரு வினைக்குறிப்பினீர்மையும்"

11 vi "எனக் கூறுவாரும் உளர்."

12 i-iv "உயிர்"

13 i-iv "விரிவரையான்"
vi "விரிவகையான்"

14 iv "கூறப்படும்"

15 iv "மூன்று கூறப்படும்"
vi "முக்கூறுபடும்"

16 i "உயர்திணை சொல் என்பதூஉம்"
ii-iv-vii-viii "உயர்திணைச் சொல் என்பதூஉம்"
vi "உயர்திணைச் சொல் என்பது"

**3. ஒன்றறி - சொல்லே பலஅறி - சொல்என் -**
**றாயிரு பாற்சொல் அஃறிணை - யவ்வே.**

*என்பது என் நுதலிற்றோ எனின், மேல் அஃறிணை [1]என்றான் அதனை இனைத்துப் பால் படும் என்று, அது படும் பால் விரித்தலை நுதலிற்று.*

*இதன் பொருள் :—[2]ஒன்றினை அறியும் சொல்லும் பலவற்றை அறியும் சொல்லும் என்று சொல்லப்பட்ட அவ் இரண்டு பாலினையும் [3]உணர்த்தும் சொல் அஃறிணையன என்றவாறு.*

*இதனாற் சொல்லியது : மேற்கூறி நின்ற அஃறிணைப் பொருளினை-யும் அஃறிணைச் சொல்லினையும் [4]விரிவரையறையான், ஒருமை பன்மை எனவும், ஒருமைச்சொல் பன்மைச்சொல் எனவும் கூறியவாறு ஆயிற்று.* (௩)

4. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்எனஅறியும் அந்தம் தமக்கிலவே
உயர்திணை மருங்கின் பால்பிரிந் - திசைக்கும்.

*என்பது என் நுதலிற்றோ எனின், [1]ஐயம் அறுத்தல் நுதலிற்று.*

---

3-1 i-iv-vi "என்றார்"
2 iv "ஒற்றினை"
vi "ஒன்றனை" (பழையவடிவம் இது.)
3 iv "உணர்த்துஞ் சொல், அஃறிணைப் பொருளினையும்"
ii-vii "உணர்த்துஞ் சொல் அஃறிணையன. எ - று. இதனாற் சொல்லியது : மேற்கூறிநின்ற அஃறிணைப் பொருளினையும்"
i "உணர்த்துஞ் சொல் அஃறிணையன வென் - று, இதனாற் சொல்லியது: மேற்கூறி நின்ற அஃறிணைப் பொருளினையும்" (iv - ல் வரி விடப்பட்டுள்ளது. "என்றவாறு" என்று பொழிப்புரை முடிவது வழக்கு. இது "எ - று" என்றும் "என் று" என்றும் குறுக்கப் பெறும். பின்னும் இவ்வாறே கண்டு கொள்க.)
4 i-ii-vii "விரிவரையான்"
iv "விரிவறையான்"
vi "விரிவகையான்"
4-1 ii "இஃது ஐய மறுத்தல்"
iii-v "ஐய மறுத்தலை"

என்னை? மேல் தொகையுள் ஒழிந்த தேவரும் நரகரும் [2]வகையுள் ஒழிந்த பேடியும் 'எவ்வாறும் கொல்' என்று ஐயுற்றார்க்கு அவையும் இவ்வாறும் [3]என்கின்றமையின்.

இதன் பொருள்:—உயர்திணையிடத்துப் பெண்மைத் தன்மையை எய்தவேண்டி, ஆண்மைத் தன்மையின் நீங்கிய பேடி என்னும் [4]பொருளும், தெய்வத் தன்மையைக் கருதின தெய்வம் என்னும் பொருளும், இவை இரண்டும், இவை எனத் தம்மை வேறு பால் அறிவிக்கும் ஈற்றெழுத்தினை உடைய [5]சொற்களையுடைய அல்ல; மேற்கூறிய மக்கள் என்னும் உயர்திணையிடத்து முப்பாலினையும் உணர்த்தும் சொற்கள், அவ்விடத்தின் நின்று நீங்கிவந்து தம்மை உணர்த்தும் என்றவாறு.

[6]அதற்கு உ-ம்:—

பேடி வந்தாள்; பேடியர் [7]வந்தார்.

வாசுதேவன் வந்தான்; திருவினுள் வந்தாள்; முப்பத்து மூவரும்வந்தார்; சந்திராதித்தர் வந்தார் எனினும் அமையும்.

---

4-2 i "வைகையுள்"

ii-vii "ஐவகையுள்"

iv "அவ்வகையுள்"

vi "மன்பதையுள்"

3 iv "என் கையின்"

4 iv "பொருந்"

5 i "சொற்களையுடைய சொற்களை யுடையவல்ல" (இரட்டிப்பு.)

6 viii "அதற்குதாரணம்"

ii "அதற்குதாகரணம்" (i-ல் உதாகரணம் என்று எழுதிப் பின் "க" அடிக்கப்பட்டுள்ளது. ii சில போது உதாஹரணம் என்றும் தன் வடமொழி அறிவைக்காட்டும். பல பிரதிகளிலும் "உ - ம்" என்றே குறுக்கமாக எழுதப்பட்டுள்ளது. அதனையே இப்பதிப்புப் பின்பற்றுகிறது. விரிப்பதானால் viii-இன் வழியே விரித்து எழுதிக் கொள்ளலாம்-)

iii "அதற்குக் காரணம்" (ககர தகர மாறுபாடு. 12-13 நூற்றுண்டுவரை தகரம் இன்றைய ககரம் போல எழுதப்பட்டு வந்தது. பின்னரே வலப்புறக் கோடு கீழிறங்கி இடம் சென்றது.)

7 i-ii-iv-vii வந்தாள்"

அந்தம் தமக்கிலவே என்றதனுன் மக்களும் தேவரும் அல்லாத [8]நிரையப்பாலரும் மக்களை உணர்த்தும் முப்பாற் சொல்லானும் சொல்லப்படுவர் என்பது கொள்க.

[9]உ-ம் :—

**நரகன் வந்தான்; நரகி வந்தாள்; நரகர் வந்தார்** எனவரும்.

முன் நின்ற [10]**சுட்டிய** என்பது. [11]செய்யிய என்னும் வினையெச்சம்: அதற்கு வினை, **திரிந்த** என்னும் பெயரெச்சம்.

பின் நின்ற **சுட்டிய** என்பது செய்த என்னும் பெயரெச்சம்.

உயர்திணை மருங்கின் பெண்மை [12]சுட்டிய ஆண்மைதிரிந்த பெயர்நிலைக் கிளவியும் என மொழி மாற்றுகக் கொள்க.

**உயர்திணை மருங்கின்** என்னும் ஏழாவதற்குப் பெயர்நிலைக்கிளவி என்பதனை [13]முடிவாக்கி, இடைநின்ற சொல்லைப் **பெயர் நிலைக்கிளவிக்கு** அடையாக்கிப் பொருள் உரைத்துக் கொள்க.

இரண்டிடத்துப் **பெயர்நிலைக்கிளவியும்** சொல்லினுற் பொருள் அறியப்படுதலின், பேடியும் தெய்வமும் என்னும் [14]பொருட்கு ஆகுபெயராய் [15]நின்றது என உணர்க. தெய்வம் என்றது தெய்வத்தன்மையை.

---

8 ii-vi "*நிரயப் பாலரும்*" (i-லும் *இந்தத் திருத்தம் பின் செய்யப்பட்டுள்ளது*.)

9 ii "*உதாஹரணம்*"

10 i "*சூட்டிய*"

11 i "*செய்யிய யென்னும்*" ("எ" - "யெ" என *ஒலித்தல்*.)

12 iv "*தட்டிய*"

13 v "*முடிபாக்கி*"

14 i "*பொருட்டாகு பெயராய்*"

iv "*பொருட்டாரு பேராய்*" (*மெய் எழுத்தின்மேல் புள்ளிகுத்தும் வழக்கம் ஓலையில் இல்லை. பெயரைப் பேர் என்றெழுதுவது பிற்கால வழக்கு. ககர தகர மாறுபாடு காண்க.*)

ii-vii '*பொருள தாகு பெயராய்*' (*இது பின் எழுந்த திருத்தமாகக் காட்டப்பட்டுள்ளது.*)

15 vi "*நின்ற என*"

இதனாற் சொல்லியது; முன் சொல்லி நின்ற பொருள் வரையறையுள் அடங்காது நின்ற பொருளினையும் ஒருவாற்றான் அடங்கக் கூறியவாறு ஆயிற்று.

எனவே, உயர்திணைப் பொருள், பொருள் முகத்தான் மக்களும், தேவரும், நரகரும் என மூன்று [16]கூறுபடும்; சொல் முகத்தான் மக்கள் என்றதன் மேற்பட்டு ஒன்றே ஆம்.

உயர்திணைப் பாலாயின் பொருண் முகத்தால் ஆண்பால், பெண்பால், ஆண் அலி, பெண் அலி, பேடிப்பால், ஆண்பாற் பன்மை, பெண்பாற் பன்மை, ஆணலிப் பன்மை, பெண்ணலிப் பன்மை, பேடிப்பன்மை, ஆண்பாலொடு பெண்பால் கூடிய பன்மை, பெண்பாலொடு ஆண்பால் கூடிய பன்மை, ஆண்பாற் சிலர், பெண்பாற் சிலர் என [17]விகற்பித்து நோக்கப் பலவகைப்படும்.

இப்பலவகையும் செய்வகை மூன்றல்லது இன்மையின் [18]முன்றே ஆயின. இவ்வாற்றானே தேவர் நரகர் என்பனவற்றது பாகுபாடும் அறிந்து கொள்க.

இனி, அஃறிணை உயிருடையதூஉம் [19]உயிரில்லதூஉம்என இரண்டாயவற்றுள் உயிருடையது [20]ஆணும், பெண்ணும், [21]ஆண் சிலவும், பெண் சிலவும், ஆண் [22]பன்மையும், பெண் பன்மையும், [23]அவ்இரண்டும் தொக்க சிலவும், அவ்இரண்டும் தொக்க பலவும், உயிரல்ல-

4-16 iv "கூறப்படும்"

17 iv "விகர்ப்பித்து" (ரகர றகர மாறுபாடு.)

28 i "மூறே யாயின்"

iv "முறையாயின" ("மூன்றே" என்பதில் னகரம் விளக்கமாக i-ல் எழுதப்படவில்லை. எனவே "முறை" என iv பாடம் கொண்டது. புள்ளி இடாது எழுதும் வழக்கம் முன் குறிக்கப் பெற்றது. பெயர்த்து எழுதுவோர் விரும்பியவாறு புள்ளி இடுவதால் "யாயின்" என்று i-பாடம் எழுந்தது. இத்தகைய பிரதிபேதங்கள் இனிக் குறிக்கப்படா.)

19 iv "உயிரல்லதூ மென"

20 i-iv "ஆனும்" (ணகர னகர மாருட்டம்)

21 i "ஆன சிலவும்"

22 i "பன்மையு பெண்"

23 iv "இவ்விரண்டும்"

வற்றது ஒருமையும், சிலவும், பலவும் என இவ்வாற்றான் பல[24]பகுதிப் படுமேனும் சொல்வகை நோக்க இரண்டல்லது இன்மையின் இரண்டே ஆயின என்பது.

இனி மக்கள் முதலியவற்றின் வேறுபாடும் அறிந்து கொள்க (௪)

**[1]5. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.**

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே மேற்கூறிய உயர்திணைச் சொல்லுள் ஆடூஉ அறிசொல் ஆமாறு [2]உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — ஆடூஉ அறியும் சொல்லாவது [3]னகாரமாகிய ஒற்றினை ஈறாகிய சொல் என்றவாறு.

உ - ம் :—

> உண்டான், உண்ணா நின்றான், உண்பான்: இவை தெரிநிலை வினை,
> கரியன், செய்யன் : இவை குறிப்பு வினை.

[4]இச் சூத்திரம் னஃகானொற்றே ஆடூஉ அறிசொல் எனப் பொதுப்பட நின்றமையின் புதன், குபேரன், உண்டேன், உண்மின் [5]என்பனவும் ஆண்பால் உணர்த்துதற்குச் சென்றனவேனும், பொதுமை விலக்கி மேற்சொல்லுகின்ற விதிகளான் படர்க்கையிடத்து முற்றுச் சொற்கு ஈறாய் அல்லது வாராது எனக் கொள்க.

இது மேற்கூறுவனவற்றிற்கும் ஒக்கும்.

உண்டான் என்புழி நான்கு எழுத்துக் கூடி ஆண்பால் [6]உணர்த்திற்றேனும், பிற எழுத்துக்கள் பிறபால் உணர்த்தும் வழியும்

---

4-24 i "பகுதி படுமேனும்"

5-1 i "4"

iv "௪"

2 i-iv "உணர் கற்று" (க. த. மாருட்டம்.)

viii "உணர்-ற்று"

3 iii-v "ணகரமாகிய" (கரம், காரம் என்ற இரண்டு சாரியையும் வரும்.)

4 i "ச் சூத்திரம்"

ii-vi-vii "சூத்திரம்"

5 ii "என்பன ஆண்பால்"

6 ii-iii-vi-viii "உணர்த்திற்றே யாயினும்"

வருதலான், னகர ஒற்றையே தலைமைபற்றி [7]ஆடூஉ அறிசொல் [8]என்றான். (௫)

### 6. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.

என்பது என்நுதலிற்றோ எனின், மகடூஉ அறி[1]சொல் ஆமாறு உணர்த்துதல் [2]நுதலிற்று என்பது.

இதன் பொருள்:—மகடூஉ வினை அறியுஞ் சொல்லாவது; ளகார-மாகிய ஒற்றினை ஈறாக உடைய சொல் என்றவாறு.

[3]உ-ம்:—

உண்டாள்; உண்ணா நின்றாள், [4]உண்பாள்.
கரியள், செய்யள் [5]எனவரும். (௬)

### 7. ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
### மாரைக் கிளவி [1]உளப்பட மூன்றும்
### நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

என்பது என்நுதலிற்றோ எனின், பலரை அறியும் [2]சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று என்பது.

---

5-7 i "ஆடூஉ வரி சொல்"
8 i-vi-v-iv "என்றார்"
6-1 i-iv "சொல்லாவது உணர் - எது"
ii-vii "சொல்லாவதுணர்த்து நுதலிற்று"
iii-v "சொல்லாவதுணர்த்துதல் நுதலிற்று"
vi "சொல்லாமாறுணர்த்துதல் நுதலிற்று"
viii "சொல்லாமாறுணர் - ற்று" (சூத்திரம் 5, 7 என்பவற்றில் vi-ல் உள்ளபடியே எல்லாப் பிரதிகளிலும் இருப்பதனால் vi-பாடமே கொள்ளப்பட்டது).
2 i-iii-iv-v-vi-viii "நுதலிற்று"
3 ii "உதாஹரணம் வருமாறு"
4 ii-vi-vii "உண்பாள் என்பன. இவை தெரிநிலை வினை"
5 ii-vii "எனவரும் இவை குறிப்புவினை என்று வேறுபாடு அறிந்து கொள்க. இனி முதற் சூத்திரத் துரையில் விரித்தாங்கு "'ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்' எனச் சூத்திரம் பொதுப்பட நின்றமையின்" என்று தொடங்கி உரைத்தவைகள் எல்லாம் ஈண்டும் விரித்துரைத்துக் கொள்க."
vi (கோடிட்ட சொல்மட்டும் இல்லை. பிற பிரதிகளில் எல்லாம் இல்லாமையால் பதிப்பில் கொள்ளப்பெற வில்லை. பின் வந்தோர் விளக்கமாக்க குறிப்பு எழுதிய பகுதிபோலும்.)
7-1 iv "உள்பட"
2 i "சொல்லாமாறுணர் - எது"

இதன் பொருள் :—ரஃகாரமாகிய ஒற்றும் [3]பகரமாகிய இறுதியும் மார் என்னும் சொல் உட்பட இம்மூன்றும் நிரம்பத் தோன்றும் பலரை அறியும் [4]சொற்கு என்றவாறு.

பலரை அறியும் சொல்லாவன : ரகரம் பகரம் மார் என்பனவற்றை ஈறாக உடைய சொற்கள் என்றவாறு.

உ - ம் :—

உண்டார், உண்ணா நின்றார், உண்பார்.

[5]கரியர், செய்யர்.

உண்ப, தின்ப.

ஆர்த்தார் கொண்மார் வந்தார்.

பூக்குழாய் [6]என்னையர் கண் இல்லாக தீது எனவரும்.

ரகார ஒற்று மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலான் [7]முன் வைக்கப்பட்டது.

பகாரம்எதிர் காலமாகிய ஒரு காலம் பற்றி வருதலான் உயிர்மெய் [8]எழுத்தேனும், அதன்பின் வைக்கப்பட்டது.

மார் என்பதூஉம் எதிர்காலம் பற்றி வரினும் ஒற்றாய் வருதலானும், பெருவழக்கிற்று அன்று ஆதலானும், பகரத்தின் பின் வைக்கப்பட்டது.

நேரத் தோன்றும் என்றதனான், உண்டனம், உண்ணா நின்றனம், உண்குவம்; கரியம், செய்யம் என மகர ஈறும் காட்டுவார் உண்மையின், யானும் என் எஃகமுஞ் சாறும் என்புழி அம்மகரம் அஃறிணையும்[9]உளப்-

---

7-3 ii-vii "பகார"

4 ii-vii "—சொற்கள்"

5 i "கரியா மாகிய"

6 iv "என்னையா ணில்லாக தீது"

7 iv "முன் வகைப்பட்டது"

8 v "எழுத்தெனினும்"

9 iv "உளப்படுத்தித்"

படுத்துத் திரிவுபட நிற்றலின் '[10]அந்நிகரன திரிபுடைய, இவையே [11]திரிபில்லன' [12]என்பது [13] கொள்ளப்பட்டது.

சோற்ந என்பது சொல் எனச் செய்யுள் விகாரத்தால் தொக்கது என உணர்வது.

நான்காவது [14]விரியாது [15]நேரத் தோன்றும் பலரறிசொல், மாரைக் கிளவி [16]உளப்பட மூன்றும் என எழுவாய் பயனிலையும் ஆக்கிக்கொள்ளின், நேரத்தோன்றும் பலரறிசொல் இவை என, நேரத்தோன்றுதனவும் பலரறிசொல் உள எனக் [17]கருத்து அருத்தாபத்திப்பட்டு அவையும் தனக்கு உடன்பாடாய் மேற்கூறுவான் [18]போல நிற்பதோர் சொல் நோக்கப் படுதலானும், தோன்றும் என நின்ற செய்யும் என் சொல், முற்றேசைப்பட்டுப் பயனிலை வகையாதற்கு இசையாது நிற்ற-லானும், அவ்வாறு கூறல் ஆகாது என உணர்க.

---

7-10 i-iv "ந ந கான்"

vi-viii "அந் ந கான்"

ii-vii "அந் ந காண"

v "அர்மகரம்" "அந் நகரன" "அந் நிகரன" ("அம் மகரம்" என்பதனை அடித்ததன் மேல் இந்த இரு திருத்தங்களும் உள்ளன. எகரத்தின் மேல் உள்ள சுழி தவறாக விடுபட்டமையால் இக் குழப்பம் என்பது தெளிவு.)

11 எல்லாப் பிரதிகளும் "திரிபல்லன" (v-இல் "பி" பின் "ப" என்று மாற்றப்பட்டுள்ளது. பி என இருப்பது பொருந்தலாம்.)

12 i ii-vi "என்பன"

13 ii "கொள்ளப்பட்டன"

14 ii "விரியாவது"

15 i "நெர" (காலுக்கும் ரகரத்துக்கும் மாறுபட்டம். கொம்பின்மேல் புள்ளியிட்டால் குறிலாம்; புள்ளியிடும் வழக்கம் மறைந்தமையால் வரும் இடர்ப்பாடு இங்குக் காண்க. இத்தகைய திருத்தங்களைக் கீழ்க்குறிப்பில் இனிக் காட்டவேண்டுவது இல்லை.)

16 i "உள்பட"

17 i-ii-iii-iv-vii "கரத்தருத்தா பத்தி"

vi "உள என்ற கருத்து அருத்தா பத்தி"

viii "உள என கருத்து அருத்தா பத்தி"

18 iii "போலன நிற்பதோர்"

மேல் ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும் என்று [19]பொதுவாக ஈறு என்று கூறுகின்றான் ஆகலின், ஈண்டுப் பகர [20]இறுதி என்றும் கூறியது என்னை எனின், ஆண்டுக் கூறுகின்றது மொழியது ஈறு என்பதன்றே; ஈண்டு [21]அகரம் உயர்திணைப் பன்மையை உணர்த்துங்கால் தானே நின்று உணர்த்தாது பகர ஒற்றின்மேல் ஏறி அதன் [22]பின் நின்று உணர்த்தும் என்றற்குக் கூறியது என உணர்க.

இக்கருத்து மேற் கூறுவனவற்றிற்கும் பொருந்தும். பகர இறுதி என்பன இரு பெயரொட்டுப் பண்புத் தொகை, அகரம் பகர ஒற்றோடு புணர்ந்து நிற்றலாற் பகரம் எனவும் பட்டது; அவ்வாறு [23]நிற்புழி அதன் இறுதி [24]நிற்றலின் இறுதி எனவும் பட்டது. (எ)

8. ஒன்றறி கிளவி [1]தறட ஊர்ந்த
குன்றிய லுகரத்து இறுதியாகும்.

என்பது என் நுதலிற்றோ எனின், உயர்திணைச் சொல்ஆமாறு உணர்த்தி, இனி அஃறிணைச் சொல் ஆமாறு உணர்த்துதல் [2]நுதலிற்று என்பது.

இதன் பொருள்:— ஒன்றனை அறியுஞ் சொல்லாவது [3]தறடக்கள் என்கிற ஒற்றுக்களை ஊர்ந்து வருகிற குற்றியலுகரமாகிய எழுத்தினை ஈறாக உடைய சொற்கள் என்றவாறு.

---

7-19 i-ii-vii 'பொது ஈறு என்று"

20 i "இறு என்றுங்"

21 i "அகர முயர் முயர்"

ii "அகரமுயிரும் உயர்திணை"

22 v "அதன் பின்னர் நின்று"

23 i-ii "நிர்புழ்"

24 i-iv "நிற்றலினின் றுதி"

8-1 i "தடர"

ii "தடற"

iii "தநட"

2 i-ii-v-vi-vii-viii "நுதலிற்று"

3 i-iv "தடரக்கள்"

ii "தடரக்கள்" (பின்னர்த் "தறடக்கள்" என்ற திருத்தம். ரகர-றகர மாறுபாடு இச் சூத்திரமுழுதும் வருகிறது.)

[4]உ - ம் :—

உண்டது, உண்ணு நின்றது, உண்பது ;
நரிது, [5]சேயது
என இவை தகரம் ஊர்ந்துவந்த [6]குற்றியலுகரம்.

கூயிற்று, தாயிற்று ;
கோடின்று, குளம்பின்று
என இவை றகரம் ஊர்ந்து வந்த [7]குற்றியலுகரம்.

நண்டு கட்டு, கோடுந் தாட்டு
என வரும் இவை டகரம் ஊர்ந்துவந்த [8]குற்றியலுகரம்.

மற்று, டதற என்று எழுத்துக்கிடக்கை [9]முறைமையான் கூருதது என்னை எனின், தகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் கோடலான் முன்[10]வைக்கப்பட்டது; றகரம் இறந்தகாலம் ஒன்றும் வினைக்குறிப்பும் கோடலான் அதன்பின் வைக்கப்பட்டது; டகரம் வினைக்குறிப்பல்லது கோடல் இன்மையின் [11]அதன்பின் வைக்கப்பட்டது.

உகரந்திறுதி: உகரமாகிய இறுதி எனப் பண்புத்தொகை.

அந்து அல்வழிச் சந்தி.

உகர ஈற்றுச் [12]சொல்லிற்கு உகர இறுதி என்பது இருபெயரொட்டுப் [13]பண்புத் தொகை நிலைக்களமாய் நின்றது. (அ)

---

8-4 ii " உதாஹரணம் "
5 ii-vi-viii "செய்து எனவரும் இவை" ("செய்யது" என்று பின் திருத்தம். புள்ளி இடாப் பழக்கத்தால் எழும் இடர்ப்பாடு காண்க.")
6 ii-vii " குற்றியலுகரம் ஈற்றவாம் "
vi " குற்றியலுகர ஈற்றமாம் "
7 ii-vii-vi (மேற்குறிப்பிற் கண்டபடி.)
8 ii-vii (மேற்குறிப்பிற் கண்டபடி.)
9 vi " முறையான் "
10 iv " வகைப்பட்டது "
11 i-ii " இதன் பின் "
12 i "சொலல விற்கு" (கோடிட்டது மிகுதி புள்ளியிட்டால் சரியாம்.)
13 i-ii-vii " பண்புத் தொகை ... டென் ... நின்றது "
iii " பண்புத் தொகை ... டென ... யாய் நின்ற " (பின் " பண்புத்தொகை நிலைக்களமாய் நின்றது " என்ற திருத்தம் உள்ளது.)
v " பண்புத் தொகை ... என ... ாய் நின்றது "
vi " பண்புத் தொகை ... நின்றது "

9. அ ஆ வ என[1]வரூஉம் இறுதி
அப்பான் மூன்றே பலஅறி சொல்லே.

என்பது [2]என் நுதலிற்றோ எனின், [3]பலஅறிசொல்ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அ ஆ வ என்று சொல்ல [4]வருகிற இறுதிகளை-உடைய அக்கூற்று மூன்று சொல்லும் பலவற்றை அறியும் சொல் என்றவாறு.

உ - ம் :—

உண்டன, உண்ணா நின்றன, உண்பன ;
[5]கரிய, [6]செய்ய ;
உண்ணா, [7]தின்னா ;
உண்குவ, [8]தின்குவ எனவரும்.

அகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் கோடலின் முன் [9]வைக்கப்பட்டது. [10]ஆகாரம் எதிர்காலமாகிய [11]ஒரு காலம் கோடலானும், எதிர்மறைவினைக்கண் அல்லது வாராமையானும், அதன்பின் வைக்கப்பட்டது. வகரமும் அகரம்என [12]அடங்குமேனினும் அவ் அகரம் போல மூன்று காலத்தும் வினைக்[13]குறிப்பினும் வாராது, உண்டல்,

9-1 iv "வருமிறுதி"
2 ii "இச் சூத்திரம் என் நுதலிற்றோ."
3 ii-vi "அஃறிணைக்கட் பலவறி சொல்"
4 i "வருகற"
5 i "குரிய"
ii "குறிய" ("கரிய" என்றும் திருத்தம்.)
6 ii-vi-vii "செய்ய என இவைகள் அகர ஈற்றன."
7 vi "தின்னா என இவை ஆகார ஈற்றன."
ii-vii "தின்னா - இவை ஆகார ஈற்றன."
8 ii-vii தின்குவ - இவை வகர ஈற்றன என்க.
vi "தின்குவ என இவை வகர ஈற்றன"
9 iv "வகைப்பட்டது"
10 i "அகாரம்"
11 v "ஒரு காலமே கோடலானும்"
12 iv "வழங்குமே."
13 ii-vi-vii "குறிப்பின் கண்ணும் வாராது."

தின்றல் இவை முதலாகிய [14]தொழில் தொறும் உண்குவ, தின்குவ என எதிர்காலம் பற்றி வேறோர் [15]வாய்பாடாய் வருதலான், அவ் வகரத்தோடு அடங்கா நிலைமைச் சிறப்புடைய அகரத்தை முன்கூறி, [16]அதனை அதன் பின் [17]வைத்தான் என்பது.

இக்கடா [18]அவற்றிற்கும் ஒக்கும்.

பலஅறிசொல் என்னும் எழுவாய்க்கு, இறுதி என்பது பயனிலை. ஆக்கின் அப்பால் மூன்று என்பது நின்று [19]வற்றும். ஆகலின் [20]மூன்று என்பதையே பயனிலையாக்கி இறுதி என்பதனை இறுதியையுடைய மூன்று எனப் பயனிலைக்கு அடையாக்கி உரைக்க. (௯)

**10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய**
**ஈற்றினின் றிசைக்கும் பதினோர் எழுத்துந்**
**தோற்றந் தாமே வினையொடு வருமே.**

என்பது என்னுதலிற்றோ எனின், மேல் [1]பால்உணர்த்தும் என்னப்பட்ட எழுத்து இனைத்து என்பதூஉம், அவை வினைக்கண் நின்று உணர்த்தும் என்பதூஉம், வினைக்கண்ணும் ஈற்றின்கண் நின்று உணர்த்தும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இரண்டு திணையிடத்தும் உளவாகிய ஐந்து பாலினையும் அறியும்படி, மொழியது ஈற்றுக்கண்ணே நின்று [2]உணர்த்தும் மேற்சொல்லப்பட்ட [3]பதினொருவகை எழுத்தும், அவைதாம்

---

9-14 i "தொழிறோற"
ii-vii "தொழிறோன்ற" (திருத்தம்.)
15 i-ii-vii "வாய்ப் பாடாய்."
vi "வாய்ப் பாட்டான்."
16 vi "இதனை."
17 "வைத்தார்."
18 i-ii "விற்றிற்கும் ஒக்கும்."
vi "ஈற்றிற்கும் ஒக்கும்." (இந்த வாக்கியம் இச் சூத்திர உரையின் கடையில் வருதல் வேண்டும்.)
19 i "நின்று வரும் ஆகலின்." (ர - ற மாறாட்டம்.)
ii "நின்று விடும் ஆகலின்." (கோடிட்டது திருத்தம்.)
20 iv "முற்று என்பதையே"
10-1 iv "பாலுணர்த்து மேன்மைப் பட்ட."
2 iii "உணர்ந்தும்"
3 iv "பதினேரு"

[4]பால்உணர்த்துதற்குப் புலப்படும்இடத்து வினைச்சொல்லொடு வந்து புலப்படும் என்றவாறு.

[5]பதினொரு எழுத்தும் ஆவன :—

[6]னஃகான் ஒற்றும், ளஃகான் ஒற்றும், [7]ரஃகான் ஒற்றும், பகரமும், மாரும், துவ்வும், றுவ்வும், டுவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும் என இவை.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல்; பெயர்எச்சம் [8]என்னும் பொருள்படும்.

மேற்கூறிய திணையினையும் பாலினையும் ஈண்டு வரையறுத்து இருதிணை மருங்கினைம்பால் எனக்கூறிய காரணம் என்னை எனின், உயர்திணைப் பொருள் தேவரும் நரகரும் எனவும், உயர்திணைப் பாலுட்பேடியும், அலியும்என விரிந்து நின்றனவும் பொருள்கள் உண்மையின், இப்பொருட்பகுதி எல்லாம் சொற்பகுதி பிறஇன்மையின் ஐந்தாய் அடங்கினவேஎனினும் [9]பொருட் பாகுபாடு பற்றி நூலகத்து வேறு திணையும் பாலுமாக [10]வழங்கவும் [11]கூடும் கொல்லோ என்று மாணுக்-

---

10-4 v "அப்பாலுணர்த்துதற்குப்"

5 vi "பதினேருெ எழுத்தும்" ("எழுத்து" என உயிர் முதலாகும் சொல்லின் முன் 'ஓர்' என வருவது விதியே ஆனாலும் பிற்காலத்தே இது பிறழ்ந்தது. "ஒரு எழுத்து" என்று பல இடத்தும் காண்கிறோம்.)

6 i "னஃதொற்றும் ளஃதொற்றும்."

iv "னஃதொற்றும் ளஃகுறுற்றும் ரஃதொற்றும்."

7 iv "ரகரம் ஈஃகான்" (ரகரம் பிரதிகளில் சிலபோது இவ்வாறு தோன்றும்.)

8 iii "என்றும்"

9 i-ii-iv-vi-vii "அப்பொருட் பாகுபாடு"

10 i-ii-iv-vi-vii "விளங்கவும்"

viii "வளங்கவும்" ('வ' என்பதனைக் கூட்டெழுத்தில் 'வி' என்று படித்தலுமாம். ள - ழ மாருட்டம் காண்க.)

11 vi "கூடுங் கொல்லே என்று"

i-viii-iv-v "கூடுங் கொல்லோ என்ற"

கன் [12]ஐயுறுவான்ஆயினும் என்று இவைஅல்லதுஇல்லை என விரித்துத்தொகுத்தல் என்னும் இலக்கணத்தான் வரையறுத்து இருதிணையைம்பால் என்றா[13]ன்ஆகக் கொள்க.

முதற்சூத்திரத்துள் கூறப்பட்ட சொல்இலக்கணம் எட்டினுள்ளும் திணைபால் என்பனவற்றது இலக்கணமே இத்துணையும் கூறியது என உணர்க.

முன்நின்ற நான்கு [14]சூத்திரமும் திணையும் பாலும் சொல்லும் பொருளும் வரையறைஇலக்கணமும் கூறின எனவும், பின்நின்ற ஆறும் [15]அத்திணையும் பாலும் உணர்த்தும் [16]சொற்களின் இலக்கணம் கூறின எனவும் உணர்க. (௧0)

**11. வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்**
**பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்**
**மயங்கல் கூடா தம்மர பினவே.**

[1]என்பது என்நுதலிற்றோ எனின், [2]வழுக்காத்தல் நுதலிற்று.

வழுக்காக்கும்இடத்து வழுவற்க என்று காத்தலும், வழுவமைக என்று காத்தலும் என இரண்டாம். அவற்றுள் இது வழுவற்க என்று [3]காத்தல்.

[4]இதன் பொருள் :—வினைச்சொல்லான் அடங்கும் பால்அறியப்படும் பொருளும் [5]பெயர்ச்சொல்லான் அடங்கும் பால்அறியப்படும்

---

**10**-12 ("ஐயுறுவானுயினும் இவையல்ல தில்லை" என்பது விளக்கமாகும். 'என்று' என்பது இடையில் நுழைந்தது வழக்குப்போலும்.)

13 "ர்"

14 iii "சூத்திரத்தினையும் பாலும்"(இடையே எழுத்துக்கள் விடுபட்டன)

15 i-ii-iii-vii "அத்திணையும் சொல்லும் பாலும்"

16 i "சொற்களில்"

**11**-1 iv "எ-னின்" (இனி இவ்வேறுபாடுகள் குறிக்கப்படா,)

2 i "வழுக்காத்தலே"

3 i "காத்தது"

4 ii "பொருள்" - வினைச்சொல்லான்.

i "வினைச்சொல்லான்"

v "வினைச்சொல்லின்"

vi "இ-ள். வினைச்சொல்லான்" (இ - ள் ; பொருள் ; இதன்பொருள். இவற்றைப்பற்றி இனிக் கீழ்க்குறிப்புகள் எழுதப்படா.)

5 v "பெயர்ச் சொல்லின்"

[6]பொருளும் இவ்இரு[7]வகைப் பொருளும் ஒன்றோடு ஒன்றை மயங்கச் சொல்லுதல் பொருந்தா ; தத்தம் இலக்கணத்தானே [8]சொல்லுதல் உடைய என்றவாறு.

உ-ம் :—

**உண்டான் அவன், உண்டாள் அவள், [9]உண்டனர் அவர்,**
**உண்டது அது, உண்டன அவை.** [10]*இவை வினை.*
**அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார்,**
**அது உண்டது, அவை உண்டன.** [11]*இவை பெயர்.*

**பாலறி கிளவி** *என்றதனை ஈண்டும் பொருண்மேற் கொள்க.*

*அவ்வாறு பொருண்மேற் கொள்ளவே பொருள் பற்றி நிகழும் வழு எல்லாம் படாமல் கூறுக என்பதாம்.*

*அவ்வழுக்களது பெயரும் முறையும் தொகையும் ஓரிடத்தும் [12]கூறிற்றிலனே எனினும் உரையிற் கோடல் என்பதனான் [13]இச்-சூத்திரத்து உரையுட் கொள்ளப்படும்.*

*அவையாவன :—*

*திணைவழூஉ, பால்வழூஉ, இடவழூஉ, காலவழூஉ, மரபுவழூஉ, செப்புவழூஉ, வினாவழூஉ என [14]இவை.*

*இவைஎல்லாம் மரபுவழு என ஒன்றே ஆகற்பால எனின் அவ்வாறு ஒன்றாய் அடங்குமெனினும், அம்மரபினைப் பகுத்து,*

---

**1 1-6** vi-ii-vii "*பொருளும் என இவ்விரு*"

7 i -'*வகை பொருளும்*' (*சந்திப் பிழைகள் பிரதிகளில் பல.*)

8 iii "*சொல்லுதல் உடைத்தாம் என்ற*"

9 vi "*உண்டார் அவர்*"

10 ii-vi-vii "*எனவரும் இவை வினை*"

11 ii-vi-vii "*எனவரும் இவை பெயர்*"

12 i-iii-iv-v-viii "*கூறிற்றிலரே யெனினும்*"
vi "*கூறிற்றிலரே யாயினும்*"
ii-vii "*கூறிற்றிலனே யாயினும்*"

13 v "*இச்சூத்திர உரையுள்*"

14 i-vi-vii "*இவையாம்*"

[15]திணைபற்றிய மரபினைத் திணை என்றும், பால்பற்றிய மரபினைப் பால் என்றும், இடம் பற்றிய மரபினை இடம் என்றும், காலம்பற்றிய மரபினைக் காலம் என்றும், [16]செப்புப்பற்றிய மரபினைச் செப்பு என்றும், வினாப்பற்றிய மரபினை வினா என்றும், பகுத்து இவ்வாறு ஒன்றனையும் பற்றாது வருவதனை மரபு என ஒன்றாக்கி இலக்கணமும் [17]வழுவும் கூறினா[18]ன் என்பது.

அவற்றுள் திணைவழூஉ :—

உயர்திணைப்பால் மூன்றும் அஃறிணைப்பால் இரண்டனோடு மயங்கி உயர்திணைவழூஉ மூவிரண்டு [19]ஆறுஆம். இனி, அஃறிணைப்பால் இரண்டும் உயர்திணைப்பால் மூன்றனோடுமயங்கி அஃறிணைத்திணைவழூஉ இருமூன்று ஆறும். இவை பெயர் வினை என்னும் இரண்டனோடு [20]உறழ இருபத்து நான்கு ஆம்.

உ-ம் :—

அவன் வந்தது, அவன் வந்தன: என்றாற் போல்வன பெயர்[21]பற்றிய உயர்திணைத் திணைவழூஉ.

அது வந்தான், அது வந்தாள், அது வந்தார் என்றாற் போல்வன பெயர் பற்றிய அஃறிணைத் திணைவழூஉ.

இனி, வந்தானது, வந்தானவை என்றாற் போல்வன வினைபற்றிய உயர்திணைத் திணை[22]வழூஉ.

உண்டது அவன், உண்டது அவள், [23]உண்டது அவர் என்றாற் போல்வன வினைபற்றிய அஃறிணைத் திணைவழூஉ.

---

11-15 ii "திணைப்பற்றிய"

16 i-ii-iv-vi-vii-viii "செப்பு பற்றிய"

17 ii "வழூஉங்"

18 "ர்"

19 vi "ஆறாய்"

20 i "உரழ"

21 i "பற்றி வுயர்திணை"

22 vi "வழூஉ உண்டதவர்"

23 i "உண்டதவர்.........ரிய"

இனிப் பெயரொடு பெயர்பற்றிய திணைவழூஉ, வினையொடு வினை பற்றிய திணைவழூஉ என விகற்பிக்கப் பலவுமாம்.

**அவன் அது, அவன் அவை** என்றாற்போல்வன பெயரொடு பெயர் பற்றிய திணைவழூஉ.

[24]**உண்டான், தின்றான், ஓடினான், பாடினான்** என ஒருவன்மேல் பலவினை **கூறுகின்றுழி** [25]**உண்டான், தின்றான், ஓடினான், பாடினான்** என்றாற் போல்வன **வினையொடு வினைபற்றிய திணைவழூஉ.**

இனிப் பால்வழூஉ :—

உயர்திணைப்பால் மூன்றும் [26]ஒன்று இரண்டினோடு மயங்கி மூவிரண்டு ஆறாம். அஃறிணைப்பால் இரண்டும் [27]ஒன்றனோடு ஒன்று மயங்கி ஓர் இரண்டு ஆயின ; ஆகப் பால் வழூஉ எட்டு வகைப்படும். அவை வினை பெயர் என்னும் இரண்டனோடு உறழப் பதினாறு ஆம்.

உ - ம் :—

அவன் [28]உண்டாள், அவன் உண்டார்
என்பன உயர்திணைப் பெயர்பற்றிய பால்வழூஉ.

அது வந்தன, [29]அவை வந்தது
என்பன அஃறிணைப் பெயர்பற்றிய பால் வழூஉ.

உண்டான் அவள், உண்டான் அவர்
என்பன [30]உயர்திணை வினைபற்றிய பால்வழூஉ.

---

11-24 i "உண்டான நின்ற வொட்டினான் சாத்தன் என ஒருவன்மேல்"
viii "உண்டான் றியின்ற ஓடினான் பாடினான் என ஒருவன்மேல்"
vi "உண்டான், தின்றான், ஓடினான், சாத்தன் என ஒருவன்மேல்"
iii-v "உண்டான் தின்றான் ஓடினான் என ஒருவன்மேல்"
25 i "உண்டான் நின்ற வொடினான்"
viii "உண்டான் றியன்ற ஓடினான்"
v "உண்டான், தின்றது, ஓடினான், பாடினது" (கோடிட்டவை திருத்தம்.)
26 iii "ஒன்றிட ரண்டனுடன்" ('ட' பிழை.)
27 iii "ஒன்றினோ டொன்று"
i "ஒன்றனோ - ட் - தொன்று"
28 ii "உண்டான்"
29 iv "அவைந்தது"
30 i "உயர்திணை பற்றிவந்த"
ii "உயர்திணை வினைபற்றிவந்த"

**வந்தது அவை, வந்தன [31]அது ;**
*என்பன அஃறிணை வினைபற்றிய பால்வழூஉ.*

*இனிப் பெயரொடு பெயரும், வினையொடு வினையும்பற்றி வழூஉ ஆவனவும் உள.*

**[32]அவன் யாவள், அது யாவை ;**
*என இவை பெயரொடு பெயர்பற்றிய பால்வழூஉ.*

**உண்டான் [33]தின்றாள் ஓடினான் பாடினாள் சாத்தன்** *எனவும்,*
**உண்டது தின்றன வந்தது கிடந்தன ஓர் எருது** *எனவும்,*
*இவை வினையொடு வினை பற்றிய பால்வழூஉ.*

*இனி இடவழூஉ :—*
*தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றும் [34]ஒன்று இரண்டனோடு மயங்கி மூவிரண்டு ஆறு ஆம்.*

*உ - ம் :—*

**யான் உண்டாய் ; யான் உண்டான் ;**
*என்பன. பெயர்வினைகளைப் பற்றிவரும் விகற்பம் இவற்றிற்கும் ஒக்கும் என உணர்க.*

*கால வழூஉ :—*
*இறந்தகாலம், நிகழ்காலம் எதிர்காலம் என்ற மூன்றும் ஒன்று இரண்டனோடு மயங்கி மூவிரண்டு ஆறு ஆம்.*

*உ - ம் :—*

*[35]செத்தானைச்* **சாகின்றான்** *எனவும்,* **சாவான்** *எனவும் கூறினாற்போல வருவன. இவையிற்றிற்கும் பெயர்வினைகளைப் பற்றி வரும் விகற்பம் கொள்க.*

---

11-31 i-ii-iii-iv-vii-viii "அவை"

32 iv "அவை யாவர்"

33 ii "நின்றாள் ஓடினான்"

iv "றினா ளோடினாள்"

34 ii "ஒன்றொன்றிரண்டனோடு"

35 iv "செத்தான் சாகின் றான்"

மரபுவழூஉ :—

ஒரு பொருட்கு [36]உரிய மரபினை ஒரு பொருட்கு உரித்தாகச் [37]சொல்லுதல்.

உ - ம்:—

[38]யானை மேய்ப்பானை இடையன் என்றும், ஆடு [39]மேய்ப்பானைப் பாகன் என்றும், யானையுள் பெண்ணை ஆ என்றும், ஆவினுள் பெண்ணைப் பிடி என்றும் கூறினாற் போல்வன.

செப்பு வழுவிற்கும் வினாவழுவிற்கும் [40]உதாரணம் மேல் வருகின்ற செப்பும் வினாவும் என்னும் சூத்திரத்தாற் கொள்ளப்படும்.

எழுவகை வழுவும் இச்சூத்திரத்துள் மயங்கல் கூடா என்றதனாற் பெறுதும் எனின், மேற் செப்பும் வினாவும் வழாஅலோம்பல் எனச் செப்பு வழுவும், வினாவழுவும் கூறல் அமையாது எனின், இதனுள் அடங்கினவற்றையே உலகத்துச் [41]சொல் எல்லாம் உயர்திணைச்சொல் அஃறிணைச் சொல் என [42]வரையறையுற்ருற்போல, வினாஉரையும் செப்புஉரையும் என இரண்டாக வரையறைப்படுத்து ஓர் நிலைமை கண்டு அதனை உணர்த்துதற் பொருட்டு மீட்டும் விளங்கக்கூறினா[43]ன் என்று சொல்லுப.

எழுவகை வழுவிற்கும் இஃது ஓர் பொது விதி கூறியது எனவும் சிறப்புவிதி வேறுவேறு கூறிற்று எனவும் உரைக்கப்படும்.

---

11-36 ii "உறிய"

37 ii-vi "சொல்லுதலாம்"

38 iv "ஆயானை" (பின்வரியில் வரும் "ஆ" இங்குப் படிக்கப்பட்டது போலும்.)

39 i "மெய்பானை பாகன்"

40 ii "உதாகரணம்"

41 i-ii-iii-iv-vii "சொல்லாம்"

42 ii-vii "வரையற்ருற் போல"

i-iv "வரையறையற்ருற் போல"

iii "வரையறைத்தாற் போல"

43 "ர்"

செப்பு வினா ஒழிந்தவற்றிற்குச் சிறப்புவிதி யாதோ எனின், வினையியலுள் கடைக்கண் கால வழுவிற்கு விதி[44]பெறுதும்; மரபு வழுவிற்கு விதி பொருளதிகாரத்து மரபியல் என்னும் [45]ஓத்தினுள் பெறுதும்; ஒழிந்த திணை பால் இடங்கட்கு விதி னஃகா னொற்று முதலிய சூத்திரங்களாற் கூறிற்று என உணர்க.

இவ்வாறு [46]நூனயமாதல் இச்சூத்திரத்து [47]உரையினுள் கண்டுகொள்க.

இவ்அதிகாரத்துக் கூறப்படும்விதி, மாணுக்கன் ஒரு பொருளினைக் கூறும் திறன் அறியாது இடர்ப்படுதல் நோக்கி, "இன்ன பொருளை இன்னவாறு கூறுக" என்று அதன் இலக்கணம் கூறுதலும் "அதனை அவ்வாறு ஒழியவும் [48]கூறுதலும் ஆம்" என்று கருதினும் "கருதற்க" என்று அதனை [49]வழுவற்க என்று காத்தலும், அவ்வாறு வழுப்படக் கூறிய வழக்கினுள் சிலவற்றை [50]அதன் அகத்து அவ்வாறு கூறுதற்கு ஓர் பொருட் காரணம் [51]கண்டாதல், அது அன்றிப் பலரும் பயில வழங்குதல் கண்டாதல், [52]அமைதி கூறுதலும் என மூவகை. அவற்றுள் இச்சூத்திரம் வழுவற்க என்னும் விதி கூறிற்று என உணர்க. (கக)

---

**11**-44 i-iv "பெற்றும்"
ii "யென்றும்"

45 i "ஓத்தினிட் கண்டுகொள்க"
ii-vii "ஓத்தினிடையும் கண்டுகொள்ளப் பெறும்."
vi "ஒத்திடைக் கண்டுகொள்ளப் பெறுதும்"

46 iv "நுண்ணியமாதல்"

47 v "உரையுள்"

48 i "கூறுதலிம் என்று"
ii "கூறுதலும் என்று"

49 i-ii "வழுவாக (காலை 'ர' என்று கொண்டு 'ர்' என்று படித்தலாம். ர-ற மாருட்டம்)

50 i "அதனக்க வ்வாறுதற் கோர்."
ii "அதனகத் தவ்வாறு தற்கோர்."

51 vi "கண்டாதல் அமைதி கூறுதலும்" (இடையில் ஒருவரி விடப்பட்டது போலும்.)

52 i "ஆமைதி"

### 12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி ஆண்மை அறி[1]சொற் காகிட னின்றே.

என்பது என்னுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது-விதி உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :-(மேற் [2]**பெண்மை சுட்டிய** என்றதனுள் 'பேடியை முப்பாலானும் சொல்லுக' என்னும் விதியுள் ஒரு கூற்றை விலக்கியது என உணர்க.) உயர்திணையிடத்துப் பெண்மையைக் கருதவேண்டி ஆண்மைத் தன்மை நீங்கிய பேடி என்னும் பெயராற் சொல்லப்-[3]படும் பொருண்மை ஆண் மகனை அறியும் சொல்லாற் சொல்லுதற்-காம் [4]இடன் இல்லை என்றவாறு. எனவே, பெண்பாலானும் பன்மைப் பாலானும் சொல்லுக என்றவாறு.

உ-ம் :—

**பேடி வந்தாள் ; பேடியர் வந்தார்** என இவை.

ஓடன் என்ற மிகுதியாற் **பேடி வந்தான்** [5]என்பதூஉம் சிறு-பான்மை அமையும் என்பது.

அவ்வாறு அமையும் என [6]விலக்கிப் பெற்றது என்னை எனின், பெரும்பான்மை சிறுபான்மை உணர்த்துதல் என உணர்க.

இதனைப் **பெண்மை சுட்டிய** என்றதன்பின் வையாது இத்துணை-யும் போதந்து மேற்கூறப்படுகின்ற வழுவமைதிகளோடு [7]சாரவைத்த முறையன்றிக் [8]கூற்றினன், பெண்ணும் ஆணும் அல்லதனை அவ்-

---

12-1 iv "சொற்கிடனின்றே"
2 i "பன்மை சூட்டிய"
3 i "படு......ருண்மை"
4 i "இடைனில்லை"
5 i-iv-vi "என்பதும்"
6 iii "விலக்கு"
7 i-ii-iv-vii "சொல வைத்த"
vi-viii "சொல்லி வைத்த"
8 i "கூறிற்றினர்"
iv "கூறினர்"

அப் பால் சொல்லான் சொல்லுதலும் வழுவமைதி என்பது பெறப்பட்டது.

வழுவமைதிகள்தாம் இலக்கணம் உள்வழிக் கூறும் வழுவமைதியும், இலக்கணம் இல்வழிக் கூறும் வழுவமைதியும் என இருவகைப்படும்.

அவற்றுள் இஃது இலக்கணம் இல்வழிக் கூறிய வழுவமைதி என உணர்க.

இது பால்பற்றிப் பிறந்ததோர் மரபு வழுவமைதி என உணர்க. (கஉ)

## 13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.

என்பது என் நுதலிற்றோ எனின், செப்பு வழூஉம் வினாவழூஉம் காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—செப்பினையும் வினாவினையும் வழுவாமல் ஓம்புக-[1]என்றது பரிகரித்துக் கூறுக-என்றவாறு.

உ - ம் :—

சாத்தா சோறுண்டாயோ? என்றாற்கு உண்பேன் என்றலும் உண்டேன் என்றலும் எனக் கொள்க.

செப்பு வினா [3]என்னும் அவற்றுள், செப்பு, மறுத்தலும் உடம்படுதலும் என இரண்டு வகைப்படும்.

நும்நாடு யாது? என்றாற்குப் [3]பாண்டி நாடு என்றாற்போல்வன இவ்இரண்டினுள் அடங்காதுஎனினும், ஒருவகையான் அடக்கிக்கொள்ளப்படும்.

---

13-1 viii "ஓம்புக என்ற - று பரிகரித்து" ("ஓம்புக என்ற வாறு. ஓம்புக என்றது பரிகரித்துக் கூறுக. என்றவாறு" என்றிருந்தது போலும்.)

2 vi "என்றவற்றுள்"

3 i "பாண்டினாடு"

இனி வினு ஐந்து [4]வகைப்படும்.

**அறியான் வினுதல் அறிவொப்புக் காண்டல்**
**ஐய மறுத்தல் அவனறிவு தான்கோடல்**
**மெய்யவற்குக் காட்டலோ டைவகை[5]வினுவே.**

என இவை.

[6]வழாஅல் ஓம்பல் எனவே வழுவுதலும் உண்டு என்பது பெறப்பட்டது.

அவற்றுள் செப்புவழூஉ :—

வினு எதிர் வினுதலும், ஏவுதலும், உற்றது உரைத்தலும், உறுவது [7]கூறலும், சொல் [8]தொகுத்துஇறுத்தலும், சொல்லாது இறுத்தலும், பிறிது ஒன்று [9]கூறலும் என எழுவகைப்படும்.

உறுகின்றதுகூறல் [10]என்றும் ஒன்று உண்டேல் [11]உற்றதுஉரைத்தலுள் அடங்கும் எனக் கொள்க.

அவற்றுள் பிறிதொன்று கூறல், அமையாவழூஉ எனப்படும்.

கருவூர்க்கு வழியாது? எனப் பருநூல் பன்னிரு தொடி [12]என்றாற்போல்வன. மற்றைய ஆறும் அமையும் வழூ எனப்படும்.

---

**13**-4 iii-iv-vi "**வகைப்படும். அறியான் வினுதல் அறிவொப்புக்கரண்டல் அவனறிவுதான் கோடல். மெய்யவற்குக் காட்டலும் என ஆங்ஙனம் அறியான்.**"

5 ii "**வினுவே என்பதும் கண்டுகொள்க** __**என இவை.**__"
vi **ஷை** (**கோடிட்ட பகுதி இல்லை.**)

6 i "**விழா அலோமைப**"

7 iv "**கூறுதலும்**"

8 i "**தொகுத்திருத்தல்**" (**சிறப்பு ஒன்றும் தோன்றாத இடத்து இந்த "ர" "ற" மாருட்டம் இனிக் காட்டப் பெருது.**)

9 ii "**கூறலும் என்று**"
vi "**கூறுதலும் என**"

10 i-ii-iii-iv-v-vi-viii "**என்னும் ஒன்று**"

11 i-ii-iv-vii "**உற்றதுணர்த்தலுள்**" (**ரை - ணர் மாருட்டம்**),

12 iii "**என்றாற் போல.**"

[13]அவற்றுள் வினா எதிர் வினாதல் வினாவுஞ் செப்பே என்றவழிக் கொள்ளப்படும்.

ஏவலும், உற்றதுஉரைத்தலும் [14]உறுவதுகூறலும் என்னும் மூன்றும் செப்பே வழிஇயினும் என்புழிக் கொள்ளப்படும்.

சொற்றொகுத்திறுத்தல் 'எப்பொருளாயினும்' என்புழியும் [15]அப்பொருள் கூறில் என்புழியும் கொள்ளப்படும்.

[16]சொல்லாதிறுத்தலாகிய பெருமா உலறினீரால் என்றாற்க, வாளாதே [17]உலறினேன் என்றாற்போல்வன, [18]அதிகாரப் புறனடையாகிய செய்யுண் மருங்கினும் என்புழிக்கொள்ளப்படும்.

வினாவழூஉ :—

தான் வினவுகின்றதனைக் [19]கேட்டான் இறுத்தற்கு இடம் படாமல் வினாதல் என ஒன்றே ஆம்.

உ-ம் :—

ஒரு விரல் காட்டி [20]இது நெடிதோ குறிதோ? என்றாற் போல்வன.

வினாவிற்கு அமையா வழூஉவல்லது அமையும்[21]வழூஉ என்பது ஒன்று இல்லை.

---

13-13 vi "வினாவெதிர் வினாதல்"

14 ii "கூறுவது கூறல் என்னும்"
i-iv "உறுவது கூறல்"

15 ii-iv-vi-vii-viii "பொருள் கூறில்"
v "பொருள் கூறல்"

16 vii (சொல்லாதிறுத்தல்: பெருமா.)

17 i "உலறி என்றாற் போல்வன."

18 iii "அதிகார........ ய"
v ஷை (பகர வளைவுக்குள் "ப் புறனடையாகி" என்பது எழுதப்பட்டுள்ளது.)

19 ii "கேட்டவுடன்"
i-iv "கெட்டான் இருத்தற்கு"

20 i "சரு"

21 i "வளு" (தென்நாட்டு வழக்கு.)

[22]வழாஅல் என்பது வழுவி என்னும் [23]செய்து என் எச்சத்து எதிர்மறையாகிய வழாமல் என்னும் சொல் [24]குறைக்கும் வழிக்குறைத்தல் என்பதனால் இடைநின்ற மகரம் [25]குறைத்து நின்றது என உணர்க.

[26]செப்பு, முற்கூறிய காரணம், செப்பு, ஆசிரியன் கண்ணதாகலானும், வினாவினை அறிவிப்பது [27]செப்பாகலானும், வினா இன்றியும் [28]செப்பு நிகழும் ஆகலானும், வழூஉப் பன்மை [29]செப்பின் கண்ணதாகலானும் [30]முன் கூறப்பட்டது.

வினாவுரையும் செப்ப் நிகழ்தலின் செப்பு என ஒன்றேயாய் அடங்காதோ எனின், [31]அடங்கினும் ஒன்றனை அறியாது கூறல் வினா என்றும், [32]ஒன்று அறிவித்தற்குக் கூறல் செப்பு என்றும் இரண்டாகப் பகுத்து ஆராய்ந்தான்[33] என உணர்க. (கங)

## 14. வினாவும் செப்பே வினாஎதிர் [1]வரினே.

என்பது என்னுதலிற்றோ எனின், செப்பு [2]வழுவமைதி கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—வினா என்று சொல்லப்படுகின்றதும் ஓரோவழிச் செப்பு என்று [3]சொல்லப்படும்.

---

13-22 ii "இனி வழூஉல்"

23 i-iv "செய்தனெச்சத்"

24 i "குறைக்க வழி குணர்த்தல்"

25 ii "குறைந்து"

26 vi "செப்பு ஆசிரியன் கண்ணதாகலானும்"

27 vi "அது வாகலானும்"

28 vi "அது நிகழும்"

29 vi "அதன் கண்ணதாகலானும்"

30 ii-vi "முற்கூறப்பட்டது"

31 ii-vi "அங்ஙனம் அடங்குமாயினும் ஒன்றனை"

32 ii-vi-viii "ஒன்றனை யறிவித்தற்கு"

33 "ர்"

14-1 i "வரின்"

2 iv "வருவமைதி"

3 iii "சொல்லப்படுகிறது"

ஒருவன் ஒன்றனை வினாவத் தானும் அதற்கு எதிர் [4]ஒன்றனை வினாவி இறைப் பொருள் [5]படுத்துமே எனின் என்றவாறு.

சாத்தா ! சோறுண்ணாயோ ? என்றாற்கு உண்ணேனோ என்பது.

இது வினாஎதிர் வினாதல் என்னும் வழுவமைதி அன்றோ [6]எனின், வினாவே எனினும், பிறிதோர் வினா வந்து வினாப் பொருள் பயவாது செப்புப் பொருள் பயப்ப நிற்றலின் செப்புவழுவமைதி [7]என அடக்கினான். (கச)

**15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே**
**[1]அப்பொருள் புணர்ந்த கிளவி யான.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் செப்பு வழுவமைதி-ஆமாறு உணர்த்துதல் [2]நுதலிற்று.

இதன் பொருள் :—செப்பு என்று சொல்லப்பட்டது வழுவி வரினும் [3]வரைந்து மாற்றப்படாது, எவ்இடத்து எனின், வினாப்-பொருண்மையோடு பொருந்திய சொல் இடத்து என்றவாறு.

உ-ம் :—

[4]உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா என
நீ [5]செல் என்பது ஏவுதல்.

உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா என
என்கால் [6]முடங்குந்தீற்று என்றல் உற்றது உரைத்தல்.

---

14-4 i "ஒன்றனை வி யிறை"
5 iii "பொருள் படுத்து மேலினின்-று"
6 vi "எனின் பிறிதோர் வினா"
7 i "என்று" ("என" எனத்திருத்தம்.)
15-1 v "அப்பொருள் புணர்ந்த......"
2 ii "நுதலிற்று என்பது"
3 iv "—வறைந்து"
4 i-ii "உரையூர்க்குச்"
5 i-ii "சொல் என்ப தேவுதல்"
viii "செல் என்பதேவுதல்"
vi "செல் என்ற தேவுதல்"
6 ii —"முடங்கிற்று"

**உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா என**
**என் [7]கடனுடையார் வளைப்பர் ; பகைவர் எறிவர் ;** *[8]என்றல் உறுவது கூறல்.*

**[9]செப்பே** *என்புழி ஏகாரம் பிரிநிலை. அதனைப் பிரித்து வழுவமைதி கூறினமையின் வினாவிற்கு வழுவமைதி இல்லை என்பது பெறப்பட்டது.*

**வழீஇயினும்** *என்ற உம்மை இழிவு [10]சிறப்பு.*

*இம் மூன்று சூத்திரத்துள் [11]முன்னையது வழுவற்க என்னும் விதி, பின்னைய இரண்டும் செப்பு வழுவமைதி [12]கூறிய என உணர்க.* (கரு)

**16. செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக் -**
**கப்பொரு ளாகும் உறழ்துணைப் பொருளே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், செப்புவாரொடு வினவுவானிடைக் கிடந்தது ஓர் மரபு இலக்கணம் கூறுதல் [1]நுதலிற்று.*

*இதன் பொருள் :—செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும் [2]சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் அவ்அப் பொருளுக்கு அவ்அப்பொருளேயாம், [3]ஒன்றனோடு ஒன்றைப் பொருவிக் கூறும் அளவிற்றாகிய பொருள் என்றவாறு.*

*உ - ம் :—*
**கொற்றன் மயிர் நல்லவோ சாத்தன் மயிர் நல்லவோ**
*என [4]வினாவின இடத்து,*

---

15-7 i *"கட்முடையார்"*
ii *"கட்முறையார்"*
8 i *"என்றலுவது கூறல்"*
9 i *"செய்வை என்புழீ"*
10 ii *"சிறப்பும்மை"*
11 ii *"முன்னைய"*
12 ii *"கூறின"*
16-1 iv. *"நுதலிற்று என்பது"*
2 iv *"சினைக்கிளவிக்கு முதற்கிளவிக்கு"*
i *"சினைக்கிளவிக்கு முதல் கிளவிக்கும்"*
3 iv *"ஒன்றோடொன்றைப்"*
4 iv *"வினாவின விடந்து"*

[5]கொற்றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல
சாத்தன் மயிரிற் கொற்றன் மயிர் நல்ல
என்று இறுக்க; பிறவும் அன்ன. இது சினைக்கிளவி.

கொற்றன் நல்லனோ சாத்தன் நல்லனோ? என வினவின இடத்து,
சாத்தனிற் கொற்றன் நல்லன்
[6]கொற்றனிற் சாத்தன் நல்லன் என இறுக்க. இது முதற்கிளவி.

சினை என்பது உறுப்பு; முதல் என்பது அவ்உறுப்பினை உடையது.

அப்பொருளாகும் என்றதற்குப் பொருள், சினைக்குச் சினையும் முதற்கு முதலும் என்பதன்றி அவ் அச்சினைக்கு அவ் அச்சினையும், அவ்அம் முதற்கு அவ்அம் முதலும் என்பது கொள்ளப்படும்.

சினை [7]முற்கூறிய அதனான், அவ் அச்சினைக்கு அவ்அச்[8]சினை கூருது முதலொடு கூறுதலும் [9]உள என்பது கொள்ளப்படும்.

உ-ம்:—
இவள் கண் நல்லவோ [10]கயல் நல்லவோ? என வரும்.

உறழ் பொருள் என்னாது துணை என்றஅதனால் [11]உவமத்துக்கண்ணும் சினை முதல்கள் தம்மின் மயங்காமற் கூறுக என்பது கொள்ளப்படும்.

இன்னும் அதனானே அச்சினைமுதற்பொருள்களை [12]எண்ணும் இடத்தும் இனம் ஒத்தனவே எண்ணுக என்பதாஉம் கொள்ளப்படும்.

உ-ம்:—
உவமம் வினை பயன் மெய் உரு என நான்கு வகைப்படும்.
புலிபாய்ந்தாங்குப் பாய்ந்தான்
மழை வண்கை

---

16-5 i "கொற்றென்"
6 ii "கொத்தனிற் சாற்றன்" (த - ற மாருட்டம்.)
7 ii "முதற் கூறிய"
8 i "சினைக் கூருது"
9 i-ii "உள [என்] என்பது"
10 iv "கய நல்லவோ"
11 i "உமத்துக்கண்ணு"
ii-vii "உவமத்தின்"
12 i-ii-iv "யென்னுமிடத்து"

[13]துடிபோலும் நடு
பொன்போலும் மேனி எனவரும்.

இவற்றுள் [14]சினை முதன் மயங்கக் கூறினவும் இவ்விலேசான் அமைத்துக் கொள்ளப்படும்.

இனி [15]எண் :—

முத்தும் மணியும் பவளமும் பொன்னும் [16]என எண்ணுக. இதற்கு அமைதி உண்டேனும் கொள்க.

இச்சூத்திரத்தான் சொல்லியது செப்பினையும், வினாவினையும் பற்றிப் பொருவின் கண்ணும், உவமத்தின் கண்ணும், எண்ணின் கண்ணும் பிறக்கும் மரபிலக்கணமும் மரபுவழூஉ அமைதியும் என உணர்க.

பொரூஉ என்பது [17]ஒன்றை ஒன்றனோடு ஒக்கும் என்பதன்றி அதனின் இதுநன்று என மிகுத்துக் [18]கூறுவது; உவமம் என்பது [19]ஒப்பு உணர்த்தல் என உணர்க. (கசு)

17. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே.

என்பது என்நுதலிற்றோ எனின், மரபுவழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

[1]இதன் பொருள் :— தகுதியினையும் வழக்கினையும் பொருந்தி நடக்கும் இலக்கணத்திற் பக்கச்சொல் நீக்கும் நிலைமை [2]உடைய அல்ல என்றவாறு.

---

16-13 i-iv "துடி பொலி யடு"
ii "துடி பொலி [யடு] யிடை"
vi "துடி போலும் இடை"

14 iv "சினைமுன்"

15 iv "என்"

16 i "எனவென வெண்ணுக"

17 i-iv "ஒன்றனோடு ஒன்றை"

18 i-iii-iv "கூறிற்று"

19 i-ii-iv-vii "ஒப்புரைத்தல்"

17-1 ii "பொருள் வருமாறு"

2 i "யுடைய யல்லல்"

தகுதி என்பது மங்கல மரபினாற் கூறுதலும், இடக்கர் அடக்கிக் கூறுதலும், குழுவின் வந்த கு[3]றுநிலவழக்கும் என மூன்று கூறுபடும்.

உ - ம் :—

[4]செத்தாரைத் துஞ்சினார் [5]என்றலும்,
ஓலையைத் திருமுகம் என்றலும்,
மங்கல மரபு.

கண் கழீஇ[6]வருதும் ; கால்மேல் நீர்பெய்து வருதும் ;
[7]கைக்குறியராய் இருந்தார் பொறையுயிர்த்தார் ;
புலிநின்றிறந்த நீரலீர்த்து ; கருமுகமந்தி ; செம்பினேற்றை
என்பன இடக்கரடக்கிக் கூறல்.

பொற்கொல்லர் பொன்னைப் [8]பறி என்றலும்,
வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும்,
[9]யானைப்பாகர் ஆடையைக் காரை என்றலும்
குழூவின்வந்த [10]குறுநில வழக்கு.

வழக்காறு இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கும், மரூஉ வழக்கும் என இருவகைப்படும்.

முன்றில், மீகண் என்பன இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு.
அருமருந்தன்னானை [11]அருமருந்தான் என்றலும்,
[12]நட்டுவியந்தானை நட்டியந்தான் என்றலும்,

---

17-3 i-iv "சிதிலம்"
ii "கு [அ] (றி) நி [ல] (லை)"
iii "குறி நிலை" ('குழூவுக் குறி' என்ற பிற்கால வழக்குக் காண்க.)
4 iv "செந்தாரை"
5 i "என்னு மரலும்"
ii "என்னு மரபும்"
6 iv "வரும்"
7 i-ii-iv "கைக்குரியராய்"
8 ii "பறி என்றும்"
9 iii "யாணப் பாகர்" (ணை - ண மாறாட்டம்.)
10 ii "குறி நிலை" (திருத்தம்.)
11 ii-vii "அருமந்தன்" (திருத்தம்.)
i-iv-vii-vi "அருமருந்தன்"
12 iii-v "நட்டு வியத்தானை" (iii "த்" என்பதனை "ந்" எனத் திருத்தி உள்ளது.)

பொதுவில் என்பதனைப் பொதுயில் [13]என்றலும்,
மலையமா நாட்டை [14]மலாடு என்றலும்,
[15]சோழநாட்டைச் சோணாடு என்றலும்
என இவை மரூஉ வழக்கு.

இவ்வாறு சொற்சிதையச் சொல்லுவன அன்றிப் [16]பொருள் சிதையச் சொல்லுவனவும் மரூஉ வழக்கு என்று கொள்ளப்படும்.

[17]அளக்கரிய மயிரினைச் சிறுவெள்வாய் [18]என்றும்,
களமருட் கரியாரை வெண்களமர் என்றும்,
புலைக்களமருள் செய்யாரைக் கருங்களமர் என்றும்,
நீரினையும் பாலினையும் ஒரோவழிச் சில பல என்றும்,
அடுப்பின் [19]கீழ்ப்புடையை மீயடுப்பு என்றும் கூறுவன.

இலக்கண வாய்பாடு இன்றி மருவிய வாய்பாடுதாமே இலக்கணமாகக் கூறுவன, இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ எனப்படும்.

இலக்கண வாய்பாடும் [20]உள்வழிச் சொற்சிதையவும் வருவன மரூஉ வழக்கு எனப்படும்.

தகுதி என்பது பட்டாங்கு சொல்லுதல் நீர்மையின்மை நோக்கி அவ்வாய்பாடு களைந்து இவ்வாறு சொல்லுதும் என்று உடன்பட்டுச் [21]சொல்லி வருவது.

---

**17**-13 iii-ii "என்பதும்"
v "என்பதும்" (என்றலும் என்ற திருத்தம் உண்டு.)

**14** iii "மலடு"

**15** i "சோழனாட்டை"

**16** i-ii-iv-vi-vii "படுபொருள் சிதைய"

**17** i "ஆகை"
ii "அளக" (இது திருத்தம்.)
viii "அகை"
v "அளக்கரிய" ("அறக்கரிய" என்றாகலாம்)

**18** i-ii "என்றலும்"
v (என்றலும் என்பது என்றும் எனத் திருத்தல்)

**19** i "கீழ்ப்புடைய"

**20** iii "உன்" (ன - ள மாறாட்டம்)

**21** iii-v "சொல்ல"

[22]வழக்காறு என்பது மேற்கொண்டு ஒரு காரணம் நோக்காது வாய்பாடு [23]படுத்துப் பயிலச் [24]சொல்லி வருவது.

இச் சூத்திரத்தாற் சொல்லியது பரந்துபட்ட மரபு[25]வழூஉக்களுள் சிலவற்றைப் பொருள் காரணம் பற்றியும், நன்[26]மக்கள்தாம் பயில [27]வழங்குதலாகிய [28]காரண வழக்கம்பற்றியும் வழூ[29]அமைந்தவாறு என உணர்க.

இவற்றுள் தகுதி என்றது பொருள்பற்றி [30]அமைந்தது. வழக்காறு வழங்குதல்பற்றி அமைந்தது.

**யானை, யாறு, யாடு** என்னும் இன்னோர் [31]அன்னவற்றையும், **ஆனை, ஆறு, ஆடு** என்னும் இன்னோர் அன்னவாகக் கூறுதலும் [32]வழக்காறு என இதனுள் கொள்ளப்படும். பிறவும் அன்ன.

அவை சான்றோர் சொன்ன செய்யுளுள் பெரும்பான்மை காணப்படாமையின் இதனுள் கொள்ளாது **கடிசொல்லில்லை** [33]**காலத்துப்படினே** என்புழிக் கொள்ளப்படும். (௧௭)

---

17-22 vi "வழங்கற்பாடே"
iv "வழக்கா றென்பதுமோ"

23 i-ii-iii-v "படுத்தும்"
vi-viii "பகுத்து"

24 v "சொல்ல"

25 i-ii "வழூஉக்களும்"

26 i-ii "மக்களாம்"
iii-v "மக்களாற்"

27 iii-iv "வழத்தங்குதல்"

28 v "காரணம் பற்றியும்" ('யும்' இடுநிலைப்பகரத்திற்குள் உள்ளது)
ii "ய காரவ [ண] (ழ) க்கம் பற்றியும்"

29 ii "அமைவார்"
i "அமைவாறு" (ரு - ர் என று அடித்தல்)

30 iv "அமைந்தது. யானை, யாறு, யாடு"

31 vi "அன்னவற்றை யானை" (வ - ம, ர - ற மாருட்டம்.)

32 i "மழைக்காரென"

33 i-ii "காலத்துட் படினே"

18. இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் வழக்கிற்கும் செய்யுட்கும் மரபுவழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—தமக்கு இனம்சுட்டுதல் இல்லாத பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்கள், வழக்கின்அகத்து நெறிஅல்லாத செய்யுட்கு நெறியாம் என்றவாறு.

உ - ம் :—

வழக்காறுவன :—

**பெருங் கொற்றன், பெருங் கூத்தன்** என்றாற் போல்வன.

இவை சிறியான் ஒருவனை நோக்கி வந்தன அல்ல; பண்பு இன்றி உயர்த்திச் சொல்லிய என்பது.

இனிச் செய்யுள்ஆறுவன :—

**மாக்கடனிவந்து [1]எழுதரு செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ** எனவும்,

**வெண்கோட்டி [2]யானை சோனைபடியும்** எனவும்,

**நெடுவெண் [3]திங்களும் ஊர்கொண்டன்றே** எனவும் வரும்.

கருஞாயிறும் [4]கருங்கோட்டி யானையும் குறுங் கருந் திங்களும் உண்மை கண்டு சொல்லினன் [5]அல்லன் என்பது.

வழக்கினுள் பண்பு கொள் பெயர் வருங்கால் குணம்இன்றி விழுமிதாகச் சொல்லவந்து நிற்கும். [6]செய்யுளுள் [7]வருங்கால்அக்குணம் தன்கண் உடையவாய் வந்து நிற்கும்.

---

18-1 vi "எழுசெஞ் ஞாயிற்று"

2 vi "யானைச் சேரனைப் பாடியும்"
i-viii "யானை சொனை படியும்"

3 i "திங்கரும் ஊர்க்கொண்டன்றே"
vi (நெடுவெண் திங்கள் என்ற அடி வெண்கோட்டு யானை என்பதற்கு முன் தரப்பட்டுள்ளது.)

4 vi "குறுங்கருந் திங்களும் கருங்கோட்டு யானையும் உண்மை"
iv "கருங்கோட்டி யானையும் குறுங்குந் திங்களும் உண்மை"

5 i-ii "அல்ல என்பது"

6 ii "செய்யுளில்"

7 ii "வருங்கால்க்"
vi-viii "வருங்கால் குணம்"
ii "வருங்காற் குணம்"

[8]இடுகவுண் மடப்பிடி [9]என்றும்
நால்வாய் வேழம் என்றும்,
[10]மறப்புலி என்றும்,
மடப்பிணை என்றும்,
வடவேங்கடந் தென்குமரி என்றும்

இனன்இல் பண்பு கொள் பெயரே *அன்றி* இனன்இல் தொழில் கொள் [11]பெயரும் [12]இனன்இல் பெயர்கொள் பெயருமாய் *வருவன உளவால் எனின், அவ்வாறு வருவனவற்றையும்,* ஒன்றினம் முடித்தல் *என்பதனான் இதன்-அகத்துச் செய்யுள் விதியாக அமைக்கப்படும்.*

*பண்புப் பெயர் என்னாது* பண்பு கொள் பெயர் *என்றா*[13]*ன்;*
கரியது கரியன *எனப் பண்பினைப் பிரியாது வருவன ஒழியப்*
*பண்பினைக் கொண்டு* செஞ்ஞாயிறு [14]*எனவும்,*
*பண்பினைக் கொள்ளாது* ஞாயிறு *எனவும்*
*வருவனவற்றின் மேற்று இவ்ஆராய்ச்சி என்று அறிக என்பது.*

*இவ்வாறு* பண்பு கொள் பெயர் *என்று கூறவே,* குறுஞ்சூலி, [15]குறுந்தகடி, குறுமூக்கி, செம்போத்து *என்பன அப் பண்பினைப்பற்றி அச்* சூலி, [16]தகடி, மூக்கி, போத்து *என்று வழங்குதல் இன்மையின் அது வாளாது பெயர் எனப்படும்.*

---

18-8 i-ii-iv "இடுக்கவுள்" (கு - க மாறாட்டம்)

9 i "எ - ம்" (என்றும் என்பதன் குறுக்கம்; பின்னும் இப்படி வருவனவற்றை இனிக் குறிப்பதில்லை)

10 i "மரப்புலி" (ர - ற மாறாட்டம்.)

11 i-ii "பேரும்"

12 "இன நிலை" (புள்ளியிடா ன-ந மாறாட்டம்; ல - லை மாறாட்டம்.)

13 —" ர் "

14 iv "எனவும் வருவனவர்றின் பெற்று" (வரி விடுபட்டது.)

15 i-ii-iv-vi-viii "தகடி" (ii-ல் குறுந்தடி எனத் திருத்தம்.)
v "தாடி" (தகடி எனத் திருத்தம்.)

16 i-ii-vii "தடி"
v "தாடி"

இதனான் சொல்லியது, வழக்கிடத்தும், செய்யுளிடத்தும், பண்பிடனாகப் பிறப்பதோர் வழுவமைதியும் பண்பு பற்றிப் பிறக்கும் **இனன்இல் விதப்பும் இனன்உடைய விதப்பும்** என்னும் இருவகைச் செய்யுள் விகாரமும் சொல்லியது என உணர்க.

**செஞ்ஞாயிறு** என்புழிச் **செம்மை** என்னும் பண்பிற்கு, **கருமை, வெண்மை** என இனம்உளவே எனினும், **ஞாயி**ற்றோடு அடுத்தமையான் இனம்இன்றாய் இனன்இல்விதப்பு ஆயிற்று. **ஞாயிறு** என்பது[17] இனம்இலதேனும், **செம்மை** என்னும் பண்பு அடுத்தமையின் கரியதும் ஒரு ஞாயிறு உள்ளதுபோல இனம்உடைத்தாய் இனன்உடை விதப்பு ஆயிற்று. (கஅ)

## 19. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.

என்பது என்னுதலிற்றோ எனின், உலகத்துப் பொருள் எல்லாம் இருவகைப்படும், இயற்கைப் பொருளும் செயற்கைப் பொருளும் என; அவற்றுள், இயற்கைப் பொருள்மேன் மரபிலக்கணம் வழாமல் சொல் நிகழற்[1]பாலவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — இயற்கையாகிய பொருளை இத்தன்மைத்து எனச் சொல்லுக என்றவாறு.

உ - ம் :—

**நிலம்வலிது, நீர் தண்ணிது, [2]தீ வெய்யது, வளி உளரும்** எனவரும்.

இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என்கிறது, அவ் இயற்கை [3]செயற்கை என்னும் பண்பினையோ, அப்பண்பு அடைந்த பொருளினையோ, எனின், பண்பு அடைந்த [4]பொருளினை என உணர்க.

அஃதே எனின், 'இயற்கைப் பொருள் இது', 'செயற்கைப் பொருள் இது' என வேறுபட நில்லாது. **நிலம் வலிது** என்ற [5]வழக்கத்-

---

18-17 viii நீங்கிய பிற "இனமில வேனும்"

19-1 i-ii-iv "பாலாமாறு"

2 ii "வெய்து"

3 ii "செய்கை"

4 v "பொருளை"

5 i-ii "வழக்குத்தானே"

தானே கல்லும் இட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட இடத்து, நீர் நிலமும் சேற்று நிலமும் மிதித்து அவ்வயின் நின்றான் ஒருவன், அந்நிலம் [6]அல்லாத நிலம் மிதித்த இடத்து நிலம் வலிதாயிற்று என்றும் வருமால் எனின், ஒரு பொருள்தானே இயற்கையான பண்பு-அடுத்தஇடத்து இயற்கை என்றும், செயற்கையான பண்புஅடுத்த-இடத்துச் செயற்கை என்றும் பண்பால் வேறுபடுதல் அல்லது பொருளால் வேறு அல்ல என்று உணர்க.

[7]முன் நீர்நிலம் மிதித்தான், கூறும் [8]வழக்கினுள் அப்பொருட்கு உண்மை வகையான் வன்மை இன்றே எனினும் அவன் மனக்-குறிப்புப்பற்றி, அதுவும் வன்மை ஆயிற்று என உணர்க.

இவ்இலக்கணம் கூறிப் பயந்தது என்னை எனின், மேற்செயற்-கைப் பொருளகத்து மரபுவழூஉ அமைத்தற் [9]பொருட்டாக உலகத்துப் பொருளை இயற்கை செயற்கை என இரு பாகுபாடுசெய்து அவற்றைக் கூறும் மரபிலக்கணம் அறிவித்தா[10]ன் எனக் கொள்க. (கக)

## 20. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.

என்பது என்நுதலிற்றோ எனின், செயற்கைப் பொருள்மேல் மரபிலக்கணம் வழாமற் சொல்நிகழற் பாலவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—செயற்கையாகிய பொருளை ஆக்கம் என்னும் வாய்பாட்டோடு சொல்லுக என்றவாறு.

உ - ம் :—

**மயிர் நல்ல ஆயின ;**

**பைங்கூழ் நல்ல ஆயின** என வரும்.

---

19-6 ii "இல்லாத"

7 i-ii "முன்னீர்"

8 iii "வழக்கினுள் ஒரு பொருட்கு"

v "வழக்கினுளப் பொருட்கு"

i-ii-vi-viii "வழக்கினுள் பொருட்கு" ('ள' என்பதனைப் புள்ளி-யிட்டுப் படித்தலால் வரும் மாறுபாடு.)

9 i-ii "பொருட்டா வுலகத்து"

vi-viii "பொருட்டாய் உலகத்து"

10 —"ர்"

மேற்கூறிய "இற்றெனக்கிளத்தல்" [1]இதற்கும் அதிகாரத்தான் வருவித்துக் கொள்க. (உ0)

## 21. ஆக்கந் தானே காரண முதற்றே.

என்பது என்நுதலிற்றோ எனின், மேலதற்கு ஓர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

மேற்கூறிய ஆக்கச் சொல்தானே காரணச் சொல்லை முன்னாக உடைத்து என்றவாறு.

உ - ம் :—

கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல ஆயின. எருப்பெய்து இளங்களை [1]கட்டமையான், [2]நீர்கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல ஆயின எனவரும்.

ஆக்கம் முற்கூறிக் காரணம் பிற் கூறியும் வருமால் எனின், பெரும்பான்மையும் முற்கூறிக் கூறப்படுதலின் முதற்று என்றா[3]ன் போலும். [4]முதல் என்பதனைக் காரணமாக்கிக் [5]கூறலும் ஒன்று. (உக)

## 22. ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்
## போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இதன் பொருள் :— மேற்கூறிய ஆக்கச் சொல்தான் காரணத்தை ஒழியச் சொல்லுதலும் குற்றம்இல்லை என்று சொல்லுப ஆசிரியர் வழக்கினிடத்து என்றவாறு.

உம்மை எதிர்மறை ஆகலான் காரணம் கொடுத்துக்கூறல் வலியுடைத்து.

---

20-1 v நீங்கியவை "இதற்கு அதிகாரத்தான்"

21-1 v-vi "கட்டு நீர் கால்"

2 i "நீர்க்கால்"

3 " ர் "

4 vi-viii "இனி முதல்"

5 vi-viii "கூறுதலும் ஒன்று"

iv "கூறுதலம் ஒன்று"

உ - ம் :—

[1]மயிர் நல்ல ஆயின ;

பைங்கூழ் நல்ல ஆயின எனவரும்.

செய்யுள்விதி உள்வழிச் செய்யுள் என்று கூறி, வாளாதே ஓதும் சூத்திரம் எல்லாம் வழக்கே நோக்குதல் நூற்கிடை ஆகலின் [2]வழக்கி-னுள் என்பது மிகை. அதனன் செயற்கைப் பொருள் காரணம்-கொடுத்து ஆக்கம் கொடாதே சொல்லுதலும், காரணமும் ஆக்கமும் இரண்டும் கொடாதே சொல்லுதலும் கொள்ளப்படும்.

உ - ம் :—

கடுவும் கைபிழி [3]எண்ணெயும் பெற்றமையான் மயிர் [4]நல்ல; பைங்கூழ் [5]நல்ல எனவரும்.

எனவே, செயற்கைப் பொருள் காரணமும், ஆக்கமும் கொடுத்த-லும், காரணம் ஒழிய ஆக்கம் கொடுத்தலும், ஆக்கம் [6]ஒழியக் காரணம் கொடுத்தலும், காரணமும் ஆக்கமும், இரண்டும் கொடாதே சொல்லுதலும் என நான்கு வகைத்து. இவற்றுண் முன்னையவிதி [7]ஒன்றும் மரபிலக்கணம் ; பின்னைய மூன்றும் மரபுவழுவமைதி. [8]இவை அவற்றுள் இச் சூத்திரத்தாற் கூறியது பெரும்பான்மை ; [9]இலேசினாற் கூறிய இரண்டும் சிறுபான்மை என உணர்க.

இவை [10]அமைதற்குக் காரணம் [11]உணர்வார் உணர்வு வகை பற்றிப்போலும். (உஉ)

---

22-1 v "பயிர்"

2 i-ii-iv "வழக்கத்தினுள்"

3 i "எண்ணையும்"

4 vi "நல்ல எனவும்"

5 vi "நல்ல எனவும் வரும்"

6 i-ii-iv-vii "ஒழியக் காரணமும் ஆக்கமும் இரண்டுங் கொடாதே"

7 v "ஒன்று"

8 vi "அவற்றுளிச் சூத்திரத்தால்"

9 i "இலேசினால்" (லே - லை மாறுபாடு.)

10 vi-viii "அமைவதற்கு"

11 "உணர்வா ருணர்வா ருணர்வு வகை"

### 23. பான்மயக் குற்ற ஐயக் கிளவி
### தானறி பொருள்வயிற் பன்மை கூறல்.

என்பது என்நுதலிற்றோ எனின், இன்னும் [1]உலகத்துப் பொருள்தான் ஐயுறும் பொருளும் துணிபொருளும் என இருவகைத்து; அவற்றுள் ஐயுறும் பொருட்கண் உயர்திணைப்பால் ஐயத்துக்கண் பால்வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]ஒரு சாத்தன் திணையறிந்து பால் [3]மயங்கஉற்ற [4]ஐயச்சொல் எனப்படும் சொல் தான் அறிந்த உயர்திணைப் பொருளிடத்துப் பன்மையாகக் [5]கூறும் கூற்று என்றவாறு.

உ - ம் :—

**ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ இதோ [6]தோன்றுவார்** என்பது.

இவ்ஐயம், கண்டவிடத்து ஐயமும், காணாவிடத்து [7]ஐயமும் என இருவகைத்து. காணாவிடத்து ஐயமும் இவ்வாறு கொள்க.

இனிக் [8]காணாதவழி **ஒருவனோ ஒருத்தியோ** என்பதன்றி, **ஒருவனோ பலரோ** என்று ஐயுறும் பால் மயக்கமும் கொள்க.

[9]இது தான் அறியான்ஆவது அல்லது அப்பொருள் இருபாலுமாய் நிற்றல் இல்லை[10]பிற.

---

23-1 iv "இவ்வுலகத்து"

2 vi —"திணையறிந்து பால்"

3 iv "மயங்குற்ற"

4 vi "ஐயச் சொல் தான் அறிந்த உயர்திணை"

5 vii "கூறுக என்றவாறு"

6 i-iv "தோன்பார்"

7 vi "ஐயமும் என இரு வகைத்து இவ்வாறு கொள்க"
ii "ஐயமும் இவ்வாறு கொள்க"

8 vi "காணாதவழி ஒருவனோ பலரோ என்று ஐயுறும்" (இடையில் ஒரு தொடர் விடப்பட்டது.)

9 i "இதான்றி யானுகுவ தல்லது"
iv "இதன்றி யானுகுவ வது"

10 ii "பிரமற்றேழ்ஞுஇய"

மற்று, ஒன்றுகிய அப்பொருளைப் பன்மையான் கூறுதல் [11]வழூஉ-மன். [12]வழூஉவே எனினும் [13]அமைக எனப் பால்வழூஉ அமைத்தவாறு ஆயிற்று.

இவ்ஐயத்துக்கு இலக்கண வழக்கு என வேறு காணுமையின், இதுதான் இலக்கணம் ஆகற்பாற்று எனின், வேறுவழக்கு [14]இல்லையே எனினும், இது பொருள்வகை தொக்க வழூஉ எனப்படும்.

ஒருவனே ஒருத்தியோ தோன்றுகின்றுர் எனப் பொதுவாகக் கூறல் இலக்கண வழக்காம் பிற, எனின், அவ்வாறு கூறுவார் இன்மை-யானும், 'ஆர்' என்பது [15]ஆண்பாற்கு அல்லது ஏலாமையானும் ஆகாது என மறுக்க. (உகூ)

24. உருவென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினு ம்
இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.

என்பது என்நுதலிற்றே எனின், திணை ஐயத்துக்கண்ணும், அஃறிணைப்பால் ஐயத்துக்கண்ணும், வழீஇ அமையுமாறு உணர்த்து-தல் நுதலிற்று.

இதன் பொருள் :—உரு எனச் சொல்லும்இடத்தும், அஃறிணைப்-பிரிப்பின் கண்ணும், இவ்இரண்டு கூற்றின் கண்ணும், ஐயம்உரித்துக் கருதும் காலத்து என்றவாறு.

என்றது, திணைஐயம் தோன்றியவழி [1]உரு என்று சொல்லுக. அஃறிணைப்பால் ஐயம் தோன்றியவழி அஃறிணை இயற்பெயராகிய [2]பொதுப் பெயராற் சொல்லுக என்றவாறு.

ஒருமையும் பன்மையும் வினையாற் பிரிக்கப்படுதலின், ஆகு[3]பெய-ரான், அஃறிணை இயற்பெயர் பிரிப்பு எனப்பட்டது.

---

23-11 v-vi-viii "வழூஉமன்று"

12 i-ii —"வழூஉ எனினும்"

13 i —"அமைவெனப் பால்வழூஉ"

14 vi "இல்லை எனினும்"

15 — (அப்பாற் கல்லது = அந்தப் பல பாற்கு அல்லது என்று இருந்திருத்தல் கூடும்.)

24-1 i-ii-vi "உருவு"

2 i "போது பொதுப் பெயரால்"

3 i-iv "பேரான்"

[4]ஐயம் என்பது அதிகாரத்தான் வருவிக்க. 'திணைஐயம் அஃறிணைப்பால் ஐயம்' [5]என்பது சூத்திரத்துள் இல்லைஆயினும் உரு என்றும், அஃறிணைப்பிரிப்பு என்றும் கூறிய வாய்பாட்டான் உய்த்து உணர்ந்து கொள்ளப்படும்.

உ - ம்:—

**குற்றி கொல்லோ மகன் கொல்லோ இதோ [6]தோன்றுகின்ற உரு** என்பது. [7]ஒன்றென முடித்தல் என்பதனன் உருவேஅன்றி வடிவு, [8]பிழம்பு, பிண்டம் என்பன வற்றானும் சொல்லுக. இதற்கும் காணுத இடத்து ஐயமும் கொள்க.

இனி, அஃறிணைப்பால் ஐயம். **ஒன்று கொல்லோ பல கொல்லோ செய் புக்க பெற்றம்** என்பது. இதற்குக் கண்ட இடத்து ஐயம் என்பது இல்லை.

இதனுள் திணை ஐயத்துக் கூறிய [9]உரு என்னும் வழக்கு உடல்-உயிர் கூட்டப் [10]பொருண்மையாகிய மகன் என்னும் நிலைமைக்கு ஏலாது, அவன்உடலைப் பிரியநின்று [11]உணர்த்தினமையான் அதுவும் ஓர் திணைவழுஅமைதி எனப்படும்.

அஃறிணைப்பால் ஐயத்துக்கூறிய இயற்பெயர் பொது [12]எனினும் மேற் சொல்லுதற்கண் ஒரு பால்மேல் [13]நிற்கற்பாலது அவ்வாறு நில்லாது இருபால் மேலும் நின்றமையின் இதுவும் ஓர் மரபுவழுஉ அமைதி எனக் கொள்க. (உச)

---

24-4 i "ஐம் என"
5 vi "என்பன"
6 i "தோன்றுகிற"
7 ii-vi-viii "ஒன்றின முடித்தல்"
8 v "பிளம்பு பிடிப்பு"
9 ii-vi-viii "உருவு"
i-v "உருபு"
10 iii "பொதுமையாகிய"
11 v "உணர்த்தினமையின்"
12 i-iv "எனினு மொச்" (ர - ற மாருட்டம்.)
ii "எனினுமோர்"
vi "எனினும் சொல்லுதற் கண்"
v எனினு "மொரு சொல்லுதற்கண்"
13 vi "நிகழற் பாலது"

**25. [1]தன்மை சுட்டலும் உரித்தன மொழிப**
**அன்மைக் கிளவி வேறிடத் தான.**

என்பது என்நுதலிற்றோ எனின், துணிபொருட்கண் மரபிலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—தனது தன்மையாகிய அன்மைத் தன்மையைச் சொல்லுதலும் உரித்து என்று சொல்லுப ஆசிரியர். [2]அது அன்மைப் பொருள் எவ்விடத்து எனின், ஐயத்துக்கு மறுதலையாகிய [3]துணிவிடத்து என்றவாறு.

[4]தன்மை சுட்டல் என்புழி [5]இன்னதன்மை என்பது இன்றேனும் மேல் அன்மைக்கிளவி என்றதனன், அன்மைத் தன்மை என்பது [6]ஓர்ப்பிற் கொள்க. கிளவி என்பது பொருள்.

உ-ம் :—

பெண்டாட்டி யல்லன் [7]ஆண்மகன் ;
ஆண்மகனல்லள் பெண்டாட்டி ;
குற்றியல்லன் மகன் ;
மகன் அன்று குற்றி ;
[8]பல அன்று ஒன்று ;
ஒன்று அல்ல பல என்பன.

பெண்டாட்டி அல்லன் ஆண்மகன் என்புழி ஆண்மகன் என்னும் பெயர் எழுவாயாய், அல்லன் என்னும் வினைக்குறிப்பினைப் பண்புகோள வருதல் என்னும் பயனிலையாக முன்னே கொண்டு நின்றமையின்,

---

25-1 i "தன்மைச் சுட்டலும்"

2 vi "அன்மைப் பொருள்"

3 vi "துணிபிடத்து"

4 i "தன்மைச் சுட்டல்"

5 i "இன்னத் தன்மை"

6 v "ஒப்பில் கொள்க"

7 iv "ஆண் மகன் - மகன் அன்று குற்றி." (இடையே ஒரு வரி விடப்பட்டுள்ளது.)

8 i "பலன் றென்று"

**பெண்டாட்டி** என்னும் பெயர்க்கு [9]முடிபு இல்லை எனின், அதற்குஉருபு தொகையாக்கி, நீக்கப் பொருட்கண் [10]ஐந்தாவதனைப் **பெண்டாட்டியின் அல்லன்** என விரித்து முடிபு கொள்க.

இதனாற் சொல்லியது என்னை எனின், இருபொருள் ஐயுற்றுத்துணியும்வழி, அவ்ஐயுற்ற பொருள்தன்மை இத்துணிபொருள்இடத்து இன்மையும் துணிபொருட்கண் தன்மை அவ்ஐயப்பொருட்கண் இன்மையும் காணும் அன்றே; கண்டுழி 'இஃது அன்மை' அதற்கும், 'அஃது அன்மை' இதற்கும், [11]அன்மை யாதானும் ஒன்றன்மேல் அன்மை கொடுப்பினும் அமையும் என்று கருதற்க; 'இஃது அன்மை' அதற்கும் உண்டே எனினும், துணிந்தவழி உள்பொருளாய் நின்று காணப்பட்டது 'அஃது அன்மை' ஆதலின், "இதன் [12]மேலிறுக்க" என மரபிலக்கணம் கூறியவாறு ஆயிற்று. (உரு)

**26. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை**
**நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]வண்ணச் சொல்லதோர் மரபு கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்:—பண்பினை உணர்த்தும் சொல் [2]முன்னது; [3]பண்பினை உடைய சினைப்பொருளை உணர்த்தும் சொல் [4]அதன்பின்னது; அச்சினையை உடைய முதற்பொருளை உணர்த்தும் சொல்

---

**25**-9 ii "முடிவில்லை"
vi "முடிவு இல்லை"

10 vi "பெண்டாட்டியின் அல்லன் என ஐந்தாவதனை விரித்து முடிபு கொள்க"

11 ii "அமையாதானும்"

12 i "மேலிறுக்கு"
v-vi-vii-viii "மேலிருக்க"

**26**-1 vi-viii "வண்ணஞ் சொல்வதோர் மரபு"

2 i-ii-iv-vi-viii "முன்னர்"

3 iii-v "அப்பண்பினை யுடைய"

4 vi "அதற் பின்"
ii "அதற்பின் [த] (அ)"

[5]அதன் பின்னது என்று கேட்டான் அடைவு கருதும்படி அம்மூன்றும் அம்முறையின் மயங்காமல் வழக்குப்பெற்று [6]நடக்கும் யாது அது வண்ணச் சினைச்சொல் என்றவாறு.

உ - ம்:—

**பெருந்தலைச் சாத்தன் ;**

**செங்கால் நாரை** எனவரும்.

**பெரும்பலாக்கோடு, பெருவழுநுணங்காய்** ; என மயங்கியும் வருமாலோ [7]எனின், அவை சொல்லுவான் கருத்து வேறு ; பெரும்பலா, பெருவழுதுணை எனப் **பெருமை** [8]முதன்மேலே நோக்கி நின்றமையின். **பெருந்தலைப்புல்லாநல்லேறு** எனவும், “[9]**நெட்டிலை விளவின் கட்டெங்கு** எனவும் மயங்கியும் [10]வருமாலோ எனின், அவ்வாறு மயங்கிக் கூறுவன கண்டன்றே இவ்இலக்கணம் எழுந்தது. இதனால், அதனை அழிவழக்கு என்று மறுக்க.

[11]பெருந்தலையினை உடையதும் வேறு ; புல்லா நல்லேறும் வேறு ; பொருள் கொண்டு இயையுமால்-அதுவும் எனின், அவ்வாறு பொருள் கோடல் செய்யுட்கு அல்லது இன்று என்று மறுக்க. **முறை** [12]என்றதனானே, ஒரு [13]முதற் பொருட்கண் இரண்டுபண்பு அடுத்து வருவனவும் வழக்கினுள் உள என்று அமைத்துக் கொள்ளப்படும்.

---

**26**-5 vi “அதன் பின் என்று”

6 vi “நடக்கும் வண்ணச் சினைச் சொல்”

7 vi “எனின் அவ்வாறு மயங்கிக் கூறுவன கண்டன்றே இவ்விலக்கணம் எழுந்தது.” (4-வரிகள் விடப்பட்டன.)

8 i-ii-iv “முதன்மேனோக்கி”

9 i-ii “நெட்டிலை விளவின் கட் தெங்கு”

v “நெட்டிலை விள ... இன்கட் தெங்கு”

10 vi-viii “வருமால் எனின்”

11 i “பெருந்தலையி னுடையதும் வெறும்”

vi “பெருந்தலை யானையுடையதும் வெறும் புல்லா நல்லேறும் வேறு பொருள்”

12 v “என்றதனான்”

13 v “முதற்கண்”

உ-ம் :—

இளம் பெருங் கூத்தன் ;
சிறுகருஞ் [14]சாத்தன் எனவரும்.

[15]இளமை என்னும் சொல் பெருமை என்பதனோடு இயைபு இன்றாய்க் கூத்தன் என்பதனோடு இயைபு கோடல் மரபு இன்மையின் அமைக்கப்பட்டது.

இன்னும் இவ்[16]இலேசானே சினைப்பொருட்கண் இரண்டு பண்பு அடுத்து வருவனவும் செய்யுளுள் உள [17]என்றும் அமைக்கப்படும்.

உ - ம் :—

[18]சிறுபைந் தூவி,
செங்காற் பேடை எனவரும்.

நடைபெற்று என்றதனான் அவ் அடைசினை [19]முதல்கள் செய்யுட்கண் முறைமை மயங்கியும் வரப்பெறும் என்பது கொள்ளப்படும்.

உ - ம் :—

பெருந்தோட் [20]சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை எனவரும்.

அடைசினை முதல் [21]என்ற பின்பும், வண்ணச் சினைச்சொல் என்றது என்னை எனின், முற்கூறியது இலக்கண வாய்பாடுஆகலான் அவ்இலக்கண முடையது இதுஎன வேண்டுதலின், அவ்இலக்கணத்தான் அவ்இலக்கணமுடைய பொருட்குக் குறியிட்டா[22]ன் என உணர்க.

---

26-14 i "சுரத்தவ்"
15 vi "இளயென்னுஞ்"
16 i "இலேசானே"
v "இலேசினுனே"
17 v "என"
18 iv "சிறுவைந்தூவி"
19 ii "முதல் கண்"
20 vi "சிறு சுப்பின்"
21 iv-vi "என்று"
i-ii "என்னும்"
22 "ர்"

இதனாற் சொல்லியது என்னை எனின், 'அடைசினை முதற்பொருள்களைக் கூறுங்கால் இன்னவாறு கூறுக' என்று அவற்றது மரபிலக்கணமும் அவ்வழி மரபுவழூஉ அமைதியும் கூறியவாறு ஆயிற்று. (உசு)

**27.** **ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**வழக்கி னாகிய உயர்சொற் கிளவி**
**இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.**

என்பது என்நுதலிற்றோ எனின், உயர்திணைப்பால் [1]வழூஉ அமைதியும், அஃறிணைத்திணை [2]வழூஉ அமைதியும் உடன் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—உயர்திணையிடத்து ஆண்பாலினையும் பெண்பாலினையும் அத்திணைப் பன்மைப்பாலாற் சொல்லும் சொல்லும், அஃறிணையொன்றனை உயர்திணைப் பன்மைப்பாலாற் சொல்லும் சொல்லும், இவை இரண்டும் வழக்கின் கண்ணே உளவாகிய உயர்த்துச் சொல்லுதற் பொருண்மைக்கண் வரும் [3]சொல் இலக்கணத்திடத்துச் சொல்லும் நெறிஅல்ல என்றவாறு.

உ - ம் :—

**தாம் வந்தார்** என்பது.

**இலக்கண மருங்கிற் சொல்லாறுஅல்ல** என்ற மிகையாற் காதன்மிகுதியான், உயர்திணை அஃறிணை ஆகவும், அஃறிணை உயர்திணை ஆகவும் கூறுவனவும் அமைத்துக்கொள்க.

உ - ம் :—

**என் பாவை வந்தது - போயிற்று ;**
**என் யானை வந்தது - போயிற்று.**

என இவை உயர்திணை அஃறிணை [4]ஆயின.

---

27-1 vi "வழு வமைதியும்"

2 vi ஷை

3 ii-vi "சொல்லாம் இலக்கணத்திடத்து"

4 i-ii-iv "ஆன"

இனி ஓர் ஆவினை எம்அன்னை வந்தாள் - போயினாள் [5]எனவும், ஓர் எருத்தினை எந்தை வந்தான் - போயினான் எனவும் கூறுவன, அஃறிணை உயர்திணையான் வந்தன.

மற்று இவை ஆகுபெயர் அன்றோ எனின்:—ஒப்பு உள்வழிச்சொல்லுவது ஆகுபெயர்; இது காதல் உள்வழிக் கூறுவது என உணர்க.

இதனுள் உயர்திணை அஃறிணையான் வந்தன, குடிமையாண்மை [6]என்புழிச் சிறப்பு என்புழிப்பட்டு [7]அடங்குமால் எனின், அவை காதல்இன்றிச் சிறப்பித்துச் சொல்லுவன என வேற்றுமை உணர்க.

வழக்கினாகிய என்ற அதனான் பிறவும் உயர்திணைப் பெயர்களை அஃறிணைமேல் வைத்துச் சொல்லுவனவும் செய்யுட்கண் அமைத்துக் கொள்க.

உ - ம்:—

[8]கன்னி நறுஞாழல்;
கன்னி எயில்;
[9]கதிர் மூக்கு ஆரல்;
[10]கரிவனாகம் என்பன போல்வன.

இதனாற் சொல்லியது வழக்கின் கண்ணும் செய்யுட் கண்ணும் [11]ஓரோர் காரணங்களைப் பற்றிப் பாலினையும் திணையினையும் மயங்கக்கூறுவன கண்டு அவற்றிற்கு அமைதி கூறியவாறு ஆயிற்று. (உஎ)

28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப.

---

27-5 i-ii-v "என்றும்" (கீழே எனவும் எனவருதல் காண்க.)
6 vi "என்பதுட் சிறப்பு"
7 vi "அடங்கு மாலோ எனின்"
8 i "கன்னி நது ஞாழல்"
iv "கண்ணிய யெயில்"
9 ii "கதிர் முக்கால்"
10 i "கரிவனாக" (பொருள் விளங்கவில்லை)
11 vi "ஓரோ ஓர்"

என்பது என்நுதலிற்றோ எனின், இடம்பற்றி நிகழும் சொற்களுள் சிலவற்றிற்கு இலக்கணம் கூறுவான், அச்சொற்களதும் இடங்களதும் [1]பெயரும் முறையும் கூறிய முகத்தான், அவற்றிற்குப் பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]செலவுப் பொருண்மைக் கண்ணும், [3]வரவுப் பொருண்மைக் கண்ணும், [4]தரவுப் பொருண்மைக் கண்ணும், கொடைப் பொருண்மைக் கண்ணும் நிலைபெற்றுத் தோன்றுகின்ற செலவு, வரவு, தரவு, கொடை [5]என்னும் அந்நான்கு சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்று சொல்லப்பட்ட அம்மூன்று இடத்திற்கும் பொதுவகையான் உரிய என்றவாறு.

உ - ம் :—

சிறப்பு வகையாற் கூறும்வழி காட்டுதும். (உஅ)

29. அவற்றுள்
தருசொல் வருசொல் [1]ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்கூறிய சொற்களுள் சிலவற்றிற்குச் சிறப்பு வகையான் இடஇலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]மேற் கூறப்பட்ட நான்கு சொல்உள்ளும் தரும், வரும் என்னும் சொல் இரண்டும் தன்மை முன்னிலைக்கும் ஆம். படர்க்கைக்கு ஆகாது என்றவாறு.

உ - ம் :—

எனக்குத் தரும்[3]காணம் ;
எனக்குவரும் [4]காணம் ;
நினக்குத்தரும் காணம் ;
நினக்குவரும் காணம் என வரும். (உகூ)

---

28-1 iv "பெயர் முறையும்"
2 i-ii "செலவு பொருண்மை"
3 i-ii "வரவு பொருண்மை"
4 i-ii "தரவு பொருண்மை"
5 i-ii "என்னும் நான்கு"
vi "என்ற நான்கு"

29-1 i "ஆயிரு கிளவி"
2 iv "மேற்கூறிய"
3 vi "காணம் நினக்கு வருங்காணம்"
4 iv "காணம் எனவரும்" (ஒரு வரி விடப்பட்டது)

## 30. ஏனை [1]இரண்டும் ஏனை இடத்த.

என்பது என்நுதலிற்றோ எனின், இதற்கும் விதி [2]ஒக்கும்.

இதன் பொருள் :—ஒழிந்த செல்லும், கொடுக்கும் என்னும் சொல் இரண்டும் [3]ஒழிந்த [4]படர்க்கை இடத்திற்கு உரிய ; தன்மைக்கும் முன்னிலைக்கும் [5]ஆகா என்றவாறு.

உ - ம் :—

அவர்க்குச் செல்லுங் காணம் ;
அவர்க்குக் கொடுக்குங் காணம் எனவரும்.

பொதுச் [6]சூத்திரத்துள் தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய தரவினையும், வரவினையும் தரவு வரவு என்றுஓதாது, வரவினைச் செலவினோடு இயைபு [7]படுத்திக் கூறியும் படர்க்கைக்கு உரிய கொடுக்கும் என்பதனோடு செல்லும் என்பது கூறாது தர என்பதனை [8]இயையவைத்துக் கூறிய முறைமையன்றிக் கூற்றினாற் கொடைப்பொருட்கண் கொடுக்கும் என்பதனைத் தரும் என்றும், செல்லும் என்பதனை வரும் என்றும் கூறுவனவற்றை இடவழுஆக்கி அமைத்துக் [9]கொள்ளப்படும்.

---

30-1 i "இரண்டு மனையிடத்த" (கொம்பு விடப்பட்டது)

2 vi "ஒக்கும் என்றவாறு." ('மேற்கூறிய சொற்களுட் சிலவற்றிற்கு சிறப்புவகையான் இடை இலக்கணம் கூறுதல் நுதலிற்று என்று நுதலியது இதற்கும் ஒக்கும்' என்று பொருள் போலும்).

3 i "ஒழிந்து"

4 v "படர்க்கைக்கு உரிய"

5 i-iv-v "ஆகாது"

6 i "சூத்திரத்து"

7 vi "படுத்தியும் படர்க்கை"

8 i "இயை வைத்துக் கூறிய முறையன்றிக் கூறினார்"

vi-viii "இயைய வைத்தும் கூறிய முறையன்றிக் கூறினாற்"

iii-v "இயைய வைத்துக் கூறியும் நின்றமுறையன்றிக் கூற்றினாற்'

9 vi "கொள்ளப்படும் என்பது வரவு தரவு" (இடையே நான்கு வரிகள் விடப்பட்டன.)

செலவு வரவு என்பன கொடைக்கண் நிகழுமாறு என்னை எனின், அக் கொடுக்கப் படுகின்ற பொருட் செலவு வரவினை மேலிட்டு அக் கொடையைக் கூறும் கருத்தினன் ஆகலிற் கொள்ளப்படும் என்பது.

வரவு தரவு என்பன தம்முள் இயைபுபட நின்றவால் எனின், தம்முள் இயைபுடைய எனினும், முன்கூறிய செலவினொடும் வரவு பொருளான் இயைபுபடுதலின், இத் தரவினொடு இயைபுஇன்று ஆயிற்று என உணர்க.

[10]புனறரு பசுங்காய்தின்ற தன்தப்பற்கு; [11]அவற்கு வருங்காணம் என்றாற் போல்வன கொடைத் தொழிலிடை மயக்கமாகக் கொள்க.

இன்னும் வரவினொடு செலவு கூறிய முறையன்றிக் கூற்றால் அக் கொடைத் தொழில்அல்லாச் செலவு வரவின் கண்ணும் [12]இடமயக்கம் கூறுவன அமைத்துக் கொள்ளப்படும்.

உ - ம் :—

தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது ;
யானெய்த அம்பு [13]நின்மேற் [14]செல்லும் ;
[15]அரிமலர்ந் தன்னகண் ணம்மா கடைசி
திருமுகமும் திங்களும் [16]செத்துத் - தெருமந்து
வையத்தும் வானத்தும் செல்லா தணங்காகி
[17]ஐயந்து நின்ற [18]தரா.

இந் நிகரன எல்லாம் கொள்க.

---

30-10 viii "புனல்தரு பசுங்காய் தின்றதப்பல"
vi "புனல்தரு பசுங்காய் தின்று"
ii "பு[னர](னற)ரு பசுங்காய் தின்றதப்பல"

11 i "அவர்கு" (ர - ற மாருட்டம்).

12 ii "இடைமயக்கம்"

13 i "நினைமேற்" (ன் - னை மாருட்டம்)

14 i "சொல்லும்"

15 iii-viii "அரிமலராய்ந்தகணமா"

16 ii "சேத்துத்"

17 iii "வைய்த்து"

18 i "தார்" (ர.ரமாருட்டம்: புள்ளிவேண்டா இடத்துப் புள்ளியிடும் குழப்பம்)

இந்நான்கு சொல்லுமே இடமயக்கமாய் ஆராய்ந்தது என்னை? எல்லாப் [19]பெயர்களும், வினைகளும் இடத்தொடுபட்டால் வருவது எனின், வேற்றுமைஉண்டு. அவ்வாறு தத்தம் இடங்கண்மேல் நின்ற சொற்கள் ஒன்றனோடு ஒன்று சேரும் இயல்புகூறுதல் இந்நான்கிற்கும் அல்லது இன்மையின் இவற்றையே கூறினா[20]ன் என்பது.

செலவு முதலிய சொல் நான்கும் படர்க்கையே எனினும், **வரும் தரும்** என்னும் இரண்டு படர்க்கையும், தன்மை முன்னிலைகளோடு [21]இயைபுபட்டும், **செல்லும் கொடுக்கும்** என்னும் இரண்டும் [22]தமக்கு ஏற்ற படர்க்கையோடு [23]இயைபுபட்டும் நின்றவாறு கண்டுகொள்க.

இவற்றாற் சொல்லியது ஓரிடத்துச் சொல் ஓரிடத்துச் சேரும்இடத்துப் பிறக்கும் இடஇலக்கணமும் இடவழு [24]அமைதியும் என்பது. (௩௦)

31. யாதெவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

என்பது என் நுதலிற்றோ எனின், உலகத்துப் பொருள்தான் அறிந்த பொருள் என்றும் அறியாப் பொருள் என்றும் இரண்டு வகைத்து; அவற்றுள் அறியாப் பொருண்மேல் நிகழும் [1]சொல்லது மரபு இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—**யாது எவன்** என்று சொல்லப்படும் அவ்இரண்டு சொல்லும், தன்றன் அறியப்படாத பொருளிடத்து [2]வினாச்சொல்லாய் யாப்புறத் தோன்றும் என்றவாறு.

---

**30**-19 v "பெயர்வினைகளும் இடத்தொடு"

20 ii "ர்"

21 i "இயைவு"

22 i "தனக்கு"

23 i "இயைவு"

24 i-ii "அமைதியையும்"

**31**-1 i "சொல்லது கூறுதல்"

ii-vi-viii-iv "சொல்லது இலக்கணம் கூறுதல்"

2 i "வினச் சொல்லா யாப்புற" (ன-ா.)

உ - ம் :—

[3]நுந்நாடியாது ;
இப்பண்டி உள்ளது எவன் என வரும்.

இவற்றுள் எவன் என்பது இக்காலத்து என் என்றும் என்னை என்றும் மருவிற்று. [4]செறிய என்றதனாற் பிறவும் அவ்வினாப் பொருளிடத்து வருவன கொள்ளப்படும்

உ - ம் :—

யாவன், யாவள், யாவர், யார், யாவை, யா, எப்பொருள் என இவை.

எவன் என்பது அஃறிணை [5]இருபாற்கும் உரிய வினாவே எனினும், ஒருமைப் பால்மேல் [6]வருதல் பெரும்பான்மை என்பது உரையிற்கோடல் என்பதனாற் கொள்ளப்படும். (௩௧)

32. அவற்றுள்,
யாதென வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.

என்பது என் நுதலிற்றோ எனின், மேல் அறியாப் பொருள்மேல் நிகழும் என்று மரபிலக்கணம் கூறிய சொற்களுள் ஒன்றற்குச் [1]சிறிது அறிந்தவழியும் வரும் மரபும் உண்டு என்று அறிந்து அது காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேல் வினாப்பட்ட இரண்டனுள்ளும் யாது என்று சொல்ல வருகின்ற வினாப்பொருளை [2]உணர நின்ற சொல்,

---

**31**-3 vi "*நுந்நாடு யாது*"

4 iii-v-viii "*யாப்புற என்றதனால*" (*செறிய என்பதன் பொருள் "யாப்புற"*)

ii "*யாப்புற* "(*செறிய*)

5 i "*இருபாற்குமரிய வினாவே*" (ம-மு)

vi "*இருபாற்கும் உரிய இதனானே*"

6 iii-v "*வரும், பெரும் பான்மை*"

vi-viii "*வருவதே பெரும்பான்மை*"

**32**-1 i "*சிரதரி ந்த வழுவரு மரபும்*" (*ர-ற, ர-ரி-ழி-மு*)

2 i "*உணர் நின்ற*"

அறிந்த பொருளிடத்து உண்டாகிய ஐயம் தீர்தற்கு ஆராய்ந்த [3]சொல்-ஆகலும் உரித்து என்றவாறு.

உ – ம்:—

ஒருவன் ஐந்து எருது உடையான், [4]காப்பக் கொடுப்ப, அவற்றுள் ஒன்று கெட்டது என்று [5]காப்பான் நடுச்சொல்லின இடத்து, எருது உடையான், வெள்ளை, காரி என்னும் ஐயம் தீர்தற்பொருட்டு **அவற்றுள் யாது?** என்று வினாதல் என்பது.

மேற் சூத்திரத்துப் பின் தொடர்புடையது என்பதனைப் பின் வைக்கற் பாற்று என்பதனான் [6]இதனோடு இயைபுடைய யாது என்பதனை எவனின் பின்வையாது முன்வைத்த முறைமையன்றிக் [7]கூற்றினான், அச்சூத்திரத்து எடுத்தோத்தானும் [8]இலேசானும் அறியாப்[9]பொருள்இடத்து வந்தன எல்லாம் அறிந்த பொருள்இடத்து ஐயம் [10]தீர்தற்கும் வரும் எனக் கொள்க.

உ - ம்:—

நமருள் யாவன் போயினான்;

அவற்றுள் எவ்வெருது கோட்பட்டது என்றாற் போல்வன.

---

32-3 vi "சொல்லாகா வாகலானும்"
viii "சொல்லாகலானும்"

4 iv "காப்பக......தென்று காப்பன்"
iii-vi-viii "காப்பக் கொடுப்பவற்றுள்"
ii "கொடு[க்கப்]ப்ப(ட்ட) வற்றுள்"

5 vi-viii "காப்பானிடைச் சொல்லிய இடத்து"
v "காப்பான் சொல்லிய இடத்து"
ii "காப்பா [னடு] (னிடை)ச்"
"காப்பான் எருது உடையானிடைச்சொல்லின இடத்து (?)"

6 ii-vi "இத்தோ டியைபுடைய இஃதோ டியை புடைய"

7 i "கூறினான்"

8 i "இலைசாம்"

9 vi "பொருளிடத்து ஐயந் தீர்த்தற்கும்"

10 i-ii-iv-viii "தீர்த்தற்கும்"

இச்சூத்திரத்தாற் கூறியது வழுவமைதி அன்றோ எனின், முன்பு அறியாப் பொருள் என்றதும் ஒருவகையானும் அறியாமை என்பது இன்மையின், அதனைப்பார்க்க இது சிறுபான்மை என்பதுஅல்லது, வழுஎனல் ஆகாது என உணர்க.

இவற்றுற் சொல்லியது வினுப் பொருண்மேல் நிகழும் சொற்களது பெரும்பான்மை சிறுபான்மை மரபிலக்கணம் [11]என உணர்க. (௩௨)

33. இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.

என்பது என்நுதலிற்றோ எனின், இன்னும் உலகத்துப் பொருள்தான் வரையறை [1]உள்ளதும், இல்லதும் என இருவகைத்து; அவற்றுள், [2]வரையறை உடையது [3]தொகைபெறும்வழிப் படுவதோர் மரபிலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இத்துணை என்று வரையறுக்கப்பட்ட சினைக்கிளவியும், முதற்கிளவியும் தம்மை மேலொரு வினையொடு படுத்துச் சொல்லுவதாக அதற்குத் [4]தொகை கொடுத்துக் கூறும்இடத்து அத்தொகைச் சொல் இறுதிக்கண் [5]உம்மை கொடுத்துச் சொல்லுதலை வேண்டும் என்றவாறு.

உ - ம் :—

நம்பி கண்ணிரண்டும் நொந்தன ;
நங்கை முலையிரண்டும் வீங்கின — இது சினைக்கிளவி.
தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் ;
முப்பத்து மூவரும் வந்தார் — [6]என்பன முதற்கிளவி.

---

32-11 v "எனவும்"

33-1 vi "உள்ளதூஉம் இல்லதூஉம்"

2 vi "வரையறை உள்ளது"

3 i-ii "தொகைப்படும் வழிப்படுவதோர்"

4 i-ii-iv "தொகை கொடுமிடத்து"
iii-v "தொகை கொடுக்குமிடத்து"
vi-viii "தொகைக் கொடுத்துக் கூறுமிடத்து"

5 vi "உவமை"

6 vi "இவை முதற்கிளவி" ('இது முதற் கிளவி' என வந்ததற்கு ஒத்தது இது)

வினைப்படு தொகுதி என்றமையான், தொகை கொடாத வினைப்பாட்டின்கண், உம்மையின்றி [7]நம்பி கண்ணொந்தது ; நொந்தன என வரும்.

இருதோடோழர்ப்பற்ற எனவும், ஒண்குழை ஒன்றொல்கி எனவும் உம்மையின்றி வந்தனவும் உளவால் எனின், அவை [8]செய்யுள் ; தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதனாற் றொக்குநின்றன. அவ்வாறு வழக்கினுள் இல்லை என்று உணர்க.

இருதிணைமருங்கி னைம்பாலறிய [9]என்ற [10]சூத்திரத்துள் உம்மைஇன்றி வந்தன. உடம்பொடு புணர்த்தல் என்பதனாற் செய்யுளுள் உம்மை இன்றி வருவனவும் உள என்றலும் ஒன்று. இது சிறுபான்மை.

இனி வினைப்படாத பெயர்பாட்டின்கண் தமிழ்நாட்டு மூவேந்தர் இவர் எனினும் அமையும் என்பது. (௩௩)

## 34. மன்னுப் பொருளும் அன்ன வியற்றே.

என்பது என்நுதலிற்றோ எனின், இன்னும் உலகத்துப் பொருள் [1]இல்லதும், உள்ளதும் என இருவகைத்து; அவற்றுள், இல்லதன்மேற் பிறக்கும் மரபிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—உலகத்து இல்லாப் பொருளும் மேலதனோடு ஒத்த இயல்பினை உடைத்து என்றவாறு.

[2]அன்னவியல் என்பது, மேலும் பிற பொருள் [3]ஒழிந்தன உள எனப்படுதற்கு அஞ்சி முற்றும்மை கொடுக்க என்றா[4]ன் ; அதுபோல ஈண்டும் ஒழிவது அஞ்சி எச்சவும்மை கொடுக்க என்பான் அன்ன [5]இயல என்றா[6]ன் என்பது.

---

33-7 i "நம்பிக்கண்"

8 ii "செய்யு(ளு)ட்டொக்கும்"

9 i-vi "என்று"

10 vi "சூத்திரத்துள்ளும் உம்மையின்றி"

34-1 v "உள்ளத்தும் இல்லதும் என"

2 i-ii-iv-vi-viii "அன்ன இயல்பு"

3 vi "ஒழிந்தனவும் உள"

4 ii "ர்"

5 ii "இயல்பென்றான்"

6 ii "ர்"

உ - ம்:—

முயற் கோடும், ஆமை மயிர்க் கம்பலமும், அம்மிப் பித்தும்,

துன்னூசிக் குடரும் சக்கரவர்த்திக் கோயிலுள்ளும் இல்லை எனவரும்.

*மேற்சூத்திரத்து முற்றும்மையோடு இச்[7]சூத்திரத்தை மாட்டேற்றலின்,* முயற் கோடும், ஆமை மயிர்க் கம்பலமும் யாண்டும் இல்லை; *[8]என்பது உதாரணம் ஆகற்பாற்று எனின்,* யாண்டும் *என்றது* இல்லை *எனவும் வழக்கு அமைதலின், [9]இதுவே பொருளது* இன்மையை *வாளாதே* இல்லை *என்பது அன்றி ஓர் இடத்தொடு படுத்து* இல்லை *என்புழி எச்சவும்மை கொடாதுவிடின், பிற இடத்து உண்மை [10]சேறலின் மாட்டேற்றொருபுடைச் சேறல் என்பதாகக் கொண்டு மேற்காட்டிய உதாரணம் ஆகற்பால என்பது.* (௩௪)

35. எப்பொரு ளாயினும் அல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.

*என்பது என்நுதலிற்றோ எனின்,* சொல் நோநந்து [1]இறுத்தல் *என்னும் செப்புஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:—எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன்னுழை உள்ளதுஅல்லதனை* இல்லை *எனவருமே எனின், அவ்வினவின பொருள்அல்லாத பிறிது பொருள்கூறி* இல்லை *என்க என்றவாறு.*

உ - ம்:—

பயறுளவோ [2]வணிகீர் *என்றக்கால்,*

உழுந்தல்ல தில்லை *என்க.*

---

34-7 iii-v *"சூத்திரம்"*

vi *"சூத்திரத்திலதை"*

i *"சூத்திரத்திரதை" (சூத்திரத்தினை)*

8 iii *"என்பது காரணமாகற் பாற்று"*

9 v *"இதுவே ஒரு பொருள தின்மையை" (இதுவே பொருள். ஒரு பொருளது இன்மையை என்றிருந் திருக்கலாம்)*

vi *"இது பொருவன்மையை"*

10 i-ii *"சொல்லின்"*

iii *"சேரலின்"*

35-1 i *"இருத்தல்"*

v *"இயற்றல்"*

2 i *"வணிகீ றென்றக்கால்"*

**பயறுளவோ** என்றால் **அல்லது** என்பது ஒழியவும், **பயறில்லை உழுந்துள** என இங்கிகரனவும் சொல்லுப ; ஆகலான் **அல்லது** என்பது வேண்டா எனின் ; **அல்லது** என்பது அஃறிணை ஒருமைப் பாற்கு உரியதே [3]எனினும் மற்றை நான்கு பாற்கண்ணும் பால்வழுவாயும் திணைவழுவாயும் சென்று மயங்கல்கண்டு, அதனைக் காத்தற் பொருட்டாகச் சொல்லினா[4]ன் என்பது.

உ - ம் :—

**அவனல்லது, அவளல்லது, அவரல்லது,**

**அதுவல்லது, அவையல்லது** எனவரும்.

**அவனல்லது** என்புழி [5]**அவன்** அல்லது என்பதனைப் பின் **பிறனில்லை** என்று வருவதனோடு படுத்து வழுவாதல் அறிக.

**அப்பொருளல்லா** என்பது மிகை ; அதனாற் பிறிது பொருள்கூறும் வழியும் அவன் வினாயதற்கு [6]இனமானவற்றையே கூறுக என்றவாறு.

இதனாற் சொல்லியது செப்பின்கட் பிறப்பதோர் வழுக்கண்டு அதனை அமைத்தற்குக் கூறியவாறு ஆயிற்று.

இதனுள் வழு என்பது என்னை எனின், அவன் வினாயதனை மறுப்பதுஅன்றி, அவன் [7]வினாவாத பிறிது ஒன்றனையும் உடம்பட்டுக் கூறினமையின் என்பது.

வழுவமைதியேல் பிறிதுபொருள் கூறுகஎன விதிக்கப்பாற்றன்று எனின் அவ்வாறு கூறலாகாது என [8]மறுத்துநின்ற இதுவும் இவ்வாறு கூறுக என்பதோர் விதி[9]நீர்மைத்து என்பது. (௩௫)

---

**35**-3 ii-iv-vii "எனினும் நான்கு"
i "எனினும் வருவதனோடு படுத்து வழுவாதலறிக. அப்பொருளல்லா நான்கு பாற்கண்ணும்" (கோடிட்ட பகுதியைப் பின்பக்கத்தே சேர்க்கவேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.)

4 "ர்"

5 i "அவல் கென்பதனை"

6 ii-vi-viii "இனமாயவற்றை"

7 vi "வினவாத"

8 v "மறுத்து நின்ற......வாறு கூறுக"
i "மறுத்து நின்றவு மிதும்" இவ்வாறு கூறுக"
vi-viii "மறுத்து இவ்வாறு கூறுக"

9 i-vi-viii "நீர்மைத்தது"

## 36. அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் மேலதற்கு ஓர் புறநடையாயதோர் இறுத்தல் வகைமை கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்:—அவன் வினாவின [1]பொருள்தன்னைச் சொல்லும் இடத்துச் சுட்டி, இல்லை என்று சொல்லுக என்றவாறு.

உ-ம்:—

**இப்பயறல்லது இல்லை ;**
**இவையல்லது பயறு இல்லை** எனவரும். (௩௬)

## 37. பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும் [1]பொருள் வேறுபடாஅது ஒன்றா கும்மே.

என்பது என்நுதலிற்றோ எனின், இஃது ஒரு பொருள்மேல் இரு பெயர் வழுக்காத்தல் நுதலிற்று.

மேல் **இவை அல்லது பயறு இல்லை** என்பதனைப்பற்றிப் பிறத்தலான் மேலதற்கே [2]புறனடை எனினும் அமையும்.

இதன் பொருள்:—பொருளொடு பொருந்தாச் சுட்டுப் பெயராயினும் பொருள் வேறுபடாது ஒரு பொருளே ஆகும் என்றவாறு.

உ-ம்:—

**இவை அல்லது பயறு இல்லை** எனவரும்.

**இவை** என்பது பயறே எனினும் **பயறு** என்பது பின் உண்மையின் அதன்மேற் செல்லாது [3]பிறிதொன்றதனைச் சொல்லியது போலும் நோக்குடைத்தே எனினும் அமைக என்றவாறு.

இதனாற் சொல்லியது, ஒரு பொருள் மேல் இரு பெயரும், பல பெயரும் கூறுதல் இலக்கணமே எனினும் இயைபுபடக் [4]கூறவேண்டும் அன்றே; அவ்வழி இயைபில்லது கண்டும் மரபுவழுவினை அமைத்தவாறு ஆயிற்று. (௩௭)

---

36-1 v "பொருள் தன்னையே"

37-1 i "பொருள் வறுபடா"

2 —(புறனடை. புறநடை என்ற இரண்டு வடிவமும் உரைகளில் காண்கிறோம்).

3 i-ii "பிறிது என்று அதனை"

4 i "கூறவேண்டுமென்றையவ்வழி" (மெ-ம ; றே-றை மாறாட்டம்).

38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலும் காலம் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்காத்தல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—இயற்பெயராகிய சொல்லும் சுட்டுப் பெயராகிய சொல்லும் வினைச்சொற்கண்ணே கூடவருங்காலம் [1]தோன்றின், அவற்றுள் சுட்டுப் பெயர்க் கிளவியை முற்படச் சொல்லார். இயற்பெயருக்குப் பின்வைத்துச் சொல்லுக என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.*

உ - ம் :—

சாத்தன் வந்தான், [2]அவற்குச் சோறு கொடுக்க ;

கொற்றி வந்தாள், [3]அவட்குச் சோறு கொடுக்க *என்றாற் போல்வன.*

தன்னின முடித்தல் *என்பதனானே விரவுப் பெயர்களில் இயற்[4]பெயர் ஒழிந்தனவும் கொள்ளப்படும்.*

உ - ம் :—

முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க *என்றாற் போல்வன.*

இயற் பெயர் வழிய *என்ற [5]மிகையான், உயர்திணைப்[6]பெயர்க்கும் அஃறிணைப்[6]பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின் கூறுக என்பது கொள்ளப்படும்.*

உ - ம் :—

நம்பி வந்தான், அவற்குச் சோறு கொடுக்க ;

எருது வந்தது, அதற்குப் புல் இடுக *எனவரும்.*

---

38-1 i ***"தோன் ... வற்றுட்"***
ii ***"தோன்ற அவற்றுட்"***

2 i ***"அவர்கு"*** ***(ர - ற மாறாட்டம் பின்னும் இப்படியே வரும்).***

3 vi ***"அவட்குப் பூக் கொடுக்க"***

4 i ***"பேர்"***

5 i ***"மிகையால்"***

6 i ***"பேர்க்கும்"***

ஒருங்கியலும் என்ற மிகையான் [7]இம்மூவகைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் கூறும்வழி அகரச் சுட்டே கிளக்க என்பது கொள்ளப்படும்.

வினைக் கொருங்கியலும் என்று வினைக்கே கூறுதலான், பெயர்க்கு யாது முன்கூறினும் அமையும் என்பது.

உ - ம் :—

சாத்தன் அவன் ;
அவன் சாத்தன் எனவரும்.

இதனாற் சொல்லியது [8]பொருட்பெயர்களோடு சுட்டுப்பெயர் கூறும்வழி, பின்கூறுது முன்கூறின் பிற பொருண்மேலே நோக்குப்பட நிற்பது கண்டு அவ்வாறு கூறற்க என, மரபுவழுவற்க என்றவாறு. (௩அ)

39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கியது நுதலிற்று.

இதன் பொருள் :—மூவகைப் பெயர்களு[1]ம் சுட்டுப் பெயரை முற்படச் சொல்லுதல் செய்யுளிடத்தாயின் அமையும் என்றவாறு.

உ - ம் :—

அவனணங்கு நோய் செய்தான் ஆயிழாய் ! வேலன்
விறல் மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகனமர்ந்
தன்னை யலர் கடப்பந் தார்அணியில் என்னைகொல்
பின்னை அதன்கண் [2]வினைவு எனவரும்.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது முற்கூறலாகாது என்னப்பட்ட சுட்டுப்பெயர் மொழி மாற்றியும் பொருள் கொள்ளும் நயம் செய்யுட்கண் உண்மையான் அதனகத்தாயின் அமையும் என்று நேர்ந்தவாறு ஆயிற்று. (௩௯)

---

38-7 vi "இம் மூவகைப் பெயர்க்கும் சுட்டுப் பெயர்க்கும் சுட்டுப் பெயர் கூறும் வழி"
8 vi "பொருட் பெயரோடு"
39-1 vi "ள்"
2 iv "வினை"

**40. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]இதுவும் அச்சுட்டுப் பெயர் ஆராய்ச்சியே கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—சுட்டெழுத்து முதலாகவுடைய காரணப்பொருளை உணர நின்ற சொல்லும் மேற்கூறிய சுட்டுப்பெயர் இயல்பு போலப் பெயர்ப்பின்னே யாப்புறத் தோன்றும் என்றவாறு.

உ - ம் :—

**சாத்தன் கை யெழுதுமாறு வல்லன்,
[2]அதனான் தம்மாசிரியன் [3]உவக்கும்** எனவரும்.

மேற்கூறிய வகைகள் எல்லாம் இதற்கும் ஒக்கும்.

[4]இதுவும் ஆண்டே அடங்காதோ எனின் ஆண்டுச் சுட்டுப்பொருள்வழி வந்தது; ஈண்டு அப்பொருளது குணத்துவழி வந்தது என [5]உணர்வது. (௪0)

**41. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்[1]காத்தல் நுதலிற்று.

---

40-1 i "இதுவுஞ் சுட்டுப்பெயர் ஆராச்சி"

ii-iv-vi-viii "இதுவும் சுட்டுப்பெயர் ஆராய்ச்சிய"

2 i "அதனான் தந்தை உவக்கும்"

ii-iii-v "அதனாற் றம்மாசிரியன் உவக்கும்"

vi "அதனான் தன் ஆசிரியன் உவக்கும்"

3 ii-vi "உவக்கும் சாத்தி சாந்தரைக்கு மாறு வல்லள் அதனாற் கொண்டான் உவக்கும் எனவரும்"

4 iv "இதுவும் ஆண்டே எனின்" (ஒரு சொல் விடுபட்டது)

5 vi "உணர்க"

41-1 i-iv "காத்தலை"

இதன் பொருள் :—சிறப்பினாகிய பெயர்ச் சொற்கும், (உம்மையான்) பிற பெயர்க்கும், இயற்பெயராகிய சொல்லை முற்படச் [2]சொல்லார் ஆசிரியர் ; பிற்படச் சொல்லுவர் என்றவாறு.

உ - ம் :—

**ஏனாதி நல்லுதடன்,**

**வாயிலான் சாத்தன்,**

**படைத்தலைவன் கீரன்** என இவை சிறப்புப் பெயர்.

**பிறவும்** என்றது குலத்தினான் [3]ஆகிய பெயரும், கல்வியினான் ஆகிய பெயரும், தொழிலினான் ஆகிய பெயரும் பிறவும் என்பது.

உ - ம் :—

**சேரமான் [4]சேரலாதன் ;**

**சோழன் நலங்கிள்ளி ;**

**பாண்டியன் மாறன்** - இவை குலப் பெயர்.

**ஆசிரியன் சாத்தன்** என்றாற் போல்வன கல்வியினான் ஆகிய பெயர்.

**வண்ணாரச் சாத்தன் ;**

**தச்சக் கொற்றன் :**

**நாவிதன் [5]மாறன்** இவை தொழிலினான் ஆகிய பெயர்.

இதனாற் சொல்லியது ஒரு பொருட்கு இருபெயர் கூறும் வழி, யாது முற்கூறினும் அமையும் என்று கூறலாகாது ; மேல்தொட்டும் கூறிவந்த மரபானே கூறுவிடின், அப்பொருள்மேல் செல்லாது பிறபொருள்மேல் நோக்கப்படும் என, மரபு வழுவற்க [6] என்றவாறு ஆயிற்று.

இவ்வாறன்றி இக்காலத்து மயங்கக் கூறுவன உளவாயின், அவற்றைக் **கடிசொல்லில்லைக் காலத்துப்படினே** என்பதனாற் கொள்ளப்படும். (சக)

---

41-2 i ii-vii "சொல்லார் பிற்படச் சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு"

3 iv "ஆய"

4 i "சொல்லாதான்" (செ-சே ; ஈ-ர)

5 i "மாரன்"

6 (என்றவாறாயிற்று என்பதன் பின்னுள்ள பகுதிகள் vi-ல் இல்லை.)

**42.** **ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி**
**தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே.**

என்பது என்நுதலிற்றோ எனின், ஒரு பொருள்மேல் பல பெயர் வழூஉக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒரு பொருளைக் கருதிய வேறு வேறாகிய பெயர்ச்சொ[1]ல், பெயர்க்கு வரும் வினையை வேறுபடச் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இடம் இல்லை. அதனான் வரும் பெயரை எல்லாம் சொல்லிப் பின் தொழில் சொல்லுக என்றவாறு.

உ - ம் :—

**ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன்**
**சாத்தன் வந்தான்** எனவரும்.

இனி **இரட்டுற மொழிதல்** என்னும் ஞாபகத்தால், ஒரு பொருளைக் கருதிய வேறு வேறாகிய பெயர்ச் சொற்கள், வேற்றுத் தொழிலைப் பெயர் தோறும் சொல்லின், ஒரு பொருட்குப் [2]பொருந்தும் இடம்இல என, வேறு அல்லாத ஒரு தொழிலைப் பெயர் தோறும் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இடனுடையதூஉம் கொள்ளப்படும்.

உ - ம் :—

**ஆசிரியன் வந்தான்** ; **பேரூர்கிழான் வந்தான்** ; **செயிற்றியன் வந்தான்** ;
**இளங்கண்ணன் வந்தான்** ; **சாத்தன் வந்தான்** எனவரும்.

இதனாற் சொல்லியது ஒரு பொருள் மேல்வரும் பல பெயர்க்கண் மரபிலக்கணமும் மரபு வழுவமைதியும் கூறியவாறு ஆயிற்று.

ஞாபகத்தான் கொண்டது மரபு வழுவமைதி. அதனை வழூஉ என்றது என்னை எனின், ஒருநிலைக்கண் அது தானே பல பொருள்மேலும் [3]சேறலான் என்பது. (௪௨)

---

**42-1** i "ற்" (சந்தி)

**2** iv "பொருந்தும் இடனுடையதும் கொள்ளப்படும்" (பின்வரும் பொருந்தும் என்பதனோடு இதனை மயங்கியதால் அதன் முன் வருவன விடப்பட்டன.)

**3** i-ii-iv-vi "சேரலான்" (ர-ற)

**43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்**
**றென்னு வழி மருங்கின் விரவுதல் வரையார்.**

என்பது என்னுதலிற்றோ எனின், எண்ணின்கண் திணைவழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — தன்மையாகிய சொல்லினையும் அஃறிணை யாகிய சொல்லினையும் விரவி [1]எண்ணும் இடமாகிய இடத்து உண்டாகிய திணை ஈறாய் வருதலை நீக்கார் ; கொள்வர் ஆசிரியர் என்றவாறு.

என்று [2]என்பது எண் அசை.

உ - ம் :—

“ யானும்என் எஃகமுஞ் சாறும்.
அவனுடைய யானைக்கும் சேனைக்கும் போர் ” என வரும்.

இதனுள் அவன் வந்தது என்றாற் போலும் திணைவழு இல்லை எனின், அதுவே அல்ல திணைவழூஉ. எண்ணும்இடத்தும் இனம்ஒத்தன[3]வே எண்ணுக என [4]முன் சொல்லினமையானும், திணை வழுவாவது பொருந்தாது விடுவது என்பதாகலானும் இதுவும் திணைவழூஉ [5]என்னப்படும். இவ்வாறு இடர்ப்படுகின்றது என்னை ? [6]இதனை மரபு வழுவமைதி என்று கூறுக எனின், வியங்கோளெண்ணுப்[7] பெயர்_ திணை விரவுவரையார் என [8]ஆசிரியன் மேல் கூறுகின்றமையின் இதற்கும் அதுவே கருத்து என்பது பெறுதும்.

---

43-1 vi “எண்ணும் இடத்து”

i-iv “என்னும்”

2 vi “என்றது”

3 iv “வேலெண்ணுக”

4 i-ii “முன்சொல் இன்மையினும்”

iii-v-vi “யானும்” (அடுத்தும் ‘ஆனும் என’ வருதல் காண்க.)

5 v-vi “எனப்படும்”

6 vi “மரபு வழுவமைதி”

7 i “ம்”

“ஆசிரியந்”

இனிச் சொல்லொடு சொன்முடித்தலே திணைவழு எனினும் சாறும் என்னும் உயர்திணை முற்றுச்சொல் [9]எஃகும் என்னும் [10]அஃறிணையினையும் உளப்படுத்தமையின் வழுவும் இதன்கண் உண்டு என உணர்வது.

மருங்கின் என்ற மிகையான், முன்னிலையோடு அஃறிணை எண்ணுதலும், படர்க்கையோடு அஃறிணை [11]எண்ணுதலும் கொள்க.

உ-ம் :—

**நீயும் நின் படைக்கலமுஞ் சாறிர்.**

**அவனும் தன் படைக்கலமுஞ் [12]சாறும்** எனவரும்.

இவற்றுள் எண்ணுவழு அல்லது முடிபுவழு இல்லை.

இதனுன் சொல்லியது எண்ணுப் பொருட்கண் திணை பற்றிப் பிறக்கும் மரபுவழுவமைதி என உணர்க; சிறுபான்மை திணைவழூஉ அமைதியும் என உணர்க. (௪௩)

**44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்**
**ஒருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.**

என்பது என்நுதலிற்றோ எனின், எண்ணும் வகையாற் சொல்லும் ஒருவகைச் சொல் நிகழ்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒருமைப் பொருட்கு உரிய எண்ணுய் உயர்திணை இருபாற்கும் பொதுவாகிய [1]ஒருவர் என்னும் சொல்லினின்றும் பொதுமை கெடப் பிரித்து உணரப்படும் ஒருவனென்னும் சொல்லாயினும் ஒருத்தி என்னும் சொல்லாயினும் எண்ணுத பொழுது தன் ஒருமை விளங்கும் துணைஅல்லது [2]எண்ணு முறைக்கண் முதல்

---

**43-9** ii "சொல் அஃகம்"
vi "சொல்லே எஃகம்"
10 vi நீங்கியவை "அஃறிணை வினையும்"
11 iii "என வைத்தும் கொள்க"
12 iv "சாலும்"
**44-1** iv "ஒருவன்"
2 i-ii-iv-vii "எண்ணு முறைக்கண் மூதல் எண்ணுங் காலும் அவ்வாறே எண்ணுக" (இடையே பல வரிகள் விடப்பட்டுள்ளன).
vi "எண்ணு முறைக்கண் முதல் எண்ணுங்காலும் அவ்வாறே எண்ணுக. உதாரணம் ஆண்மக்கள் பலர் நின்றரை."
(iii-vi - ல் கோடிட்ட மூவர் என்பது இல்லை)

எண்ணுய் நில்லாது. எனவே பொதுமையிற் பிரிந்து நில்லாது எனப் பொதுமையிற் பிரியா ஒருவர் என்னும் சொல் எண்ணும் முறைமைக்கண் நிற்கும் என்றவாறு.

உ - ம் :—

ஆண்மக்கள் பலர் நின்றாரை எண்ணுங்காலும், ஒருவர் இருவர் மூவர் நால்வர் என்று எண்ணுக.

பெண்டின் பலரை எண்ணுங்காலும் அவ்வாறே எண்ணுக.

ஒருவன் என்பதும் [3]ஒருத்தி என்பதும் ஒருமை [4]எண்ணேல் எண்ணும் முறைமைக்கண்ணும் ஆகாமை என்னை எனின்; பொருளான் ஆகாமை இல்லை. ஒருவன் என்பதற்கு ஏற்ப மேலும் இருவன் மூவன் என னகர ஈறு இயைபு இன்மையானும், ஒருத்தி என்பதற்கு ஏற்ப இருந்தி முந்தி என இகர [5]ஈறு இயைபுஇன்மையானும், மேல் வருகின்ற ரகர ஈற்றொடு ஒருவர் என்பது [6]சொல்இயைபு உடைமையின் அதுவே கொள்ளப்பட்டது.

இதனாற் சொல்லியது எண்ணின்கண் பிறக்கும் மரபிலக்கணம் என உணர்க.

(சச)

## 45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]எண்ணின்கண் திணைவழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—வியங்கோட்கண் எண்ணப்படும் பெயரைத் திணைவிராய்வரும் [2]வரவினை நீக்கார்; கொள்வர் ஆசிரியர் என்றவாறு.

---

44-3 i "ஒருத்தி மோருமை"

4 vi "எண்ணே எண்ணும்"

5 i "ஈற்று இயைபு"

6 i-viii "சொல் இயல்பு உடைமையின்மையின்"

45-1 "எண்ணின் கட்டிணை வழு"

2 iii "வரவை"

உ - ம் :—

ஆவும் ஆயனும் செல்லுக எனவரும்.

தன்வினை முடித்தல் என்பதனான், வியங்கோள்அல்லாத விரவு-வினைக்கண்ணும் சிறுபான்மை வருவன கொள்க. அவை, ஆவும் ஆயனும் [3]சென்ற கானம் என்பன போல்வன.

இதனாற் கூறியது எண்ணின்கண் திணைபற்றிப் பிறக்கும் மரபு வழூஉ அமைதி என உணர்க. (சரு)

46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.

என்பது என்நுதலிற்றோ எனின், வேறு வினைப் பொதுச்-சொற்களது மரபு வழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—வேறுவினை உடையவாகிய பல பொருளையும் பொதிந்து நின்ற பொதுச் சொல்லை ஒரு பொருளது வினையான் சொல்லார் உலகத்தார். அதனான், அவற்றிற்கு எல்லாம் பொதுவாகிய வினையானே சொல்லுக என்றவாறு.

உ - ம் :—

அடிசில் கைதொட்டார், அயின்றார்;
அணிகலம் அணிந்தார், மெய்ப்படுத்தார்;
இயம் இயம்பினார், படுத்தார் என வரும்.

இதனான் சொல்லியது பல பெயர்க்கு உரிய பொதுப் பெயர்ச்-சொல்லை எடுத்து, மேலதன் வினைகூறும்வழி, மரபு வழுவற்க என்றவாறு.

இஃது இலக்கணமாகப் பல பொருளும் ஒரு சொல்லுதற்கண் அடங்கி நில்லாது, வேறு வேறு, அடிசில் எனவும் அணி எனவும் வரும்-வரவும், ஒன்றன் வினை ஒன்றற்கு வரும்வரவும் வழுவாக்கிச் செய்யுண்மருங்கினும் [1]என்னும் அதிகாரப் புறநடையான் அமைத்துக் கொள்க என்பது. (சசு)

45-3 viii "சென்ற கானம் சென்ற கானம் என்பன"

iii "செல்லுங்கானம் சென்ற கானம் என்பன"

46-1 i-vi "என்னு......ரப்புறனடை"

**47. எண்ணுங் காலும் அதுவதன் மரபே.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் அது.

இதன் பொருள் :—வேறு வினைப் பொதுச்சொற்களைப் பொதுமையிற் பிரித்து எண்ணுங்காலத்தும் ஒன்றன்வினையாற் கிளவாது பொதுவினையாற் கிளத்தல் அதற்கு இலக்கணம் என்றவாறு.

உ - ம் :—

**யாழும் குழலும் பறையும் இயம்பினர்** எனவரும்.

இதனாற் சொல்லியது அப் பொதுச் சொற்களைப் பிரித்து [1]எண்ணும் வழியும் வினைமுடிபின் மரபும் வழுவாமற் சொல்லுக என்பதாயிற்று. (சஎ)

**48. இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]உரிச்சொற்கண்ணதோர் மரபு வழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—இரட்டித்துச் சொல்லப்படும் சொற்கள் அவ்விரட்டித்துச் சொல்லுதலிற் பிரித்துச் சொல்லப்படா என்றவாறு.

அது, இசை, குறிப்பு, பண்பு என மூன்று வகைப்படும்.

உ - ம் :—

**சுருசுருத்தது, மொடுமொடுத்தது.** என இவை இசைபற்றி வந்தன.

**கோறுகோறுத்தன, மொறுமொறுத்தார்** என்பன குறிப்புப்பற்றி வந்தன.

[2]**கறுகறுத்தார்** என்பன பண்புபற்றி வந்தன.

இதனான் சொல்லியது ஒரு பொருட்கண் இருசொல்லினை ஒரு பொருள் வேறுபாடு குறியாது கூறின், மரபுஅல்ல எனினும் அவ்வாறு இரட்டிக்கூறலே அவற்றிற்கு [3]அடிப்பாடாகலான், இனி, அதனை மரபு வழுவற்க என மரபு கூறியவாறு ஆயிற்று.

இது மரபு வழுவமைதி போலும். (சஅ)

---

**47-1** i-ii-iv "எண்ணு வழியும்"

**48-1** vi "உரிச் சொற்கள் மரபு"

**2** ii-vi-vii "குறு குறுத்தார் கறு கறுத்தார்"

**3** ii-vi-vii அடிப்பாடாகலின்"

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொரு ளொழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]ஒருபெயர்ப் பொதுச் சொற்கண் மரபு வழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச் [2]சொல்லை ஆண்டுள்ள பொருள்ஒழிய [3]உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் தெரித்துக்கொண்டு, வேறே கிளத்தற்குக் காரணம் அப்பொருட்கண் தலைமையும் [4]பன்மையும் ஆம் என்றவாறு.

உ - ம் :—

**பார்ப்பனச் சேரி** என்பது உயர்திணைக்கண் தலைமைபற்றி வந்தது.

[5]**எயின நாடு ; குற்றிளை நாடு** என்பன பன்மைபற்றி வந்தன.

**கமுகந் தோட்டம்** [6]என்பது அஃறிணைக்கண் தலைமைபற்றி வந்தது.

இதுதானே பன்மையுள்வழிப் பன்மைபற்றி வந்ததாஉமாம். **ஒடுவங் காடு, காரைக்காடு** என்பன பன்மைபற்றி வந்தன. சேரி என்பது பல்குடியும் சேர்ந்திருப்பது, தோட்டம் என்பது பல பொருளும் தொக்கு நின்றவிடம். பிறவும் அன்ன.

இதனாற் சொல்லியது பல பொருளும் உள்வழிப் பிறப்பதோர் பெயர்ச் சொல்லினை அப் பலபொருளினையும் உடன்கூறி அன்றே

---

49-1 v "இரு பெயர்"

2 i-ii "சொல்யாண்டுள்ள"

3 i-v-vi "உயர்திணைக் கண்ணும் தெரிந்து கொண்டு"
vi "தெரிக்கக் கொண்டு" (கீழ்க் குறிப்பில் கொடுத்த பாடம்)

4 i-vi "பன்மையும் என்றவாறு"

5 vi "எயினர் நாடு என்பதும் குற்றிளை நாடு என்பதும் அத்திணைக் கண் பன்மைபற்றிய வழக்கு"

6 i-viii "என்பன"
vi "என்பதும்"

கூறற்பாலது; அவ்வாறுஅன்றி அப்[7]பொருள் தனிமையும் பன்மையும்பற்றிச் [8]சொல் தொகுத்து இறுத்தல்கண்டு அம்மரபுவழு அமைத்தற்குக் கூறியவாறு ஆயிற்று. (சகூ)

50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் [1]கூடா வழக்குவழிப் பட்டன.

என்பது என்நுதலிற்றோ எனின், ஆண் பெண் என்னும் இருபாற்கும் பொதுவாகிய பெயர்க்கண் மரபு வழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—பெயரினும் தொழிலினும் ஆண் பெண் என்னும் இருபாற்கும் உரிய பொதுமையிற் பிரிந்து ஒருபாற்கண்ணே நடப்பன எல்லாம் இலக்கண முறைமையின் மயங்கின என்று மாற்றல்கூடா; யாதோ காரணமெனின், அம்மயக்கம் [2]வழக்கின் அடிப்பட்ட அதனான் என்றவாறு.

அப் பொதுப் பெயர், உயர்திணை, அஃறிணை, ஆண்பால், பெண்பால் எனவும் பெயர்வினையோடு [3]வைத்துறழ எண்வகைப்படும்.

அவையாவன :—

உயர்திணைக்கட் பெயரிற் பிறந்த பெண்ணொழி மிகுசொல்லும்,
ஆணொழி மிகு சொல்லும்,
தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும்,
ஆணொழி மிகு சொல்லும்,
அஃறிணைக்கண் பெயரிற்பிரிந்த பெண்ணொழி மிகுசொல்லும்,
ஆணொழி மிகு சொல்லும்,
தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும்,
ஆணொழி மிகு சொல்லும் என இவை.

உ-ம் :—

வடுகரசர் ஆயிரவர் மக்களையுடையர் ;

---

49-7 "பொருட்டன்மை"

8 "சொற்றொகுத்திறுத்தற்கண்டு"

50-1 viii "மயங்கல் கூட்டா"

2 i "வழக்கின் யடிப்பட்ட"

3 i "வைத்ரழ"

பெருந்தேவி [4]பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர் எனவும்,

அரசரோடு ஆயிரவர் மக்கள் தாவடி போயினர்;

இன்று இவ்வூரார் எல்லாந் தைநீர் ஆடுப எனவும், உயர்திணைக்கட் பெயரினும் தொழிலினும் பிரிந்த பெண்மொழி மிகு சொல்லும், ஆண்மொழி மிகு சொல்லும்.

நம் அரசன் ஆயிரம் யானையை உடையன்,

நம்பி நூறு எருமை யுடையன், எனவும்,

இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் உழவொழிந்தன,

இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் அறத்திற்குக் கறக்கும்,

[5]எனவும் இவை அஃறிணைக்கண் பெயரினும் தொழிலினும் பிரிந்த பெண்மொழி மிகு சொல்லும், ஆண்மொழி மிகு [6]சொல்லும் ஆம்.

எல்லாம் என்றதனான் மேற்சூத்திரத்து, ஒரு பெயர், பொதுச்சொல் அன்றித் தலைமைபற்றி வருவனவும், சிறுபான்மைபற்றி வருவனவும் கொள்க. ஆந்தண்டு நற்றி, வயிர கடகம் என்னும் தொடக்கத்தன.

இன்னும் அதனானே இனஞ்செப்பாது ஒரு தொழிற்கண் மிகை விளக்குதற் பொருட்டாக வருவனவும் அமைத்துக் கொள்க. இவர் பெரிதுஞ் சொல்லுமாறு வல்லர். இவர் பெரிதுங் கால்கோண்டு ஓடுப. இவ்வெருது புல்தின்னும் எனவரும்.

இதனாற் சொல்லியது இருதிணையிடத்தும் ஆண்பாற்கும் [7]பெண்பாற்கும் ஒரு சொல்லுதற் கண்ணே உரியபெயர்கள் அப்பொதுமை ஒழிய ஒருபாற்கண்ணே ஓடுதல் மரபுஅன்று; மரபு அன்றாயினும் அமையும் என்று மரபு வழு அமைத்தவாறு.

[8]இலேசினாற் கொண்டனவும் மரபு வழுவமைதி என உணர்க. (௫0)

---

50-4 iii "திருவு யிர்த்த"
v " ஷை (அடிக்குறிப்பு)
i " ஷை (திருவு என்பது பொறையு எனத் திருத்தப் பட்டுள்ளது).
5 ii "எனவும் வரும்"
6 i-iii-iv "சொல்லும் எல்லாம்"
7 vi "பெண்பாற்கும் சொல்லுதற் கண்"
8 i "இலேசினாற்"

**51. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப் பெயர்**
**அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், [1]செய்யுள் அகத்துத் திணைவழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—பலஇடத்தானும் திணைவிரவி எண்ணப்படும் பெயர் அஃறிணை முடிபினவாம் செய்யுள் அகத்து என்றவாறு.*

*உ - ம் :—*

வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை என்றிவை ஆறுங்
குறுகார் அறிவுடை யார். *எனவரும்.*

[2]பலவயி னானும் *என்பதனாற் [3]சிலவயினான் திணைவிரவாது, உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவன கொள்க என்பது.*

*உ - ம்.—*

பாணன் பறையன் [4]கடம்பன் துடியனென்
றந்நான் கல்லது குடியும் இல்லை. *எனவரும்.*

*சிலவயினான் திணைவிரவி எண்ணி உயர் திணையான் முடிவனவும் கொள்ளாமோ எனின், சான்றோர் [5]செய்யுட்கண் அவ்வாறு [6]வருவன இன்மையிற் கொள்ளாம் என்பது.*

வடுகரருவாளர் *என்பதூஉம் சான்றோர் செய்யுள் அன்றால் எனின்,*

கடுஞ் சினத்த கொல் களிறுங்
கதழ்பரிய கலி மாவும்
நெடுங் கொடிய நிமிர் தேரும்
நெஞ்சுடைய புகன் மறவரு மென
நான்குடன் மாண்ட தாயினும் *என்பதும் உண்மையின் அமையும் என்பது.*

51-1 i-iv *"செய்யுளகத்திணை"*
2 i *"பலவனுயினும்"*
3 i *"சிலவயின்"*
4 iv *"கடம்பன் அடியன்"*
vi *"துடியன் கடம்பன்"*
5 i-ii-iv-vi-vii-viii *"செய்யுட்கு அவ்வாறு"*
6 *(வருவன இன்மையின் என்றிருந்திருக்கலாம்.)*

**அஃதேல் திங்களும் சான்றோரும் ஒப்பர்** எனவும்

**வேந்தின் பெரும்பதி மண்ணான் மாந்தர்**

**ஈங்கிம்மூவர் இதற் குரியாரே** எனவும் சான்றோர் செய்யுளுள்ளும் வருமால் எனின், திங்களும் பதியும் என்பன அஃறிணை முடிபின எனினும் தாம் உயர்திணைப் பொருள் ஆகலான் அவை இங்கிகரன அல்ல.

இவற்றின்கண் சிறுபான்மை வழுவினையும் இப் பலவயினானும் என்றதனானாதல் அதிகாரப் புறனடையானாதல் அமைத்தும் என்பது.

இதனாற் சொல்லியது செய்யுட்கண் திணைவிரவி எண்ணியவழிப் பொதுவாக முடியாது ஒரு திணையான் முடிவது கண்டு அதனை அமைத்தவாறு.

இனிப் பொதுமுடிபில என்று அஃறிணை [7]முடிபிற்று ஆதற்குக்காரணம் என்னை எனின், அவ்வாறு எண்ணிய உயர்திணையும் [8]பொருள் என்னும் பொதுமையான் [9]அஃறிணையான் அடங்கும். உயர்திணையுள் [10]அஃறிணை அவ்வாறு அடங்காது என்பது போலும். (௫௧)

52. **வினை வேறு படூஉம் பலபொருள் ஒருசொல்**
**வினை வேறு படாஅப் பலபொருள் ஒருசொலென்**
**றாயிரு வகைய பலபொருள் ஒரு சொல்.**

என்பது என்னுதலிற்றோ எனின், மேல் பலசொல்லான் வரும் ஒரு பொருள் உணர்த்தினான். இனி ஒரு சொல்லான் வரும் பலபொருள் உணர்த்துவான் அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—வினையினான் வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினையினான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்லும் என இருவகைய, பல பொருள் ஒரு [1]சொற்கள் என்றவாறு.

---

**51**-7 i "முடியிற்று"

8 i-iv-viii "பொது என்னும்" (i-ல் பொது பொருளென்று திருத்தம்)

9 vi "அஃறிணையின்"

10 vi "அஃறிணையடங்காது"

**52**-1 vi "சொல்"

உ - ம் :—

**மா, வாள், கோல், கன்று, தளிர், பூ, காய், பழம்** என்னும் தொடக்கத்தன.

இவற்றுள் **மா** என்பதே பல[2]சாதியும் உணர்த்திப் பொதுவாய் நின்றது. அல்லன எல்லாம் ஒரு சாதியை உணர நிற்றலின் பொதுமையிலவால் எனின், அவ்வாறு பொதுமைப் படாதாயினும் விகற்பித்து நோக்கத் தம்முள்ளே [3]சாதிப் பாகுபாடு உடைய என உணர்க.

இவற்றுள் உலகத்துப் பெயர்கள் எல்லாம் [4]ஒரு பொருளோடும் ஓர்இடத்தோடும் ஓர் காலத்தோடும் பண்போடும் தொழிலோடும் உறுப்போடும் படுத்து நோக்கப் பல பொருள் ஒரு சொல் எனப்படும் போலும். (௫உ)

53. அவற்றுள்,
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருடெரி நிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்கூறிய பல பொருள் ஒரு சொல்லினுள் வினைவேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேற் சொல்லப்பட்ட இரண்டனுள் வினை வேறுபடும் பலபொருளொருசொல் வேறுபடுக்கும் [1]வினையானும், அவ்வினையொடு வரும் இனத்தானும், சார்பினானும், " இப்பொழுது இவன் கூறியது இப்பொருள் " எனத் தெளியத் தோன்றும்; பொருளாராய்ச்சிப் படும் நிலைமைக்கண் என்றவாறு.

---

52-2 i " ஜாதி "

3 i " சாதி பாகுபடைய "

vi " சாதி மாறுபாடுடைய "

4 i " மொருளோடு "

5 i " அப்போடும் படுத்த நோக்கம் " (அ-உறு)

53-1 i-ii-iv-vi-viii " வினையானும் வினையொடு " (மகரத்தின் மேல் புள்ளியிட்ட குழப்பம்)

உ - ம் :—

மாப் பூத்தது, காய்த்தது ; இவை வேறுபடுவினை.

மாவும் அரசும் புலம் படர்ந்தன,

மாவும் மருதும் ஓங்கின ; இவை [2]இனம்பற்றி வந்தன.

வில்பற்றி நின்று கோல்தா என்பதூஉம், [3]பலகை பற்றிநின்று வாள்தா என்பதூஉம், [4]தூம்புபற்றி நின்று கோல்நா என்பதூவும் சார்புபற்றி நின்றன.

உரையிற் கோடல் என்பதனாற் பலபொருளொருசொல் வினை இனம் சார்புகளைப்பற்றிப் பலபொருளை ஒழித்து ஒரு பொருண்மேல் நில்லாது, சில பொருளொழித்துச் சில பொருண்மேல் நிற்பதூஉம் கொள்ளப்படும்.

உ - ம் :—

கழிப்பூக் [5]குற்றுக் கானல் அல்கி என்றாற்போல வரும்.

[6]இனமும் சார்பும்பற்றி வரும் அவையிற்றை வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல் என்றது என்னை எனின், அவ்இனமும்சார்பும் அவ்வினைச்சொல்லை வேறுபடுக்கும் வழி அதனோடு கூடி நின்று வேறுபடுப்பின் அல்லது தாமாக நில்லாமை நோக்கி அவையிற்றையும் வினை வேறுபடூஉம் [7]பலபொருளொருசொல் எனப் பொதுச் சூத்திரத்துள் [8]இரண்டையும் ஒன்றாக அடக்கி ஈண்டு அதன் பாகுபாடுதோன்ற விரித்துக் கூறினவாறு போலும்.

அதனாற் சூத்திரத்து இனமும் சார்பும் என்பனவற்றை முன்நின்ற வினையோடு தொடர்புபடப் பொருள் உரைத்துக் கொள்க. (ருஎ)

---

53-2 i "இன்மை பற்றி"

3 iv "பால்பற்றி நின்று"

4 iv "தும்புபற்றி நின்று"
vi (தும்புபற்றி நின்று கோல்தா என்பது பலகை பற்றி நின்று வாள்தா என்பதற்கு முன் உள்ளது)

5 vi "குற்றும்"

6 i "இனமுரு சார்பும்"

7 i "பல பொருள் ஒரு சொல் என்ப, பொதுச் சூத்திரந்துள்"

8 i "இரண்டனொன்றாருக"
v "இரண்டின் ஒன்றாக்கி"

## 54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்சூத்திரத்திற்கு ஓர் புறனடை உணர்த்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேற்கூறிய வினை வேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல், வினையான் வேறுபட நில்லாது பொதுவாகிய வினையோடு பொருந்திப் பொருட் பொதுமைப்பட நின்றுழியும், மேல் வினையான் வேறு பட்டாற்போல இன்னது இது என வேறுபட நிற்றலும் வழக்கிடத்து உண்டு என்றவாறு.

உ - ம் :—

மா வீழ்ந்தது என்பது.

வீழ்தல் வினை எல்லா மாவிற்கும் பொதுவே எனினும், இவ்-இடத்து, இக்காலத்து இவன் சொல்லுகிறது இம்மாவினை என்று [1]உணரநிற்கும் என்றவாறு.

[2]என்றது முன்கூறிய வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லும் ஒரு நிலைமைக்கண் வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்போல உணர நிற்கும் என்றவாறு.

அஃதேற் பல பொருள் ஒரு சொல்லினை இரண்டாக [3]ஓதியது என்னை? ஒன்றே ஆகற்பாற்று எனின், அவ்வாறு ஒன்றாயதனையே [4]உணரப்பாட்டு வேற்றுமை நோக்கி இரண்டாகப்பகுத்தா[5]ன் என உணர்க. (ருச)

## 55. வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல் நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

என்பது என்நுதலிற்றோ எனின், வினை வேறுபடாப் பல பொருளொரு சொல்ஆமாறு உணர்த்தல் நுதலிற்று.

---

54-1 ii " அதனை உணர நிற்கும் "

2 i " எனது "

3 i " வாதியது "
ii-vi " ஆக்கியது "

4 i-ii " உணர் பாட்டு "

5 — " ர் "

இதன் பொருள் :—வினையினுன் வேறுபடாத பலபொருள் ஒருசொல் ஆராயுங்காலத்து இன்னது இது எனக் கிளக்கப்பட்ட ஆராய்ச்சியை உடைய இடத்து நடக்கும் என்றவாறு.

உ - ம் :

கன்று நீர் ஊட்டுக என்புழிக் கேட்டான், இன்ன [1]கன்றென்பது அறியானுமே எனின், ஆன்கன்று, எருமைக்கன்று, பூங்கன்று எனக் கிளந்து சொல்லுக.

நினையுங்காலை என்றதனுன் கிளவாது கூறினுற் கருமச்சிதைவு உண்டு எனிற் கிளந்து கூறுக; அல்லாதுழி வேண்டியவாறு கூறுக என்பது பெறப்பட்டது.

கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறார் என்புழிக் கருமஞ் சிதைந்தது என்பது இன்மையிற் கிளவாது சொல்லவும் அமைந்தது என்பது.

[2]எனப் பலபொருளொருசொல் வேறுபடு வினையான் உணரப்பட்டு நிற்றலும், வேறுபடு வினையின்றிப் பொது வினையான் உணரப்பட்டு நிற்றலும், பொது வினையாற் கருமச்சிதைவு உள்வழிக் கிளந்து சொல்லப்பட்டு நிற்றலும், கருமச் [3]சிதைவு இல்வழிப் பொது வினையாற் கிளவாது சொல்லப்பட்டு நிற்றலும் என நான்கு பகுதிப்பட்டது என உணர்க.

இச்சூத்திரங்களாற் கூறியது பலபொருளொருசொல் வினை பற்றிப் பிறக்கும் மரபிலக்கணப் பாகுபாடு என உணர்க. (௫௫)

## 56. குறித்தோன் கூற்றம் தெரித்து மொழி கிளவி.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் ஓர் செயற்கைப் பொருள்மேன் மரபு வழூக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—உலகத்து ஒப்பமுடிந்த பொருளை ஒவ்வாமல் சொல்லக் குறித்தவன் சொல்லும் சொல்லாதற்கு ஓர் காரணம் கூறிக் கூறும் சொல்லாய் இருக்கும் என்றவாறு.

---

55-1 i "கன்றென்பததி"

iv "கன்றென்ப தறியானு"

2 i —"என்பால் பொருள்"

vi-viii "எனவே பல பொருள்" (இது பொருத்தமாம்.)

3 vi "சிதைவுள் வழி"

viii "சிதையில்வழி"

உ - ம் :—

பல்லார் தோள்தோய்ந்து [1]வருதலாற் பூம்பொய்கை
நல்வய லூர ! நின்தார் புலால் — புல்லெருக்கம்
மாசின் மணிப்பூண் எம்மைந்தன் மலைந்தமையாற்
காதற்றாய் நாறும் [2]எமக்கு.

இதனாற் சொல்லியது ஓர் இயற்கைப் [3]பொருளை ஓர் இயற்கையாக ஓர் காரணம்கருதிக் கூறுமிடத்துத் தான் கருதிய காரணத்தினை விளங்கச் சொல்லுக என ஓர் மரபாராய்ச்சிக் கூறியவாறு.

இதுவும் ஓர் மரபு வழுவமைதி போலும். (௫௬)

57. குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்
றவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

என்பது என்நுதலிற்றோ எனின், திணைவழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—குடிமை என்னும் சொல்லும், ஆண்மை என்னும் சொல்லும், இளமை என்னும் சொல்லும், மூப்பு என்னும் சொல்லும், அடிமை என்னும் சொல்லும், வன்மை என்னும் சொல்லும், விருந்து என்னும் சொல்லும், குழூ என்னும் சொல்லும், பெண்மை என்னும் சொல்லும், [1]அரசு என்னும் சொல்லும், மக என்னும் சொல்லும், குழவி என்னும் சொல்லும், தன்மை திரிந்ததனாற் பெற்ற பெயர்ச்சொல்லும், உறுப்பிற் பெயர்ச் சொல்லும், காதல்

---

56-1 vi "வருதலாற் பொய்கை"

2 ii "எமக்கு என் இதனால்"

3 vi "பொருள்"

57-1 i "ஆரசு"

என்னும் சொல்லும், சிறப்பித்துச் சொல்லும் சொல்லும், செறுத்துச் சொல்லும் சொல்லும், விறல் என்னும் சொல்லும் என்று சொல்லப்பட்ட பதினெட்டுச் சொல்லும் உள்பட வந்த தன்மையனவும் பிறவும் அவற்றொடு [2]கூடித்தொக்கு இவ்வகையாகிய குறிப்பினான் உணரப்படும் சொற்கள் எல்லாம் உயர்திணையிடத்தே நிலை பெற்றன ஆயினும், அஃறிணையிடத்துச் சொல்லுமாறு போலச் சொல்லப்பட்டு நடக்கும் என்றவாறு.

உ ம் :—

இவற்குக் குடிமை நன்று, தீது ; ஆண்மை நன்று, தீது ;
இளமை நன்று, தீது ; மூப்பு நன்று, தீது ;
அடிமை நன்று, தீது ; வன்மை நன்று, தீது ;
விருந்து வந்தது, போயிற்று ; குழூ நன்று, பிரிந்தது ;
[3]பெண்மை நன்று, தீது;

இவற்கு என்பதை ஏற்புழி ஒட்டிக் கொள்க.

அரசு வந்தது, போயிற்று ; மகன் நன்று, தீது ;
குழவி எழுந்தது, கிடந்தது ;

தன்மை திரி பெயர் :—

அலி வந்தது, போயிற்று ;

உறுப்பின் கிளவி :—

குருடு வந்தது, போயிற்று ; கூன் வந்தது, போயிற்று ;

[4]காதல் :—

என் காதல் வந்தது, போயிற்று ; என் யானை வந்தது, போயிற்று ;
என் பாவை வந்தது, [5]போயிற்று ;

---

57-2 vi " கூட்டித் தொக்கு "

3 vi " இவர்க்கு என்பது ஏற்புழி ஒட்டிக்கொள்க. பெண்மை நன்று தீது "

4 i " சிறப்பு "
ii-iv-vi-vii-viii " காதல். என் யானை வத்தது "

5 ii-vi " போயிற்று. சிறப்பு - கண்போலச் சிறந்தாரை கண் என்றலும் உயிர்போலச் சிறந்தாரை உயிர் என்றலும் ஆம். ஆதலின், அஃது " ஆலமர் செல்வன், அணிசால் பெருவிரல் போலவரும் எம் உயிர் " "என் உயிர் வந்தது போயிற்று என் கண் வந்தது போயிற்து" எனவும் வரும். செறற் சொல்.

*செறற் [6]சொல்:*

**கெழீஇலி வந்தது, [7]போயிற்று ; [8]பொறியறை வந்தது, போயிற்று ;**

*விறற் சொல் :—*

**பெருவிறல் வந்தது, போயிற்று** என **வரும்.**

**அன்ன பிறவும்** என்றதனாற் **பேடி வந்தது, பேடிகள் வந்தன ; வேந்து வந்தது, வேள் வந்தது, [9]குரிசில் வந்தது, ஒரு கூற்றம் வந்தது, புரோசு வந்தது, உலகு வந்தது** என்னும் தொடக்கத்தனவும் கொள்க.

**இவற்குக் குடிமை நன்று** என்றதன் பொருள் [10]இவற்குக் குடிமகனல்லன் என்னும் பொருண்மையாகக் கொள்க. பிறவும் இவ்வாறே உயர்திணையாக உணர்க.

குடிமை என்பது குடியாண்மை எனவும், ஆண்மை என்பது ஆண்மகன் எனவும், இளமை என்பது இளவல் எனவும், மூப்பு என்பது முதுமை எனவும், அடிமை என்பது அடி எனவும், வன்மை என்பது வலி எனவும், விருந்து என்பது புதுமை எனவும், [11]குழூ என்பது கூட்டம் எனவும், திரள் [12]என்பது ஆயம் எனவும், அவை எனவும், பெண்மை என்பது பெண் எனவும், குழவி என்பது பிள்ளை எனவும், மதலை எனவும், பிறவும் வாய்பாடு உற்றமை அறிக.

இவற்றுள் **ஆண்மை பெண்மை** என்றாற் போல்வன விரவுப் பெயராய் நிற்கும். குடிமை அடிமை அரசு என்றாற் போல்வன உயர்திணைப் பெயராய் நிற்கும். இவ்விகற்பமும் அறிந்து கொள்க.

---

**57**-6 ii "சொலல்"

7 i-iv-vi-vii-viii **போயிற்று. என் காதல் வந்தது போயிற்று. பொறியறை.**

vi (**கோடிட்ட பகுதி 'காதல்' என முன் வந்ததன் பின் மாற்றப்பட்டுள்ளது**)

iii "**கோடிட்ட பகுதி இல்லை**"

8 i-ii "**பொரியறை**"

9 i "**குரிசில் ஒரு கூற்றம்**"

10 i "**இவர்குக் குடிமை கனலலன்**"

11 i "குழ"

12 ii-vi "**எனவும்**"

இக்குடிமை முதலியன எல்லாம் உயர்திணைப் பண்புஆகலான் அப்பண்புச் சொல் தன் பொருண்மேல் ஒரு ஞான்றும் நில்லாது தன்னையே உடைய பொருண்மேலே தன் பொருளும் தோன்றிப் பிரியாது நின்றமையின் உயர்திணையாயிற்று என்பது.

[13]அவையிற்குஅடி பண்பு என்பது [14]போதரல்வேண்டிக் குடிமை யாண்மை எனப் பண்பு வாய்பாடு படுத்துக் கூறினன் போலும்!

'தன் பொருண்மேல் நில்லாது' என்றது என்னை? இளமை மூப்பு என்றாற் போல்வன அவற்றிற்கு அப்பண்பு தன்மேலும் வழக்குண்டால் எனின், அவ்வாறு வருவனவும் சிறுபான்மை உளவேனும் அடிமை, அரசு, மகவு, குருடு, கூன் என்றாற் போல்வன, பொருண்மேலன்றிப் பண்பின்மேல் வழங்கல் இன்மையின் அவற்றிற்கு எல்லாம் முன்கூறியதே நினைவு என்பது.

இனி [15]அவை எல்லாம்அப் பண்பின் மேல் எனவும், பண்புகொள வருதல்என்னும் ஆகுபெயரால் பொருண்மேலே நின்றன எனவும், அவற்றுக்கண்ணது ஈண்டாராய்ச்சி எனவும், அவற்றுப் பண்புப் பொருண்மேல் வழக்கில்லனவற்றை இறந்த வழக்கு என்று கூறியும் வரும். பிறவாறு கூறுவாரும் உளர். அதுவும் அறிந்து கொள்க.

இதனாற் சொல்லியது பண்பு நிமித்தமாகப் பொருள் நிகழும் சொற்கள் பலவும் தன் பொருட்கு ஏற்ப உயர்திணையாய் முடியாது சொற்கு ஏற்ற ஆற்றான் [16]அஃறிணையின் முடிவன கண்டு அதனை ஈண்டு அமைத்தவாறு என உணர்க. (௫௭)

**58. காலம் உலகம் உயிரே உடம்பே**
**பால்வரை தெய்வம் வினையே பூதம்**
**ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்**
**ஆயீர், ஐந்தொடு பிறவும் அன்ன**
**ஆவயின் வரூஉங் கிளவி எல்லாம்**
**பால்பிரிந் திசையா உயர்திணை மேன.**

---

57-13 i "அவையற்றுக் கடி"
iii "அவையிற்றுக் கடி"
ii "அவற்றிற் கடி"
14 i-ii-iv-vi-viii "போதல்"
15 vi "இவையெல்லாம்"
16 vi-viii "அஃறிணையான்"

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் திணைவழுக்காத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—காலம் என்னும் சொல்லும், உலகம் என்னும் சொல்லும், உயிர் என்னும் சொல்லும், உடம்பு என்னும் சொல்லும், [1]இருவினையும் யாவர்க்கும் வரைந்து ஊட்டும் தெய்வத்தின்மேற் பால் எனவரும் சொல்லும், வினை என்னும் சொல்லும், பூதம் என்னும் சொல்லும், ஞாயிறு என்னும் சொல்லும், திங்கள் என்னும் சொல்லும், சொல் என்னும் சொல்லும் [2]என்று சொல்ல வருகிற பத்துச் சொல்லினோடு பிறவும், அத்தன்மையாகிய உயர்திணைப் [3]பொருள்மேல் வரும் சொற்கள் எல்லாம் உயர்திணை இடத்துப் பால் உணர்த்தும் சொல்லாற் பிரித்துச் சொல்லப்படா ; அஃறிணைப்பாலாற் சொல்லப்படும் என்றவாறு.

உ-ம் :

[4]இவற்குக் காலமாயிற்று, உலகு [5]பசித்தது, உயிர் போயிற்று,
உடம்பு நுணுகிற்று, இவற்குப் பாலாயிற்று.
வினை நன்று, வினை தீது,
இவனைப் பூதம் [6]புடைத்தது, ஞாயிறு எழுந்தது, பட்டது;
திங்கள் எழுந்தது, பட்டது ;
[7]சொல் நன்று, தீது ;

பிறவும் என்றதனால் செவ்வாய் எழுந்தது, பட்டது ; வெள்ளி எழுந்தது, பட்டது ; என வரும்.

58-1 iii "இருவினை யாவர்க்கும்"

2 v "என்று வருகிற"

ii "என்று சொல் வருகிற'!

3 i-ii-iv-v "பொருள் போல் வரும்"

4 iv "இவர்க்கு"

5 iv "பசித்தது. வினை நன்று"

6 i-ii-v "படைத்தது"

7 i-iv "சொன்னது தீது" ('னன்று' னது போலத் தோன்றியது போலும்.)

என்னை, இவை உயர்திணை ஆயினவாறு என்னை ? [8]எனின், காலம் என்றது காலனை. உலகம் என்றது உலகத்தாரை. உயிர் என்றது உயிர்க்கிழவனை. உடம்பு [9]என்றது அஃது உடையானை. பால் என்பது [10]இன்பத் துன்பங்களை வகுப்பதோர் தெய்வம். வினை என்பது வினைத் தெய்வம். பூதம் என்பது தெய்வப் பகுதி; ஞாயிறு திங்கள் என்பன தெய்வம். சொல் என்பது சொன்மடந்தையை, [11]ஆயின் இவற்றை மேலவற்றோடு ஒன்றாக [12]ஓதாதது என்னை எனின், அவை எல்லாம் பண்பு அடியாகப் பொருண்மேல் நிகழ்தலின் அவற்றை முன்னத்தினுணருங்கிளவி என [13]ஒருவகையாற்கிளவாதுவரும் பெயரினையும் வேறொருவகையாக்கிக் கூறினான் என உணர்க.

இவற்றுள் பூதம் ஞாயிறு திங்கள் என்பன [14]ஒழித்து அல்லன எல்லாம் ஆகுபெயரான் அஃறிணைப் பெயர் உயர்திணைமேல் நின்றன என உணர்க.

இதனாற் சொல்லியது இவையும் சில உயர்திணைப் [15]பெயர் தம் பொருட்கு ஏற்ப முடியாது சொற்கு ஏற்ப முடிதனோக்கண்டு அதனை அமைத்தவாறு ஆயிற்று. (௫அ)

59. நின்றாங் கிசைத்தல் இவண் [1]இயல் பின்றே.

என்பது என்நுதலிற்றோ எனின், 'குடிமை ஆண்மை' என்றதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—நின்ற வாய்பாட்டானே நின்று உயர்திணை முடிபு பெறுதல் இக் காலம் உலகம் என்னும் தொடக்கத்தனவற்றிற்கு

58-8 i " எனின் எனின் காலம் "

9 i " என்றது உடையானே "

10 i-ii " இன்பதுன்பங்களை "

11 i " ஆயினயிவற்றை "

12 i " ஒத்ததென்னை "

13 i-ii-vi " வேறு ஒருவகையாற் "
v " கிளவி என்று ஒருவகையாற் "

14 ii " ஒழிந்தல்லன "

15 i " பேர்தம் பொருட்டாகு — கேற்ப படியாது "
v " பெயர்தம் பொருட்டாகு பெயராய் அதற்கு ஏற்ப முடியாது சொற்கேற்ப "

59-1 ii " இயல்பன்றே "

இயல்பு அன்று எனவே, மேற்கூறிய குடிமை ஆண்மை என்னும் தொடக்கத்தனவற்றிற்கு இயல்பு என்றவாறு.

உ - ம்:—

குடிமை நல்லன்; வேந்து செங்கோல் நல்லன் எனவரும்.

உயர்திணை முடிபு இழந்து நின்றனவற்றை [2]அம் முடிபு உடைய என்று எய்துவித்தவாறு. [3]இம் முடிபு இலக்கணமாதலின் இதுவே பெரும்பான்மை [4]ஆகற்பாற்று எனின்:—இலக்கணமே எனினும் வழக்குப் பயிற்சியான் அதுவே பெரும்பான்மை ஆயிற்று என உணர்வது.

இச்சொற்கள் ஈறு வேறுபட்டுக் [5]குடிமகன், வேந்தன் என [6]நிற்பன உயர்திணை முடிபே முடிபு எனக்கொள்க.

இதனாற் சொல்லியது மேற்கூறிய இருவகைத் திணைவழுவினையும் ஒருவகை தன்மேலும் முடிபுடையவாயும் ஒருவகை தன்மேல் [7]முடிபிலனவாயும் வருவது கண்டு அவற்றது உண்மையும் இவற்றது இன்மையும் உடன்கொண்டு கூறியவாறு ஆயிற்று. (௫௯)

## 60. இசைத்தலும் உரிய வேறிடத்தான.

என்பது என்நுதலிற்றோ எனின், காலமும் [1]உலகமும் என்பதற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்.— காலமும் உலகமும் என்னும் தொடக்கத்தன உயர்திணை முடிபுபெறுதலும் உடைய; அவ்ஓதிய வாய்பாடு ஒழிய வேறு வாய்பாடாயின இடத்து என்றவாறு.

---

**59**-2 i "யும் முடிபுடைய தென்றவாறு"

3 i "இம்முடி விலக்கமாதலின்"

4 vi "ஆயிற்று எனின்"

5 i-ii "வேந்தன் ஆண் மகன் என"

6 vi "நிற்பனவற்றிற்கு"

7 i-v "முடிவில்லையாயும்"

**60**-1 i-ii-vi "என்பதற்கு ஓர் புறனடை"

உ - ம் :—

காலம் என்பது மகரஈறு. காலன் என்னும் னகரஈறாய் நின்றுழிக் **காலன் கொண்டான்** என முடியும். **உலகத்தோர் பசித்தார், உயிர்க்கிழவன் போயினன்** என்பனவும் அவை.

இதனாற் சொல்லியது மேல் '**நின்றாங்கிசைத்தலிவணியல்பின்று**' என்ற விலக்கு **இவண்** எனக் காலமும் உலகமும் என்னும் வாய்பாட்டினையே நோக்கி விலக்காது அப்பொருள்மேல் வரும் வாய்பாடுகள் எல்லாம் விலக்குவதுபோலும் [2]நோக்குப்பட நின்றது என்று கொள்ளினும் கொள்ளற்க, என்று அவை [3]வேறிடத்தாயின் இசைக்கும் [4]எனவும் கூறவேண்டிக் கூறினான் என்பது. (சுo)

## 61. எடுத்தமொழி இனஞ் செப்பலும் உரித்தே.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]அருத்தாபத்தி மேற்று.

இதன் பொருள் :—விதந்தமொழி தன் இனத்தைக்காட்டி நிற்றலும் உரித்து; உம்மையாற் காட்டாது நிற்றலும் உரித்து என்றவாறு.

உ - ம் :—

[2]**கீழ்ச்சேரிக் கோழி அலைத்தது** என மேற்சேரிக் கோழி அலைப்புண்டது என்பது சொல்லாமையே முடிந்ததாம்.

**குடங்கொண்டான் வீழ்ந்தான்** எனக் [3]குடம் வீழ்வும் முடிந்தது. இவை இனஞ் செப்பின.

**ஆ வாழ்க அந்தணர் வாழ்க** என்பன இனஞ் செப்பாதன.

இவையும் இனஞ்செப்பின என்னுமோ எனின், சொல்லுவான் கருத்து அஃது அன்மையானும், மறுதலை பல உள்ள வழி இனம் செப்பாமையானும் இனம் செப்பா ஆயின என உணர்க. (சுக)

---

60-2 vi "நோக்கப்பட"
ii "நோக்கம்பட"
3 i "வேறிட்டதாயின்"
4 ii "என்பது"
61-1 ii "இஃது அருத்தாபத்தியாதற் கூறுதல் நுதலிற்று"
vi "இஃது அருத்தாபத்தி மேற்று"
2 i "கிழச் சேரிக் கொழி உலகத்தென மேற் சேரிக் கொழி"
3 i-ii "வீழ்தலும் முடிந்தது"

62. கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலும் எழுத்தலங் கடையே.

*என்பது என் நுதலிற்றோ எனின், திணைவழுக்காத்தல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—***கண்ணும்** *தோளும் முலையும் பிறவும் ஆகிய பன்மைப்பொருளை உணர்த்திய சினை நிலைமை உணர நின்ற சொற்கள் தம் பன்மையாற் கூறுதலையே இலக்கண* [1]*முறைமையாக உடைய அல்ல; அதிகாரத்தானும் உயர்திணையாய் முடிதல்உடைய.* [2]*எப்பொழுதுமோ? எனின், அற்றன்று, தமது வினைக்கு ஏற்ற எழுத்தினாற் சொல்ல நினையாது தம் முதல் வினையாற் சொல்லக் கருதியபொழுது என்றவாறு.*

*உ - ம் :—*

[3]கண் நல்லள், தோள் நல்லள், முலை நல்லள் ;

[4]*என்பன.* பிறவும் *என்பதனான்* புருவம் நல்லள், காது நல்லள் *என* வரும்.

*திணைவழு அதிகாரம் கூறி வாராநின்றதன் இடையே* எடுத்துமொழி *என்று இயைபில்லது கூறிய அதனான் ஒருமைச்சினை உயர்திணையாய் முடிவனவும் கொள்க.*

*உ - ம் :—*

மூக்கு [5]நல்லள், கொப்பூழ் [6]நல்லள், *எனவரும்.*

---

62-1 vi "*முறையாக*"

2 ii "*அஃது எப்பொழுதுமோ*"

3 iv "*கற்றல்லன்*"

4 ii "*என்பன ஆம்*"

5 iv "*நல்லள் எனவரும்*"

iii-viii "*நல்லன்*"

6 iii-viii "*நல்லன்*"

இதனாற் சொல்லியது உயர்திணைச் சினைப்பொருள் தனக்கு ஏற்ற சினை வினை கொள்ளாது முதல் வினை கொண்டு முடிவன கண்டு அதனை [7]அமைத்தவாறு.

**வினையிற்றோன்றும் பாலறி கிளவி** முதலாக இத்துணையும் சென்ற ஆராய்ச்சி எண்வகை இலக்கணத்துள்ளும் எழுவகை வழுவாராய்ச்சி என உணர்க. (௬௨)

[8]முதலாவது கிளவியாக்கம் முற்றும்.

[9]கல்லாடனார் விருத்தி.

---

**62-7** vi' ' அமைந்தவாறு ஆம் "

ii " அமைத்தவாறு என்க "

8 vi (இப்பகுதி இல்லை)

9 vi (இப்பகுதி இல்லை)

ii " கல்லாடனார் விருத்தியுரை "

## இரண்டாவது

# வேற்றுமை [3]இயல்

**63. வேற்றுமை [1]தாமே ஏழெனமொழிப.**

*என்பது [2]சூத்திரம் என்நுதலிற்றோ எனின் :*

இவ் ஓத்து என்ன பெயர்த்தோ எனின் : **வேற்றுமை [3]இயல்** [4]என்னும் பெயர்த்து, வேற்றுமை என்பன சிலபொருளை உணர்த்தினமையான் **காரணப் பெயர்** ஆயிற்று. மற்று, **வேற்றுமை** என்னும் பொருண்மை என்னை எனின் : பொருள்களை வேற்றுமை செய்தலின் பெயர் முதலிய எட்டற்கும் வேற்றுமை என்று பெயராயிற்று.

யாதோ வேற்றுமை செய்தவாறு எனின், ஒரு பொருள் ஒருவழி ஒன்றனைச் செய்யும் **வினை முதல்** ஆகியும், ஒருவழி ஒன்று நிகழ்தற்கு **ஏது** ஆகியும், [5]ஒருவழி ஒன்று செய்தற்குக் **கருவி** ஆகியும், ஒருவழி ஒன்று செய்தற்குச் **செயப்படுபொருள்** ஆகியும், ஒருவழி ஒன்று கொடுப்பதனை **ஏற்பது** ஆகியும், ஒருவழி ஒன்றற்கு **உவமம்** ஆகியும், ஒருவழி ஒன்று **நீங்குதற்கு இடம்** ஆகியும், ஒருவழி ஒன்றற்கு **எல்லை** ஆகியும், ஒருவழி ஒன்றற்கு **உடைமை** ஆகியும், ஒருவழி ஒன்று **செய்தற்கு இடம்** ஆகியும், ஒருவழி முன்னிலையாதற் பொருட்டு **விளிக்கப்படுவது** ஆகியும், இன்னோரன்ன **பிறவும்** ஆகிய பொதுப்பட நிற்றலுடைத்து. அவ்வாறு நின்றதனைப் பெயர் முதலியன ஓரோ ஒன்றாகச் சென்று அப்பொதுமையின் வேற்றுமைப்படுத்தி ஒரு பொருட்கு உரிமை செய்து நிற்றலின் வேற்றுமை எனப்பட்டது.

---

63-1 i-iv "*தானே*"

2 iv ***நீங்கியவை "என்பது என் நுதலிற்று"***

3 i-ii-iii-vii-viii "*ஒத்து*" ***(இந்தப் பிரதிகளும் பிற இயல்களில் இயல் என்றே வழங்குதல் காண்க. ஆனால் இவற்றில் இயலின் பெயர் இங்கே வரும் பாடத்திற்கு ஏற்ப இவற்றில் கண்ட உரையிலும் "வேற்றுமை ஒத்து" என்றே காணப்படும்).***

4 i-iv "***என்று பெயராயிற்று***"

ii-vi-vii-viii "***என்றும் பெயராயிற்று***"

5 iv "***ஒருவழி ஒன்று செய்தற்குச் செயப்படுபொருள் ஆகியும்***" ***(இடையில் "ஒருவரி" விடப்பட்டது போலும்.)***

இவ்வாறு எட்டற்கும் பொதுப்பட நின்றதோர் பொருள்நிலை அல்லது பொதுப்பட நின்றதோர் சொல் நிலைமை வழக்கிடைக்-காணுமால் எனின் : அவ்வாறு வழக்கு இல்லை எனினும், **சாத்தன், சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண், சாத்தா!** என ஒன்றன் வடிவோடு ஒன்றன் வடிவு ஒவ்வாது இவ் வேற்றுமைகள் வரும்வழிச் **சாத்தன்** என்னும் வாய்பாடு எங்கும் நின்றமையிற் **பொதுநிலை** என்பது உய்த்து உணரப்படும். எழுவாய் அதனொடு வேற்றுமைப்பட்டதோ எனின், **சாத்தனை** என்றது போல்வ-தோர் வாய்பாடு இல்எனினும் அவ்ஏழனொடும் ஒவ்வா நிலைமை உடைமையின் இதுவும் ஓர் வாய்பாடு ஆயிற்று என உணர்க. அன்றியும், செயப்படுபொருள் முதலியனவற்றின் வேறுபடுத்துப் பொருள் மாத்திரம் உணர்த்தலின், எழுவாய்வேற்றுமை ஆயிற்று என்பாரும் உளர். அல்லதூஉம், வேற்றுமை என்பது பன்மைபற்றிய வழக்கு எனினும் அமையும். [6]இவ் வேற்றுமை செய்யும்வழிப் பல சொல் [7]ஒரு பொருள் ஆகியும், பலபொருள் ஒரு சொல் ஆகியும் வரும். இனிப் பல சொல் ஒரு பொருள் ஆகிவரும் வழி, பல வேற்றுமை பல சொல் ஆகியும், ஒரு வேற்றுமை பல சொல் ஆகியும் வரும். அவை ஆமாறு அறிந்துகொள்க.

மேல் ஓத்தினோடு இவ் ஓத்து இயைபு என்னையோ எனின் : மேல் ஓத்தினுள் நான்கு வகைப்பட்ட சொற்களையும் பொருட்கண் மேலாமாறு சொல்லிப் போந்தான். அவற்றுள், முதலது பெயர்ச்சொல், அதற்கு இலக்கணம் உணர்த்திய எடுத்துக்கொண்டான் [8]என்பது. யாங்ஙனம் உணர்த்தினானோ எனின் : எல்லாப் [9]பெயர்களும் எழுவா-யாகிப் பயனிலை கோடலும், ஒருவழி எழுவாயாகாது வேறோர் நிலைமையவாய் [10]நிற்றலும், உருபேற்றலும், ஒருவழிச் சில [11]பெயர் உரு பேலாது நிற்றலும், காலம் தோன்றாமை நிற்றலும், ஒருவழித் தொழிற் பொருள் ஒரு கூறாயக்கால் [12]காலம் தோன்றி நிற்றலும், விளியேற்று நிற்றலும், சில பெயர் விளியாது நிற்றலும், இன்னோ-ரன்ன பிறவும் பெயரது இலக்கணம் என உணர்த்தினான் என்பது.

---

63-6 iii "இவை வேற்றுமை"

7 iii "ஒரோரு பொருளாகியும்"

8 iii "என்பது கொள்க, யாங்ஙனம்"

9 iii "எல்லாப் பொருள்களும் எழுவாய்"

10 iii "நிற்றலும் ஒருவழிச் சில பெயர்"
v "நிற்றலும் காலந் தோன்றாமை" (சொற்கள் விடுபட்ட பாடம்)

11 iii "பேர் உருபேலாது"

12 i "காலந்தோன்றி"

[13]பெயரது இலக்கணமேயன்றி [14]உருபிலக்கணம் உணர்த்தினால் எனின் ; அவ்ஆராச்சியும் பெயரது இலக்கணமாய் [15]விழுதலுடைமையின் அமையும் என்பது.

மற்று இத்தலைச் சூத்திரம் என்நுதலிற்றோ எனின் : தன்னால் உணர்த்தப்படும் பொருளை இனைத்து என்று வரையறுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :— வேற்றுமை என்று சொல்லப்படுவனதாம் ஏழுஎன்று சொல்லுவர் ஆசிரியர் [16]என்றவாறு.

தாம் என்பது சந்த இன்பம். ஏ என்பது [17]ஈற்றசை. (க)

**64. விளிகொள்வ தன்கண் விளியோ டெட்டே.**

என்பது என்நுதலிற்றோ எனின், ஒழிந்த வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — விளி கொள்வதன்கண் விளியோடு எட்டு வகைப்படும் வேற்றுமை என்றவாறு.

விளிகொள்வது என்பது [1]பெயரதன்கண் விளி என்றவாறு. விளியோடு எட்டு என்னாது பெயர்க்கண் விளி என்றதனாற்பெற்றது என்னை எனின், மற்றை வேற்றுமைபோலப் பெயர்ப்புறத்துப் பிரிய வாராது, அப்பொருளே ஈறுதிரிதல் முதலாய வடிவினதாகிவருதல் உணர்த்திய என்றவாறு.

வேற்றுமைதாமே எட்டு என ஒரு சூத்திரமாகக் கூறாதது என்னை எனின் : [2]இதனது சிறப்பின்மை அறிவித்தற்கு வேறு கூறினான் என்பது.

---

63-13 vi "போது" (பேரது என்பதனைத் தவறாகப் படித்த பாடம்)

14 ("உருபிலக்கணமு முணர்த்தினான்" என்பது சிறக்கும். ஒரு "மு" விடுபட்டது போலும்.)

15 vi "விடுதலுடைமையின்" (ழு - டு மாறாட்டம்.

16 i "என்பது"

17 ii-vi "ஈற்றசையாம் என்க"

64-1 ii-vi "பெயரின் கண்"

2 vi " இது சிறப்பின்மை"

யாதோ சிறப்பின்மை எனின்: விளிஏலாப் [3]பொருள்களும் உண்மையின் என்பது. அஃதேல் பயனிலை கொள்ளாப் பெயரும்[4]உள எனின் : அதனோடு இதனிடை வேற்றுமை உண்டு. அஃது [5]ஒருவழிக்கொள்வது ஒருவழிக் கொள்ளாதாய் நிற்கும்; அதுதானும் சிறுபான்மை. இஃது யாண்டும் [6]கொள்ளாதன கொள்ளாவாயே நிற்கும் [7]என்பது.

வேற்றுமையினை ஏழு என்பது எட்டு என்பதாகின்றது சொல்லானோ பொருளானோ? சொல் எனினும் பலவகைய; பொருள் எனினும் பலவகைய, யாதோ கொள்ளுமாறு எனின் : ஒருவழிச் சொல்லானும் ஒருவழிப் பொருளானும் என்பது.

இவ்வாறு அன்றி எல்லாம் சொல்லான் என்பதும் ஒன்று.

பல சொல்லும் உள எனினும், ஐ ஒடு கு இன் அது கண் என்பன [8]பெருவழக்கின ஆகலின் உருபினுள் அவ்வாறனையுமே கொண்டு அவற்றோடு எழுவாயினையும் விளியினையும் கூட்டி எட்டு என்றான் என்பது. (உ)

65. அவை தாம்,
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]வேற்றுமைகளை - பெயரும் முறையும்–உணர்த்துதல் நுதலிற்று.

---

64-3 vi "பொருளுண்மையின்"

4 i-v "உளவோ எனின்"

ii "உளவாலெனின்"

iii "உள அன்றோ எனின்"

5 iii "எத்தாற்கொள்வது"

6 i-ii "கொள்ளாதென"

vi "கொள்ளாவென"

7 vi "என்பது இவ்வாறன்றி எல்லாம் சொல்லான் என்பதும் ஒன்று" ("என்பது"; என்பதன்பின் ஒரு பத்தி விடுபட்டது.)

8 iii "பெருவழக்கு ஆகலின்"

65-1 ii-vi "வேற்றுமைகளது" பெயரும் (ii-ல் இது பின்னைய திருத்தமாகத் தோன்றுகிறது.)

இதன் பொருள் :—மேல் வேற்றுமை என்று சொல்லப்பட்டவை-தாம் பெயர், ஐ, [2]ஒடு, கு, இன், அது, கண், [3]விளி என்று கூறும்வழி, இறுதிக்கண் நிற்கின்ற அவ்விளி வேற்றுமையினை இறுதியாக உடையன என்றவாறு.

அப்பெயர் பெயர். [4]அம்முறை முறை. எழுவாய் வேற்றுமை ஏனை வேற்றுமைக்கும் சார்பாதல் நோக்கி முன்வைக்கப் பட்டது. விளி வேற்றுமை எல்லாவற்றினும் சிறப்பின்மை நோக்கிப் பின் வைக்கப்பட்டது. ஐயினை இரண்டாவது என்றும், ஒடுவினை மூன்றாவது என்றும் இவ்வாறே இவை கூறுதற்குக் [5]காரணமும் உண்டோ எனின், [6]காரணம் இல்லை. இல்லையேல் வேண்டியவாறு கூறினும் அமையும் எனின், அமையாது. முன்னூலுள் ஓதிய முறை அது என்பது. (௩)

**66. அவற்றுள்.**
**எழுவாய்வேற்றுமை பெயர்தோன்று நிலையே.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]நிறுத்த முறையானே முழு முதற்கண் நின்ற பெயர் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேற்சொல்லப்பட்ட வேற்றுமை எட்டனுள் முதல் வேற்றுமையாவது பெயர்ச்சொல், பயனிலைப்பாடு தோன்ற நிற்கு நிலைமை என்றவாறு.

உ - ம் :—

[2]ஆ எனவரும்.

விளியோடு இதனிடை வேற்றுமை என்னை எனின், ஈறு திரிதலும், ஈறு திரியாமையும், ஈறு திரியாதவழி ஒருவழிப் படர்க்கையாதலும் முன்னிலையாதலும் எனக் கொள்க. (௪)

---

65-2 vii "ஒடு, ன்" (i-ல் கு என்பது பின்னைய திருத்தமாகச் சிவப்பு மையில் உள்ளது.)

3 vi "விளி இறுதியாக உடையன என்றவாறு" (ஒரு வரி விடப்பட்டது.)

4 vi "அம்முறை எழுவாய் வேற்றுமை" (ஒரு சொல் விடுபட்டது)

5 i-ii-iv-v-vi "காரணம் உண்டோ"

6 vi "காரணமும் இல்லை, காரணம் இல்லையேல்"

66-1 i-iv "நிறுத்த முறையான் எழுதற்கண் நின்ற பெயர்" (மு - மு மாறுபட்டம்—கொம்பைக் குறிலாகப் படித்தல்)

2 ii-vi "ஆ, மக்கள் என வரும்"

**67. பொருண்மை சுட்டல் [1]வியங்கொள வருதல்**
**வினைநிலை யுரைத்தல், வினுவிற் கேற்றல்**
**பண்புகொள வருதல், பெயர்கொள வருதலென்**
**றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், மேற்சொல்லப்பட்ட எழுவாய் வேற்றுமை என்பது அறுவகைப்பட்ட [2]பயனிலையும் ஏற்றுநிற்பது என்றவாறு.*

*இதன் பொருள்:—பொருட்டன்மை கருதிவரும் வரவும், ஏவலைக் கொள்ளவரும் வரவும், தனது தொழிலினைச் சொல்லவரும் வரவும், வினுவுதற் பொருண்மைக்கு [3]ஏற்றுவரும் வரவும், தனது பண்பினைக் கொள்ள [4]வரும் வரவும், ஒரு பெயரினேடு தனது பொருள் முடிவதாக வரும் வரவும் என்று [5]சொல்லப்பட்டவை அனைத்தும் வரும் பெயர்ச் சொல்லது பயனுகிய நிலைமை என்றவாறு.*

*என்றது முதல் வேற்றுமையாவது இவ்ஆறு பொருண்மையும் தோன்றநிற்பது என்றவாறு, [6]அவ் அப்பொருண்மையை விளக்குவன பின்வருஞ் சொற்கள் என்றவாறு.*

**பெயர்ப்பயனிலை** *என்றது பின்வருகின்ற சொற்களே* ***அன்று.*** *அவ்அச்சொல்லின் பொருண்மையினைக் குறித்த பெயர்நிற்கும் நிலைமை வேறுபாடுகளை என்றவாறு.*

*நிலை என்ருது பயனிலை என்றது [7]அப்பெயர்களைக் கேட்டான் இப்பொழுது இப்பொருள் இன்ன நிலைமைத்து என உணரும் உணர்ச்சிக்குப் பயன்பட நிற்கும் நிலைமைய என்றற்கு என்பது.*

---

**67**-1 i-ii "*வியங்கோள்*"

2 i "*பயனிலையு மோறு நிற்பது*" (*ஏ - ற, ஏ - ஏ மாறுட்டம்.*)
v "*பயனிலையும் ... ... ... நிற்பது*" *என்றவாறு.*

3 ii-iv "*ஏற்ற வரும் வரவும்*"

4 vi "*வரும் வரவும் என்று சொல்லப்பட்டவை*" *யனைத்தும்,* (*ஒரு வரி விடுபட்டது.*)

5 iii "*சொல்லப்பட்ட அனைத்தும்*"

6 i "*அவ்வவ் பொருண்மையை*"

7 i "*ஆப் பெயர்களைக் கேட்டா னிப்பொழுது*"
vi "*அப் பெயர்களைக் கேட்பின் இப்பொழுது*"

உ - ம் :--

பொருண்மை சுட்டல் ஆ உண்டு என்பது.

இதன் பண்பு முதலியவற்றைக் கருதாது [8]பொருட்டன்மை கருதி நிற்றலாற் [9]பொருண்மை சுட்டல் என்னப்பட்டது உண்மை என்பது பண்பன்றோ எனின், அன்று. அப் பொருட்டன்மை என்பதுபோலும் கருத்து. [10]ஆ இல்லை என்பதும் இதன்கண் பட்டு அடங்கும்.

[11]வியங்கொள வருதல் :—ஆ செல்க என்பது. இது மேற்சொல்லு-கின்ற வினைநிலை [12]உணர்த்தலுள் அடங்கும். ஆயினும், வேறுபாடு உண்டு. அது தன்கண் நிகழ்ந்ததோர் வினை. இது மேலதன்கண் தொழில் நிகழ்வதாக ஒருவனால் ஏவப்பட்டு நிற்கும் நிலை [13]எனக் கொள்க.

வினைநிலையுரைத்தல் : ஆ கிடந்தது என்பது.

வினாவிற் கேற்றல் : ஆ யாது? ஆவோ? என வரும்.

பண்பு கொள வருதல் : ஆ கரிது என்பது.

இதுவும் வினைநிலை யுரைத்தலுள் அடங்காதோ எனின், அடங்கும். எனினும், வினைக்குறிப்பு ஆகலான் வேறு கூறினான்[14] என்பது.

பெயர்கொள வருதல், ஆ பல ; ஆ இது [15]எனவரும்.

மேற்சூத்திரத்து எழுவாய் வேற்றுமை பெயர் என்றது தோன்றுநிலை என்றதனாற் [16]பெயர்கள் ஓரோ வழி எழுவாயாகத் தான் பயனிலை கொள்ளாது, மற்றோர் எழுவாயின் பயனிலையோடு தானும் பயனிலை யாயும், [17]ஓரோவழித் தானே பயனிலையாயும், ஓரோவழி எழுவாயோடு

---

67-8 i "பொருட்டன்மைக் கருதி நிற்றலால்"
ii-vi "பொருட்டன்மையைக் கருதி நிற்றலால்"
9 i-ii-iv-vii "பொருண்மை சுட்டு என்னப்பட்டது"
10 i "ஆ பில்லை" (பி - யி மாறுாட்டம்),
11 ii-i "வியங்கோள் வருதல்"
12 i "உணர்த்துலுடங் … … ம் வேறுபாடு"
ii "உரைத்தலுள் அடங்குமே யெனினும் வேறுபாடு"
v "உணர்த்தலுள் அடங்கும் வேறுபாடு"
13 i-iv-v-vi-ii-viii "என உணர்க"
14 " ர் "
15 vi "என்பது"
16 i "பெயர்களொடு ராவழி யெழுவாயாகத்"
17 i "ஓரோர் வழி"

இயைபுபடாது பயனிலைக்கு அடையாயும், பிறவாறாயும் வருவனவும் உள என்பது கொள்ளப்பட்டது,

உ - ம்:—

தானும் பயனிலையாயது **ஆயன் சாத்தன் வந்தான்** என்பது. இது **ஆயன் வந்தான் சாத்தன்** என வினைப் பின்னும் நிற்கும் [18]என்பது. **சாத்தன்** என்பது எழுவாய். **ஆயன்** என்பது முன்னே பயனிலையாய் [19]நின்றதன்றாலோ எனின், [20]அவ்வாறும் ஆம் எனினும் சொல்லுவான் கருத்து அன்னதன்று என்பது. ஆயனாகிய **சாத்தன்** என்பது [21]பண்புத்தொகையாலோ எனின், ஓசை பிளவுபட்டிசைத்தலான் ஆகாது என்பது.

தானே பயனிலையாயது ; **ஆ பல** என்பது.

பயனிலைக்கு அடையாயது : **சாத்தன் தலைவன் ஆயினன்** என்பது.

பிறவாறாய் வருதல் : **ஆசிரியன் [22]பேரூர்கிழான், செயிற்றியன் இளங்கண்ணன், சாத்தன் [23]வந்தான்** என்பது; ஒருபெயர் எழுவாயாய் நில்லாது பல பெயரும் ஒருங்கே எழுவாயாய் நிற்பன எனக் கொள்க.

இன்னும் [24]அவ்இலேசினான் பெயர்கள் எழுவாயாய்ப் பயனிலை கொண்டு அமைந்து [25]முற்றிநில்லாது எழுவாய் தானும் பயனிலையும்-கூடி ஒருசொல்நீர்மைபட்டு மற்றோர் எழுவாய்க்குப் பயனிலையாய் வருவனவும் கொள்ளப்படும்.

---

67-18 iv "என்பது முன்னே பயனிலையாய்"

19 iii-v "நின்றதானாலோ எனின்"

20 i "அவ்வாறு மாடு மனினும் சொல்லு வானத் கருத்தன்ன ரென்பது" (ெ - ரு, க - த, மாறுபட்டம்.)

v "அவ்வாறு மாகு மெனினும் சொல்லுவான் அக்கருத்தன்ன ரென்பது" ("அக்கருத்தன்னர்" என்பது "கருத்து அன்று என்பது" என்றும் "கருத்துஅன்னதன்று என்பது" என்றும் திருத்தப்பட்டிருக்கக் காண்கிறோம்.)

21 ii "பண்புத்தொகை ஆமாலோ எனின்"

22 i "பேராகிழர்"
iii "பேரூர் கிழார்"

23 i-ii-iv-vii "வந்தான் ஒரு பெயர்"
v "வந்தான் என ஒரு பெயர்"

24 iii-v "அவ்விலேசினானே பெயர்கள்"

25 i-ii-iv-vii "மாற்றி நில்லாது"
iii-v "மாறி நில்லாது"

அவை சினையின் தொழிலை முதற்கு ஏற்றிக்கூறலும், பண்பின்-தொழிலைப் பண்படைந்த பொருட்கு ஏற்றிக் கூறலும், [26]தொழிலின்-தொழிலைத் தொழிலடைந்த பொருட்கு ஏற்றிக் கூறலும், இடத்து-நிகழ்பொருளின்தொழிலை இடத்திற்கு ஏற்றிக் கூறலும் என இன்னோரன்ன பலவகைப்படும்.

உ - ம் :—

[27]சினைவினை :—

**சாத்தன் கண் நல்லன், இவ்யானை கோடுகூரிது** என்பன போல்வன.

[28]பண்பின் வினை :—

**இம்மணி நிறம் நன்று, [29]இம்மலர் நாற்றம் பெரிது** என்பன,

[30]தொழிலின் வினை :—

**இக்குதிரை நடை நன்று, இத்தேர் செலவு கடிது** என்பன.

[31]இடத்து நிகழ்பொருளின் தொழில் :—

**[32]இவ் யாறு நீரொழுகும், இவ்வயல் நெல் விளையும்** என்பன.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இன்னும் அவ்இலேசானே எழுவாய்க்குப் பயனிலையாய் வந்த பெயர் தானும் [33]எழுவாயாய்ப் பயனிலை கொண்டும், உருபேற்றும் வருவனவும் கொள்ளப்படும்.

உ - ம் :—

**இறைவன் [34]அருளல் எம்உயிர் காக்கும்** எனவும்,

**இறைவன் அருளலின் யாமுயிர் வாழ்தும்** எனவும் வரும்.

இஃது ஆருவதாம் எனினும் நோக்கு அஃது அன்று என்பது.

---

67-26 i "தொழிலின் தொழிலடைந்த"
ii-vi "தொழிலின் வினையைத் தொழிலடைந்த"
27 ii-vi 'சினைவினை முதற் கேற்றிக் கூறல் சாத்தன்"
28 ii-vi "பண்பின் வினை பண்படைந்த பொருட்கேற்றிக் கூறல்"
29 i "இம்மலற் நாற்றம்"
30 ii-vi "தொழிலின் விளையை தொழிலடைந்த பொருட்கு ஏற்றிக் கூறல் இக்குதிரை"
31 ii-vi "இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்திற் கேற்றிக் கூறல்' இவ்
32 vi "இவ்வாறு நீர்"
33 i-iii "எழுவாய்ப் பயனிலை"
34 i "அருள் எம்"
v "அருளால் எம்"

பயனிலை முன்னும் பின்னும் நிற்றலும், பயனிலை சிலசொல்லிடை கிடப்பவருதலும் ஈண்டே கொள்ளப்படும்.

ஆ செல்க. செல்க ஆ. என முன்னும் பின்னும் நின்றது.

ஆ சாத்தனுய்ப்ப நெறியைத் தன் கன்றினோடு [35]மறங்கறத்தற்கு இவ்வூரின் நின்றும் அவ்வூரின்கண் செல்லும். இஃது இடைகிடந்த சொல்லொடு வந்தவாறு.

இறைவன் அருளல் என்பது எழுவாயொடு பொருள்இயைபு இன்றாயினும், வினைமுதற் பொருள் தோன்ற வந்தமையின் பெயர் கொளவருதல் என [36]அடங்கும் என்பது.

சிறுமை பெருமையிற் காணாது துணிந்தே எனவும், [37]கோல் செம்மையிற் சான்றோர் பல்கி எனவும் வரும் பண்புகளும் பொருள்இயைபு இல எனினும் ஒருவாற்றான் பெயர் [38]கொளவந்ததன் [39]பாற்பட்டு அடங்கும் என்பது.

[40]எழுவாய் வேற்றுமையின் விகற்பங்கள் எல்லாம் வழக்கினகத்து அறிந்து இவ் இலேசினகத்து அமைத்துக் கொள்க, (௫)

68. பெயரி னாகிய தொகையுமா ருளவே
அவ்வு முரிய அப்பா லான.

என்பது என்நுதலிற்றோ எனின், தனிப் பெயரேயன்றித் தொகைப் பெயர்களும் பயனிலை கொள்ளும் என்கின்றது உணர்த்துதல் நுதலிற்று.

---

67-35 i-iv "தெறியைத் தன் கன்றினோடு மரங்கரத்திர் கிவ்வூரின்"
v "நெறியைத் தன் கன்றினோடும் அறங்காத்தற்கு இவ்வூரின்"
vi "எருமைத் தன் கன்றினோடு மருங்காக தானிவ்வூரில்"

36 i-ii "வழங்கும் என்பது"

37 i "கொல்"

38 vi "கொள்ள"

39 i-iv "வந்ததன் யேற்பட்டடங்கும்" என்பது.
ii-vi-vii-viii "மேற்பட்டடங்கும்" என்பது,

40 ii-vii "இன்னும் இவ்வெழுவாய் வேற்றுமை"
iii-v "பிறவும் எழுவாய் வேற்றுமை"

இதன் பொருள் :—இரண்டு பெயர்ச்சொல் முதலாக உளவாகிய தொகைச் சொற்களும் [1]உள. உம்மையால் ஒரு வினையும் [2]பெயரும் முதலாக உளவாகிய தொகைச்சொல்லும் உண்டு. அவ்இருதிறத்துத் தொகைச்சொல்லும் மேற் சொல்லப்பட்ட பயனிலைக் கூற்றின்கண் உரிய [3]என்றவாறு.

உ-ம் :—

**யானைக்கோடு உண்டு, செல்க, [4]வீழ்ந்தது, யாது, பெரிது, பல** என வரும். இவை [5]**பெயரினாகிய** தொகை.

**கோல் யானை உண்டு, செல்க, வீழ்ந்தது, [6]யாது, பெரிது, பல** என [7]**இது** [8]**வினையினாகிய** தொகை.

தொகையும் பயனிலை கொள்ளும் என்கின்றமையின் இவையும் எழுவாயாகற் பால பிற; அதற்கு விதியாதோ எனின், எச்சவியலுள் எல்லாத் தொகையும் என்னும் [9]சூத்திரத்துக் கூறப்படும் என்பது. (சு)

**69. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி**
**அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.**

என்பது என்நுதலிற்றோ எனின், பெயர் உருபேற்கும் வழிப்படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—எவ்விடத்துப் பெயரும் விளங்கத் தோன்றி மேற் சொல்லப்பட்ட வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும் இயல்-

---

68-1 vi "உள என்றவாறு" (சில வரிகள் விடுபட்டுள்ளன).

2 i-ii-iv-viii "பெயர் முதலாக"

3 ii "என்பது"

4 i-iv "வீழ்த்து கோடோ பரிது பல"
viii "வீழ்ந்தது யானைக் கோடோ பரிது பல"
vi "வீழ்ந்தது பெரிது பல" (பதிப்பில் கொண்ட பாடம் பின் கொல்யானை என வருவனவற்றோடு ஒத்திருத்தல் காண்க.)

5 "பேரினாகிய"

6 ii "கொல் யானை யோ யாது"

7 ii "இவை"

8 i "வினையினானாகிய தொகை"

9 ii-vii "தொல் - சொல் - எச்ச-ல் சஉ௰ சூத்திரத்துரையுட்"

பின்கண்ணே நிற்றல் செவ்விது என்று சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

[1]உதாரணம் மேற்காட்டின.

இவ்விதி [2]மேல் பெற்றும் அன்றே எனின், மேற்பெற்றதனையே [3]ஈண்டும் விதந்து வலியுறுத்தான் பிறிதொன்று [4]விளங்கிய என்பது. அஃது யாதோ எனின், பயனிலை ஏற்றலிற் செவ்விது என, உருபு ஏற்றலும் [5]பெயர்க்கு இலக்கணம் அன்றே, அதனிற் செவ்விய ஆகாதனவும் உள என்பது.

உ-ம்:—

**நீயிர்** என்பது பெயர்; **நீயிரை** என உருபு ஏலாது. இது நும் என்னும் பெயரது அல்வழிப் புணர்ச்சித் [6]திரிபு என்றது. உம்மை என உருபுஏற்குமால் எனின், பிற சந்தித் திரிபுபோல நிலைமொழி நிலை [7]தோற்ற நில்லாது [8]திரிந்தபின் பிறிதோர் பெயர் நிலைமைபடநிற்றலின் வேறோர் பெயர் என [9]வேண்டியது போலும். இதனகத்து விகற்பம் எல்லாம் உரையிற் கொள்க.

இந்நிகரன ஓருருபும் ஏலாதன. **அவ்வாய்க் கொண்டான்** என்பது, [10]**அவ்வாய்க்கட் கொண்டான்** என ஏழாம் உருபு ஏலாதது. இந்நிகரன பிறஉருபு ஏற்குமேலும் அறிந்து கொள்க. (எ)

---

69-1 ii "உதாரணம் மேற்காட்டின அவையாம்"
vi "மேற்காட்டின இவ்விதி"

2 iii "மேலே பெற்றும்"

3 i "ஈண்டும் மெலிதந்து" ("ஈண்டுமே விதந்து" என்பதுபோலும்)
vi "ஈண்டும் தந்து"

4 i "விளங்கியதென்பது"
vi "விளக்கிய என்பது"

5 i "பெயர்த்திலக்கணம்"
iii-iv-v "பெயரதிலக்கணம்"

6 v "திரிபு என்பது"
iii "திரிபென்றே"

7 v "தோன்ற நில்லாது"

8 vi "திரிபின் பிறிதோர்"

9 i "வேண்டியன போலும்"
v "வேண்டினன் போலும்"

10 i-ii-iv-v-vi-vii "அவ்வாய்க்கட் கொண்ட .... விழா முதுபு"

**70. கூறிய முறையின் உருபுநிலை திரியா**
**ஈறு பெயர்க்காகும் இயற்கைய என்ப.**

*என்பது என்னுதலிற்றோ எனின், உருபேற்றலும் [1]பெயர்க்கு இலக்கணம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:—மேற்கூறப்பட்ட முறைமையினிடை [2]நின்ற அறுவகை உருபும் தத்தம் வாய்பாட்டு [3]நிலைமையின் திரியாது பெயர்க்கு ஈறாய் வரும் இயல்பினையுடைய என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.*

*உ - ம்:—*

**சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின்,**

**சாத்தனது, சாத்தன்கண்** *எனவரும்.*

*மேற்* "கு ஐ ஆன் எனவரூஉம் இறுதி" *என்று செய்யுட்கண் உருபுஈறு திரிபு கூறுகின்றா[4]ன் ஆகலின், அஃதொழிய வழக்கினுள் [5]திரிபு இல்லை என்றற்கு* **நிலைதிரியாது** *[6]எனப்பட்டது.* (அ)

**71. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா**
**தொழினிலை ஒட்டும் ஒன்றலங் கடையே.**

---

70-1 i "*பெயர்த்திலக்கணம்*"

iii "*பெயரதிலக்கணம்*"

2 i "*நின்ற வருகை உருபும்*"

viii "*நின்ற வருவகை உருபும்*"

ii-vi *நின்று வருகிற ஐ முதலாய உருபும்* (vi-ல் "*முதலாகிய*" *என்றுள்ளது.*)

3 vi "*நிலைமையின் வேறாகாது*"

ii "*நிலைமையின் வேறாகாது திரியாது*"

i-v "*நிலைமையின் வேறாகாதுந் திரியாது*"

4 "*ர்*"

5 iii "*திரிவில்லை*"

6 ii-vi "*எனப்பட்டதென்க*"

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் [1]பெயர்க்கு ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பெயராகிய நிலைமையுடைய சொற்கள் காலம் தோன்றா; யாவை [2]எனின், தொழிலாகிய நிலைமையுடைய தொழிற் பெயர்கள்; [3]யாண்டுமோ எனின் அன்று, [4]காலம் தோன்றுதல் தன்மை பொருந்தும் [5]ஒரு கூற்றுத் தொழிற்பெயரல்லாதவிடத்து, என்றவாறு.

என்றது பெயர்தாம் பெயர்ப்பெயரும் தொழிற்பெயரும் என இருவகைப்படும்.

பெயர்ப் பெயராவன :-**சாத்தன் கொற்றன்** எனத் தொழிலாற் பெயரன்றி அவ்வப்பொருட்கு இடுகுறியாய் வருவன. இவை காலம் தோன்றாத் தொழிற் பெயர் ஆயின் தோன்றும்.

தொழிற்பெயர் தாமும், தொழில்மேல்நின்ற தொழிற்பெயரும் பொருள்மேல் நின்ற தொழிற்பெயரும் என இருவகைப்படும். அவற்றுள் தொழின்மேல் நின்றனவும் [6]காலந்தோன்றா. அவை [7]**உண்டல் தின்றல்** எனப் பொருளது புடைபெயர்ச்சியை அறிவித்து நிற்கும் என்பது. இவற்றுள் **பூசை வேட்டை** என்றாற் போல்வன வினைச்சொற்கு அடியாய்ப் புடைபெயர்ச்சியை விளக்காது பெயர்ப்பெயரே [8]போல நிற்பன உள என்பது.

---

**71**-1 iii "பெயரதோ ரிலக்கணம்"

i "பெயர் க தோரிலக்கணம்"

2 i "யெனில்"

3 i "யாண்டு மோடுவனின்" (டு - ெ - மாறுபாடு.)

4 ii-v-vii "காலந் தோன்றுதற்குப் பொருந்தும்"

vi "காலந் தோன்ருதற்குப் பொருந்தும்"

i-iv "காலந் தோன்றுதற்றன்கு பொருந்தும்"

viii "காலந் தோன்று தறன்மை பொருந்தும்"

iii "காலந் தோன்று தற்றன்மை பொருந்தும்"

5 ii-iv "பெயர்த்தாம்"

6 ii-vi "காலந் தோற்ரு"

7 vi "உணல்"

8 vi "போல் நிற்பன"

இனிப் பொருள்மேல்நின்றனவும், வினைமுதற் பொருள் மேல்நிற்பனவும் செயப்படு பொருள்மேல் நிற்பனவும் என இருவகைப்படும்.

அவ் இருவகையும் காலம் தோன்றி நிற்கும் என்றவாறு. அவை தாமும் ஓசை [9]வேற்றுமையான் ஒருவழி வினை எனப்பட்டு நிற்பனவும் வினையாகாது பெயரேயாய் நிற்பனவும் என இருகைப்படும்.

உ - ம் :—

**உண்டான், தின்றான் ;**

**உண்டது, தின்றது** எனப் படுத்தல் ஓசையால் வினை எனப்பட்டுக் காலம் [10]தோன்றி நின்றன.

**உண்டவன், தின்றவன்,**

**உண்ணுமது, தின்னுமது** என்பன ஓசை வேற்றுமையான் [11]அன்றித் தானே பெயராய்க் காலம்காட்டி நின்றன. இவை வினை முதற்கட்பாகுபாடு.

**'[12]கொலைவர் கொடுமரந் தேய்த்தார்'**

**அவன் [13]ஏறிற்று இக்குதிரை**

என்றாற் போல்வன [14]வினைப்பெயரே, அச்செயப்படு பொருட்கண் காலம்காட்டி [15]நின்றது. **யான் சொன்னவன் உண்பவை நாழி [16]உடுப்பவை இரண்டு** என்றாற் போல்வன [17]தாமே செயப்படு-

---

**71**-9 i "**வேற்றுமையால் ஒரு வழி**"

10 i-iv-v "**தோன்றி நின்றது**"

11 i "**அறித்தானே பெயராய்**"
v "**அன்றித் தாமே பெயராய்**"

12 i (**இருமுறை எழுதப்பட்டிருக்கிறது.**)

13 i-ii-iv-v "**ஏறிற்றுக் குதிரை**"

14 iii "**வினைப் பெயராய்ச் செயற்படு பொருட்கண்**"

15 vi "**நின்றன**"

16 i "**வடுப்பவை**"

17 i "**தானே**"

பொருள்மேல் பெயராய்க் காலம்தோன்றி [18]நின்றன. இவை செயப்படுபொருட் பாகுபாடு.

நிலமும் காலமும் கருவியும் பற்றி வரும் தொழிற்பெயர் விகற்பமும்[19] அறிக.

உ - ம்.:—

உண்டது என்பது.

இத் தொழிற் பெயர்களின் கால [20]விகற்பமும் அறிக.

பெயர்ப் பெயர் காலம்தோன்று என்பதற்கு விதியாதோ எனின்:- [21]இச்சூத்திரத்தானே அதுவும் பெறுதும் என்பது. (கூ)

72. இரண்டாகுவதே,
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்று மதுவே;
காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்றா,
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்றா,
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்

---

71-18 i "நின்றது"

19 vi "விகற்பமுங் கொள்க"

i "கொள்க வறிக"

v (அறிக என்பது கொள்க எனத் திருத்தப்பட்டுள்ளது.)

20 vi "விகற்பம் என அறிக"

21 i-iv இச்சூத்திரத்தா னெய்துவும் பெறுதும்" (னெ - னே ; ய் - ய மாறுபாடு.)

ii-v-vii "இச்சூத்திரத்தா னெய்தவும் பெறுதும்" (மேல்கண்ட பாடத்தின் திருத்தம்.)

vi "இச்சூத்திரத்தான் எய்தவும் பெறும்"

**இறுத்தலின் அளவின் எண்ணின் என்று,**
**ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்**
**நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்று,**
**அன்ன பிறவும் அம்முதற் பொருள**
**என்ன கிளவியும் அதன்பால என்மனார்.**

என்பது என் நுதலிற்றோ எனின், எழுவாய் வேற்றுமை அதிகாரம் உணர்த்தினான். இனி, அம்முறையானே இரண்டாம் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இரண்டாம் [1]எண்ணும் முறைமைக் கண்ணதாகிய ஐ என்னும் பெயரையுடைய வேற்றுமைச் சொல் யாதானும் ஓர் இடத்துவரினும் வினையும் வினைக்குறிப்பும் என்றும் [2]சொல்லப்படுகின்ற அவ்இரண்டும் அடியாக [3]அது வரும் பொருள் பகுதி சொல்லின், காப்பு என்பது முதலாய்ச் சிதைப்பு ஈறாய் ஓதப்பட்ட இவையும் இவை போல்வன பிறவுமாகிய அவ்வவ்வினை, வினைக்குறிப்பு என்னு நின்ற முதற்பொருளைப் பற்றி வருகின்ற எல்லாச் சொற்களும் [4]அவ்இரண்டாவதன் கூற்றன என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

உ - ம்:—

**மரத்தைக் குறைத்தான்** என்பது வினை.
**குழையை உடையன்** என்பது வினைக் குறிப்பு.
[5]காப்பு : என்பது ஊரைக் காக்கும் ;
[6]ஒப்பு :—**கிளியை ஒப்பும் ;**

---

**72**-1 ii "என்னு முறைமை"

2 i-ii-iv-vii "சொல்லப்படுகின்றது இரண்டும் அடியாக"
v-vi ' சொல்லப்படுகின்ற இரண்டும் அடியாக"

3 i-ii-iv-v-vii "வரும் பொருள் பற்றிச் சொல்லின்"
viii "அது வரும் பொருட்டுச் சொல்லின்" (பொருட்பகுதி இவ்வாறெல்லாம் படிக்கப் படுகின்றது போலும்.)

4 i-ii-iv-v-vii "இரண்டாவதன் ... ... புலவர்"
iii "இரண்டாவதன் கூற்றன என்று கூறுவர் புலவர்"

5 vi "காப்பு ஊரைக்காக்கும் ஒப்பு"
ii-vi "காப்பு ஊரைக்காக்கும் என்பது" (இவ்வாறு இப்பிரதியில் பின்வரும் உதாரணங்களும் "என்பது" என்றே முடிகின்றன.)

6 ii-vi-vii "ஒப்பு — தாயை யொக்கும்" (சூத்திரத்தின் வைப்பு முறையைக் கண்டு திருத்திய பாடம்.)

ஊர்தி :—யானையை ஊரும் ;
இழை :—எயிலை இழைக்கும் ;
[7]ஒப்பு :—தாயை ஒக்கும் ;
[8]இது வினை ;
புகழ் :—ஊரைப் புகழும் ;
பழி :—நாட்டைப் பழிக்கும் ;
பெறல் :—ஊரைப் பெறும் ;
இழவு :—ஊரை இழக்கும் ;
காதல் :—[9]தாயைக் காதலன் ;
[10]இது வினைக் குறிப்பு ;
வெகுளி :—படையை வெகுளும் ;
செறல் :—[11]செற்றாரைச் செறும் ;
உவத்தல் :—தாயை உவக்கும் ;
இது வினைக் குறிப்பு ;
கற்பு :—நூலைக் கற்கும் ;
அறுத்தல :—ஞாணை அறுக்கும் ;
குறைத்தல் :—மரத்தைக் குறைக்கும் ;
தொகுத்தல் :—நெல்லைத் தொகுக்கும் ;
பிரித்தல் :—வேலியைப் பிரிக்கும் ;
நிறுத்தல் :—[12]நாணை நிறுக்கும் ;
அளவு :—[13]அரிசியை அளக்கும் ;
எண் :—அடைக்காயை எண்ணும் ;
ஆக்கல் :—[14]ஊரை ஆக்கும் ;

---

72-7 ii-vi-vii "ஒப்பு, கிளியை யொப்பும்"

8 ii-vi-vii "இவை வினை"

9 ii-vi-vii "மனைவியைக் காதலிக்கும்"

10 ii-vi-vii "இவை வினைக் குறிப்பு"

11 i-iii-iv-v "ஊரைச் செறும்" ("ஊரைச் சேறும்" என்றும் படித்தலாம்.)

12 ii-vi-vii "பொன்னை நிறுக்கும்"

13 i-vi "அரியை அளக்கும்"

14 ii-vi "அறத்தை ஆக்கும்"

சார்தல் :—வாய்க்காலைச் சாரும் ;
செலவு :—நெறியைச் செல்லும் ;
கன்றல் :—சூதினைக் கன்றும் ;
நோக்கல் :—சேயை நோக்கும் ;
அஞ்சல் :—கள்ளரை அஞ்சும் ;
சிதைப்பு :—நாட்டைச் [15]சிதைக்கும் ;

அன்ன பிறவும் என்றதனால், விரலை முடக்கும் : நாவினை [16]வணக்கும்; இவை [17]வினை.

அறிவினை உடையன் ஊரை இன்புறும். இவை [18]வினைக்குறிப்பு. பிறவும் அன்ன.

காப்பின் என்பது [19]முதலாக நின்ற இன் எல்லாம் உருபும் அன்று; சாரியையும் அன்று ; அசைநிலை எனக் கொள்க. இடைநின்ற [20]என்று என்பன எண்ணிடைச் சொல்.

[21]மற்றைய வேற்றுமைபோல் இது படும் பொருண்மை உணர்த்தாது முடிபு உணர்த்தியது என்னை, இம்முடிபு ஏனை வேற்றுமைக்கும் உளவால் எனின் : ஈண்டு முடிபு அன்று உணர்த்தியது; வினை வினைக் குறிப்பின் மேலிட்டு அது படும் செயப்படு பொருளினை உணர்த்திற்றாக உரைக்கப்படும்.

செயப்படுபொருண்மையாவது என்னையோ எனின் :—ஒருவன் செய்யும் தொழிலினைத் தானுறுதல் எனக்கொள்க.

அத்தொழிலினை உறுவது இதுவேயோ, அத்தொழில் செய்வானும் கருவியும் செய்கின்ற காலனும் இடனும் என இன்னோரன்னவும்

---

72-15 ii-vii "சிதைக்கும் எனவும் அன்னபிற"
vi "சிதைக்கும் எனவும் வரும் அன்னபிற"

16 ii-vii "வணக்கும் என வருவனவும் கொள்க இவை"

17 vi "இவை வினையும்"

18 vi "வினைக் குறிப்பும் கொள்க பிறவும்"

19 vi-viii "முதலான இன்னெல்லாம்"
ii-vii "முதலாக இன்னெல்லாம்"

20 vi "என்று எண்ணிடைச் சொற்களாம் மற்ற"

21 v "மற்று" வேற்றுமை

அத்தொழில் [22]உறுமால் எனின், அவை உறும் எனினும் பெரும்பான்மையும் இதன் கண்ணது என்பது கருத்து.

**வினை** என்னாது **வினைக்குறிப்பு** என்றது என்னையோ எனின், **மரம் குறைந்தான்** என்புழிக் குறைக்கப்படுதல் என்பதுபோல் ஆகாது **குழையை உடையன்** என்புழிக் குழையின் உடைமைப்பாடு செயப்படு பொருளாய் விளங்கி நில்லாமையின் வேறுகூறினன் என்பது.

அச்செயப்படுபொருள்தான், இல்லது ஒன்றாய் உண்டாக்கப்படுவதும், உள்ளது ஒன்றாய் உடல் வேறுபடுக்கப்படுவதும், உள்ளது ஒன்றாய் ஒரு தொழில் [23]உறுவிக்கப்படுவதும், உள்ளது ஒன்றாய் ஒன்றனான் உறப்படுவதும் எனப் [24]பலவகைய.

இல்லதுஒன்று உண்டாக்கல் :—**எயிலை இழைத்தான்** என்பது.

உள்ளதுஒன்றனை உடல் வேறாக்கல் :—**மரத்தைக் குறைத்தான்** என்பது.

உள்ளதுஒன்று ஓர் தொழிலுறுவித்தல் : — **கிளியை ஓப்பும்** என்பது.

உள்ளதுஒன்றனை ஒன்றுறுதல் :—**நூல் நூற்றான்** என்பது.

பிறவும் அன்ன.

இன்னும் இச்செயப்படு பொருள்தான் தன் கண்ணும் ஓர் தொழில் நிகழ்ந்து செயப்படுபொருளாவனவும், தன் கண் தொழில் நிகழாது செயப்படு பொருளாவனவும் என இருவகைய.

தன் கண்ணும் தொழில் நிகழ்ந்தது:—[25]**அறுத்தல் குறைத்தல்** என்று தன்கண்ணும் நிகழ்ந்தன.

---

72-22 vi "உறுமாலோ எனின்"

23 I "உறுநக்கப்படுவதும்"

24 ii-vi-vii பலவகையாம்"

25 ii "அறுத்தல் ஆய வவ்விரு தொழில் மரம் முதலாய தன் கண்ணும் நிகழ்ந்தன வாதலின் தன்கண்"

v "அறுத்தல் குறைத்தல் என்பன அறுத்தல் குறைத்தல் தன் கண்ணும் நிகழ்ந்தன தன்கண்"

vi "அறுத்தல் குறைத்தல் மரம் முதலாய தன் கண்ணும் நிகழ்ந்தன ஆதலின் தன்கண்"

தன்கண் நிகழாதது :—வாய்க்காலைச் சாரும் என்றாற் போல்வன. பிறவும் அன்ன.

இன்னும் இரண்டாவதன் செயப்படுபொருள், தெரிநிலைச் செயப்படுபொருளும், தெரியாநிலைச் செயப்படுபொருளும் என [26]இருவகைத்து.

தெரிநிலை :—மரத்தைக் குறைத்தான் என்பது.

தெரியாநிலை :—[27]சாத்தன் மரம் குறைக்கப்பட்டது.

மற்றிஃது எழுவாய் அன்றோ எனின், சொல்நிலை [28]அன்னதாயினும் சாத்தன் எனநின்ற உருபினை நோக்கப் பொருள்நிலை அன்னதன்று என உணர்க. சோற்றை அட்டான் எனச் செய்வான் கருத்து உள்வழிச் செயப்படுபொருளாதலும், சோற்றைக் குழைத்தான் எனக் [29]கருத்து இல்வழி ஆதலும் என இருவகைய.

இனிச் செய்வானும் செயப்படுபொருளும் என்னும் இரண்டும் ஒன்றேயாயும் வரும்.

உ-ம் :—

சாத்தன் தன்னைக் குத்தினான் எனவரும்.

இனிச் செயப்படுபொருட்கு [30]ஏதுவாயதூஉம் செயப்படுபொருளாய் வரும். அவை கற்கப்படும் ஆசிரியர், கற்கப்படா ஆசிரியர் என வரும்.

மற்றும் [31]இதனகத்து விகற்பம் உரையிற் கொள்க. (௨)

---

**72**-26 ii-vi-vii "இருவகைத்தாம்"

27 ii-v-vi-vii "சாத்தனுல் என்பது மற்றிஃது" ("சாத்தனுல்" என்பது திருத்தம்)

28 i-iv-vi-ii-vii "அன்னதாயினும் சாத்தனுன் என்ற உருபினை நோக்கப் பொருணிலை"

v "அன்னதாயினும் பொருண்நிலை"

29 vi "கருத்தில் வழிச் செயப்படு பொருளாதலும் என"

30 v —"ஏதுவாயதும் செயப்"

31 i-ii-iv-v-vi-vii "இதன் கருத்து விகற்ப முரையில் கொள்க" (i பிரதியில் "வி"-"வ" என்றும் ; "ரை" - "றை" என்றும் உள்ளது.)

73. மூன்றாகுவதே,
ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே ;
அதனி னியறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனொ டியைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னா னேது ஈங்கென வரூஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார்.

என்பது என்நுதலிற்றோ எனின், மேல் நிறுத்த முறையானே மூன்றாம் வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மூன்றாம் எண்ணு முறைமைக் கண்ணதாகிய ஒடு என்னும் பெயரையுடைய வேற்றுமைச் சொல் வினைமுதல் கருவியாகிய காரணங்களையுடைத்து. [1]அது வருமாற்றைச் சொல்லின், ஒன்றனான் ஒன்று பண்ணப்படும் பொருண்மை, [2]ஒன்றனான் ஒன்று தகுதல் என்னும் பொருண்மை, ஒன்றனான் ஒன்று தொழிலுறுதல் என்னும் பொருண்மை, ஒன்றனான் ஒன்று ஆதல் என்னும் பொருண்மை, ஒன்றனான் ஒன்றைக் கோடல் என்னும் பொருண்மை, ஒன்றனோடு ஒன்று மயங்கல் என்னும் பொருண்மை, ஒன்றனோடு ஒன்று இயைந்து ஒரு வினையாதல் என்னும் பொருண்மை, ஒன்றனோடு ஒன்று இயைந்து வேறு வினையாதல் என்னும் பொருண்மை, ஒன்றனோடு ஒன்று இயைந்து ஒப்பல்லா ஒப்பினை உரைத்தல் என்னும் பொருண்மை, இத்தன்மையான் என்னும் பொருண்மை, [3]ஏதுப் பொருண்மை என்னும் இவையும், இப்பெற்றியானே இதனிடத்து

---

**73**-1 vi "அஃது"

2 viii "ஒன்றனால் ஒன்று தகுதல்" ("த" தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது).

vi "ஒன்றால் ஒன்று நகுதல்"

vi-viii "ஒன்றனால் ஒன்று" (இப்பத்தி முழுவதும் இவ்வாறு வருகிறது. முதற் பிரதியில் இங்குமட்டும் வருகிறது.)

3 i "ஏய்து"

வருகின்ற அத்தன்மையான பிற பொருள்களும் அம்மூன்றுவதன் [4]கூறன என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

மூன்றாவதற்கு உருபு ஒடுவும் ஆனும் என இருவகைத்து. ஆன் என்பது [5]எடுத்து ஓதிற்றிலன் எனினும், அதனினியறலதற்றகு கிளவி என ஓதிய [6]வாய்பாட்டான் பெறுதும் என்பது.

வினைமுதல் கருவி என்று ஓதிய பொருண்மை இவ்இரண்டு உருபிற்கும் ஒக்கும் என்பது.

உ - ம்:—

வினை முதல் :—கொடியோடு துவக்குண்டான் ; நாயாற் [7]கோட்பட்டான்.

கருவி :— ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்; வேலான் எறிந்தான் என வரும்.

அதனினியறல் :—தச்சன் செய்த சிறுமாவையம் என்பது.

அதற்றகுகிளவி :— வாயாற்றக்கது [8]வாய்ச்சி என்பது.

அதன் வினைப்படுதல் :—நாயாற் [9]கோட்பட்டான் என்பது.

அதனினாதல் —வாணிகத்தான் ஆயினான் என்பது.

அதனிற் கோடல் :—காணத்தாற் கொண்ட அரிசி என்பது.

அதனொடு மயங்கல் :—எண்ணொடு விராய அரிசி என்பது.

அதனொடியைந்த ஒரு வினைக்கிளவி :—சாத்தனொடு வந்தான் என்பது.

---

73-4 ii-vi-v "கூற்றென என்று"

5 iii "எடுத்தோதிற்றிலனேனும்"

6 i "வாய்ப்பாட்டான் பெறுதும்"

7 v "பட்டான் என்பது கருவி"

8 i "வாச்சி"

9 ii-vi-vii "கோட்பட்டான். சாத்தனுன் முடியுமிக் கருமம் என்பன அதனினாதல்"

அதனொடு இயைந்த வேறு வினைக்கிளவி :—மலையொடு பொருத [10]மால் யானை; நாவொடு அறக் குளம் [11]தொட்டான் என்பது. வேறு வினை என்பது ஒன்றன் கண்ணே வினையாதல்.

அதனோடு இயைந்த ஒப்புஅல் ஒப்புரை:—நூலோடு நார் இயைந்தது போலும்; [12]முத்தொடு முழாக் கோத்தது போலும் என்பன.

இன்னான் என்பது இத்தன்மையான் என ஒருவன் பெற்றி கூறல் அஃது கண்ணாற் கொத்தை ; காலான் முடவன் என்பன.

ஏது : முயற்சியிற் பிறத்தலான் இசை நிலையாது என்பது.

அதனினியறன் முதலாக அதனிற் கோடல் ஈறுக ஓதிய பொருண்மை எல்லாம் சூத்திரத்துள் ஆன் உருபின் சுவடுபட ஓதின-மையிற் பெரும்பான்மை ஆன் உருபிற்கே உரியவாம். சிறுபான்மை ஒடு உருபிற்கும் வருவனஉளவேற் கொள்க.

இவற்றுள் அதனினியறல் அதன் வினைப்படுதல் என்று ஓதிய இரண்டும் வினைமுதற்பாகுபாடு. அதனிற் கோடல் கருவியின் பாகுபாடு போலும். அதற்றகு கிளவியும் அதனினாதலும் ஏதுவின் பாகு பாடு. அதனொடு மயங்கல் முதலாக அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை ஈறுக ஓதின எல்லாம் ஒடு உருபுகொடுத்து ஓதினமையிற் பெரும்பான்மையும் ஒடு உருபிற்கே உரிய: சிறுபான்மை ஆன் உருபிற்கும் வருவன உளவேற் கொள்க.

இன்னான் என்னும் பொருண்மையும், ஏது என்னும் பொருண்மையும் ஓருருபின் எடுத்து ஓதாமையின் வழக்கிற்கு ஏற்றவாறு கொள்ளப்படும்.

முன்னும் ஏதுவின் பாகுபாடு [13]ஓதிவைத்துப் பின்னும் ஏது என ஓதியது அவ்வாறு ஒழிய வருவனவற்றைக் கருதிப் போலும். [14]அவ்-

---

73-10 ii "மால் யானை என்பது"

11 i-ii-iv-v-vii "தொட்டல் என்பது"

12 ii "முத்தொடும் உறழக் கோத்தது"

vi "முத்தொடு பவழம் கோத்தது போலும்" ("முழா" பொருள் விளங்கவில்லை.)

13 ii-vii "ஓதுவித்து"

14 i "அவ்வேதுஉ காரக"

ஏது காரக ஏதுவும் ஞாபக ஏதுவும் என இருவகைத்து. முயற்சியிற்பிறத்தல் காரகம் பிறத்தலான் இசை நிலையாது என்பது ஞாபகம். அஞ்ஞாபகத்தைப் போலும் [15]ஈண்டு ஏது என ஓதியது.

அன்ன பிறவும் என்றது சூத்திரத்துள் எடுத்து ஓதின பாகுபாட்டின் ஒழிந்தனவும், பிற[16]பொருட் பாகுபாடுங்கூறிப் போலும். அவை எல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க. (௧௧)

74. [1]நான்காகுவதே,
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொரு ளாயினுங் கொள்ளு மதுவே ;
அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்
அதற்குப் படுபொருளின் அதுவாகு கிளவியின்
அதற்கியாப் புடைமையின் [2]அதற்பொருட் டாதலின்
நட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியும் அதன் பால என்மனார்.

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே நான்காம் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—நான்காம் எண்ணுமுறைமைக் கண்ணதாகிய குவ்வென்னும் பெயரையுடைய வேற்றுமைச் சொல் [3]யாதொரு பொருளை யாயினும் ஒரு பொருள் ஈவதோர் பொருளினை ஏற்பதாக [4]உணர்த்தி நிற்கும். இன்னும் அது தான் வரும் பொருட் பாகுபாட்டினைச் சொல்லின், ஒன்றற்கு ஒன்று பயன்படுதல் என்னும் பொருண்மை, ஒன்றற்கு ஒன்று பொருண்மேற் கொடுப்பதாக உடம்-

---

73-15 i "ஈண்டது டுதுவென" (டு - ஏ - மாறுபாடு)

16 ii "பொருட் பாடும்"

vi "பொருட் பாகுபாடுகளும்"

74-1 iv "நான்காவதே"

2 i-iii-v "அதற்பொருட்டாகலின்"

3 vi "யாதொரு பொருளினை ஏற்பதாக உணர்த்தி நிற்கும்" (ஒரு வரி விடுபட்டுள்ளது.)

4 iii "உணர்ச்சி" (ச • த மாறுபாடு)

படுதல் என்னும் பொருண்மை, ஒன்றற்கு ஒரு பொருள் உரிமை உள்வழிக் [5]கூறிடப்படுதல் என்னும்பொருண்மை, அம்முதற்பொருட்டாய் ஆகலான் என்னும் பொருண்மை, [6]ஒன்றற்கு ஒன்று பொருத்தமுடைத்தாதல் [7]என்னும் பொருண்மை, ஒரு பொருளினை மேற் பெறுதல் காரணமாக ஒரு தொழில் நிகழ்தல் என்னும் பொருண்மை, ஒன்றற்கொன்று [8]நட்பாதல் என்னும் பொருண்மை, ஒன்றற்கொன்று பகையாதல் என்னும் பொருண்மை, ஒன்றற்கொன்று காதலுடைத்தாதல் என்னும் பொருண்மை, ஒன்றற்கொன்று சிறத்தல் என்னும் பொருண்மை என்று சொல்லப்பட்ட அப்பொருண்மேல் வருஞ்சொற்களும் [9]அந்நான்காம் உருபின் கூற்றன என்று [10]கூறுவர் புலவர் என்றவாறு.

**எப்பொருளாயினும்** என்றது மூன்றிடத்துப் பொருள்களது பன்மை நோக்கிச் சொற்கள் பொருள்களை உணர்த்துதல் உரிமை நோக்கிச் சொல் தன்மேல் வினைப்பட, **எப்பொருளாயினுங் கொள்ளும்** என்று கூறினர் எனினும் கோடலை உணர்த்தும் என்றவாறாகக் கொள்க.

உ - ம்:—

[11]**சாத்தற்குச் சோறு கொடுத்தான்** [12]என்பது.

அதற்கு வினையுடைமை :— **கரும்பிற்கு வேலி ; மயிர்க்கு** [13]**எண்ணெய்** ; [14]என்பது.

---

74-5 i-ii "கூறிய படுதல்"

6 ii "ஒன்றுக் கொன்று"

7 i-ii-iv-v-vii "என்னும் ... ... ஒரு பொருளினை"

8 vi "நட்பாதலும் பகையாதலும் என்னும் பொருண்மை ஒன்றற்.கொன்று"

i-ii-iv-v-vii "நட்பாத லென்னும் ... ... ... பகையாத லென்னும் பொருண்மை ஒன்றற் கொன்று"

9 ii-v-vi-vii "நான்கா முருபின்"

10 i-iii-v "சொல்லுவர் புலவர்"

11 vi "அதற்கு வினையுடைமை சாத்தற்குச் சோறு கொடுத்தான். கரும்பிற்கு வேலி"

12 i "என்பதற்கு வினையுடைமை"

13 i "எண்ணை"

14 iii "என்பன"

*அதற்குடம் படுதல்:*—**சாத்தற்கு மகளுடம்பட்டார் சான்றோர்** *என்பது.*

[15]*அதற்குப் படுபொருள்:*—**சாத்தற்குப்படுபொருள் கொற்றன்** *என்பது.*

*அதுவாகு கிளவி ,*—**கடி சூத்திரத்துக்குப் [16]பொன்.**

*அதற்கியாப்புடைமை :*—**கைக்கியாப்புடையது [17]கடகம்.**

*அதற்பொருட்டாதல் :*—**வரிசைக்கு உழும் ; கூழிற்குக் குற்றேவல் செய்யும்** [18]*என்று இத்தொடக்கத்தன,*

*நட்பு :*—[19]**நாய்க்கு நட்புடையன்.**

*பகை :*—**மக்கட்குப் பகை [20]மரபு.**

*காதல் :*—[21]**தாய்க்குக் காதலன்.**

*சிறப்பு :*— **வடுகரசர்க்குச் சிறந்ததோர் சோழிய [22]அரசர்.**

*அதற்கு வினையுடைமை முதலாகச் [23]சொல்லப்பட்டன எல்லாம் முன் கூறிய கொடைப் பொருளின் பாகுபாடல்ல ; பிறபொருள் என [24]உணர்க. அவற்றுள், அதற்குடம்படுதல் அதற்குப் படுபொருள் என்னும் இரண்டும் கொடை நீர்மையும் [25]சிறிதுடைய.*

---

**74**-15 i "*அதற்குப் பொருள்*"(vi-ல் '*படு*' இரு பிறைவளைவில் உள்ளது.)

16 ii-vi "*பொன் என்பது. அதற்கி*"

17 iii "*கடகம் அதற்பொருட்டாகல்*"

i "*கடகம் அதற்குப் பொருட்டாக்கல்*"

vi-viii "*கடகம் கூழிற்குக் குற்றேவல் செய்யும்*" (*சில சொற்கள் விடுபட்டன.*)

18 i-iv-v "*என அறிக தொடக்கத்தன நட்பு*" (*க - த் மாருட்டம்.*)

19 ii "*அவற்கு நட்புடையன், அவற்குத்தமன் என்பன பகை*"

vi "*நட்புடையன் அவற்குத்தமன் என்பன பகை*"

20 ii-vii "*பாம்பு. அவற்குப் பகை, அவற்கு மாற்றான்*"

vi "*பாம்பு. அவற்குப் பகை மாற்றான்*"

21 ii-vi-vii "*நட்டார்க்குக் காதலன் தாய்க்குக் காதலன் என்பன.*"

22 ii-vi-vii "*அரசர், கற்பார்க்குச் சிறந்தது செவி என்பன*"

23 ii-vi-vii "*கூறப்பட்டன*"

24 ii-vi-vii "*அறிக*"

25 ii-vii "*சிறியதுடைய*"

*உம்மையாற் பிறவும் [26]அதன்பால் உள.* **பண்ணிற்குத் தக்கது பாட்டு. பூவிற்குத் தக்கது வண்டு** *[27]எனவரும். பிறவும் அன்ன.*

*உம்மை இறந்தது தழீஇய [28]எச்ச உம்மையாகலான் இங்கிகரன கோடற்கு இடம்படாதால் எனின், இறந்தது தழீஇய அதனையே இரட்டுறமொழிதல் என்னும் ஞாபகத்தினான் எதிரது தழீஇயதூஉம் ஆக்கிக் கூறப்பட்டது எனக் கொள்க.* (கஉ)

**75. ஐந்தாகுவதே,**
**இன் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**இதனின் இற்றிது என்னு மதுவே ;**
**வண்ணம் வடிவே அளவே சுவையே**
**தண்மை வெம்மை அச்சம் என்ரு,**
**நன்மை தீமை சிறுமை பெருமை**
**வன்மை மென்மை கடுமை என்ரு,**
**முதுமை இளமை சிறத்தல் இழித்தல்**
**புதுமை பழமை ஆக்கம் என்ரு,**
**இன்மை யுடைமை நாற்றம் தீர்தல்**
**பன்மை சின்மை பற்றுவிடுதல் என் -**
**றன்ன பிறவும் அதன்பால என்மனர்.**

*என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே ஐந்தாம் [1]வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—[2]ஐந்தாம் எண்ணுமுறைமைக் கண்ணதாகிய* **இன்** *என்னும் பெயரையுடைய வேற்றுமைச் சொல் [3]இப்பொருளினும் இத்தன்மைத்து இப்பொருள் என வரூஉம் பொரூஉப் பொருளினைத் தனக்குப் பொருளாக உடைத்து ; அது வருமாற்றை*

---

**74**-26 ii-vii "*அதன்போலப் பலவுள அவை*"

27 ii-vi-vii "*என்பன போல வரும்*"

28 i "*எச்சவும்மையாகன் இந்நகரின்கோடற் கிடப்படாதால் எனின்*"

**75-1** v "*வேற்றுமை உணர்த்துதல்*"

2 vi "*ஐந்தாம் வேற்றுமைக் கண்*"

3 i "*இப்பொருளினு மிகுவித் தன்மைத்து*"

ii-vi-vii-viii "*இப்பொருளின் இத்தன்மைத்து*"

விரிப்பின், வண்ணம் முதலாகப் பற்றுவிடுதல் ஈறாகச் சொல்லப்பட்ட இப்பொருண்மைகளும் பிறபொருண்மைகளும் அவ்வைந்தாவதின் கூற்றன என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

[4]ஐந்தாவது பொரூஉப் பொருளும், நீக்கப் பொருளும் எல்லைப் பொருளும் ஏதுப் பொருளும் என நால்வகைய. அவற்றுள், பொரூஉப் [5]பொருள் சிறப்புடைமையின் முன்னர் எடுத்து [6]ஓதினான். பொரூஉ என்பது ஒன்றை [7]ஒன்றின் மிகுத்துக் கூறல். இதனின் ஒழிவாகிய உவமமும் இரட்டுற மொழிதல் என்னும் ஞாபகத்தான் ஈண்டே கொள்ளப்படும். நீக்கம் உதாரணப் பகுதி கூறுகின்றவழிக் கொள்ள வைத்தான்[8] என்பது. எல்லையும் ஏதுவும் அன்னபிறவாற்-கொள்ள வைத்தான் என்பது.

உ - ம் :—

காக்கையிற் கரிது [9]களாம்பழம். இதனின் என்பது காக்கையின் என்பது. இற்று என்பது கரிது என்பது. இது என்பது களாம்பழம் என்பது. என்றது காக்கையினும் கரியது களாம்பழம் என்று மிகுத்துக் [10]கூறியவாறு ஆயிற்று. உவமத்திற்கும் இதுவே [11]உதாரணமாம். காக்கையைப் போலக் கரிது களாம்பழம் என்றவாறும்.

இனி வண்ணம் என்பது ஐந்து வகைப்படும்; கருமை [12]முதலியன.

உ - ம் :— காக்கையிற் கரிது களாம்பழம் என்றாற் போல்வன.

---

75-4 ii-vi-vii "இனி ஐந்தாவது பொரூஉ"

5 i "பொருளை சிறப்புடைமையின்"

6 ii-vi-vii-viii "ஓதப்பட்டது பொரூஉ"

7 ii "ஒன்று மிகுத்து"

8 —" ர் "

9 ii-vi-vii "களம்பழம் என்றாற் போல்வன"
i-iv "களாப்பழம் ,, ,,"

10 v "கூறிய வாறு உவம"

11 v "உதாரணம் காக்கையை"

12 ii-vii "முதலியனவாய் உ-ம்"

வடிவு என்பது முப்பத்திரண்டு வகைத்து. அவை வட்டம் சதுரம் கோணம் [13]முதலியன. உ - ம் :—இதனின் வட்டம் இது என்பது.

அளவு :—நெடுமை குறுமை [14]நிகர்மை எனப் [15]பலவாம். உ-ம் :—இதனின் நெடிது இது என்பது.

சுவை : — அறுவகைப்படும். அவை கைப்பு [16]முதலாயின. உ-ம் :—இதனின் தீவிது இது என்பது.

தண்மை :—இதனின் தண்ணிது இது என்பது.

வெம்மை :—இதனின் வெய்யது இது என்பது.

அச்சம் :—கள்ளரின் அஞ்சும் என்பது. இஃது ஏதுவின் கண்ணும் வரும்.

நன்மை :—[17]இதனின் நன்று இது என்பது.

தீமை :—இதனின் தீது இது என்பது.

சிறுமை :—இதனின் [18]சிறிது இது என்பது.

பெருமை :—இதனின் பெரிது இது என்பது.

வன்மை :—இதனின் வலிது இது என்பது.

மென்மை :—இதனின் மெலிது இது என்பது.

கடுமை :—இதனின் கடிது இது என்பது.

முதுமை :—[19]இவனின் மூத்தான் என்பது.

---

75-13 vi "முதலியன இதனின் வட்டமிது"

14 ii-vi-vii-viii "நீளம் என"

15 ii-vi "பலவாம். இதனின்"

16 ii-vi "முதலாயின. இதனின் தீவிது இது என்பது. வெம்மை - இதனின்" (வரி விடுபட்டது.)

17 i-iii-iv-v "இதனின் நன்று" ("இது" என இச்சொற்றொடர் முடியவில்லை. இவ்வாறே "ஆக்கம்-இவனின் ஆயினன்" என்பது வரை இப்பிரதிகளில் "இது" என முடிதல் இல்லை.)

18 i "சிறுமை என்பது"

19 i-iv-viii "இதனின் மூத்தான் இது"
ii "இதனின் மூத்தது இது. இவனின் மூத்தோன் இவன்"
vi "இதனின் மூத்தது இது"

இளமை :—[20]இவனின் இளையான் [21]என்பது.

சிறத்தல் :—இவனின் [22]சிறந்தான் இவன் என்பது.

இழித்தல் :—இவனின் [23]இழிந்தான் இவன் என்பது.

புதுமை :—[24]இவனின் புதியன் இவன் என்பது.

பழமை :—[25]இவனின் பழையன் இவன் என்பது.

ஆக்கம் :—[26]இவனின் ஆயினான் என்பது. இது ஏதுப் பொருட்கண்ணும் வரும்.

இன்மை :—[27]இவனின் இலன் என்பது.

---

75-20 ii-vi "*இவனின் இளையோன் இவன்*"

21 ii-vii "*என்பது இதனினிளைது இது*" "*முதிது எனவரும்*"

22 i "*சிறந்தான் என்பது*"
vii "*சிறந்தவன் இவன் என்பது*"
ii-vi "*சிறந்தவன் இவன். இதனிற் சிறந்தது இது என்பன.*

23 viii "*இழிந்தவன் இவன் என்பது*"
ii-vi-vii "*இவனின் இழிந்தவன் இவன் இதனின் இழிந்தது இது என்பன*"

24 i "*இவனியனிற் புதியன் என்பது பழமை*"
ii-vi-vii "*இவனிற் புதியன் இவன் பழமை*"
iii "*இவனிற் புதிது இது என்பன ... பழமை*"

25 i-v "*இவனிற் பழையன் என்பது*"
ii-vi-vii "*இவனிற் பழையன் இவன், இதனிற் பழையது இது என்பன*"
iii "*இவனிற் ... ... என்பது*"

26 ii-vi-vii "*இவனின் ஆயினான்; வாணிகத்தின் ஆயினான் இவன் என்பன*"
iii "*இவனின் .... .... .... என்பது*"

27 ii-vi-vii "*இவனின் இலன் இவன்*" (*இப்பிரதிகளில் மட்டுமே, இது முதல் "இவன்" அல்லது "இது" எனச் சில உதாரணச்சொற்றொடர்கள் முடிகின்றன, பின்னர் இவற்றிலும் சில இடத்து அம்முடிபு இல்லை.*)
iii "*இவனில் ... ... ... என்பது*"

உடைமை :—[28]இவனின் உடையன் என்பது.

நாற்றம் :—இதனின் [29]நாறும் என்பது. இவைஎல்லாம் பொரூஉப் [30]பொருளாம்.

தீர்தல் :—ஊரின் தீர்ந்தான் [31]என்பது. இது நீக்கம்.

பன்மை :—இவரிற் [32]பலர் என்பது.

சின்மை :—இவரிற் [33]சிலர் என்பது. இவையும் பொரூஉ.

பற்று விடுதல் :—[34]ஊரிற் பற்றுவிட்டான் என்பது. இது நீக்கம்.

மருவூரின் மேற்கு ; கருவூரின் கிழக்கு [35]என்பது எல்லை.

முயற்சியிற் பிறத்தலின் இசை நிலையாகாது என்பது [36]ஏது.

அன்ன பிறவும் என்பது [37]எடுத்துஓதின பொரூஉப் பொருளின் [38]பாகுபாட்டினும், நீக்கப்பொருளின் [39]பாகுபாட்டினும், ஒழிந்தவற்றிற்கும், பிறபொருட் பாகுபாட்டிற்கும் புறனடைஎன உணர்க. (கரு)

---

75-28 ii-vi-vii "இவனின் உடையன் இவன்"
iii " ... ... ... ந"

29 ii-vi-vii "இதனின் நாறும் இது"
iii " ... ... ... "

30 i-v "பொருள் திரிதல்"

31 ii-iv-vii "என்பது பன்மை"
i-iv "என்பது ... ... பன்மை"

32 ii-vi-vii "பலர் இதனிற் பல இவை என்பன"
iii " ... ... ... "

33 ii-vi-vii "சிலர் இதனிற் சில இவை என்பன. இவையும் பொரூஉப் பொருளனவாம்"
iii " ... ... இவையும் பொரூஉ"

34 iii "ஊரிற் .. ... நீக்கம்"
ii-vi-vii "ஊரிற் பற்றுவிட்டான் காமத்திற்பற்றுவிட்டான் என்பன நீக்கம்"

35 vi-vii "என்பன எல்லைப் பொருளனவாம்"
ii "என்பன இவை எல்லைப் பொருளனவாம் அன்ன"

36 ii-vi-vii "ஏதுப் பொருளது அன்ன"

37 i "எடுத்தோதிர்த்ன பொரூஉ"

38 i "பாகுபாட்டிலும்"

39 i ஷை

76. ஆறாகுவதே,
அது எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் "இதன திது" எனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே ;
இயற்கையின் உடைமையின் முறைமையிற் கிழமையிற்
செயற்கையின் முதுமையின் வினையின் என்றா,
கருவியிற் றுணையின் கலத்தின் முதலின்
ஒருவழி [1]உறுப்பின் குழூஉவின் என்றா,
தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்
திரிந்து வேறு படூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கின் [2]தோன்றும் கிளவி
[3]ஆறன் பால என்மனார் புலவர்.

*என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே ஆறாம் வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—[4]ஆறாம் எண்ணுமுறைமைக் கண்ணதாகிய* அது *என்னும் பெயரையுடைய வேற்றுமைச் சொல், தன்னொடு தொடர்ந்ததோர் பொருளையும் தன்னின் வேறாகியதோர் பொருளையும் இதனது இது என்று கிழமை செப்பி நிற்றலை இலக்கணமாக உடைத்து ; வருமாற்றைச் [5]சொல்லின்* இயற்கை *என்பது முதலாகத்* திரிந்து வேறுபடுதல் *ஈறாக ஓதப்பட்ட பொருள் பாகுபாடுகளும் பிறவும், அத்தன்மை* தன்னினும் [6]பிறிதினும் *என ஓதிய இருவகை இடத்துவரும் பாகுபாடுகளும் அவ் ஆறாம் வேற்றுமைக் கூற்றன என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.*

---

76-1 i *"யுருப்பிற்"*

2 i *"மருங்குங் கிளவி"*

3 i *"யால்தன் பால"*

4 i *"ஆறுமெண்ணு மெண்ணு முறைமைக் கண்"* (*"ஆறும் என்னும்" போலும்.*)

5 v *"சொல்லில் இயற்கை"*

6 i-ii-vii *"பிறிதெனும்"*

**இதனத்து என்னும் கிளவி** என்றது **அன்ன** என்றதனான் அஃறிணை ஒருமை தோன்ற வரும், அது [7]என்பதன்றி அஃறிணைப் பன்மை தோன்ற வருவதோர் அகர உருபும் உண்டு என்று கொள்ளப்படும். அஃதேல் அவை அஃறிணை இருபாற்கும் உரிய [8]உருபாயினவாறுபோல உயர்திணை முப்பாற்கும் உரியஉருபு கூறாரோ [9]எனின், அவ்வாறு வரும் வழக்கு இன்மையிற் கூறாராயினான்[10] என்பது. நமன், நமள், நமர் என்பனவற்றுள், அன், அள், அர் என்பன உயர்திணை உருபு அன்றோ எனின், பிற உருபுபோலத் தொகுத்தலும் [11]விரித்தலும் இன்மையானும், தற்கிழமையும் பிறிதின்கிழமையும் என்னும் இரண்டிடத்தும் வாராமையானும், மற்றைப் பெயரும் உருபும் ஆகக் கொள்ளாத ஆறும் வேற்றுமைத் தொகைச் சொற்போல் இருபொருள் [12]நிலைமைத்து ஒரு சொல்என எச்சவியலுள் கூறுகின்றார் என்பது.

[13]அஃதேல் உயர்திணைப் பொருட்கு உயர்திணைப் பொருளை உடைமை செப்புமாறு என்னை எனின், அதற்கு மேல் வருகின்ற ஓத்தினுள் அதுஎன் வேற்றுமை என்புழிக் கூறுவன் என்பது.

**தன்னினும்** [14]என்புழித் தற்கிழமை ஐந்து [15]வகைப்படும் ; ஒன்றுபலகுழீஇய தற்கிழமையும், வேறுபல குழீஇய தற்கிழமையும் ஒன்றியற்கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய்திரிந்தாகிய தற்கிழமையும் [16]என.

---

76-7 i-iv-v-vi-vii “என்பதன் அஃறிணை”

ii “என்பதன் ஆது என்பதும் அஃறிணை”

8 i-ii-iv-v-vi “உருபாயின் அவ்வாறு போல” (ன் - ன மாறாட்டம்.)

9 i “எனினின்”

10 —“ ர் ”

11 i “விரித்தலுந்”

12 i “நிலமைத்து”

13 iv “அஃதேல் அஃறிணைப் பொருட்கு உயர்திணைப்பொருளை உரிமை செப்பு”

vi-viii “உயர்திணைப் பொருளை உரிமை செப்பு”

14 vi “என்புழிக்கிழமை ஐந்து என்று”

15 i-ii “வகைப்படும் அவை ”

16 iv “ என்ப பிறிதின்கிழமை ” (“எனப் பிறிதின்கிழமை” எனக் கொண்டது போலும்.)

பிறிதின்கிழமை இதுபோலப் பகுதி [17]படாது.

ஒன்று பல குழீஇயது [18]எட்குப்பை எண்ணினது குப்பை என்றவாறு.

வேறு பல குழீஇயது :—படைக்குழாம் ;

ஒன்றியற்கிழமை: —[19]நிலத்ததகலம் ;

உறுப்பின் கிழமை:—[20]யானைக்கோடு ;

மெய்திரிந்தாகியது :—எட்சாந்து ;

பிறிதின் கிழமை :—சாத்தனது [21]தோட்டம் எனவரும்.

இனி, அவ் இருகிழமையும் ஒட்டுமாறு:—

இயற்கை:—சாத்தனதியற்கை : இது [22]தற்கிழமையுள் ஒன்றியற்கிழமை.

உடைமை:—சாத்தனதுடைமை: இது பிறிதின்கிழமை; தற்கிழமையும் படும்போலும்.

முறைமை:—ஆவினது கன்று; இது பிறிதின் கிழமை.

கிழமை :—சாத்தனது கிழமை ;

செயற்கை:—சாத்தனது செயற்கை: இவ்இரண்டும் தற்கிழமை; ஆகுபெயராயவழிப் பிறிதின் கிழமையும் ஆம்.

முதுமை:—அவனது முதுமை; இது தற்கிழமை.

---

**76**-17 ii-vi-vii "பது என்க ஒன்று" (i-ல் 'என்க' என்பது பிற்சேர்க்கை).

18 i "எட்குவி"
iii-iv-v "எட்குப்பவி"

19 i "நிலத்தகலம். உறுப்பின்கிழமை" (உருபின்றியும் எடுத்துக் காட்டுதல் வருகின்றன.)
ii-vi "நிலத்ததகலம் சாத்தனதியற்கை உறுப்பின்கிழமை"

20 i "யானை கோடு"
i-vi "யானையது கோடு"
ii-vi-vii "யானையது கோடு புலியது உகிர்"

21 v "தோட்டம். இனி"

22 vi "நார்கிழமையுள் ஒன்றிய தற்கிழமை"

வினை :—சாத்தனது வினை; இதுவும் ஆகுபெயராயவழிப் பிறிதின் கிழமையும் ஆம்.

கருவி:—சாத்தனது வாள்; இது பிறிதின் கிழமை.

துணை:—சாத்தனது துணை; இதுவும் அது.

கலம்:—சாத்தனது கலம்; கலம் என்பதனை ஒற்றிக் கலத்தின்மேற் கொள்க. பிறகலத்தின்மேற் கொள்ளாமைக்குக் காரணம் என்னை எனின், இஃதொரு பொருள் [23]இருவர்க்குடைமையாக நிற்கும் [24]வேறு-பட்டதாகலின் என்க. இஃது உரையிற்கோடல். இதுவும் அது.

முதல்:—சாத்தனது முதல்; இத்தோட்டம் என [25]ஓர்க. இதுவும் ஓர்உடைமை வேறுபாடு எனக் கொள்க. இதுவும் அது.

ஒருவழி உறுப்பு:—[26]யானைக் கோடு; "உறுப்பு" என்னாது "ஒருவழி உறுப்பு" என்றது ஒருறுப்பினையுடைமையாகக் கருதாது பலவற்றை-யும் கருதி உரிமையாகாதப் பொருள் தானும் என்பது போலும். இது தற்கிழமையுள் [27]உறுப்பின் தற்கிழமை,

[28]குழுவு:—படைக்குழாம், எட்குப்பை; இது தற்கிழமையுள் ஒன்று பல குழீஇயதூஉம் வேறுபல [29]குழீஇயதூஉம் குழுவென உடனெக்கிற்று.

[30]தெரிந்தமொழிச் செய்தி:—கபிலரது பாட்டு. இதுவும் பரணரது பாட்டு எனவும் நிற்றலின் இருபொருட்கு உரிமையாம். கபிலரது என்புழி [31]மெய்திரிந்தாகியதன் பாற்படும். பரணரது என்புழிப் பிறிதின்-கிழமையாம்.

76-23 "இவர்க்குடைமையாக"

24 ('வேறுபாட்ட தாகலின்" என்பது போலும்)

25 i "ஓர்க்க"

26 i-ii-vi-vii-viii "யானையது கோடு"

27 iii-viii "உறுப்பின் கிழமை"

28 ii-vi-vii "குழவு, எட்குப்பை, படைக்குழாம் என்பன இவை தற்-கிழமையுள்"

29 ii-vi-vii "குழீஇதூஉம் ஆம். குழூ என்பது உடன் நோக்கிற்று"

30 i-iv-v-viii "திரிந்த மொழிச் செய்தி"

31 v "மெய்திரிந்தாகிய தற்கிழமைப் பாற்படும்"

நிலை:—[32]பெண்ணுடைத்துப் பெருஞ் சாத்தனாது நிலை; இஃது [33]ஒன்றியற்கிழமை.

வாழ்ச்சி:—சாத்தனது வாழ்ச்சி; இது வாழ்தல் என்னும்தொழில் கருதினவழித் தற்கிழமை; வாழுமிடம் கருதியவழிப் பிறிதின் [34]கிழமை.

திரிந்து வேறுபடுவன:—அட்சாந்து, கோட்டுநூறு என்பன.

சாத்தனது சொல் [35]என்பதும் பிறவும் ஒரு பொருள் முழுவதூஉம் திரியாதன.

பரணரது பாட்டியல் என்றற் [36]போல வருவன எல்லாம் உதாரண வாய்பாடாக எடுத்தோதாது திரிந்து வேறுபடும் எனப் பொதுப்பட ஒரு பொருண்மையாக எடுத்து ஓதினமையிற் கொள்ளப்படும்.

பிறவும் என்றதனாற் சாத்தனது வனப்பு, சாத்தனது ஆண்மை, சாத்தனது நடை, சாத்தனது புத்தகம் என வரும். பிறவும் அன்ன. (கச)

77. ஏழா குவதே,
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தின் நிலத்திற் காலத்தின்
அனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே;
கண்கால் புறம்அகம் உள்ளுழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை எனாஅ,
முன்இடை கடைதலை வலம்இடம் எனாஅ,
அன்ன பிறவும் அதன்பால என்மனார்.

என்பது என்னுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே ஏழாம் வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

76-32 vi "பெண்ணுகத்து"

33 vi "ஒன்றியதற்கிழமை"

34 ii-vi-vii "கிழமையாம்"

35 i-v "என்பது பிறவும் திரிந்து"

36 i-v "போல்வன் வருவன"

இதன் பொருள் :—ஏழாம் எண்ணுமுறைமைக்கண்ணதாகிய **கண்** என்னும் [1]பெயரையுடைய வேற்றுமைச் [2]சொல் வினைசெய் இடமும் நிலமும் காலமும் ஆகிய மூன்று பொருட்கண்ணும் வரும். அதன் உருபு வரும் [3]பாகுபாட்டினைச் சொல்லின், **கண்** என்னும் உருபு முதலாய்ப் **புடை** என்னும் உருபு ஈறாக ஓதப்பட்ட உருபுகளும், இடையே, [4]**தேவகை** என ஓதிய திசைக்கூற்றுப் பொருண்மையும், பின்னரும் **முன்** என்னும் உருபு முதலாக **இடம்** என்னும் உருபு ஈறாக எடுத்து ஓதப்பட்ட உருபுகளும், அத்தன்மைய பிற உருபுகளும் அவ்வேழாவதன் [5]கூற்றன என்றவாறு.

**வினை செய்இடம்** [6]ஒரு தொழில் நிகழும்இடம். [7]**நிலம்** என்பது ஒரு தொழில் நிகழாது வரையறை யுடையதோர் இடம். **காலம்** என்பது ஒரு தொழில் நிகழ்தற்கு இடமாய் வரையறைப்பட்டு நிற்பது. இம்மூன்றன் கண்ணும் ஏழாவது வரும் இடத்து இடமும் இடத்து நிகழ் பொருளும், வேறுபட [8]வருவனவும் வேறுபடாமல் வருவனவும் என இருவகைய.

உ-ம் :—

வினைசெய் இடம் :—தட்டுப்புடையுள் வந்தான்; தட்டுப்புடையுள் வரியுண்டு.

நிலம் :—[9]குன்றத்துக்கண் கூகை; குன்றத்துக்கண் குவடு; ஆகாயத்துக்கண் பருந்து.

காலம் :—மாரிக்கண் வந்தான்; மாரிக்கண் நாள் எனவரும்.

---

77-1 i-v "பெயருடைய"

2 i-iii "சொல்வினை செய் இடமும்" (ல - வ மாருட்டம்.)

3 ii-vi "பாகுபாட்டைச் சொல்லின்"

4 iv "தெவ்வகை என"
i "தேவ வகை என"

5 i "கூற்றன என்பர் புலவர் என்றவாறு"

6 vi "வினைசெய்யா நிற்றலாகிய இடம்"

7 vi "வினைசெய் நிலம்=ஒரு தொழில்"

8 i "வரவனவும்"
ii "வருவனவும்"

9 i "குன்றத்துக்குட் கூகை"
vi-viii "குன்றத்துக் கூகை"

[10]கண் என்பது :—ஊர்க்கண் இருந்தான்.

கால் :—ஊர்க்கால் [11]இருந்தான்.

புறம் :—ஊர்ப்புறத்திருந்தான்.

அகம் :—[12]மாடத்தினகத்திருந்தான்.

உள் :—ஊருள் இருந்தான்.

உழை :—சான்றோருழைச் சென்றான்.

கீழ் :—மாடத்துக் கீழிருந்தான்.

மேல் :—மாடத்து மேலிருந்தான்.

பின் :—ஏர்ப்பின் சென்றான்.

சார் :—[13]காட்டுச்சார் ஓடும் களிறு.

அயல் :—ஊரயல் இருந்தான்.

புடை :—ஊர்ப்புடை இருந்தான்.

இவை எல்லாம் உருபு. [14]தே, வகை என்பன [15]திசைக்கூறு; இது பொருள்.

திசை என்பது ஆகாயம்போல் வரையறைப்படாது சொல்லுவான் குறிப்பினவாய் நிற்றலின் வேறுபொருள் [16]என்று நிலம் என்புழி அடக்காது கொண்டு போந்து கூறினான் [17]போலும். வடக்கண் வேங்கடம், தென்கட் குமரி எனவரும்.

முன் :—தேர்முன் சென்றான்.

இடை :—சான்றோர் இடை இருந்தான்.

---

77-10 vi "கண் ; ஊர்க்கண்"

11 vi "இருந்தான். அகம்"

12 ii-vi-vii "மாடத்தகத் திருந்தான்"
iv " ... ... ... ... "

13 i-v-viii "காட்டுச் சாரோடு ... ... அயல"

14 iv "தெவ்வகை"

15 vi "திசைக் கூற்று"

16 ii "என்று நிலம்"

17 —"ர்"

கடை :—கோயிற்கடைச் சென்றான்.

தலை :—தந்தைதலைச் சென்றான்.

வலம் :—கைவலத்து [18]உள்ளது கொடுக்கும்.

இடம் :—[19]கையிடத்து இருந்தான்.

பிறவும் என்றதனால், [20]கிழவோடேத்து கிழவோள்மாட்டு என்றாற் போல்வன கொள்க.

ஏனை வேற்றுமை போலப் பொருட் பாகுபாடன்றி உருபின் பாகுபாடு உண்மையின் அதனை விரித்து ஓதினான் [21]எனக் கொள்க.

ஓதின உருபுகள் எல்லாவற்றினும் **கண்** என்னும் உருபு சிறந்தமையின் முன்வைத்தது என்பது.

மற்றும், **புறம் அகம்** என்பன போல்வன எல்லாம் பெயராய், ஆறுவதன் பொருண்மையாய் வருகின்றமையின், ஏழனுருபு ஆமாறு என்னை எனின், **அகம் புறம்** [22]என்பன ஓரிடத்தினை வரையறுத்து உணர்த்தும்வழி ஆறுவதாம். அவ்வாறு அன்றிக் **கண்** என்பது போல இடம் என முழுதுணர்வு செல நின்றவழி ஏழாவதாம் எனக் கொள்க.

இது நோக்கிப்போலும் **கண் கால்** எனக் **கண்** என்பதனை இருகாலாவது கூறியது என்பது. இவ்வாறு அன்றிக் **கண்** என்பது ஓர் இடத்தினை வரையாறது முழுவதும் உணர நிற்கும் உருபு [23]என்றும் அல்லன [24]ஓர் இடங்களையும் வரையறுத்துக் கொண்டு இடப்பொருள் உணர்த்தி நிற்கும் உருபு எனவும் கூறுவது ஓர் நயம் உண்டு போலும். (கா)

---

**77**-18 i-v "உள்ளது. இடம்"

19 ii-vi "கையிடத்துப் பொருள் என வரும். பிறவும்"

20 ii "கிழவோரிடத்துக் கிழவிமாட்டு"
iv "கிழவோடத்து கிழவின்னமாட்டு"
i-viii "கிழவோடேத்து கிழவின்னமாட்டு"
vi "கிழவோள் தேத்து கிழவிமாட்டு"

21 —"ர்"

22 v "என ஓரிடத்தினை"

23 ii-vi "எனவும்"

24 vi-viii "ஓரிடப் பொருள் உணர்த்தி நிற்கும் உருபு"

78. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்று நின்றியலுந் தொகைவயிற் [1]பிரிந்தே.

என்பது என்நுதலிற்றோ எனின், ஐம்முதலிய ஆறு உருபிற்கும் பொதுவாய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—வேற்றுமைச் சொல்லினது பொருளை விரித்து உணர்த்தும் காலத்து அவ்வேற்றுமைப் பொருள்கள் பெயரது ஈற்றின் கண்ணே நின்று நடக்கும், தொக்க விடத்து [2]நின்று நீங்கி என்றவாறு.

உ - ம் :—

**மரங் குறைத்தான்** என்பது **மரத்தைக் குறைத்தான்** என இறுதிக்கண் விரிந்து நின்றது. **தாய் மூவர்** என்பது **தாயொடு மூவர்** என விரிந்தது பிறவும் அன்ன.

இது "**கூறிய முறையின்**" [3]என்றதனுல் அடங்காதோ எனின், அஃது உருபு நிற்கும்இடம் கூறியது. அங்ஙனம் நின்ற உருபு விகாரப்பட்டுத் தொக்கு நின்று பின் விரியும் வழியும் பிறண்டு விரியாது, [4]முன் கூறிய ஈற்றின்கண்ணே விரியும் என முற்கூறிய அதனையே திரிபுபடுவழிக் கூறியது எனக் கொள்க. (கக)

79. பல்லாறுகப் பொருள் புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லு முரிய வென்ப.

என்பது என்நுதலிற்றோ எனின், உருபு நோக்கிவரும் சொற்களைத்தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — பல நெறியாக அவ்அவ் வேற்றுமையின் பொருளோடு பொருந்தி ஒலிக்கும் எவ்வகைப்பட்ட சொல்லும் வேற்றுமை போலப் பிரியாது இறுதிக்கண் விரிந்து நிற்றற்கு உரிய என்றவாறு.

---

78-1 i "பிரிந்தே"

2 i-ii-iv-v-vi-vii "நின்று என்றவாறு"

3 i —"என்றதனுல் அது அடங்காதோ"

4 vi "முன்கூறிய அதனையே திரிபுபடுவழிக் கூறியது எனக் கொள்க" (ஒருவரி விடுபட்டது, முன் வரும் "முன் கூறிய" என்பதோடு பின்வரும் "முன் கூறிய" என்பதனை மயங்கக் கொண்டமை காணலாம்.)

விரித்தற்கு உரிய என்பது முன்னின்ற அதிகாரத்தாற் கொள்க. இனித் தொகுத்தலும் உரிய என்பது [1]ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்க.

உ-ம்:—

படைக்கை என்பது படையினைப் பிடித்த கை என விரிந்தது.

குதிரைத் தேர் என்பது குதிரையாற் பூட்டப்பட்ட தேர் என விரிந்தது. பிறவும் அன்ன.

ஆறுவதற்குப் பொருள் விரிதல் இல்லை.

உருபுகள் தொகுத்தலும் விரிதலும் கூறியவழியே அவ்உருபு நோக்கிவரும் சொற்கள் தொகுத்தலும் விரிதலும் அடங்குமால் எனின், அவ்உருபு தொக்குழித் தொக்கும் விரிந்துழி விரிந்தும் நிற்றல் [2]ஒருதலையன்மையின், அதற்கும் வேறு கூறவேண்டும் என்பது.

மரங் குறைத்தான்; [3]குழையுடையன்; உருபு தொக்குழித் தொகாதாயிற்று எனக் [4]கொள்க. (கஎ)

இரண்டாவது

வேற்றுமை இயன் முற்றும்.

---

79-1 ii "ஒன்றின முடித்தல்"

2 ii-vii "ஒருதலை யின்மையின்"

3 ii "குழையுடையன் என இவை உருபு"

4 ii "கொள்க, இரண்டாவது வேற்றுமை இயல் முற்றும்"

vi "கொள்க, வேற்றுமை இயல் முற்றும்"

iii-viii "கொள்க, முற்றிற்று.

மூன்றாவது

# வேற்றுமை [1]மயங்கியல்

80. கருமமல்லாச் சார்பென் கிளவிக்
உரிமையும் உடைத்தே கண்ணென் [2]வேற்றுமை.

என்பது சூத்திரம்.

[2]இனி இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உருபும் பொருளும் உடன் மயங்குதலும், ஒருவழி உருபே மயங்குதலும், ஒன்றற்கு உரியதனோடு ஒன்று [3]மயங்குதலும், இரண்டும் ஒத்து மயங்குதலும், ஒரு பொருண்மை ஒன்றற்கே உரியதாகாது பலவற்றோடு [4]மயங்குதலும், ஓர் உருபு ஓர் உருபோடு மயங்குதலும், ஓர் உருபு பல உருபோடு மயங்குதலும், [5]ஒன்றனது ஒரு பொருளோடு ஒன்று மயங்குதலும், ஒன்றனது பல பொருளோடு ஒன்று மயங்குதலும், ஒன்றற்கு உரிமை பூண்டு எடுத்து ஓதின பொருள்வழி மயங்குதலும், ஓதாத பொருள்வழி மயங்குதலும், ஒன்று தன் [6]மரபாய் மயங்குதலும், இலக்கண வழக்கு உள்வழி மயங்குதலும், இலக்கணம் இல்வழி மயங்குதலும், மயக்க வகையான் [7]மயங்குதலும், சொல்லுதல் [8]வகை-

---

80-1 i "மூன்றாவது வேற்றுமை மயங்கும் இயல்"

vi "௩ வேற்றுமை மயங்கியல்"

2 i-ii-vii "வேற்றுமை இனி, இவ்வோத்து"

iii-v "வேற்றுமை இவ்வோத்து"

3 v "மயங்குதலும் ஒரு பொருண்மை ஒன்றற்கே" (விடுபட்டுள்ளது.)

4 i-ii-iv-v-vii "மயங்குதலும் ஒரு உருபு பலவுருபோடு" (விடுபட்டுள்ளது.)

vi "மயங்குதலும் ஒன்றநனொரு பொருளோடு" (விடுபட்டுள்ளது)

5 i-ii-iv-vii "ஒன்றெனை ஒரு பொருளோடு"

iii-v "என்றன் ஒரு பொருளோடு"

6 i "மரபா மயங்குதலும்"

7 iv-vi "மயங்குதலும் ஒன்றனோடு பொருள் முடிந்து"

8 i "வகையால்"

யான் மயங்குதலும், ஒன்றனோடு பொருள் முடிந்து தொடர்ந்து[9] அடுக்கி மயங்குதலும், ஒன்றனோடு பொருள் முடியாது தொடர்ந்து அடுக்கி மயங்குதலும், தொகையுள் மயங்குதலும், தொகையில் மயங்குதலும், உருபு வேற்றுமையாய் மயங்குதலும், உருபும் உருபும் மயங்குதலும் என்று இன்னோரன்ன [10]பல மயக்கங் கூறலின், வேற்றுமை மயங்கியல் என்[11]னும் பெயர்த்தாயிற்று.

இச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே இரண்டாவது அதிகாரத்தானே நின்ற ஏழாவதனோடும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—கருமச்[12]சார்ச்சி அல்லாத சார்தல் என்னும் பொருண்மைக்கு உரித்தாதலை உடைத்துக் கண் என்னும் வாய்பாட்டதாகிய ஏழாம் வேற்றுமை என்றவாறு.

உ - ம் :—

**அரசரைச் சார்ந்தார் ; அரசர்கண் சார்ந்தான்** எனவரும்.

கருமச் சார்ச்சிக்கண் **அரசர்கண் சார்ந்தார்** எனின், [13]அரசர் இடமாக [14]சாரப்பட்டது பிறிதாவான் [15]சேறலின் கருமம் அல்லாச் சார்பு என்று ஓதப்பட்டது, (க)

---

80-9 i "அடுக்கிய மயங்குதலும்"

10 v "மயக்கங் கூறலின் வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்தாயிற்று"

ii-iii-vii-viii "பல மயக்கங் கூறலின் வேற்றுமை மயக்கங் கூறலின் வேற்றுமை மயங்கியல்"

vi "வேற்றுமை பல மயக்கங் கூறலின் வேற்றுமை மயங்கியல்"

11 ii "என்றும்"

12 i "ச இராசி"

13 ii "அரசரிடமாகச் சாரப்பட்டது" (விளங்குதற் பொருட்டு ச் உள்ள இடத்தில் காற்புள்ளி இடப்பெற்றுள்ளது)

14 iv "சாரப்பட்டது" என இச்சூத்திர உரை முடிகிறது (ஒரு வரி விடப்பட்டுள்ளது)

15 iii "சேறலிற் கரும"

vi "செல்லின் கரும"

ii "சொலிற் கரும்"

i-viii "சேரலிற் கரும"

**81. சினைநிலைக் [1]கிளவிக் கையும் கண்ணும்**
**வினைநிலை யொக்கும் என்மனூர் புலவர்.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் அவ்இரண்டன் மயக்கமே உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—சினையாகிய நிலைமையையுடைய பொருண்மைக்கு இரண்டாவதும் ஏழாவதும் அதன் [2]வினைக்கூறு நிலைமைக்கண் ஒத்த பொருள என்று [3]சொல்லுவர் புலவர் என்றவாறு.*

[4]உ . ம் :—

**கண்ணைக் குத்தினான் ; [5]கண்ணுட் குத்தினான் எனவரும்.**

*சினைக்கண் இவ் இரண்டும் வரும் என்றது என்னை ? [6]பிறவும் வருமால் எனின், முன் இடப் பொருட்கண்வரும் என்ற ஏழாவது மற்றொரு வேற்றுமையோடு [7]தொடர்த்துக் கூறும்வழிச் செயப்படுபொருட்கண் வருதலும் கண்டது கூறியவாறு எனக் கொள்க. [8]தொடர்த்துக் கூறும்வழியாமாறு உணரச் சொல்லுகின்றா[9]ன்.*

**வினைநிலை** *என்றது இரண்டாவதற்கு ஓதிய* **வினை வினைக்குறிப்பு** *என உணர்க.* (உ)

**82. கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் அவ்இரண்டன் மயக்கமே உணர்த்துதல் நுதலிற்று.*

---

81-1 i "*கிளக்கை*"

2 i-ii-iv-vi-viii "*நினைக்கூறு*" (*'வினையைக்கூறு' என்றிருக்கலாம்*)

3 vi "*கூறுவர் புலவர்*"

4 i "*கண்ணை*"

5 ii-vi "*கண்ணின்கட் குத்தினான்*"

6 i "*பிரவும்*"

7 vi "*தொடர்ந்து*" (*தொடர்த்து என்பதும் வழக்குப் போலும்*)

8 vi "*தொடர்ந்து*"

9 "*ர்*"

இதன் பொருள் :—மேற்கூறிய இரண்டாவதற்கும் ஏழாவதற்கும் கன்றல் என்னும் பொருண்மையும், [1]செலவு என்னும் பொருண்மையும் பொருந்திவரும், அவ்வுருபுகளது வினை கூறும் இடத்து என்றவாறு.

உ - ம் :—

சூதினைக் கன்றினன் ; சூதின்கண் கன்றினன் ;
நெறியைச் சென்றான் : நெறிக்கண் சென்றான் எனவரும். (௩.)

83. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை [1]வருமே.

என்பது என்நுதலிற்றோ எனின், வேற்றுமைக்கண்ணதோர் சொல்லுதல் வகைமை உணர்த்துதல் நுதலிற்று.

மேற்கூறிய சினைநிலைக்கிளவி என்பதற்கு புறனடை எனினும் அமையும். [2]முதற் பொருட்கும் முதலோடு தொடர்ந்த சினைப் பொருட்கும் உருபுகள் [3]வருமாறு கூறி[4]னும்.

[5]இதன் பொருள் :—அது என் வேற்றுமை முதற்கண் வரின் அதன் சினைக்கு இரண்டாம் வேற்றுமை வரும் என்றவாறு.

உ - ம் :—

யானையது கோட்டைக் குறைத்தான் ; சாத்தனது கண்ணைக் குத்தினன் எனவரும். (௪)

84. முதன்முன் ஐவரிற் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப.

---

82-1 iii "சொல்லென்றும்"

83-1 i "வரும்"

2 i-ii-iv-vii "இ—ள்"

3 i-ii-iv-vii "வருவாமாறு"

vi-viii "வருமாமாறு"

4 "ரா"

5 i-ii-iv-v-vii "அது என் வேற்றுமை"

என்பது என்றுதலிற்றே எனின், இதற்கும் அக்கருத்து [1]ஒக்கும்.

இதன் பொருள் :—முதற்கண்ணே இரண்டாம் வேற்றுமைவரின் ஏழாம் வேற்றுமை சினைக்கண்ணே வருதல் விளங்கிற்று என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

[2]உ - ம் :—

யானையைக் கோட்டின்கண் குறைத்தான் ; சாத்தனைக் [3]கண்ணூள் [4]குத்தி-னான் எனவரும்.

தெள்ளிது என்றதனான் சிறுபான்மை இரண்டாவது தானேயும் வரப்பெறும். [5]யானையைக் கோட்டைக் குறைத்தான் ; சாத்தனைக் கண்ணைக்-குத்தினான் எனக் கொள்க.

இவற்றுள் முதற் சினைப்பொருட்குக் கண்ணுருபினைத் [6]தொடர்த்-துக் கூறும்வழி இரண்டாவதனோடு ஒப்பச் செயப்படு பொருட்கண் ஏழாவது வந்தவாறு கண்டுகொள்க.

[7]தெள்ளிது என்றதனால் முதற் சினைப் பொருட்கண்ணே அன்றிப் பிற பொருட் கண்ணும் இவ்வுருபுகளை இவ்வாறு கொடுத்துச் சொல்லுதல் கொள்ளப்படும் எனக் கொள்க.

மணியது நிறத்தைக் [8]கெடுத்தான் ;
மணியை நிறத்தின்கண் கெடுத்தான் ;
மணியை நிறத்தைக் கெடுத்தான். இது பண்பு.
தலை மகனது செலவை அழுங்குவித்தாள் ;
தலைமகனைச் செலவின்கண் அழுங்குவித்தாள் ;
தலைமகனைச் செலவை அழுங்குவித்தாள். இது தொழில். பிறவும் அன்ன.

---

௨4-1 ii " ஒக்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று "
2 ii " உதாஹரணம் வருமாறு யானையை "
i-iii-iv " யானையை "
3 ii-vi " கண்ணின் கண் "
4 ii " குத்தினான் என தெள்ளிது "
5 ii-vi " அஃது யானையை "
6 vi " தொடர்ந்து கூறும் "
7 vi (இப்பத்தி இல்லை)
8 vi " கெடுத்தான் மணியை நிறத்தைக் கெடுத்தான் "
iv "கெடுத்தான் இது பண்பு "

இவ்வாறு மூன்று மூன்று உருபு [9]வாராது, ஒரு பொருளது இரண்டாவதன் தொடர்ச்சிபற்றி இரண்டாவதுதானே வருவனவும் கொள்க.

உ - ம்:—

சாத்தனை நூலை ஒதுவித்தல்; யாற்றை நீரை விலக்கினன், என்பன போல்வன. பிறவும் அன்ன. (௫)

**85 முதலுஞ் சினையும் பொருள் வேறுபடாஅ**
**நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே.**

என்பது என் நுதலிற்றோ எனின், முதல் சினை என்னும் பொருண்மை அதிகாரப்பட்டமை [1]கண்டு அப்பொருளை ஆராய்தல் நுதலிற்று.

இதன் பொருள்:—முதல் என்றும் சினை [2]என்றும் சொல்லப்படுகின்ற பொருள்கள் இது முதல் இது சினை எனத் தம்மின் வேறுபடநில்லாது ஒருவன் சொல்லுங்காலத்து அவன் சொல்லும் கருத்தின்கண் இது முதல் இது சினை என வேறுபாடு உணர நிற்கும் என்றவாறு.

உ - ம்:—

கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனிக்கண் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான்.—இது சினை முதலாய் வந்தவாறு.

படை என்பதனை முதலாகப் பார்க்கும் வழிப் [3]படையின் யானை என முதல் சினையாயே நிற்கும் என்பது. (௬)

**86. பிண்டப் பெயரும் ஆயியல் திரியா**
**பண்டியன் மருங்கின் மரீஇய [1]பண்பே.**

என்பது என் நுதலிற்றோ எனின், மேலதன்முடிபு முதலுடையது பிறிதும் உண்டு என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

84-9 i “வராது”

85-1 i “கண்ட பொருளை”

2 ii “என்னும்”

3 ii “படையினது யானை என”

vi “படையினது யானை என சினையேபோலே நிற்கும்”

86-1 ii-vi “மரபே”

இதன் பொருள் :—திரட்சி என்னும் பொருளினை உணர நின்ற பெயர்களும் மேற்கூறிய சினை முதல்களது [2]இயற்பின் திரியா. அவை கோடற்குக் காரணம் என்னை எனின், முற்காலத்து நடந்த [3]கூற்று ஏதுவாகப் பிற்காலத்து நடந்து [4]மருவின முறைமை [5]உடையன அவை ஆகலான் என்றவாறு.

[6]ஆயியல்திரியா என்றது மேல்[7]சினையே முதலாய் முதல்சினையாய் வந்தவாறு போலப் [8]பிண்டமே அப்பொருளாய் அப்பொருளே பிண்டமாய் வரும் [9]என்றவாறுஅன்றிப் பொருள் [10]நிலைமை சொல்லுவான் [11]குறிப்பினவாறுஆயினவாறுபோலப் பொருளின் வேறு பிண்டம் என்பது ஒன்று உளதாகல், [12]அச்சொல்லுவான் குறிப்பின் பாலது என்றவாறு.

உ - ம் :—

அப்பிண்டம்தான் ஒன்றுபல குழீஇயதும், வேறுபல குழீஇயதும் [13]ஆக இருவகைத்து.

---

86-2 i "இயல்பின் திரியாது அவை"('இயற்பிற்' என்பது காணுவழக்கு)

vi "இயல்பில் அவை"

3 v "கூற்று அதுவாக"

4 i "மருவினை" (னை—ன எனத் திருத்தப்பெற்றுள்ளது)

vi "மருவின்"

5 i-ii-iv-v-vii "உடைமை அவை"

6 i "ஆயியரியாது"

7 vi "சினைமுதலாய்"

8 vi "பிண்டமே பொருளாய்"

9 vi "என்றவாறு. அன்றி"

10 i "ணிலமைச் சொல்லுவான்"

11 i "குறிப்பினவாருயின வ்வாறு"

vi "குறிப்பினவாருயின் அவ்வாறு"

12 iii "சொல்லுவான் குறிப்பின்"

13 vi "ஆம், ஒன்று பல"

ஒன்றுபல குழீஇயது :—[14]எட்குப்பை. எண்ணின் வேறுகுப்பை என்று உண்மை வகையின் இல்லை என்றவாறு.

வேறுபல குழீஇயது :—படைக்குழாம்.

முதல் சினை எனவும், பொருள் பிண்டம் எனவும் இவை ஆராய நின்றமையின் மற்றொன்று விரித்தல் என்னும் குற்றம் ஆம் பிற எனின், அதற்கு ஓர் அதிகாரப்பட்டு நின்றது ஆகலானும், பொருள் ஆராய்ச்சியும் [15]இச்சொல் ஆராய்ச்சிக்குப் பயன்படு நிலைமைத்து [16]ஆகலானும் அமையும் என்பது. (எ)

87. ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே.

என்பது என்நுதலிற்றோ எனின், மூன்றும் வேற்றுமைப் பொருட்கண்ணதோர் சொல்லுதல் வகைமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒரு வினைகொண்டு முடிதலுடைய ஒடு என்னும் சொல், அவ் இருவினையையுடைய இருபொருளினுமாய் அதன்பின் வருமோ எனின், அது கூறுவான் அப்பொருளின் அப்பொழுது [1]உயர்ந்ததாகக் கருதியதன்பின் வரும் என்றவாறு.

உ-ம் :—

அரசரொடு வந்தார் சேவகர் [2]என்பது; சேவகரொடு வந்தார் அரசர் [3]என்னற்க.

இனி அவ்உயர்புதாம், குலத்தா[4]ன் உயர்தலும், தவத்தான் உயர்தலும், நிலைமையான் உயர்தலும், உபகாரத்தான் உயர்தலும்

---

86-14 vi "எள் குப்பை. எள்ளின் வேறு"

15 vi "இப் பொருளாராய்ச்சிக்கு" (முன்சென்ற "பொருளாராய்ச்சி" என்பதனைத் திரும்பவும் எழுதி ஒருதொடரை விட்டபடியாம்)

16 i "ஆகலானு மும்மமையுமென்பது"

87-1 i "உயர்ந்தாகக் கருதிய ராத்தன் பின்"

v "உயர்ந்ததாகக் கருதியது யாது அதன் பின்"

2 vi "என்பதைச் சேகவ ரொடு"

3 i-ii-iv-vii "என்றற்க"

4 i "னு"

எனப் பலவகைய. ⁵இழிந்தவழி ஒடு வைத்துச் சொல்லுவது, அந்நேரத்து அவற்றுய தொழின்மைச் சிறப்பு நோக்கி என உணர்க. அவை : நம்பி நாயொடு வந்தான் என்றாற் போல்வன. (அ[6])

88. மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர்.

என்பது என்னுதலிற்றோ எனின், மூன்றாம் வேற்றுமையும் ஐந்தாம் வேற்றுமையும் ஏதுப் பொருண்மைக்கு ஒத்த கிழமைய என்பது உணர்த்துதல் [1]நுதலிற்று.

இதன் பொருள் : — [2]மூன்றாவதன் ஆனும் [3]ஐந்தாவதன் இன்னும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கப் பொருண்மையொடு [4]கூடிப் பொருந்திய ஏது என்னும் [5]பொருண்மைய. அவ்வுருபுகளான் அப்பொருள் [6]விளங்குமிடத்துப் பெரும்பான்மை உள என்று ஆராயுமிடத்து அஃதில்லை. இரண்டும் ஒரு தன்மைய என்றவாறு.

---

87-5 i "இழந்த வழி"

6 ii "(இந்தச் சூத்திரத்தின் முடிவில் முதற்பிரதியைப் பார்த்து இரண்டாம் பிரதியைப்படி செய்தவர் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்.) "இனி, முன்னர் போல அத்துணைத் திருத்தஞ் செய்தெழுதாமல் மூலப்பிரதி (மாதுருகை)யிலுள்ளபடியே எழுதலானேன்.""

88-1 ii "நுதலிற்று என்க"

2 i-ii-iv-v-vii "மூன்றாவதனானும்"

vi "மூன்றாவதனினானும்"

3 i-iv-v-vii "ஐந்தாவதனின்னானும்"

vi-viii "ஐந்தாவதனினானும்"

iii "ஐந்தாவதின்னின்றும்

4 i-iv-viii "கூடிய பொருந்திய ஏது"

ii-vi-vii "கூடிய ஏது"

5 ii-vi-vii-viii "பொருண்மை அவ்வுருபு"

6 vi-viii "விளங்குமிடத்து அஃதில்லை"

உ-ம்:—

வாணிகத்தானாயினான்; [7]வாணிகத்தின் [8]ஆயினான்.

கிளவி [9]என்றது ஆகுபெயரான் பொருளினை ஆக்கமொடு புணர்ந்தது என்று விசேடித்துக் கூறினமையின் ஆக்கமல்லா ஏது ஒத்தகிழமைத்து அன்று என்பதுபோலும் கருத்து. (௬)

89. இரண்டின் மருங்கின் நோக்க னோக்கம்அவ்
இரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும்.

என்பது என்னுதலிற்றோ எனின், இரண்டாவது மூன்றாவதனோடும் ஐந்தாவதனோடும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—இரண்டாம் வேற்றுமையிடத்து, [1]பொறியான் நோக்கப்படுதலின்றி மனத்தான் நோக்கப்படும் நோக்கும், [2]மேல் மூன்றாவதன் கண்ணும் ஐந்தாவதன் கண்ணும் ஒத்த கிழமைய என்று ஓதிய ஏதுப் பொருள்படும் என்றவாறு.

உ-ம்:—

வானோக்கி வாழும் என்பது; வானை நோக்கி வாழ்ர்; வானானாய பயனோக்கி [3]வாழும், வானினாய பயனோக்கி வாழும் எனவரும்.

ஏதுவும் ஆகும் என்ற உம்மையான் தன் பொருட்பாடே சிறந்தது.

இனி ஏதுவாம்வழிச் [4]செயப்படுபொருள்படு குறிய. நோக்கி என்பதனை ஒழிய வானைவாழும் என்றாற்போல நிற்கவேண்டும் எனின்

---

88-7 i "வாணிகத்தானாயினான்"

iv (இரண்டாம் உதாரணம் இல்லை)

8 ii-vii "ஆயினான் என்பது"

vi "ஆயினான் என்பன"

9 i-ii-iii-iv-v-vi-vii "என்பதற்குப் பெயராம்"

89-1 i-iv-v-vi-vii-viii "பெற்றியான்" (ர-ர-ற-மாறுபாடு)

2 i-ii-iv-vi-vii-viii "என மூன்றுவதன்"

3 iv "வாழும் எனவரும்"

4 vi செயப்படு பொருள் படுதற்கு உரிய" (பொருந்தாதாகலாம்.)
i-ii-iii-v "செயப்படு பொருள்குறிய" ('செயப்படு பொருள் குறிப்,' என்றாகலாம்.)

செயப்படு பொருள் [5]ஒழிய ஏதுப் பொருள்படும் என்பது அன்று கருத்து. ஏதுப் பொருட் குறிப்பொடு செயப்படு பொருளாய் நிற்கும் என்பது போலும் கருத்து. (௰)

90. அதுஎன் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுஎனு உருபு கெடக் குகரம் வருமே.

என்பது என் நுதலிற்றோ எனின், ஆறாவது நான்காவதனோடும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[1]அது என்னும் வாய்பாட்டை யுடைய ஆறாம்வேற்றுமை [2]உயர்திணைக்கண் தொக்க தொகையிடத்து அவ் அது என்னும் வாய்பாடு கெட நான்காவதாய்வரும் என்றவாறு.

உ-ம் :—

நம்பி மகன் ; [3]நம்பிக்கு மகன் என்பது இலக்கணம் இல்வழி மயங்கல். நம்பியது மகன் என்பது இன்மையின் [4]என்பது.

[5]இச்சூத்திர நயத்தானே இவ்வுருபுபோலத் தம் பொருள்பட நில்லாது பெயர்போல் ஆறுவது பால்தோன்றி நிற்கும் என்பது பெற்றாம். இந்நயத்தானே [6]வினைக்குறிப்பு நீர்மைப்பட நிற்கும்வழியும் உண்டேனும் கொள்க. (கக)

---

89-5 vi "ஒழிய ஏதுப்பொருள் குறிப்போடு" (விடுபட்டபாடம்).

90-1 v "அது என்னும் ......... ஆறாம் வேற்றுமை"

2 i "உயர்திணை வயிற்கட்டொக்க தொகை இடத்து"

ii-vi-vii "உயர்திணை வயிகட்டொக்க தொகை இடத்து"

iv "உயர்திணைத் தொகை இடத்து"

v "உயர்திணைத் தொகைக்கண் தொக்க தொகை இடத்து"

3 v "நம்பிக்கு மகன் என்பது" ............ சூத். 12, "தடுமாறு தொழிற் பெயர்" (உரைப்பகுதி முழுதும் சிதிலம்)

4 vi "என்க"

5 vi "இச்சூத்திரத்தானே இவ்வுருபோடு ஒத்து தம் பொருள்"

6 i-ii-vi-vii-viii "வினைக்குறிப்பு உரிமைப்பட"

**91. தடுமாறு தொழிற் பெயர்க் கிரண்டு மூன்றும்**
**கடிநிலை யிலவே பொருள்வயி னான.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இரண்டாவது மூன்றாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:-[1]வினையினையுடைய பெயர்க்கண் இரண்டாவதும் மூன்றாவதும் [2]நீக்கும் நிலைமையில, பொருள்படும் இடத்து என்றவாறு.*

*உ - ம்:—*

**புலிகொல் யானை** *என்பது, ஒருகால்* **புலியைக்கொன்ற [3]யானை** *எனவும்,* **புலியான் கொல்லப்பட்ட யானை** *எனவும், சொற்றொழில் இரண்டிற்கும் சென்று வருதலின் தடுமாறு தொழிற்பெயர் என்னப்பட்டது.* **[4]புலியான்** *என்புழி வினை யாதோ எனின், [5]அடும்வினை தோன்றல் என்பது. அஃதேதற் புலி கருவியாக யானைதான் பிறிதொன்றனைக் கொன்றது என்பது [6]பொருளாமால் எனின்,* **செயப்படு பொருளைச் செய்தது போல** *என்பதனாற்* **[7]கொல்லப்பட்ட** *[8]என்பது பொருளாக நோக்க அவ்வாறு ஆகாது என்பது.*

*செயப்படு பொருட்கண் வினை [9]தொகுமால் எனின்,* **செய்குன்று உறைபதி** *எனப் பிறபொருட்கண்ணும் தொகும் என்பது* (௧உ)

---

91-1 iv-viii "*தடுமாறி வரும் ... ... ...*" (*சிதிலம்*)
i-ii-iii-v-vi-vii "*முழுதும் சிதிலம்*"

2 ii "*நிற்கும் நிலைமையில்*"

3 ii-vi "*யானை புலியால்*"
iv "*யானை எனவும் சொற்றொழில்*"

4 ii "*புலி யென்புழி*"

5 ii-iv-vi-vii "*ஆண்டும் வினை தோன்றவென்பது*" ["*தோன்றல்*" *என்பது* "*கோறல்*" *போலும்.*]
i-viii "*ஆடும் வினை தோன்றவென்பது*"

6 i-iv "*பொருளா மானின்*"
ii-vi-vii "*பொருளா மாறெனின்*"

7 i-ii-iv-vi-vii-viii "*சொல்லப்பட்ட*"

8 i-iii-iv "*என்பது. என்பது பொருள்சக*"

9 iii "*தொகுமோவெனின்*"

92. ஈற்றுப் பெயர் முன்னர் மெய்யறி [1]பனுவலின்
வேற்றுமை [2]தெரிப உணரு மோரே.

என்பது என்னுதலிற்றோ எனின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இறுதிப் பெயர் முன்னர்ப் பொருள் அறிய வரும் சொல்லான் இன்ன வேற்றுமை [3]என அறிய அத்தொகைச் சொல்லது பொருளினை உணர்வார் என்றவாறு.

உ - ம் :—

புலிகொல் யானை ஓடுகின்றது, புலிகொல் யானைக் கோடு வந்தது எனவரும்.

மெய்யறி பனுவல் என்றதனாற் பொருளியைய வராதனவும் உள; புலிகொல் யானை கிடந்தது என்றாற்போல்வன. ஆண்டுச் சொல்லுவான் குறிப்பினான் அறிக. (௯௨)

93. ஓம்படைக் கிளவிக் கையும் ஆனும்
தாம்பிரி விலவே தொகைவரு காலை.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் இரண்டாவதும் [1]மூன்றாவதும் ஒத்த உரிமைய, தொகைக்கண் வரும்காலத்து என்றவாறு.

உ - ம் :—

புலி போற்றி வா வாழி [2]ஐப. ஒலி கூந்தல் நின்னல்லதியாரும் [3]இலள் இவை புலியைப் போற்றிவா எனவும் [4]புலியாற் போற்றிவா எனவும் விரியும்

92-1 i "பெனுவலின்"

2 i "தெரி உணருமோரே"

3 viii "என்பதறிய"

93-1 i "மூன்றாவது ... ... ... ஒத்த"

2 ii "ஐய என்புழி புலியை"

vi "ஐய என்பன இவை புலியை"

3 i-v "இவை புலியை"

4 ii "புலியானுய வேதம் போற்றிவா"

என்பது. புலி என்றது புலியான் வரும் [5]ஏதத்தினை. ஓம்படை என்பது போற்றுதல்.

ஈண்டும் இரண்டாவது செயப்படு பொருளொடு ஏதப் பொருள் படுகின்றது போலும்.

தொகை வருங்காலை என்றதனான் இவ்வேற்றுமை மயக்கம் எல்லாம் தொக்குழியே மயங்கும் என்பது கொள்ளப்பட்டது. முன்னே ஆன் உருபினோடு இன் உருபும் ஏதுப் [6]பொருட்கு ஒக்கும் என்று ஓதப்பட்டமையின் [7]ஒன்றென முடித்தல் என்பதனான் புலியிற் போற்றிவா என ஐந்தாவதும் கொள்க. (கச)

**94 ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்**
**கேழு மாகும் உறைநிலத் தான.**

என்பது என்நுதலிற்றோ எனின், ஆறாவதனோடு ஏழாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—ஆறாவதனிடத்து வாழ்ச்சி என்னும் உரிமைக்கு ஏழாவதும் ஆகும். யாண்டோ எனின், ஆண்டு அஃது உறைநிலத்துக்[1]கண் என்றவாறு.

உ - ம்:—

காட்டியானை காட்டதியானை [2]காட்டின் கண்யானை என விரியும்.

உறைநிலத்தான் என்றதனால் உறையா [3]நிலம் ஆயக்கால் [4]ஆறாவதன்கண் வந்தது ஆகாது, ஏழாவது தானேயாம் என்றவாறு. அஃது,

---

93-5 i "அத்திணை"

v "அச்சத்தினை." ("ச்ச" என்பது இரு பிறை வளைவுக்குள் உள்ளது.)

6 ii-vi "பொருட்டாகும்"

i "பொருட்டு காக்கும்" (இப்பிரதியில் "டு" போல் உள்ளதை கொம்பாகவும் படிக்கலாம்.)

v "பொருட் காகும்"

7 ii-vi "ஒன்றின முடித்தல்"

94-1 i "கண் ... ர் ... று"

2 i-vi-iii-viii "காட்டின் யானை"

3 viii "நில மயக்கம்"

4 ii "ஆறாவது அதன்கண் வந்தது"

ஊருள் யானையாய்க் காட்டுள் மேயவிட்டதனைக் காட்டியானை என்னும் வழக்குக் கொள்க.

மற்று [5]இஃது ஆறன்மருங்கின் வாழ்ச்சி ஆயினவாறு என்னை? அஃது யானைக்காடு என்பதன்றே? ஆண்டு யானையுட்காடு என [6]வாராதால் எனின், யானை [7]காட்டதன்கண் வாழ்தலால் உடைமையாயிற்று அன்றே. அதனான் காட்டியானை என அக்காட்டிற்கு யானையை உறுப்பாகக் [8]கூறும்வழி வாழ்தல் அடியாக நின்றது ஆகலின், அதனையும் வாழ்ச்சிக்கிழமை என்று கூறியவாறு போலும். அதனாற் போலும் [9]ஆறாவது சிறுபான்மை என்றவாறு. (கரு)

95. குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி
அப்பொருளாறற் குரித்தும் ஆகும்.

என்பது என்நுதலிற்றோ எனின், நான்காவதன் பொருள் ஆறாவதன்கண் செல்லுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[1]கு வென்னும் வாய்பாடு[2] தொக்கு வருகின்ற கொடைத் தொழிலினை ஏற்றுக்கொண்டு நின்ற சொல் மயங்குமாறு

---

94-5 i "இஃது வாழ்ச்சிம் ஆரன் மருங்கின் வாழ்ச்சி"

ii-vi-vii "இஃது வாழ்ச்சியும் ஆரன் மருங்கின் வாழ்ச்சி"

iii "இஃது ஆறன் மருங்கினை வாழ்ச்சி"

v "இஃது ஆறன் மருங்கின் வாழ்ச்சி" (இடம் விட்டுள்ளது காண்க)

6 i-ii-iv-vii "வாகாதால்"

vi "ஆகாதால்"

7 i "காட்டன் கண்"

ii-vi-vii "காட்டின் கண்"

v "காட்டின்" (காட்டன் கண் என மேலே எழுதப்பெற்றுள்ளது)

8 i-iv-viii "கூறு வழி"

9 vi "என்றது"

i-ii-iv-vii "என்றுவது"

95-1 ii "குவ்வென்னும்"

2 i-iv "தொக்க"

ii-v-vii "தொக"

[3]கூறின் அப்பொருண்மை ஆருவதன் உடைமைப் பொருளார்தற்கு உரித்தும் ஆம் என்றவாறு.

உ - ம் :—

நாகர் பலி என்பது நாகர்க்குப் பலி, நாகரது பலி என விரியும்.

கொடைக் கிளவி என்றது எதிர் கிளவி என்றதனுன் இவ்வாறு மயங்குவது [4]எதிர்கிளவி யாயக்கால் ; அல்லாக்கால் மயங்காது என்பது.

[5]எதிர்தரல் என்பது [6]விழுப்பமுடையாரை நுதலியக்கால் கொண்டு வைத்து விரும்பிக் கொடுப்பது. [7]மற்றுஇது கொடை நிகழ்த்தினமையின் நான்காவது ஆயவாறு என்னை எனின், [8]நிகழ்ந்ததே அன்று, கொடை [9]நிகழ்கின்றதும் நிகழ்வதும் பொருண்மை வகையாற் கொடை எனப்படும் என்பது. (கரு)

96. அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்
எச்சம் இலவே பொருள் வயினான.

என்பது என்நுதலிற்றோ எனின், ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

95-3 i-ii-iv-vii " கூறின வப்பொருண்மை "

v " கூறின அப்பொருண்மை "

4 i-iv " எதிர் கிளவியாய்க் கல்லாக்காம் மயங்காது " (வேண்டா இடத்துப் புள்ளியிட்டதன் விளைவு)

v " எதிர் கிளவி ......... கல்லாக்கால் மயங்காது "

vi-viii " எதிர் கிளவி அல்லாக்கால் மயங்காது " (இடம்விட்ட பகுதியைப் பொருட்படுத்தாது எழுதின பாடம்)

5 i-iv-v " எதிர்கால் "

ii-vi-vii " எதிர்தல் "

6 ii " விருப்பமுடையாரை "

7 ii-vii " மற்றிது கொடை நிகழ்த தின்மையின் "

vi " மற்றிது நிகழ்தலின்மையின் "

8 i-ii-iv-vi-vii-viii " நிகழ்ந்தே யன்று "

9 " (நிகழ்கின்ற என்பதன் பின் vi-ம் பிரதி முற்றுப்புள்ளியிடும். v-ம் பிரதி கேள்விக்குறியிடும் நிகழ்கின்றதும் என ஈற்றில் மகர மெய் அந்தப் பிரதியிலும் காணப்பட இல்லை. புணர்ச்சி விதியின்படி மகரம் நில்லாதாகலின் அதனைக் காண்பதற்கில்லை.)

இதன் பொருள் :—அஞ்சுதல் என்னும் பொருண்மைக்கு ஐந்தாவதும் இரண்டாவதும் தம்மில் [1]ஒத்த நிலைமைய, பொருள்படும் இடத்து என்றவாறு.

உ - ம் :—

புலி அஞ்சும் [2]என்பது புலியின் அஞ்சும், புலியை அஞ்சும் என விரியும். அவ்அச்சம் [3]கள்ளரின் அஞ்சும் என்னும்வழக்கிற் பொருள்படு நிலைமையும் உண்டு. ஈண்டு அது கொள்ளற்க.

ஓம்படை என்பதற்கண் [4]கூறிய நயத்தாற் புலியான் அஞ்சும் என மூன்றாவதன் வரவும் கொள்க. (கஎ)

97. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினும் மெய்தடுமாறி
இருவயி னிலையும் வேற்றுமை எல்லாந்
திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே.

என்பது என்னுதலிற்றோ எனின், வேற்றுமை [1]மயக்கத்திற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—மேல் எடுத்து ஓதப்பட்ட [2]அத்தன்மையனவும் பிறவும் ஆகிய [3]பழையதாகிய நெறிமுறைமையினைப் பிழையாது உருபானும் பொருளானும் தத்தம் வடிவு தடுமாறித் தனக்குரிய இடம் பிறிதின் இடம் ஆகிய அவ்இரண்டிடத்தும் நிலைபெறுகின்ற வேற்று-

---

96-1 vi-viii " ஒத்த நிலைமையாம் பொருள் "

2 vi-viii " என்பது புலியை அஞ்சும் "

3 ii-vi " கள்ளரின் மிக அஞ்சும் "

4 i-iv " கூறியவத்தால் "
ii-viii " கூறியாயத்தால் "
v " கூறிய நியாயத்தால் "
vi " கூறியவற்றால் " (ர—ந மாறாட்டம். இதன் பயனாக விளக்கம் கருதி எழுந்த திருத்தங்கள் காண்க.)

97-1 vi " மயக்கத்திற்கும் புறநடை "

2 vi " அத்தன்மையன பிறவும் "

3 ii-vii-v " பழைதாகிய "

மையுள் எல்லாம் அமையாவழு என்று கழிக்கப்படுதலைத் [4]தன்னிடத்துடைய அல்ல ஆராய்வார்க்கு என்றவாறு.

இதனாற் சொல்லியது வேற்றுமை ஓத்தின்கண் இன்னபொருட்கு இன்னது உரித்து என எடுத்து ஓதப்பட்ட வேற்றுமைகள் அவ்அப் பொருட்கு [5]உரியவாருய் நில்லாது பிறபொருட் கண்ணும் சென்று மயங்குதல் [6]உடைமைகண்டு 'இவை வழுவன்றே' என்று வினைய மாணுக்கற்கு 'அவை மேற்ருெட்டுப் பிற [7]பொருண்மேலும் வழங்கி வருதலான் வழக்கு முடிவினை ஆராய்ந்த முதல் நூலாசிரியர்களும் வேற்றுமை வழு என்று புறத்திட்டார் அல்லர், அதனுனே, யானும் அம்முடியே நேர்ந்தேன்' என்பது கூறியவாறு. இதுவும் மரபு வழுவமைதி.

அன்ன பிறவும் என்றதனாற் [8]கொள்வனவற்றிற்கு உதாரணம் :— முறைக் குத்துக் குத்தினுன் என்பது ஓர் தொகை; [9]முறையாற் குத்தினுன், முறையிற் குத்தினுன் என மூன்ருவதும் ஐந்தாவதும் ஏதுப்பொருட்கண் மயங்கி விரிந்தது.

இனித் தொகையன்றி நின்று கடலொடு காடொட்டாது என்னும் வழக்கின்கண் கடலைக் காடொட்டாது என இரண்டாவது மயங்கி வந்தது. இன்னும் தொகையல்லாத தந்தையொடு சூளுற்ருன் என்னும் வழக்கின்கண் தந்தையைச் சூளுற்ருன் என இரண்டாவது மயங்கிவந்தது. பிறவும் அன்ன. (கஅ)

---

97-4 v "தம்மிடத்துடைய"

5 viii "உரியவருயே"

6 i-iv "உடிமை கண்டு"

ii-vii-vi-viii "உண்மை கண்டு" (ண—டை மாருட்டம் "உண்மை' என்பதும் ஏற்ற பாடமாம்)

7 vi "பொருள் மேலும் வழக்கு முடிவினை ஆராய்ந்த முதல் நூலாசிரியர்களும் வழங்கிவருதலால் புறத்திட்டாரல்லர்"

8 ii-vii "கொள்ள"

vi-viii "கொண்டவற்றிற்கு"

9 ii-vii "முறையாற்குத்தினுன் என மூன்ருவது முறையிற் குத்தினுன் என ஐந்தாவதும் ஏதுப்பொருட்கண்.

vi "முறையாற் குத்தினுன் என ஐந்தாவதும் ஏதுப்பொருட்கண்"

**98. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொல் நடைய பொருள்சென் மருங்கே.**

*என்பது என்நுதலிற்றோ எனின் :—பல உருபு தொடர்ந்து அடுக்கியவழிப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—*[1]*ஐ முதலிய அறுவகை உருபும் தம்பொருள் தொடர்ச்சிபட* [2]*அடுக்கி வருகின்ற அவ்வேற்றுமைப் பொருண்மையினை உடைய சொற்கள் அவ்அடுக்கின் கடைக்கண் நின்ற வேற்றுமைச் சொல்லிற்கு முடிபாகிய சொல்லினையே தமக்கும் முடிபாக உடைய, பொருள்படுமிடத்து என்றவாறு.*

*உ-ம் :*

**யானையது கோட்டை நுனிக்கட்குறைத்தான்** - *யானையது என்பது கோடு என்பதனோடு தற்கிழமைப்பட்டு ஆண்டே முடிந்தது.* **நுனிக்கண்** *என்னும் ஏழாவது குறைத்தான் என்பதனோடு முடிந்தது.*

*இடைக்கண் நின்ற* [3]*கோட்டை என்னும் இரண்டாவது முடிபு இன்றி நின்றது. அவ்வாறு தனக்கு உரியதோர் முடிபு இன்றேனும், ஏழாவதன் முடிபோடு முடிந்ததாகக் கொள்ளப்படும், அவ்வாறு பொருள்பட நின்றமையான் என்பது.*

[4]**தினையிற் கிளியைக் கடியும்,** *என்பது தினையின் என்னும் ஐந்தாவது கிளியை என்னும் இரண்டாவதன் வினையொடு முடிந்தது, பிறவும் அன்ன.*

*அதிகாரத்தான் இதுவும் ஓர் மரபுவழுவமைதி என உணர்க.* (௯௧)

**99. இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்.**

*என்பது என்நுதலிற்றோ எனின், உருபு நிற்குமிடம் கூறுதல் நுதலிற்று.*

---

98-1 vi "*ஐம்முதலிய*"

2 iii "*அடுக்கிவருகின் அவ்வேற்றுமைப் பொருண்*"

3 vi "*கோடு என்னும்*"

4 iii "*தினை*"

இதன் பொருள் :—இருபொருளின் இறுதிக்கண்ணும், அவ் இருபொருளின் இடையின் கண்ணும் அறுவகை வேற்றுமை உருபு வழக்குப்படும் பொருளிடத்து, நிலைபெறுதலை நீக்கார் ஆசிரியர் என்றவாறு.

உ - ம் :—

கடந்தான் நிலத்தை,

வந்தான் சாத்தனொடு,

கொடுத்தான் சாத்தற்கு,

வலியன் சாத்தனின்,

ஆடை சாத்தனது,

இருந்தான் குன்றத்துக்கண் ;

இவை இறுதிக்கண் வந்தன.

நிலத்தைக் கடந்தான்,

சாத்தனொடு வந்தான்,

சாத்தற்குக் கொடுத்தான்,

சாத்தனின் வலியன்,

சாத்தனதாடை,

குன்றத்துக்கண் இருந்தான் ;

இவை இடையின்கண் வந்தன.

[1]மற்று ஈறு பெயர்க்காகும் என்ற வழி அடங்கிற்று, பிற, எனின், [2]அஃது ஒரு சொற்கண் உருபு நிற்குமாற்றிற்குச் சொல்லியது. [3]இஃது இருசொற்கண் உருபு நிற்குமாற்றிற்குச் சொல்லியது என உணர்க.

---

௯௯·1 ii-vi-vii " மற்று இது பெயர்க்காகும் "
i-iv " மற்றீது பெயர்க்காகும் "
iii " மற்றீற்று பெயராக்கும் "

2 i-ii-iv-vi-vii " அஃதொருகண் சொற்கண் "

3 i-ii-iv-vii " இஃது இருகண் உருபு நிற்கு மாற்றிற்கு சொல்லியது என "
vi " இஃது என "

அஃதேல் அவ் ஒரு சொற்கண் நின்ற உருபினை அதன் முடிபாகி-வருஞ் சொல்லோடு படுத்து நோக்க, இருசொற்கண் [4]வந்ததாம் என்பது சொல்லாமையும் அமையவும் பெறும் அன்றோ எனின், அவ்வாறு உய்த்து [5]உணர்வதனையே இனிது உணர்தற் பொருட்டாக-வும், உருபுநோக்கிவரும்சொல் அவ்வுருபின் முன் நில்லாது பின் நிற்றன் மயக்க நீர்மைத்து [6]என்பது அறிதற்பொருட்டாகவும் ஈண்டு கூறினா[7]ன் என உணர்க.

வரையார் எனவே வழுவுடைத்து என்பது போந்தது [8]நெறிபடு-பொருள் என்றதனால், இவ்வாறு இடையும் இறுதியும் உருபு நிற்பது உருபேற்று வழங்கும் பெயர்க்கண்ணே; வழங்காத பெயர்க்கண் நில்லா என்பது.

உ-ம் :—

அவ்வழிக் கொண்டான் என்பது அவ்வழிக்கட் கொண்டான் எனவும், கொண்டான் அவ்வழிக்கண் எனவும் அவ்வாறு வழங்குவார் [9]இன்மையின் நில்லாதாயிற்று. வழங்குவார் உண்மையின் அவ்விடம் என்னும் பெயர்க்கண் அவ்விடத்துக்கண் கொண்டான் எனவும் [10]கொண்டான் அவ்-விடத்துக்கண் பொருள் எனவும் நின்றது என உணர்க.

மற்றிஃது [11]எவ்வயிற் பெயரும் என்புழி அடங்கிற்றன்றோ எனின், இதுவும் அவ் இரு சொற்கண் வருமாற்றிற்குக் கூறினா[12]ன் என்பது. (உ௰)

---

99-4 i "வந்தாம்"

5 v "உணர்வதனையே எளிதின் உணர்தற் பொருட்டாகுக"

6 i "என் பொருட்டாகவும்"

ii-v-vi-vii "எனற் பொருட்டாகவும்"

7 "ர்"

8 i "நெறிப்படு பொருள்"

9 v "நீங்கியவை இன்மை இல்லாதாயிற்று"

10 ii-vi-vii "கொண்டான் அவவிடத்துப் பொருள்"

i "கொண்டான் அவ்விடத்துப் பொருளெனவும்"

11 ii-i-iv-vii "எவ்வழியிற் பெரும்"

12 "ர்"

**100. பிறிது பிறிதேற்றலும் உருபுதொகை வருதலும்**
**நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.**

என்பது என்நுதலிற்றோ எனின், விசேட வகையான் [1]உருபிற்குரியதோர் இலக்கணமும் எல்லா உருபிற்கும் பொதுவாயதோர் இலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஓர் உருபு ஓர் உருபினை ஏற்று நிற்றலும், எல்லா உருபுகளும் தொக்கு வருதலும் இவை இரண்டு முறைமைப்பட [2]இயலும் வழக்கின்கண்ணே உள என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உ - ம் :—

பிறிது பிறிதேற்றற்கு உதாரணம்:—சாத்தனதனை, சாத்தனதனொடு, என ஏழாவதன் காறும் ஒட்டுக. [3]சாத்தனதுவது எனத் தன் உருபு தன்னை ஏலாது.

பிறிது பிறிதேற்கும் என ஏற்பது ஆறுவது [4]என்பதாஉம் அதனை ஒழிய ஏற்கும் என்பதாஉம் பெறுமாறு என்னை எனின், முன்னர் உருபு ஏற்பது பெயர் என்று கூறினமையிற் [5]பிறிது எனவே அது அல்லாது என்பது பெற்றும்.

---

100-1 iii " ஆறும் உருபிற்குரிய " (இப்பாடமே பொருந்தும் எனல் வேண்டும்)

2 i-ii-iv-v-vii " இயலும் ... ... ... ... கண்ணே யுள என ... ... ... வர் ஆசிரியர் "

3 i-ii " சாத்தன்தனை சாத்தன்தனொடு "

4 i-ii " என் ... ... ... மதனை "

vi-viii " என ... ... ... அதனை "

iii " என்பதுவும் அதனை "

5 i " என வெய்து வல்லாதென்பது "

ii-vi-viii " என எய்துப அல்லாதென்பது "

அஃதே எனின் பிற சொற்களும் [6]பிறிது எனப்படுமால் எனின், உரையிற்கோடல் என்பதனான் [7]இதுவேயாயிற்று என்பது. பிறிதேற்றல் எனவே தன்னை ஏலாது என்பது பெற்றாம். இனி [8]ஒன்றினமுடித்தல் என்பதனாற் சாத்தனது நன்று எனப் பயனிலை கோடலும் சாத்தன ...... விளியேற்றலும் உடைத்து என்பது கொள்ளப்படும்.

உருபு [9]தொக்கு வருவதற்கு உதாரணம்:— நிலம் கடந்தான், தாய் மூவர், கருப்பு வேலி, வரைவீழ் அருவி, சாத்தன் ஆடை, குன்றக்கூகை எனவரும்.

இவ்வுருபுகள் தொகுமிடத்து உருபும் பொருளும் உடன் தொகலும் ஒரு வழி உருபே தொகலும் என இருவகைய. அவ் ஆறு உருபினுள்ளும் [10]ஆறாவது ஒன்றும் உருபே தொகுவது; அல்லன எல்லாம் இவ்வாறு தொகும் எனக்கொள்க.

[11]படைக்கை என்பது உருபும் பொருளும் உடன் தொக்கது.

நிலங்கடந்தான் என்பது உருபு தொக்கது. பிறவும் அன்ன.

இதனாற் சொல்லியது உருபு தன் இலக்கணம்மாறிப் [12]பெயரதன் இலக்கணம் எய்துதலும், தன் பொருள்வழித் தான் நில்லாதாகலும் வழுவே எனினும் முற்கொண்டமைந்த வழக்கு ஆதலான் [13]களையலாவன அல்ல என மரபு வழுவமைதி கூறியவாறு. (உக)

---

100-6 i-ii-iv-vii " படுமாலே ... ... ... கோடல் "
vi-viii " படுமால் .... .... .... கோடல் "

7 i-vi " இது வெயிற்றென்பது "
ii-vi-vii " இது வயிறென்பது "

8 v " ஒன்றென முடித்தல் "

9 v " தொகவருவதற்கு "

10 vi " ஆறுவது உருபே தொகுவது "

11 i-vi " படக்கை "
iii " படர்க்கை "

12 i-iv " பெயரதில் இலக்கணம் "
ii-vii " பெயரதிலக்கணம் "
vi " பெயரிலக்கணம் "

13 i " களையலாவென் வல்ல வென "
v " களையலாகா என "

**101. ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு [1]தொகா இறுதி யான.**

என்பது என்நுதலிற்றோ எனின், மேல் உருபுகள் [2]தொகவரும் [3]என்புழித் தொகவருவனவற்றது நிலை ஒவ்வாமை கண்டு அஃது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— இரண்டாவதன் பொருண்மையும், ஏழாவதன் பொருண்மையும் அல்லாத பொருள்களிடத்து வருகின்ற உருபுகள் தமக்கு உண்மையாகிய வடிவு [4]தொக்கு நில்லா, இருமொழியின் இறுதிக்கண் என்றவாறு.

உ - ம் :—

கடந்தான் நிலம், இருந்தான் குன்றத்து எனவரும். வந்தான் சாத்தனொடு என்பது வந்தான் சாத்தன் என [5]ஒடுத்தொக்குழி அப்பொருள் [6]விளங்காமையின், அந்நிகரன இறுதிக்கண் தொகா ஆயின.

“நாளிலமன்ற” என்னுங் குறுந்தொகையுள் [7]“பிரிந்திசினோர்க்கழல்” என ஆன் இறுதிக்கண் [8]தொக்கு நின்றதால் எனின், [9]அந்நிகரன வழக்கினுள் இன்மையின் செய்யுள் [10]விகாரம் எனக் கொள்க. (௨௨)

---

101-1 ii-vii “தொகா அ” (இவ்வாறு கொண்டால்மட்டுமே சீர் நிறம்பும். ஆனால் பிற பிரதிகளில் எல்லாம் இப்பாடம் இல்லை ii-vii பிரதிகள் ஒன்றும் பிரதியைப் படித்துப் படி செய்தவை யாதலின் இத் திருத்தத்திற்கு மூலம் என்ன என்று விளங்க வில்லை.)

2 ii-v-vi-vii “தொக்கு வரும்”

3 i “என்றுழின் தொக்கு வரு”
ii “என்றுழித் தொக்கு வரு”
v “என். ழித் தொக்கு வரு”

4 i-iv “தொச்கு விரு மொழின்று உதிக்கண்”
ii-vii-viii “தொக்கு இரு மொழியினிறுதிக் கண்”
vi “தொகா இரு மொழியினிறுதிக் கண்”
v “தொக்கு வரும் மொழியின் இறுதிக்கண்”

5 vi “ஒருத் தொக்குழி” (ரு—டு மாறுபட்டம்)

6 v “விளக்காமையின்”

7 i-ii-vi-vii “பிரிந்திசிரோனுக்கழல்”

8 i-iv “தொக்கு எனின் நின்றதா லெனின்”

9 i “அன்னிகரேன”

10 i-ii-iv-vi-vii “விகார மெனக”

102. யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை [1]சாரும்.

என்பது என்நுதலிற்றோ எனின், உருபுகள் [2]ஓரோவழித் தம் [3]பொருண்மையின்றியேயும் மயங்குதல் உடைய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒரு பொருண்மை யாதானும் ஓர் உருபினாற் கூறப்பட்டதாயினும் அப்பொருண்மை அவ்வுருபினதாகாது, அப்பொருள் செல்லும் கூற்றினையுடைய வேற்றுமை ஆண்டுவந்து [4]சார்ந்த அப்பொருளினைக் கொள்ளும் என்றவாறு.

உ - ம் :—

கிளையரி நாணற்கிழங்கு மணற்கீன்ற
முளையோரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய் [5]என்னும் பாட்டினுள் மணலுள் ஈன்ற என்பது மணற்கீன்ற என்றாயிற்று.

இவ்வாறு பொருளன்றியும் மயங்கும் [6]என்பதேல், வேண்டியவாறு எல்லாம் வரப்பெறும் என்றவாறாம் பிற, எனின், அதுஅன்று ; [7]வழக்குள்வழியதுஅம் முடிபு எனக் கொள்க. (உஅ)

103. எதிர்மறுத்து மொழியினும் தத்தமரபிற்
பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே.

என்பது என்நுதலிற்றோ எனின், அவ்வேற்றுமைகள் தம் பொருள்மாறுபட நின்றவழியும் தம்பொருள என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

102-1 i-iv "சாம்"
2 i-iv "ஓரோர்"
3 i-iv "பொருண்மையின்றி மெய்யும் மயங்குதல்" (குறிலிலும் நெடிலிலும் கொம்பு ஒன்றுபோலவே ஓலையில் வரும் ய—ம மாருட்டம்.)
4 i-ii-iv-vii "சார்ந்தப் பொருளினை"
v "சார்ந்து அப் பொருளினை"
5 ii-vii "என்னும் மணலுள்"
6 i "என் தேல்"
iv-vi "என்றேல்"
v "எனின்"
ii-vii "என்ற தேல்"
7 ii-vii "தமக்குள் வழிய"

இதன் பொருள் :—ஐ முதலிய [1]ஐவகை உருபிற்கும் செயப்படு பொருள் முதலாக ஓதப்பட்ட பொருண்மைகளை எதிர்மறைபடச் [2]சொல்லும் தமக்குரிய மரபாகிய அப்பொருள் நிலைமையின் திரியா அவ்வவ் வேற்றுமைச் சொற்கள் என்றவாறு.

உ - ம் :—

மரத்தைக் குறையான் ; சாத்தனொடு வாரான் எனவரும் ; பிறவும் அன்ன. (உச)

104. கு ஐ ஆன்என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யுள் உள்ளே.

என்பது என்நுதலிற்றோ எனின், அவ்வுருபுகள் [1]ஒருசாரன செய்யுளின் திரிபுபட நிற்றலுடைமை கண்டு அஃது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]கு என்றும், ஐ என்றும், ஆன் என்றும் சொல்ல வருகின்ற [3]உருபு ஈறுகள் அகரத்தொடு பொருந்தி ஈறுதிரிந்து நிற்றலும் உடைய, செய்யுளிடத்து என்றவாறு.

[4]அவை முன்னர்ச் [5]சொல்லுதும். (உரு)

105. [1]அவற்றுள்,
அ எனப் [2]பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்என மொழிப.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

---

103-1 viii "அறுவகை"
2 viii "சொல்லினும் தமக்குரிய"
104-1 i-ii-iv-vii "ஒருசாரான்"
2 i-iii "என்றும்"
ii-vii "குவ் வென்றும்"
3 i "உருபு ஈறுகள் ஆகாரத்தோடு"
v "உருபுகள் அகரத்தொடு"
4 i-ii-vii "அவைகளை"
5 i "சொல்லும்"
105-1 i "ஆயெனப் பிறத்தல்"
2 vi "பிறந்தல்"

இதன் பொருள் :—அ என ஈறு[3] திரிந்து நிற்றல் [4]அஃறிணையிடத்துக் கு என்னும் உருபும், ஐ என்னும் உருபும் நில்லாமையை உடைய என்றவாறு.

எனவே உயர்திணையிடத்து மூன்றுஉருபும் திரியும் என்பதூஉம், அஃறிணைக்கண் ஆன் என்னும் உருபு ஒன்று திரியும் [5]என்பதூஉம் பெற்றாம்.

உ - ம் :—

[6]கடிநிலையின்றே ஆசிரியர்க்க எனற்பாலது ஆசிரியர்க்க என்று ஆயிற்று.

[7]காவலோனக் களிறஞ்சும்மே எனற்பாலது காவலோன என்று ஆயிற்று.

[8]புலவரினான் என்பது புலவரினான என்று ஆயிற்று. இவை உயர்திணைக்கண் திரிந்தவாறு.

[9]புள்ளினான் என்றது புள்ளினான என்று ஆயிற்று. இஃது அஃறிணைக்கண் திரிந்தவாறு.

[10]அவ்வொடும் என்ற உம்மை எதிர்மறை ஆகலான் ஈறு[11]திரியாமல் [12]நிற்றல் பெரும்பான்மை. இவை இடைச்சொல்லாதலின் தம்மீறு-

---

105-3 iii "திரித்து"

4 viii "அஃறிணையிடத்து குவ்வென்னும் உருபு"

5 i "என்தூஉம்"

6 ii-vii "கடிநிலையின்றே ஆசிரியர்க்க என்புழி ஆசிரியர்க்கு எனற்பாலது ஆசிரியர்க்க என்றாயிற்று."

vi "கடிநிலையின்றே ஆசிரியர்க்க ஆசிரியர்க்கு எனற்பாலது ஆசிரியர்க்க என்றாயிற்று."

viii ("ஆசிரியற்கு" என்றெங்கும் ஒருமையில் வரக் காண்கிறோம்")

7 vi "காவலோனக் களிறஞ்சும்மே. காவலோனை எனற்பாலது காவலோன என்றாயிற்று."

8 vi "புலவரினான் என்பது புலவரான என்றாயிற்று. இவை உயர்திணை."

iii "புலவரான் என்பது புலவரினான என்றாயிற்று. இஃது அஃறிணை." (ஒருவரி விடப்பட்டது.)

9 v "புள்ளியினான் என்பது புள்ளியினான"

10 i "ஆ ஓடும்"

11 v "திரியாது"

12 ii "நிற்றல் தம்மீறு திரிதல் என்புழி"

தீர்தல் என்புழி அடங்காதோ எனின், வழக்கினுள் இவ்வாறு வாராமையின் அடங்கா என்பது. (உசு)

106. இதன திதுஇற் றென்னும் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்
அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்
முறைக்கொண்டு எழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்கன் உருபின்
தொன்னெறி மரபின தோன்ற லாறே.

என்பது என்நுதலிற்றோ எனின், நான்காம் வேற்றுமை ஏனைய வேற்றுமைக்கண் எல்லாம் சென்று மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—[1]இப்பொருளினுடையதுதான் இத்தன்மைத்து என்று சொல்லப்படும் ஆறாவதன் பொருண்மையும், ஒன்றனை ஒன்று கொண்டிருக்கும் என்று சொல்லப்படும் இரண்டாவதன் பொருண்மையும், ஒன்றான் ஒன்று செயற்பாடு உடைத்தாதற்குப் பொருந்துதல் என்னும் மூன்றாவதன் பொருண்மையும், [2]முறைமையைக் கொண்டு எழுந்த ஆறாவதன் பெயர்ச்சொல்லாகிய சொல்லின் பொருண்மையும், எல்லைப் பொருண்மையை வரைந்து [3]உணர்த்துதலுடைய ஐந்தாம்வேற்றுமைப் பொருண்மையும், பண்பினாகிவருகின்ற ஐந்தாவதன் பொரூஉப் பொருண்மையும், காலப் பொருண்மையான் அறியப்படுகின்ற ஏழாம் வேற்றுமைப் பொருண்மையும், [4]பற்று விடுதலாகிய ஐந்தாவதன் நீக்கப் பொருண்மையும், தீர்தல் என்னும்

---

106-1 i-iv-v "இப்பொருளினுய ... தான்"

ii-vii "இப்பொருளினுடைய திப்பொருள் அதுதான்"

2 ii-vii "முறைப் பொருண்மையைக் கொண்டெழுந்த"

iii "முறைப் பெயருண்மையைக் கொண்டெழுந்த"

3 i "உணர்த்தலுடைய"

4 i-iv-v "பெற்று வருதலாகிய"

வாய்பாட்டதாகிய ஐந்தாவதன் [5]நீக்கப்பொருண்மையும் அத்தன்மையன பிற வேற்றுமைப் பொருளிடத்து [6]நான்கன் உருபின் அடைத்துக்கூறுதலைப் பழையநெறிமுறையாவுடைய; அவை தோன்று நெறிக்கண் என்றவாறு.

உ - ம்:—

யானையது கோடு கூரிது என்புழி [7]யானைக்குக் கோடு கூரிது என்று ஆயிற்று.

[8]இவனைக் கொள்ளும் [9]இவ்வணி என்புழி [10]இவனுக்குக் கொள்ளும் இவ்அணி என்று ஆயிற்று.

வாயான்தக்கது வாய்ச்சி என்புழி வாய்க்குத்தக்கது [11]வாய்ச்சி என்று ஆயிற்று.

ஆவினது கன்று என்புழி ஆவிற்குக் கன்று என்று ஆயிற்று.

[12]கருவூரின் கிழக்கு என்புழி கருவூர்க்குக் கிழக்கு என்று ஆயிற்று.

சாத்தனின் நெடியன் என்புழி சாத்தற்கு நெடியன் என்று ஆயிற்று,

மாரியுள் வந்தான் என்புழி மாரிக்கு வந்தான் என்று ஆயிற்று.

ஊரிற் பற்றுவிட்டான் என்புழி ஊர்க்குப் பற்றுவிட்டான் என்று ஆயிற்று.

ஊரிற்றீர்ந்தான் என்புழி ஊர்க்குத்தீர்ந்தான் [13]என்று ஆயிற்று, என இவை.

---

106-5 ii "நீக்கற் பொருண்மை"

6 v "நான்கனுரு ... ... ... அவை தோன்றும் நெறிக்கண்"

i "நான்கன் உருபிற் அடத்துக் கூறுதலை நீக்கப் பழைய நெறி முறையா உடைய அவை தோன்று நெறிக்கண்"

7 i "யானைக்கோடு கூரிது என்றுயிற்று"

ii "யானைக்கோடு கூரிது என்றவாறுயிற்று"

8 vi "இவனைக்"

9 i "இவ்வழி"

10 vi "இவனுக்கு"

11 i "வாயற்றக்கது வாச்சி"

12 iv "கருவூரின் ... என்றுயிற்று மாரியுள்" (வரி விடுபட்டது.)

13 vi "என்றுயிற்று. இனி அன்ன பிறவும்"

ii "என்றுயிற்று என இவையாம் இனி அன்ன பிறவும்"

இனி, அன்ன பிறவும் [14]என்றதற்கு உதாரணம் :—ஊரிற் சேயன் என்புழி ஊர்க்குச்சேயன் என்று ஆயிற்று. காட்டிற்குஅணியன் என்பதும் அது.

இவை எல்லாம் உருபும் பொருளும் உடன்மயங்கின எனக் கொள்க.

மற்று இம் [15]மயக்கம் அன்ன பிறவும் என்புழி, அதிகாரத்தானே அடங்காதோ எனின், அஃது ஒன்றனோடு சென்று பரிமாறும் அதிகாரத்தது ; இஃது ஒன்று பலவற்றோடு சென்று மயங்கும் அதிகாரத்தது ; ஆகலின் அதனுள் அடங்காது என்ப. (௨௭)

**107. ஏனை உருபும் அன்ன மரபின**
**[1]மானம் இலவே சொன்முறை யான.**

என்பது என்நுதலிற்றோ எனின், நான்காவது ஒழித்து ஒழிந்த வேற்றுமை மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — நான்காவது ஒழிந்த உருபுகள் ஐந்தும் நான்காவதுபோலப் [2]பல வேற்றுமைப் பொருட்கண்ணும் சென்று மயங்கும் இடத்துக் [3]குற்றம் இல. அவ்வாறு சொல்லிவரும் வழக்கு முறைமைக்கண் என்றவாறு.

[4]உதாரணம் :—வழக்கினுளவேற் கண்டு[5]கொள்க. காணுமையிற் காட்டாமாயினும். (௨௮)

**108. வினையே செய்வது செயப்படு பொருளே**
**நிலனே காலம் கருவி என்று**

---

106-14 vi "என்றதனுன் ஊரிற் சேயன்"

15 i "மயக்கமென்ன பிறவும்"

107-1 i "மாணமிலவே"

2 i-v "பல வேற்றுமை பல பொருட்கண்ணும்"

3 ii-vi-vii-viii "குற்றமில்லை"

4 vi "வழக்கினுளவேல் கண்டு"

5 i-iv-viii "கொள்க என்பன காணுமையிற் காட்டா மரபினும்" (மா - மர ; பி - பி.)

ii-vi "கொள்க என்பன காணுமையிற் காட்டா மரபினவாம்"

[1]இன்னதற்கிது பயனாக என்னும்
அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முத னிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், [2]வினைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — [3]தொழிலினையும் தொழில் நிகழ்த்தும் கருத்தாவினையும், அவனாற் செய்யப்படும் பொருளினையும், அவன் தொழில் நிகழ்த்தற்கு இடமாகிய நிலத்தினையும், அதற்கு இனமாகிய காலத்தினையும், [4]அவற்குத் துணையாகிய கருவியினையும், [5]இன்னாற்கு இவன் இது செய்யப்படுகின்றான் என்று சொல்லப்படுகின்ற அப்பொருளினையும், [6]இவனை இதுஎனு ... பயமாகச் [7]செய்யப்படுகின்ற அப்பொருண்மையினையும் தொகைசெய்து அவ்எட்டும் என்று சொல்லுவர் ஆசிரியர், வினைச்சொற் பிறத்தற்கு இடமாகிய பொருளது நிலைமையை ; என்றவாறு.

உ - ம் :—

வனைந்தான் என்பது. இதனுள் எட்டும் வந்தவாறு :-வனைந்தான் என வனைதற் றொழின்மை விளங்கிற்று. வனைந்தான் என [8]ஒருவனும்

---

108-1 i "இன்னகர்கிது"

2 ii-vii "இஃது வினைச்சொல்"

3 ii-vii "தொழிலினையும் அத்தொழினிகழ்ந்தும்"

vi "தொழிலினையும் தொழில் நிகழ்ந்தும்"

4 vi-viii "அதற்குத் துணை"

ii "இன்னாற்கு இவன் இதைச் செய்கின்றான் என்று சொல்லப்படுகின்ற அப்பொருளினையும்"

vi "இன்னாற்கு இவன் என்று சொல்லப்படுகின்ற அப் பொருளினையும்"

6 i-iii-iv-v "இவனை ... ... ... பயமாக"

vi "இவனை ஏற்றுக்கொண்ட அதனால் பயமாக"

7 iii "செய்யப் படுகின்றான் என்று சொல்லப்படுகின்ற அப் பொருண்மையினையும்"

8 ii "தொழிலியற்றுவான் ஒருவனும்"

vi "ஒருவனும் வனையப்பட்ட"

விளங்கினன். வனையப்பட்ட [9]குடமுதலாய [10]செயப்படுபொருளும் விளங்கிற்று. வனைந்ததோர் இடம் அகமானும் புறமானும் விளங்கிற்று. கோலும் திகிரியும் முதலாகிய கருவியும் விளங்கிற்று. வனைவித்துக் கொண்டானும் [11]விளங்கிற்று. வனைந்தான் பெற்றதொரு பயனும் [12]அறமானும் பொருளானும் விளங்கிற்று. பிறவும் அன்ன.

வினையது இலக்கணம் வினையியலுள் [13]கூறற்பாலது. அதனை, ஈண்டுக் கூறியது என்னை எனின், வேற்றுமைகளைப் பெயர்க்கே உரிமைசெய்து கூறினமையின் வினையோடு [14]என்னும் இயல்பில என்பது பட்டு நின்றமையின் அவ்வினை வரும்காலம் [15]வேற்றுமைகளொடு வருவது என்பது அறிவித்தற்கு ஈண்டுக் கூறப்பட்டது.

[16]இது கூறிய [17]எட்டு இலக்கணங்களுள் வினை என்பது பொருட்குறிப்பால் இரண்டாவதாய்ச் [18]சேர்ந்தது. செய்வது எழுவாயாய்ச் சேர்ந்தது. செயப்படு பொருள் இரண்டாவதாய்ச் சேர்ந்தது. நிலமும் காலமும் ஏழாவதாய்ச் [19]சேர்ந்தது. கருவி மூன்றாவதாய்ச் சேர்ந்தது. இன்னதற்கு இது பயனாக என்னும் இவ்இரண்டு நான்காவதாய்ச் சேர்ந்தன. இவ்வாறு ஆறாவதும் விளியும் ஒழிய மற்றைய ஆறும் வந்தவாறு கண்டுகொள்க. (௨௯)

---

108-9 i-ii "குண்ட முதலிய" (i-ல் 'ண்' அடிக்கப்பட்டுள்ளது)

10 vi "செயப்படு பொருளும் விளங்கின"
i-ii-iv-v "செயப்படு பொருள் விளங்கிற்று"

11 ii "விளங்கினன்"
vi "விளங்கி"

12 i-vi-viii "மரபானும்"

13 i-v "கூறற்பால அதனை"

14 vi "என்றும்"

15 viii "வேற்றுமைகளோடு தொடர்ந்தே வருவது"

16 ii-vii "இங்ஙனம் கூறிய"
vi-viii "கூறிய"
iii "இக்கூறிய"

17 i "எட்டிலங்களுள்"

18 iv "சேர்ந்தது செயப்படு பொருள்" (ஒரு தொடர் விடுபட்டது.)

19 iv "சேர்ந்தது இன்ன" (ஒரு தொடர் விடுபட்டது.)

109. அவைதாம்,
வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்.

என்பது என்நுதலிற்றோ எனின், மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—மேற்சொல்லப்பட்ட எண்வகை இலக்கணமும், வழக்கு நடத்துமிடத்துக் குறைவன குறைந்துவரும் என்றவாறு.

உ-ம்:—

கொடியாடிற்று என்பது,

செயப்படுபொருளும், இன்னார்க்கு என்பதும், இதுபயனாக என்பதும் இல்லை.

துஞ்சும் என்புழியும் [1]குன்றினஉள. பிறவும் அன்ன. (கூ0)

110. முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் [1]முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
[2]அனைமர பினவே [3]ஆகுபெயர்க் கிளவி.

என்பது என்நுதலிற்றோ எனின், ஆகுபெயர் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: — முதற் பொருள் ஏதுவாகக் கூறப்படும் சினைப்பொருளை அறியும் [4]சொல்லும், சினைப்பொருள் ஏதுவாகக் கூறப்படும் முதற்[5]பொருளை அறியும் சொல்லும், ஒரு பொருள் பிறந்த

---

109-1 ii "இவ்வாறு குன்றின"

110-1 i-ii "முதலறு"

2 i-ii "அனைய மரபினவே"

3 i "யர்க்கு பெயர்க் கிளவி"

4 iv "சொல்லும் ஒரு பொருள் பிறந்த" (ஒரு தொடர் விடுபட்டது.)

5 ii-vii "பொருளினை"

இடத்தினைச் சொல்ல அவ்[6]இடத்தினுட் பிறந்த பொருளை உணர நிற்கும் சொல்லும், ஒரு பண்பினைச் சொல்ல அப்பண்படைந்த பொருளினை விளங்க நிற்கும் சொல்லும், ஒரு தொழிலினைச்[7]சொல்ல அத்தொழில் [8]நிகழ்ச்சியின் ஆயதனை உணரநிற்கும் சொல்லும், ஒரு பொருண்மேல் இரண்டு பொருளினை ஒட்டிச் சொல்ல அஃது அப்பொருளினை ஒழிய அதனை உடைய வேறோர் பொருளை உணர நிற்கும் சொல்லும், ஒருவினையை [9]நிகழ்த்திய கருத்தாவினைச் சொல்ல அதனான் நிகழ்த்தப்பட்டதனை உணரநிற்கும் சொல்லும், இவை [10]ஏழும் அம்மரபிற்றொக்க தம் பெயர் கூறியவழிக் காரணமாய் நின்றவற்றையே தம்இலக்கணமாக [11]உடைய சொற்கள் ஆகுபெயர்ச்[12]சொல்லாவன என்றவாறு.

உ-ம்:—

[13]முதலிற் கூறல் :—கடுத்தின்றான், தெங்கு தின்றான் என்பன.

[14]சினையிற் கூறல் :—இலை நட்டு வாழும், பூ நட்டு வாழும் என்பன.

பிறந்தவழிக் கூறல் :—[15]குழிப்பாடி என்பது.

---

110-6 vi "இடத்தினால் பிறந்த"

7 iv "சொல்ல அஃது அப்பொருளினை" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது.)

8 i-ii-v-vii "நிகழ்ச்சியினதனை"

9 i-ii-iii-iv-v "நிகழ்ந்த ... ... ... னைச் சொல்ல"

10 i-ii-vi-vii-viii "இவை எழுந்தவம் மரபிற்"

11 v "உடைய ... ... சொற்கள்"
ii "உடையவான சொற்கள்"

12 ii-v-vi-vii "சொல்லாம் என்றவாறு"

13 i-iii "உ-ம் ... ... தின்றான் தெங்கு"
v "முதலிற் கூறல் ... ... தின்றான் தெங்கு"
ii-vi-vii "முதலிற் கூறும் சினையறி கிளவி - கடுத்தின்றான் தெங்கு"

14 i "சினையிற் ... ... இலை நட்டு"
ii-vi-vii "சினையிற் கூறும் முதலறிகிளவி - இலைநட்டு"

15 ii "குழிப்பாடி நேரிது பண்பு"
i "குழிப்பாடி .... .... .... என்பது பண்பு"
vi "குழிப்பாடி பண்பு"

பண்புகொள் பெயர் :—நீலம் [16]என்பது.

இயன்றது மொழிதல் :—ஏறு, [17]குந்து என்பது.

இருபெயரொட்டு :—[18]பொற்றொடி என்பது.

இஃது அன்மொழித்தொகை அன்றோ எனின், படுத்தலோசைப் பட்டவழி அன்மொழித் தொகையாம். எடுத்தலோசைப்பட்ட [19]வழி ஈண்டு ஆகுபெயர் ஆகும் என்பது.

வினைமுதலுரைக்கும் [20]கிளவி, தொல்காப்பியம், [21]கபிலம் என்பன. (௩௧)

**111.** **அவைதாம்,**
**தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்**
**ஒப்பில் வழியான் பிறிதுபொருள் சுட்டலும்**
**அப்பண் பினவே நுவலுங் காலை.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் ஆகுபெயர்க் கண்ணே [1]படுத்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—முற்கூறிய ஆகுபெயர்கள் தத்தம் பொருட்கண் ஆங்கால், தாம் முன்பு உணர்த்தி நின்ற பொருட்கு வேறுஅன்றி அதனோடு தொடர்ந்த பொருளோடு பொருந்தி நிற்றலும், அம்முதற் பொருளோடு பொருத்தம் இல்லாத கூற்றினான் நின்று பிறிது [2]பொருளை உணர்த்தலும் என்று சொல்லப்படுகின்ற அவ்விருவகை இலக்கணத்தினையும் உடைய, சொல்லும் காலத்து என்றவாறு.

---

110-16 vi "என பல"

17 vi "குத்து இருபெயரொட்டு"
ii "குத்து என்பன"

18 vi "பொற்றொடி இஃது"

19 vi "வழி ஆகு பெயர் ஆகும்"

20 i "கிழவி"

21 vi "கபிலர் .... .... அவை தாம்"

111-1 iii "படுத்தவதோர்"

2 vi "பொருள் உளர்த்தலும்" (ள் - ண் மயக்கம்.)

உ - ம் :—

[3]தம்மொடு சிவணல் :—தெங்கு, கடு என்னும் தொடக்கத்தன.

ஒப்பில் [4]வழியாய் நின்றன, பிறிது பொருள் சுட்டல் :—குழிப்பாடி, பொற்றொடி என்பன.

இதனாற் சொல்லியது ஒன்றனது பெயரை ஒன்றற்கு இடுங்கால், அம்முதற் பொருளோடு தொடர்புள் வழியே இடவேண்டும் என்று கருதின், அது வேண்டுவதில்லை; அம்முதற் பொருளோடு தொடராது பிறவாற்றானும் இயைபுள்வழியும் இடலாம் என்பது கூறியவாறு ஆயிற்று.

அஃதேல், இச்சூத்திரப் பொருண்மை [5]மேலைச் சூத்திரத்து ஓதிய வாற்றானே பெற்றாம்அன்றே எனின், பெற்று நின்றதனையே இவ்வாறு ஒப்பில்வழியும் ஆம் என மாணாக்கனை நன்கு தெளிவித்தற் பொருட்டுக் கூறினா[6]ன் என்பது. (௩௨)

### 112. வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் ஆகுபெயர்க்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவ் ஆகுபெயர்களை ஐ முதலிய [1]ஆறு வேற்றுமைப் பொருண்மையிடத்தினும் இயைபுடைமையைப் பாது காத்து [2]ஒழுகுதலை வேண்டும் ஆசிரியன் என்றவாறு.

---

111-3 i-iii-iv "தம்மொடு சிவணின்"

ii-vi-vii "தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணல் தெங்கு"

4 ii-vi "வழியால் பிறிது பொருள் சுட்டல் குழிப்பாடி"

5 vi "மேல் சூத்திரத்து"

6 " ர் "

112-1 i-ii-vii "ஆறுவகை வேற்றுமை"

2 i-iv "ஒழிதலை வேண்டும்"

viii "ஒழுதலை வேண்டும்"

ii-vi-vii "அறிதல் வேண்டும்"

உ - ம் :—

[3]பொற்றொடி ஆகுபெயர். பொற்றொடியைத் [4]தொட்டான் என இரண்டாவதன் பொருண்மைத்து.

தொல்காப்பியம் என்பது தொல்காப்பியனாற் செய்யப்பட்டது என மூன்றாவதன் பொருண்மைத்து.

[5]தண்டூண் என்னும் ஆகுபெயர் [6]தண்டூணிற்குக் கிடந்தது என நான்காவதன் பொருண்மைத்து.

பாவை என்னும் ஆகுபெயர் பாவையினும் அழகியாள் என ஐந்தாவதன் பொருண்மைத்து.

கடு என்னும் ஆகுபெயர் கடுவினது காய் என ஆறாவதன் பொருண்மைத்து.

[7]குழிப்பாடி என்னும் ஆகுபெயர் குழிப்பாடியுட் டோன்றியது என ஏழாவதன் பொருண்மைத்து. பிறவும் அன்ன.

இதனாற் சொல்லியது முன் ஒப்பில் வழியால் பிறிது பொருள் சுட்டலும் ஆம் என்றமையின் அப்பிறிது பொருள் சுட்டியவாறு பாகுபாடு பெறுங்கொல்லோ எனின், இவ்ஆறு வேற்றுமைப் [8]பொருள் இயைபு உள்வழி [9]ஆவது; பிறவழியாகாது என்று கூறியவாறு. (கக)

113. அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளஎன மொழிப [1]உணர்ந்திசி னோரே.

---

112-3 i "பொற்றொடி என்னும் ஆகுபெயர்"

4 ii-vi "தொட்டான் பொற்றொடி என இரண்டாவதன்"

5 ii "தண்டூண் கிடந்தது என்புழித் தண்டூணை என்னும் ஆகுபெயர்"

6 vi "தண்டூணதற்குக் கிடந்தது"

7 i "குழிப்பாடி எம்"

8 i-ii-vi-vii-viii "பொருள் ... ... ... ள் வழி பெயராவது"

9 i-ii-iv-vii "பெயர்வது"

vii-viii "பெயராவது"

113-1 i "உணர்த்திசினோரே"

என்பது என்நுதலிற்றோ எனின், இன்னொருசார் ஆகுபெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அளவுப் பெயரினையும் நிறைப் பெயரினையும் மேற்கூறிய ஆகுபெயரோடு கொள்ளும் இடங்கள் உள என்று சொல்லுவர் உணர்வுடையோர் என்றவாறு.

உ - ம் :—

நாழி, உழக்கு என இவை அளவுப் பெயர். ஈண்டு [2]இதன்பொருள் அதற்காயிற்றோ எனின், அளக்கப்பட்ட பொருட்கண் கிடந்த வரையறைக்கண் அப்பெயர் பொருட்கு ஆயிற்று எனக் கொள்க.

தொடி, துலாம் என்பன நிறைப்பெயர். ஈண்டு வரையறைக் குண(ர்)த்தினான், பெயர்ப் பொருட் காயிற்று [3]எனக் கொள்க.

மற்றுஇவை கிளந்தவல்ல என்னும் புறனடையுள் அடங்காவோ எனின், இவற்றை உலகத்தார்க்குப் பெயர்க் குறிப்பு என்று கொள்ளாது அப்பொருட்குப் பெயர்போலக் கொண்டமையின் வேறு கூறினான் எனக் கொள்க. (௩௪)

114. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்த வற்றியலான் உணர்ந்தனர் [1]கொளலே.

என்பது என்நுதலிற்றோ எனின், [2]மேற்கூறிய ஆகுபெயர்க்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — ஆகுபெயர்க்கண் மேல் எடுத்தோதின அல்லாதன வேறுபல தோன்றினும் அவ்எடுத்தோதப் பட்டவற்றின் இயல்பினானே உணர்ந்துகொள்க என்றவாறு.

---

113-2 i-ii-iv-vii "அதன் பொருள்"

3 vi "என உணர்க"

114-1 i "கொள்க"

vi-vii "கொளவே"

2 vi-viii "மேற்கூறிய ஆகுபெயர்க்கண் மேல் எடுத்தோதின" (ஒரு தொடர் விடுபட்டுளது.)

உ - ம் :—

**யாழ் கேட்டான், குழல் கேட்டான்** என அவற்றினாகிய [3]ஓசைமேல் நின்றன. **பசுப் போல்வானைப் பசு** என்ப, **பாவை போல்வாளைப் பாவை** என்ப.

இனி **ஒன்று, பத்து, நூறு, ஆயிரம்** என்னும் எண்ணுப் பெயர்களும் வரையறைப் பண்பின் பேர்பெற்ற ஆகுபெயர் எனக் கொள்க. அவ்வெண்ணுப் பெயரினை[ன்?] அறிகுறியாகிய அலகுநிலைத் தானங்களும் அப்பெயர் ஆயின எனக் கொள்க.

இனி, அகரமுதலாகிய எழுத்துக்களை உணர்த்துதற்குக் கருவியாகிய [4]வரிவடிவுகளும் அப்பெயரவாம்.

**தாழ்குழல், திரிதாடி** என்பனவற்றையும், இருபெயரொட்டு இன்மையின், ஈண்டே கொள்க.

மண்ணானாய கலத்தை **மண்** என்றும், பொன்னானாய கலத்தைப் [5]**பொன்** என்றும் இவ்வாறே காரணத்தின் பேரினைக் காரியத்துக்கு இட்டும் [6]கடிசூத்திரத்திற்காக இருந்தபொன்னைக் **கடிசூத்திரம்** என்றும், தண்டூன்றுதற்குக் கிடந்த மரத்தினைத் **தண்டூண்** என்றும் இவ்வாறே காரியத்தின் [7]பேரினைக் [8]காரணத்திற்கிட்டும் வருவன எல்லாம் கொள்க.

இனி **எழுந்து** எனவும் **சொல்** [9]எனவும் **பொருள்** எனவும் கூறிய நூன்மேல் ஆகுபெயராய் வருவனவும் ஈண்டே [10]கொள்க.

---

114-3 i-ii-iv-v-vi "ஓசை கேட்டானையும் பசுப்போல்வானை"

4 i "அரிவடிவுகளும் அப்பெயராம்"

5 ii "இட்டும் கண்ணும் கடி"

6 i-iv-v "குடிசூத்திர ... ... ... ருந்த"

iii "கடிசூத்திரம் செய்யாமலிருந்த"

7 ii-vi-vii "பெயரினை"

8 ii "காரணத்திற் கிட்டும் கண்ணும் வருவன"

i "காரணத்திற் கிட்டு கிட்டும் வருவன"

9 i-ii-iv-v-vi-vii-viii "எனவும் ... ... ... உறிய"

10 iii "கொள்க. இவ்வாகுபெயரை" (ஒரு தொடர் விடுபட்டுளது.)

வேறு என்ற அதனான் அவ்வாகுபெயர்கள் **தொல்காப்பியம், வில்லி, வாளி** என ஈறு திரிந்தனவும் ஈண்டே கொள்க.

இவ்வாகுபெயரை இவ்வோத்தினுட்..............................துவும் எழுவாய் வேற்றுமை மயக்கம் ஆகலின் ஈண்டே கூறினான்[11] என்பது. (௩௫)

[12]மூன்றாவது வேற்றுமை மயங்கியன்

முற்றிற்று.

---

114-11 "ர்"

12 vi 35-இன் பின் "வேற்றுமை மயங்கியல் முற்றும்" என முடியும். பிற பிரதிகள் "மூன்றாவது வேற்றுமை மயங்கியல் முற்றிற்று" என முடியும்.

[1]நான்காவது

# விளி மரபு

115. விளிஎனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப.

இவ்வோத்து [2]என்ன பெயர்த்தோ எனின், விளி மரபு என்னும் பெயர்த்து. மேல் ஓத்தினோடு இவ்[3]ஓத்தினிடை இயைபு என்னோ எனின், மேல், வேற்றுமை விளியொடு எட்டே என நிறுத்தா[4]ன். [5]நிறுத்த முறையானே விளிஒழித்து அவ் ஏழும் உணர்த்தி, இனி ஒழிந்து நின்ற [6]விளி உணர்த்துகின்று[7]ன் என்பது.

இம்முதற் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், விளி வேற்றுமையது பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

[8]இதன் பொருள்:— விளி என்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரொடு யாப்புறத் தோன்றும் தன்மைய என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

படுப எனப் பன்மைகூறிய [9]அதனான் அவ்விளி தான் ஈறு திரிதலும், ஈற்றுஅயல் நீடலும், பிறிதுவந்து அடைதலும், இயல்பு ஆதலும் என நான்கு வகைப்படும் என்பது பெறப்பட்டது.

தெளிய என்றதனான் விளிதன்னை எழுவாயின் வேறுபாடதன்றி வேறோர் வேற்றுமை என்பாரும் உளர் என்பதூஉம், [10]இவ்வாறு ஓர் வேற்றுமையாக நேர்ந்தார் என்பதூஉம் பெறப்பட்டது. (க)

---

115-1 vi "- ச விளிமரபு"
2 i-ii-vii "என்னை"
3 vi "ஒத்திடை"
4 vi "ர்"
5 vi "அந்நிறுத்த"
6 ii-vi-vii "விளியை"
7 "ர்"
8 v "உரை - விளி என்று சொல்லப்படுவன"
9 i-ii-vi-vii "அதனால்"
10 v "இவ்வா வேற்றுமையாக நெர்ந்தாம்"

**116. அவ்வே,**

**இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப.**

என்பது என்நுதலிற்றோ எனின், மேற் சொல்லப்பட்டவற்றை இனிச் சொல்லுப என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—யேல் விளி ஏற்பவும் ஏலாதனவும் எனச் சொல்லப்பட்டவற்றை இவை என அறியும்படி [1]வழக்குக்குத் தழுவ எடுத்தோதுப ஆசிரியர்; [2]அதனுன் யானும் அம்முடிபே கூறுவல் என்பது.

இது மொழிவாம் என்னும் தந்திரவுத்தி.

மற்று அஃது ஆமாறு என்னை? கிளப்பல் என்னுது கிளப்ப என்றமையின் [3]முன்நூலுள் அவ்வாறு கூறும் என்பதன்றே பெறுவது எனின், சொற்கிடை அது எனினும் [4]ஈண்டுக் கூறியவாறு போல யானும் ஈண்டுக் கூறுவல் என்பது கருத்தாகக் கொள்க.

இனி, கிளப்ப என்பதனைப் பெயர்ப்படுத்துக் கூறலும் ஒன்று. (உ)

**117. அவைதாம்,**

**இ உ ஐ ஓ என்னும் இறுதி**
**அப்பா லன்கே உயர்திணை மருங்கின்**
**மெய்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.**

என்பது என்நுதலிற்றோ எனின், உயிரீற்று உயர்திணைப் பெயருள் விளி ஏற்பன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேல், விளி ஏற்கும் என்னப்பட்டவை தாம் இ உ ஐ ஓ என்று சொல்லப்பட்ட ஈறுகளை உடைய அக்கூற்று நான்கு பெயரே, உயர்திணையிடத்து மெய்ப் பொருளினைச் சுட்டிய விளியினைக் கொள்ளும் பெயராவன என்றவாறு.

---

116 -1 ii-vii "வழக்குத் தழுவ"

2 ii-vii "இதனுன்"

3 vi "முதனூலுள்"

4 ii-vi-vii "ஆண்டுக்" (இதுவே சிறக்கும்)

உயிர்ஈற்று உயர்திணைப்பெயர்களுள் விளி ஏற்பன இந்[1]நான்குமே [2]எனவே, ஒழிந்த உயிர்ஈறு விளிஏலா என்பதூஉம் இதனாற் பெற்றாம்.

[3]உயிர்ஈறு பன்னிரண்டும் [4]உயர்திணைப் பெயர்க்கு ஈறுஆமோ எனின், அஃது ஈண்டு ஆராய்ச்சி அன்று. [5]ஈறு ஆவனவற்றுள் விளி ஏற்பன இவை என்றவாறு.

மக என்னும் அகரஈறும் ஆடூஉ மகடூஉ என்னும் உகரஈறும் இந்நிகரன விளிஏலாதன எனக் கொள்க.

மெய்ப்பொருள் சுட்டிய என்றதனான், இவ்ஈற்று அஃறிணைப் பெயர்களும் இவ்உயர்[6]திணைப் பெயர்போல விளி ஏற்பன என்பது கொள்ளப்படும்.

அவை, தும்பி, தும்பீ எனவும், முல்லை முல்லாய் எனவும் வரும். (௩)

118. அவற்றுள்,
இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும்.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற் சொல்லப்பட்ட நான்கனுள்ளும் இகரஈறும் ஐகாரஈறும் விளிஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

[1]இதன் பொருள் :—மேற் சொல்லப்பட்ட நான்கு ஈற்றுப் பெயருள்ளும் இகர ஈற்றுப் பெயர் ஈகாரமாய் விளி ஏற்கும். ஐகார- ஈற்றுப் பெயர் [2]ஆயாய் விளி ஏற்கும் என்றவாறு.

---

117-1 vi "நான்கும்"

2 v "என ஒழிந்த"

3 viii "உ - ம். உயிர்ஈறு"

4 ii "உயர்திணை பெயர்"

5 v "ஈறு வருவனவற்றுள்"

6 ii-vi "திணைப்போல"

118-1 v "உரை. மேற்சொல்லப்பட்ட"

2 I ii-vi-vii "ஆயாயும்"

உ - ம் :—

நம்பி, நம்பீ, நங்கை, நங்காய் எனவரும்.

இவை ஈறுதிரிதல். (௪)

## 119. ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்.

என்பது என்நுதலிற்றோ எனின், ஒழிந்த இரண்டு ஈறும் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— ஓகார ஈற்றுப் பெயரும் உகரஈற்றுப் பெயரும் [1]ஏகாரத்தோடு பொருந்தி விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம்:—

கோ, கோவே எனவும்,

வேந்து, வேந்தே எனவும் வரும்.

இவை பிறிது வந்தடைதல். (௫)

## 120. உகரந் தானே குற்றிய லுகரம்.

என்பது என்நுதலிற்றோ எனின், ஐயம் அறுத்தல் நுதலிற்று.

என்னை? மேல் இ உ ஐ ஓ என்புழி, இன்ன உகரம் எனத் தெரித்துக் கூறாமையானும், உடன் ஓதப்பட்ட எழுத்துக்கள் முற்று இயல்பின ஆதலானும், இன்னஉகரம்என்பது அறியாது [1]ஐயுற்றானை ஐயம் தீர்த்தமையின் என்பது.

இதன் பொருள் :—மேற்கூறப்பட்ட உகரம்தான் முற்றியலுகரம் அன்று, [2]குற்றியலுகரம் என்றவாறு. (௬)

---

119-1 vii "எகரத்தொடு" (குறில் நெடில் வேறுபடாத காலத்து மயக்கமாம்).

120-1 v "ஐயுற் ........ ஐயந்தீர்த்தமையின்"

vi "ஐயுற்ருன் ஐயந்தீர்ந்தமையின்"

2 ii-vi-vii "குற்றியலுகரமாம்"

121. ஏனை உயிரே உயர்திணை மருங்கின்
தாம் விளிகொள்ளா என்மனார் புலவர்.

என்பது என்நுதலிற்றோ எனின், வேண்டா கூறி [1]வேண்டியது முடித்தலை உணர்த்துதல் நுதலிற்று.

என்னை? வேண்டா கூறியவாறு எனின், அவைதாம் இ உ ஐ ஓ என்புழி இந்நான்கு ஈறும் விளி ஏற்கும்; ஒழிந்த உயிர் ஈறு விளி ஏலா என்பது பெற்றமையின் என்பது.

இனி வேண்டியது [2]முடித்தவாறு என்னை எனின், ஒழிந்த உயிர் ஈறு வேற்றுமை ஏலா என்று, இன்னும் மேற்சொல்லிய உயிர்ஈறு விளிஏற்கும் என்றமையின்.

இதன் பொருள்:- மேற்கூறிய நான்கு உயிரே அன்றி ஒழிந்த உயிர்ஈறுகள் உயர்திணைப் பெயரிடத்துத் தாம் விளித்தலைக் கொள்ளா என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

இவ்விதி [3]மேலே பெற்றும் அன்றோ எனின், மேற்கூறியவாறு விளிஏற்கும் என்பது கருத்து எனக் கொள்க.

கணி கணியே என இகரஈறு ஏகாரம் பெற்றது பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க. (எ)

122. அளபெடை மிகூஉம் இகர [1]இறுபெயர்
இயற்கைய ஆகுஞ் செயற்கைய என்ப.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று, [2]ஈகாரமாதல் விலக்கி இயல்பாய் விளிஏற்கும் [3]என்றமையின்.

---

121-1 v "வேண்டியதை முடித்தல் நுதலிற்று"

2 ii "முடித்தவாறு"

3 v "மேலா பெற்றும்"

122-1 ii "வீறு பெயர்"

2 ii "உரை. கோவீறிகரமாதல் விலக்கி"
vi என்னை. ஈகாரமாதல் விலக்கி"
vii "ஈகாரம். இகரவீறு"

3 v "என்றமையான்"

இதன் பொருள் :— அளபெடுத்தலான் [4]மிகுகின்ற இகரமாய இறுதியை உடைய பெயர் இயல்பாய் விளிஏற்கும் செய்தியை உடைய என்றவாறு.

உ - ம் :—

[5]தொழீ இ இ இ (தொழீஇ) என்பது பெயர், விளியும் அஃதே எனக் கொள்க.

இஃது இயல்பு.

இயற்கைய என்.று பன்மை கூறிய அதனுன் இவ்அளபெடை [6]மூன்று மாத்திரையில் நிமிர்ந்து நிற்கும் [7]என்பது கொள்ளப்படும்.

செயற்கைய என்றதனுன் இவ்[8]அளபெடைப் பெயர் எழுதும்வழி ஐந்தெழுத்திட்டு எழுதுக என்றவாறு கொள்ளப்பட்டது. (அ)

**123. முறைப்பெயர் மருங்கின் ஐஎன் இறுதி**
**ஆவொடு வருதற் குரியவும் உளவே.**

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்சிறப்புவிதி [1]வகுத்தலை நுதலிற்று.

[2]ஐகார ஈறு ஆயாய் [3]விளியுருபு ஏற்றுவருதலே அன்றி ஆ ஆயும் விளி ஏற்கின்றமையின்.

---

122-4 v "மிகுகுறை விகாரமாகிய" (கு - கி மாறுபாடு; றை - ன்ற மாறுபாடு.)

5 i-ii-iv-vii "தொழிலீ இ இ இ ... ... ... ஃதே எனக் கொள்க"

v "தொழீ இஇ என ... ... ... ஃதே எனக் கொள்க"

6 i "மூன்றும்"

7 vi "என்று கொள்ளப்படும்"

8 i-ii-iv-vii "அளபெடை ... ... அவ்வழி"

v அளபெடைப் ... ... மவ்வழி"

123-1 ii "வகுத்தலை உணர்த்துதல்"

2 v "உரை. ஐகார ஈறு" (இவ்வாறே இவ்வியலிலிருந்து "இதன் பொருள்" என்று பதிப்பில் காணும் இடங்களில் இப்பிரதி "உரை" என்று கூறிச் செல்கிறது. இனிமேல் இப்பிரதி பேதம் குறிக்கப் பெறுவதில்லை.)

vi "முறைப் பெயரிடத்து ஐகார ஈறு"

3 i-ii-iv-vii "விளி ... ... விளி"

v "விளி ... ... ரவாயும் விளி"

இதன் பொருள்:- முறைப் பெயரிடத்து ஐ என்னும் ஈறு ஆயோடு [4]வருதலேயன்றி ஆவோடு வருதற்கு உரியனவும் உள [5]என்றவாறு.

உ - ம்—

[6]அன்னை அன்னா என்றும் [7]அத்தை அத்தா என்றும் வரும்.

உம்மை எதிர் மறை; அதனான், [8]ஆயாதலே பெரும்பான்மைத்து.

[9]மற்று இவை விரவுப் பெயர் அன்றோ எனின், (பெயர்) விரவுப் பெயர்களை [10]உயர்திணைப் பெயர்களோடு மாட்டெறியும். ஆதலானும் அம்மாட்டேற்றிற்கு ஏற்ப உயர்திணைப் பெயர்களுள் இவ்வாறு விளி ஏற்பன இன்மையானும், ஆண்டுக் கூறற்பாலதனை ஈண்டுக் கூறியது எனக்கொள்க. (௬)

124. அண்மைச் சொல்லே [1]இயற்கை யாகும்

என்பது என்னுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது [2]விதிவகுத்தல் நுதலிற்று; [3]மேற்கூறியவாறு அன்றி இன்னுழி இயல்பாம் என்கின்றமையின்.

---

123-4 i-v "வருதலன்றி"

5 i-ii-iv-vii "என்னுதல் நுதலிற்று" (முன்னரே "நுதலிற்று" என வந்தமையின் இங்கு வேண்டா"

6 i "ஆன்னை ஆன்னா" (ஆ-அ மாறுபாடு.)

7 ii "ஆத்தை ஆத்தா" ( ஷை )

8 v "ஆயாதல் பெரும்பான்மைத்து"

9 vi "மற்றிவை விரவுப் பெயர்களை உ[illegible] திணைப் பெயர்களோடு" (தொடர் விடுபட்டுள்ளது.)

10 v "திணைப் பெயர்களோடு"

124-1 i "இயற்கை வாகும்"

2 ii "விகுதி"

3 v "உரை. மேற்கூறிய"

i-ii "இ - ள், மேற்கூறிய"

[4]இதன் பொருள் :—மேற்கூறிய உயிர்ஈறு நான்கினையும் உடைய அணியாரைக் கூவும் சொற்கள் மேற்கூறியவாறு அன்றி இயல்பாய் விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம்:—

நம்பி வாழி, நங்கை வாழி, வேந்து வாழி, கோ வாழி எனவரும். (௧௦)

125. னரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி இறுதி விளிகொள் பெயரே.

என்பது என்னுதலிற்றோ எனின், உயர்திணைக்கண் உயிர்ஈறு விளி ஏற்பன இவை என்பது உணர்த்தி இனி அவ் உயர்திணைக்கண் புள்ளி ஈறு விளி ஏற்பன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:— ன ர ல ள என்று சொல்லப்பட்ட அந்நான்கு ஈற்றுப் பெயரும் என்று சொல்லுப ஆசிரியர். புள்ளி ஈற்றினை உடைய விளித்தலைக் கொள்ளும் உயர்திணைப் [1]பெயர் ஆவன என்றவாறு.

புள்ளி ஈற்றுள் இவை கொள்ளும் எனவே ஒழிந்தன, விளி கொள்ளா என்பதூஉம் பெற்றும்.

உ - ம் :—

பொருந, பாண ( ) எனவும், [2]எல்லாரும் எனவும் இவை [3]முதலாயின விளி ஏலாதன எனக் கொள்க.

126. ஏனைப் புள்ளி ஈறுவிளி கொள்ளா.

என்பது என்னுதலிற்றோ எனின், வேண்டா கூறி [1]வேண்டியது முடித்தல்[2] நுதலிற்று.

இதன் பொருள் :— மேற் சொல்லப்பட்ட நான்கும் அல்லாத புள்ளி ஈறு உயர்திணை [3]இடத்து விளித்தலைக் கொள்ளா என்றவாறு.

---

124-4 i-ii-v "மேற்கூறிய"

125-1 i "பேர்"
2 iii "எல்லாமே"
3 ii "முதலியன"

126-1 v "வேண்டியதை"
2 ii-vi-viii "உணர்த்துதல் நுதலிற்று"
3 i "விடத்து"

மற்று இவ்விதி மேலேபெற்றும் அன்றே எனின், மேற்சொல்லிய நான்கு புள்ளி ஈறும் இனிக் கூறுமாறு போலாது விளி ஏற்றலும் [4]உடைமைய என்றற்கு மிகைபடக் கூறப்பட்டது எனக்கொள்க.

உ - ம்:—

**னகர** ஈற்றுள் மேல் ஓதுகின்ற **அன்** ஈறும் **ஆன்** ஈறும் அல்லாத னகரஈறு, **தம்முன், தம்முன்னே** எனவும், **நம்முன் நம்முன்னே** எனவும் விளி ஏற்றது.

**ரகர** ஒற்றுள் ஓதுகின்ற **அர்** ஈறும் **ஆர்** ஈறும் அல்லாத **இர்** ஈறு **பெண்டிர் பெண்டிரே** என ஏகாரம் பெற்றும், **கேளிர்** [5]**கேளிர்** என இயல்பாயும் விளி ஏற்றது.

பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

இன்னும் இம்மிகுதியானே ஏனைய புள்ளியுள்ளும் சிறுபான்மை யாவன உள.

**விளங்குமணிக் கொடும்பூண்** [6]**ஆஅய்** என யகரஈறு இயல்பாய் விளி ஏற்றது.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. (கஉ)

127. **அவற்றுள்,**
**அன் [1]என் இறுதி ஆ ஆகும்மே.**

என்பது என்நுதலிற்றோ எனின், மேனிறுத்த முறையானே னகரஈறு விளிஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அந்நான்கு புள்ளியுள்ளும் **னகரஈற்று அன்** [2]என்னும் இறுதி பெயர்இறுதி ஆவாய் விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

சோழன் சோழா, சேர்ப்பன் சேர்ப்பா என[3]வரும். (கங)

---

126-4 vi "உடைய" (இது சிறக்கும்.)
5 ii-vi "கேளீர்"
6 ii "ஆய்"
127-1 i "அன்னென்னிறுதி"
2 i "அன் எனிறுதி பெயரிறுதி"
vi "அன் என்னும் பெயரின் இறுதி"
3 ii "வரும் துறைவன் துறைவா என்பதும் அது"

**128. அண்மைச் சொல்லிற் ககரம் ஆகும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவற்றுள் அன்ஈறு [1]அணியாரை விளிக்கும் சொல்லிடத்து அகரமாகும் என்றவாறு.

உ - ம் :

சோழன் - சோழ, சேர்ப்பன் - சேர்ப்ப என[2]வரும். (கச)

**129. ஆன்என் இறுதி இயற்கை ஆகும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]னகரஈற்றுள் [2]ஒருசாரன விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஆன் என்னும் னகர இறுதிப் பெயர் இயல்பாய் விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

சேரமான், மலையமான் எனவரும். (கரு)

**130. தொழிலிற் கூறும் ஆன்[1]என் இறுதி**
**ஆயா கும்மே விளிவயி னான.**

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒருவன் செய்யும் தொழில் ஏதுவாகக் கூறப்படுகின்ற ஆன்என் இறுதிப் பெயர் [2]விளிக்கும் இடத்து ஆய்ஆகும் என்றவாறு.

உ - ம் :—

உண்டான் - உண்டாய், நின்றான் - [3]நின்றாய் எனவரும். (கசு)

---

**128**-1 i "அணியார் விளிக்கும்"
2 ii "வரும் துறைவன் துறைவ என்பதும் அது"

**129**-1 i-v "இதுவும் அது. னகர ஈற்று"
2 iii "ஒரு சாரன்"

**130**-1 i-ii "என்னிறுதி"
2 vi "விளியேற்குமிடத்து"
3 ii "நின்றாய்; வந்தான் வந்தாய்; சென்றான் சென்றாய் எனவரும்"

131. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவற்றுள் பண்பு தனக்குப் [1]பொருண்மையாய்க் கொண்ட பெயரும் மேற்கூறிய தொழிற்பெயரோடு ஒரு தன்மைத்து என்றவாறு.

உ - ம் :—

[2]கரியன் கரியாய், [3]செய்யன் செய்யாய் எனவரும். (கஎ)

132. அளபெடைப் பெயரே அளபெடை இயல.

என்பது என்னுதலிற்றோ எனின், எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவ்ஆன்ஈற்று அளபெடைப் பெயர் மேற்கூறிய இகரஈற்று அளபெடைப் பெயர்போல இயல்பாய் விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

[1]அழாஅஅன், புழாஅஅன் எனவரும்.

மற்று இஃது ஆனென் இறுதி இயற்கையாகும் என்ற வழியே அடங்காதோ எனின், அளபெடுத்த ஆன் என் இறுதி ஆகலின் வேறு கூறிற்றுப் போலும். (கஅ)

133. முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

---

131-1 vi "பொருண்மையாக கொண்ட"

2 vi "கரியான்"

3 vi "செய்யான்"

132-1 iv "சோழா அன்"

[1]இதன் பொருள் : — னகரஈற்று முறைப்பெயராகிய சொல் ஏகாரம்பெற்று விளி ஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

மகன் மகனே, மருமகன் மருமகனே எனவரும்.

மற்று இது விரவுப்பெயர் அன்றோ எனின், மேல் இகரஈற்றுள் கூறியவாறே [2]கூறுக. (௧௯)

134. தான்என் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யான்என் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி அனைத்தும் விளிகோள் இலவே.

என்பது என்னுதலிற்றோ எனின், னகர[1]ஈற்றுள் விளிஏற்பன எல்லாம் உணர்த்தி, விளி ஏலாதன [2]கூறுகின்றது நுதலிற்று.

இதன் பொருள் :—தான் என்னும் ஆன் ஈற்றுப் [3]பெயரும், சுட்டெழுத்தை முதலாகஉடைய அன் ஈற்றுப் [4]பெயர்களும், யான்என்னும் ஆன் ஈற்றுப் பெயரும், வினாப் பொருண்மை உணர்த்தும் அன்ஈற்றுப் [5]பெயரும் - அவ்அனைத்துப் பெயரும், மேற்கூறியவாற்றான் ஆயினும், பிறவாற்றான் ஆயினும் [6]விளிகோடலை இல என்றவாறு.

தான் யான் என்பன ஆன் ஈறே எனினும் விளிஏலா எனக்கொள்க.

---

133-1 i-ii "இனி இதன்பொருள்"

2 ii "ஈண்டுங் கூறுக"

134-1 ii "ஈற்றில்"

2 ii-vi "கூறுகின்றது உணர்த்துதல் நுதலிற்று"

i-iii-v-iv "கூறுகின்றது"

3 iv "பேரும்"

4 vi "பெயர்களும் .... ... .... அவ்வனைத்துப் பெயர்களும்"

5 iv "பெயரும் மேற்கூறிய வாற்றான்" (விடுபட்டுள்ளது.)

6 vi-viii "விளிகோடல் சில"

அவன் இவன் உவன் என்னும் சுட்டுப் [7]பெயரும், யாவன் என்னும் விஞப்பெயரும் [8]அன்ஈறே எனினும் விளி ஏலா என்றவாறு.

மற்றுத் தான் [9]என்பது வி ...... ... ... அன்றே எனின், விரவுப் [10]பெயர்களை உயர்திணைப் பெயர்களோடு மாட்டெறியும் வழி விலக்கற்பாடு மாட்டெறிதற்கு ஒப்பன இன்மையின் ஈண்டே கூறினான் என்பது. (உ0)

135. [1]ஆரும் அருவும் ஈரொடு சிவணும்.

என்பது என்நுதலிற்றோ [2]எனின், நிறுத்த முறையானே [3]ரகர-ஈறு விளி[4]ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஆர் என்னும் ஈறும், அர் என்னும் ஈறும் ஈர் என்னும் வாய்பாட்டோடு பொருந்தி விளி ஏற்கும் [5]என்றவாறு.

உ - ம் :—பார்ப்பார் பார்ப்பீர், கூத்தர் கூத்தீர் [6]எனவரும்.

இஃது ஈற்றயல் நீண்டது. (உக)

---

134-7 iv "பெயரும் அன்னீறே எனினும்" (விடுபட்டுள்ளது.)

8 i "ஆன்"

9 v "என்பது வி ... ... ... ன்றே எனின்"

vi-viii "என்பதன்றே எனின்" (விடுபட்ட இடத்தைச் சேர்த்-தெழுதியதால் எழுந்த மயக்கம்.)

ii "என்பது விரவுப்பெயரன்றே எனின்" (இது இந்தப் பிரதியின் ஊகம். இரு பிறை வளைவிற்குள் உள்ளது. இந்த ஊகம் கொள்ளத்தக்கதே ஆம்.)

10 v "பெயர்களையும் இணைப்பெயர்களோடு"

135-1 i "ஆருமருஉ மீரொடு"

2 i,ii-iv-vii "எனின் ... ... ... த்த முறையானே"

3 vi "ரகாரவீறு"

i "கரஈறு"

4 i "ஏற்கும் என்றவாறு இவ்"

5 i-iv "என்நுதல் நுதலிற்று- உ-ம்."

6 vi "எனவரும் ... ... 21"

**136. தொழிற் பெயராயின் ஏகாரம் வருதலும்**
**[1]வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே.**

என்பது என்நுதலிற்றோ எனின், [2]இஃது எய்தியதின் மேற் சிறப்பு விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :— மேற்கூறிய இரண்டு ஈறும் தொழிற் பெயருக்கு ஈறாய்[3]வரின் மேற்கூறிய ஈரோடு ஏகாரம் பெற்று வருதலும் குற்றமின்று என்று [4]சொல்லுவர், [5]விளங்கிய அறிவை உடையார் என்றவாறு.

உ - ம் :—

உண்டார் உண்டீரே, [6]தின்ருர் தின்றீரே எனவரும்.

அர் ஈறு வந்தவழிக் கண்டுகொள்க.

[7]வழுக்கின்று என்றதனல் தொழிற் பெயர் அல்லனவும், ஈரோடு ஏகாரம் பெறுதல் கொள்க.

உ - ம் :—

நம்பீரே ( ? ) கணியீரே எனவரும். (உஉ)

**137. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் எய்தியதின் மேற்-சிறப்பு விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவ்இரண்டு ஈற்றுப் பண்புகொள் பெயரும் அத்தொழிற் பெயரோடு ஒருதன்மைத்து என்றவாறு.

உ - ம் :—

கரியீரே, செய்யீரே எனவரும். ஈண்டும் ஆர்ஈறு வந்தவழிக் கண்டு கொள்க. (உ௩)

---

136-1 i-ii-iv-vii "வழுக்கின்றென்மனார்"
2 i "இது எய்தியதின்"
3 v "வரின் ஈரோடு"
4 ii "சொல்லுவர். கூறுவர்"
5 v "விளங்கின"
6 v "தின்ருர். தின்றீரே"
7 i-ii-iv-vii "வழுக்கின்று"

138 அளபெடைப் பெயரே அளபெடை இயல.

என்பது என் நுதலிற்றோ எனின், எய்திய து விலக்கிப் [1]பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

[2]இதன் பொருள் :—[3]ரகரஈற்று அளபெடைப் பெயர் [4]னகரஈற்று அளபெடைப் பெயர்போல இயல்பாய் விளிஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

[5]மகாஅர் சிறுஅர் எனவரும். (உச)

139. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன.

என்பது என் நுதலிற்றோ எனின், [1]ரகர ஈற்றுப் பெயர் விளி ஏலாதன கூறுகின்றது.

இதன் பொருள் : — ரகர ஈற்றுச் சுட்டெழுத்தினை முதலாக உடைய பெயர்கள் [2]னகர ஈற்றுச் சுட்டு முதற்பெயர்போல விளி ஏலாது என்னுதல் நுதலிற்று.

[3]அவர் இவர் உவர் என்பன அர் ஈறு எனினும் விளி ஏலா [4]என்றவாறு. (உரு)

---

138-1 ii "பிறிது வகுத்தல்"
2 i-ii-iv-vii "இனி இதன் பொருள்"
3 ii-vi-vii "ரகார"
4 vi "னகார"
5 ii "மகா அஅர் சிறுஅ அர்"

139-1 ii-vi "ரகார"
2 ii-vi "னகார"
3 vi (இப்பத்தி இல்லை)
4 i-iv "என்னுதல் நுதலிற்று"
ii-vii "என்னுதல் ஆயிற்று"
iii "என்னு நுதலிற்று"

**140. நும்மின் திரிபெயர் வினவின் பெயரென்
றம்முறை இரண்டும் [1]அவற்றியல் பியலும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் விளிஏலாதன கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்:—நும் என்னும் சொல்லினது திரிபாகிய **நீயிர்** என்னும் சொல்லும், வினாப்பொருளை [2]உணரநின்ற சொல்லாகிய **யாவர்** என்னும் சொல்லும் என்று சொல்லப்பட்ட அம்முறையினை உடைய சொல் இரண்டும் மேல் விளி ஏலா[3]எனச் சொல்லப்பட்ட சுட்டுப்பெயர் போலத் தாமும் விளிஏலா என்றவாறு.

**நீயிர்** என்பது **இர்** [4]ஈறுகலின் ஈண்டு எய்தியது இன்மையின் விலக்கல் வேண்டா எனின், ஏனைப்புள்ளி என்பதனுள் **இர்** ஈறும் கொள்ளப்பட்டமையின், வேண்டும் என்பது. (உசு)

**141. எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும்.**

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே [1]லகார ஈறும் ளகாரஈறும் விளி[2]ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—லகார ளகாரம்என எஞ்சிய இரண்டு எழுத்தினையும் இறுதியாக உடைய பெயர்கள் ஈற்றின் நின்ற எழுத்திற்கு அயல் எழுத்து நீண்டு விளி[3]ஏற்றலை வேண்டும் என்றவாறு.

உ-ம்:—

[4]குரிசில் குரிசீல், தோன்றல் தோன்றால், மக்கள் மக்காள் எனவரும். (உஎ)

---

**140**-1 i "அவற்றவற் றியல்பே"

2 iii "உணர்கின்ற" (கி - நி மாறாட்டம்-)

3 ii-vi "ஏலாது என்று சொல்லப்பட்ட"

4 (பல பிரதிகளில் i-ii-vii ஈ என்பது கூ போலவே உள்ளது.)
v "இர் ... .... ... ஈண் டெய்தின்மை"

**141**-1 ii "லகாரவீறும் விளி ஏற்குமாறுணர்த்தல் நுதலிற்று"

2 i-iv "ஏற்குமாறு கூறுகின்றது"

3 vi-vii "ஏற்றல் வேண்டும்"

4 i "குருசில் - குருசீல்"

142. அயல்நெடி தாயின் இயற்கை ஆகும்.

என்பது என் நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவ் இரண்டு [1]ஈற்றுப்பெயரும் அயல்எழுத்து நீண்ட நிலைமைய ஆயின் இயல்பாய் விளிஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

[2]பெண்பால் ஆண்பால் [3]ஏமாள் [4]கோமான் எனவரும். (உஅ)

143. வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும் [1]ஆள்என் இறுதி
ஆய்ஆ கும்மே விளிவயி னான.

என்பது என் நுதலிற்றோ எனின், அவ் இரண்டு ஈற்றுள் ளகர ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் [2]பிறிதுவிதி வகுத்தல் நுதலிற்று.

[3]இதன் பொருள் :—வினையினானும் பண்பினானும் ஆராயத் தோன்றும் [4]ஆள் என் இறுதி, விளிக்கும் இடத்து ஆய்ஆய் விளிஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

[5]உண்டாள்-உண்டாய் எனவும், கரியாள்-கரியாய் [6]எனவும்வரும். (உகூ)

---

142-1 vi "ஈற்றயல் எழுத்து நீண்ட"

2 ii-vi "ஆண்பால் பெண்பால்"

3 i-ii "ஏமான்"

4 v-vi "ஏ கோமான்"

143-1 i "ஆனெனிறுதி" (ன ள மாறுபட்டம்)

2 ii "பிறிது வகுத்தல்"

3 i-ii "இனி இதன் பொருள் வினை"

v "உரை-வினை"

4 i "ஆன் எனிறுதி"

ii-vi-vii "ஆள் என்னுமிறுதி"

5 i "உண்டான்"

6 i "எனவரும்"

### 144. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தல் நுதலிற்று.

இதன்பொருள்:—[1]ளகர ஈற்றுப்பெயர், [2]னகரஈற்றுமுறைப்பெயர் போல, ஏகாரம் பெற்று விளிஏற்கும் என்றவாறு.

உ - ம் :—

மகள் - மகளே! மருமகள் - மருமகளே! எனவரும். [3]இதுவும் விரவுப்பெயர்அன்றோ எனின் மேற்கூறியவாறே கொள்க. (கூ0)

### 145. சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும் முற்கிளந் தன்ன என்மனார் புலவர்.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]ளகர ஈற்றுள் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ளகார ஈற்றுச் சுட்டெழுத்தினை முதலாக உடைய அவள் இவள் உவள் என்னும்பெயர்களும், வினாப்பொருண்மையுடைய யாவள் என்னும் பெயரும், [2]னகர ஈற்றுச் [3]சுட்டு முதற்பெயரும் வினாவின் பெயரும் போல, விளி ஏலா என்று சொல்லுவர் புலவர் என்றவாறு. (கூக)

### 146. அளபெடைப் பெயரே அளபெடை இயல.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]லகர, ளகர ஈற்றுப்பெயர் இரண்டற்கும் எய்தியது விலக்கிப் [2]பிறிது விதிவகுத்தல் நுதலிற்று.

---

144-1 ii-vi-vii "ளகார"

2 ii-vi-vii "னகார"

3 ii-vi-vii "மற்றும் இதுவும் விரவுப்"

145-1 ii-vi-vii "இஃது ளகார"

2 ii-vi-vii "னகார" (காரச்சாரியை இப்பிரதிகளில் பின்னும் வரும்)

3 ii-vi-vi [1]"சுட்டெழுத்து முதற்பெயரும்"
v "சுட்டுப்பெயரும்"

146-1 ("லகரப்பெயர்க்கு எய்தியது விலக்கி" என்றிருத்தல் வேண்டும் போலும்)

2 ii "பிறிது வகுத்தல்"

*இதன் பொருள் :—*[3]லகர ஈற்று அளபெடைப் பெயரும், ளகர-ஈற்று அளபெடைப் பெயரும், னகர ஈற்றுப்பெயர்போல, இயல்பாய் விளி ஏற்கும் என்றவாறு.

**உ - ம் :—[4]மாஅல், கோஒஒள் எனவரும்.**

*அதிகாரத்தான் [5]இவ்விதி ளகர ஈற்றின் மேல்ஆகாதோ எனின், [6]லகார ஈற்றுவிளி ஏலாதனவும் கூறி, இது கூறுகின்றமையின் அதிகாரம் மாறிற்று என உணர்க.* (௩௨)

**147. கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்**
**விளம்பிய நெறிய [1]விளிக்குங் காலை.**

*என்பது என்நுதலிற்றோ எனின், [2]உயர்திணைப்பெயர் [3]விளி ஏற்கு-மாறு கூறி விரவுப்பெயர் விளிஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—மேல் உயர்திணைப் பெயர்க்கண் விளிஏற்கும் எனப்பட்ட உயிர்ஈறு நான்கினையும் புள்ளி ஈறுநான்கினையுமே தமக்கு ஈறுக உடைய உயர்திணைப் பெயரோடு அஃறிணைவிரவிவரும் பெயர்கள் அவ்ஈறுகளின் எடுத்துஓதின முறைமையை உடைய,விளக்கும்காலத்து என்றவாறு.* (௩௩)

உ - ம் :—

**சாத்தி - சாத்தீ; தந்தை - தந்தாய் ; [4]பூண்டு - பூடே** எனவரும்.

ஓகார ஈற்று விரவுப்பெயர் கண்டது இல்லை. இவை உயிர்ஈறு.

இனி, புள்ளிஈறு :—**சாத்தன்-சாத்தா; கூந்தல்-[5]கூந்தால்;** எனவரும்.

ரகார ளகார ஈறாய் வரும் விரவுப்பெயர் கண்டது இல்லை.

---

146-3 ii-vi-vii-viii "லகார ஈற்று அளபெடைப்பெயரும் னகர ஈற்றுப் பெயர் போல" (இப்பாடமே பொருந்துவதாம்)
4 ii-iii-vi-vii "மாஅல் எனவரும்" (இதுவே பொருந்தும்)
ii "மாஅல் கோஅன் எனவரும்"
5 v "அவ்விதி ளகர ஈற்றின் மேலாகாதே"
6 i "எனின் ளகார ஈற்று விளி ஏலாதனவும் கூறி"
v "இது கூறுகின்றமையின்"

147-1 i "விளக்குங்காலை"
2 ii-vii "உயர்திணைப் பொருள்"
3 vi "விளியேற்குமாறு உணர்த்துதல்நுதலிற்று" (தொடர் விடுபட்டுள்ளது)
4 ii-vi-vii "பூண்டு பூண்டே"
("பூடு பூடே" என்றிருத்தல் வேண்டும்போலும்)
5 ii-vii "கூந்தால் எ—ம்"

**148.** **புள்ளியும் உயிரும் இறுதி யாகிய**
**அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்**
**விளிநிலை பெறூஉம் காலந் தோன்றின்**
**தெளிநிலை உடைய ஏகாரம் வரலே.**

என்பது என்நுதலிற்றோ எனின், உயர்திணைப் [1]பெயரும் விரவுப்பெயரும் விளி ஏற்குமாறு உணர்த்தி, இனி அஃறிணைப்பெயர் விளி-ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—புள்ளி எழுத்தினையும் உயிர் எழுத்தினையும் ஈறாக [2]உடைய அஃறிணை இடத்து எல்லாப் பெயர்களும், விளிக்கும் நிலைமை [3]பெறும்காலம் உண்டாயின், அவ்விடத்து ஏகாரம் வருதலைத் தெளியப்படு நிலையை உடையன என்றவாறு.

உ-ம் :—நரி-நரியே ; புலி-புலியே ; [4]அணில்-அணிலே ; மரம்-மரமே ; என வரும்.

[5]வருந்தினை வாழியென்னெஞ்சமே எனவும்,

காட்டுச்சாரோடுங் குறுமுயால் எனவும் பிறவாறும் விளிஏற்று வந்தனவால்எனின், அவ்வாறு வருவன வழக்கினகத்து [6]இன்மையின் அங்கிகரன செய்யுள் விகாரம் எனக் கொள்க.

[7]புள்ளிஈறுகலின் புள்ளி ஈறு முற்கூறினன் எனக் கொள்க.

---

148-1 ii-vii "பெயரும் விரவுப்பெயரும் விளிஏற்குமாறு' (கோடிட்ட பகுதி 1ம் பிரதியில் வரி பிளப்பாக உள்ளது)

2 i-ii-iii-iv-v-vi "உடைய ... ... ... ...தெல்லாப் பெயரும்"
v "உடைய ... .... ... .... த்தெல்லாப் பெயரும்"

3 i-ii-iv-vi "பெருங்காலம்"

4 i-iv "அனில் அனிலே"

5 i "தினைவாழி யென்னெஞ்சமே" எனவும் காட்டுச்.
vi "வருந்தினைவாழி நெஞ்சம்" எனவும் காட்டுச்.
ii "வருந்தினை வாழி நெஞ்சமே" காட்டுச்

6 i-iv-vii "இன்மையின் நரிகாள்"
vi-vii "இன்மையின் நரிகள்" (ன்-ன மாறுட்டம் நீமேல் உள்ள கொண்டை வளைவை 'ரி' என மயங்கல் ர-ர; ன-ள மாறுட்டம் காண்க)

7 vi இப்பத்தி இல்லை
"கொள்க விளிநிலை"

**விளிநிலை பெறூஉங்காலந் தோன்றின்** என்றது அவை விளிஏற்கும் நிலைமை சிறுபான்மை என்றது என உணர்க.

**தெளிநிலையுடைய** என்றது அவ் [8]ஏகாரப் [9]பெற்றி .... ... த்தற்குக் கூறியவாறு ஆகக் கொள்க. (கச)

**149.** **உளஎனப் பட்ட எல்லாப் பெயரும்**
**அளபிறந் தனவே விளிக்குங் காலைச்**
**சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான.**

என்பது என்நுதலிற்றோ எனின், [1]இது மேற்கூறிய மூவகைப்பெயர்க்கும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள்:—மேல், விளிஏற்றற்கு [2]உள என எடுத்து ஓதப்பட்ட எல்லாப் பெயர்களும் தத்தம் மாத்திரையின் [3]மிக்கிசைக்கும், விளக்கும் காலத்து ; யாண்டுமோ எனின், அற்றன்று ; சேய்மைக் கண்ணிசைக்கும் வழக்கிடத்து என்றவாறு.

உ - ம் :—

[4]நம்பீஇ-சாத்தாஅ ! எனவரும்.

வரையறையின்மையின் வேண்டியவாறு [5]அளபெழும் எனக் கொள்க.

ஆயின், உயிர் பன்னிரண்டு மாத்திரையும் ஒற்றுப் பதினொரு மாத்திரையும் எனக்கொள்க. (கரு)

---

148-8 v-vi "ஏகாரம் பெற்........ ..."

9 ii "பெற் ...... ... க்கூறிய

vi "பற்றி ...... க்கூறியதாக"

149-1 ii-iii-iv-vii "மேற்கூறிய"

2 ii-vii "உரியன என"

vi "உரியன ன"

3 ii "மிக்கிசைக்குங் காலத்து"

vi "மிக்கிசைக்கும் விளக்கும்வழிக்கிடத்து" (தொடர்விடுபட்டுள்ளது)

4 i-v "நம்பீ சாத்தாஅ"

5 i "அளபெழுத்து ஒலிக்கும் என"

**150. அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்**
**அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்**
**விளியொடு கொள்ப தெளியு மோரே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் [1]விளித்திறத்தொடு படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—அம்ம என்று சொல்லப்படுகின்ற அகரஈற்று அசைச்சொல் ஆகாரமாகி நீண்டு [2]நிற்றல் அவ்விளி ஏற்குமுறைமையை உடைய பெயர்களோடு பொருந்தாது ஆயினும், பெயர் விளிகளோடு இதனையும் ஓர் விளிநிலைமைத்தாகக் கொள்வர் தெளிந்த அறிவினை உடையவர் என்றவாறு.*

*உ - ம் :—*

அம்மா !-கொற்ற ! *எனவரும்.* (௩௬)

**151. த ந நு எ என அவைமுத லாகித்**
**தன்மை குறித்த ன ர ள என் இறுதியும்**
**அன்ன பிறவும் பெயர்நிலை வரினே**
**இன்மை வேண்டும் விளியொடு கொளலே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் உயர்திணைப்பெயருள் விளிஏலாதன கூறுதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—த ந நு எ என்று சொல்லப்பட்ட அவ்எழுத்துக்களை முதலாக உடையவாகி ஓர் தொடர்ச்சித் தன்மையைக் குறித்த ன ள ர என்னும் ஈற்றுஎழுத்தினை உடைய பெயர்களும், அத்தன்மையான பிறபெயர்களுமாய் உள்ள பெயராகிய நிலைமையை உடைய சொற்கள் வரின், மேல் விளிஏற்கும் எனப்பட்ட பெயரோடு விளிகோடலை இல்லாமையை வேண்டும் ஆசிரியர் என்றவாறு.*

---

150·1 ii **"விளித்திறத்தோடு படுவ"**

v **"விளித்திறத்துப் படுவ"**

2 v **"நிற்றல் விளியேற்கு"**

உ - ம் :—

**தமன், தமள், தமர் ; நமன், நமள், நமர் ; நுமன், நுமள், நுமர் : எமன், எமள், எமர்** *எனவும்* ; **பிறவும்** *என்றதனுன்* **மற்றையான், மற்றையாள், மற்றையார்; பிறன், பிறள், பிறர்,** எனவும் வரும்.

*இவற்றை உயர்திணைப் பெயர்களோடு கூருது ஈண்டுக் கூறியது என்னை எனின், இவை ஓர் இனத்துட்பட்டு இயைந்து வருதலான் ஈண்டுப் [1]போந்து உடன் கூறினு[2]ன் எனக் [3]கொள்க,* (கூஎ)

நான்காவது

விளிமரபு முற்றும்

---

151-1 vi-viii "*போதந்து*"

2 "*ர்*"

3 vi "*கொள்க, 37 விளிமரபு மூற்றும்*"

[1]ஐந்தாவது

# பெயரியல்

152. எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே.

[2]என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், பெயர் இலக்கணம் உணர்த்தினமையின் பெயரியல் என்னும் பெயர்த்து.

மேலோத்தினோடு இதற்கு இயை[3]பு என்னோ[4]எனின், மேற்பெயர்இலக்கணம் உணர்த்தி, அவ்இலக்கணம் உடைய அவ்இயற்பெயர் இவை என்று அவற்றது பகுதி உணர்த்திய எடுத்துக்கொண்டான் என்பது.

[5]இம்முதற் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், நான்கு வகைப்பட்ட சொல்லிற்கும் பொதுவாயதோர் இலக்கணம் [6]உணர்த்துதல் நுதலிற்று.

[7]இதன் பொருள்: —தமிழ்ச்சொல் எல்லாம் ஒரு பொருள் உணர்த்துதலைக் கருதியே நடக்கும்; பொருள் உணர்த்துதலைக் கருதாது நடப்பன இல்லை என்றவாறு.

---

152-1 ii "ஸ்ரீராமஜெயம் ஐந்தாவது பெயரியல்"
vi "5 பெயரியல்"

2 i "என்னுதலிற்றோ என்னை"
இவ்வோத்து என்ன பெயர்த்தோ"
ii-iii-vi-v-vii-viii "இவ்வோத்து என்ன பெயர்த்தோ"
(ii-vi ல் "என்ன" என்பது 'என்னை' என்றுள்ளது)

3 v "யு"

4 vi "எனின் பெயரிலக்கணம்"
v-vii-i "எனின் மேற்பெயரதிலக்கணம்"

5 ii-vi-vii "இனி இம்முதற் சூத்திரம்"

6 ii-vii "உணர்த்தல் நுதலிற்று என்க இனி—"

7 v (முன் இயலில் போல இந்த இயலிலும் 'இதன் பொருள்' என்பதற்குப் பதிலாக 'உரை' என்றே இந்தப் பிரதி வருகின்றது)

உதாரணம் :—சாத்தன், கொற்றன் என அவ்அப்[8]பெயர் [9]அவ்அம்மக்களை உணர்த்தின.

உண்டான், தின்றான் [10]என்பன அவ்அவ் வினைச்சொற்கள் அவ்அவ்வினையை உணர்த்தின.

அதுமன், உறுகால் எனவும், சென்மதி, தவச்[11]சேய் நாட்டார் [12]எனவும் இவை அவ்இடையும் உரியும் அவ்அப் பெயர்வினைகளை [13]அடுத்து ஒரு பொருளை உணர்த்தின.

மற்று, இஃது, ஆயிருதிணையினிசைக்கு மன்சொல் என்புழி அடங்கிற்றுப் பிற எனின் ; ஆண்டு எல்லாச் சொல்லும் ஒருதலையாகப் பொருள் உணர்த்தும் என்னும் துணிபு விதி இன்மையின் ஈண்டுக் கூறினான் என்பது.

மற்று அசைநிலை இடைச்சொற்கள் பொருள் [14]உணர்த்தாவாலெனின், அவையும் ஒருவாற்றான் சிறுபான்மை பொருள் உணர்த்தும் என உணர்க. அல்லதூஉம் இது பெரும்பான்மை [15]எனினும் அமையும்.

முயற்கோடு [16]என்னும் தொடக்கத்தன பொருள் உணர்த்தாவாலெனின், இவை [17]நன்மக்கள் வழ ... ... [18]ன்று பொருண்மை

---

152-8 iii "பெயர்கள்"

9 vi "அவ்வப்பொருள்களை"

v "அவ்வவ் மக்களை"

10 ii-vi-vii "எ—அவ்வவ்"

11 "செய்"(குறில்நெடில் வேற்றுமை இன்மையின் இவ்வாறுஎல்லாப் பிரதிகளிலும் இருப்பினும் "சேய்" எனக்கொண்டு பதிப்பிக்கப்பெற்றது)

12 ii-vi-vii "எனவும் வரும் இவை"

13 i-ii-vi-vii "அடைந்து ஒரு பொருளை"

v "அடைந்து நின்று ஒரு பொருளை"

14 i "உணர்த்தாவா வெனின்" (வ -ல மாறுாட்டம்)

15 i "எனின் - உம் மையும்"

ii-vi "எனினும் அமையும் என்பது"

16 ii "யாமை மயிற்கம்பலம் என்னுந் தொடக்கத்தன"

17 i-ii "தன்மக்கள்"

18 iii "ன்று"

திரிந்து முயற்கோடு இல்லை எனப் பின்வரும் சொல்லோடு படுத்து [19]நோக்க வந்த இன்மை விளக்க வந்ததாம்.

இனி, இறிஞ்ரி மிறிஞ்ரி என்னும் தொடக்கத்தன பொருள் [20]விளக்-காவே எனின் அவை [21]நன்மக்க ... என்பது. (க)

**153. பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்**
**சொல்லி னாகும் என்மனார் புலவர்.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் அச்சொற்கள் பொருள் உணர்த்தும்வழிக் கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் [1]பொருள் :—பொருள்கள் [2]தெரியநிற்றலும், அப்[3]பொருளை அறியப்படாது சொற்கள் தெரிய நிற்றலும் என்னும் இவை இரண்டும் சொற்கள் ஏதுவாக உளவாகும் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

பொருண்மை தெரிதற்கு உதாரணம் மேற்காட்டினவே.

சொன்மைதெரிதற்கு [4]உதாரணம்:—பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல், பெயரெச்சம், வினையெச்சம், முற்றுச்-சொல் என இவை அவ் அச்சொற்களையே பொருளாக உணர்த்தின எனக்கொள்க.

மற்றிதுவும் பொருண்மை தெரிதலே ஆம்பிற, எனின் தாம் [5]பொருண்மை ... ... ... ழிச் சொல் என வேறுபட்டு நிற்கும்; ஆதலின் இதனை வேறு [6]கூறினான் என்பது.

---

152-19 vi "நோக்கி அவற்றது இன்மை"
ii-vii "நோக்கவற்றது இன்மை"
20 i "விளக்கவே யெனின்"
ii-vi-i-vii "விளக்கவா லெனின்"
21 i-ii-iv-vii "நன்ம — — என்பது"
153-1 ii-vii "பொருள்வருமாறு"
2 i-ii-iv "தெரியாநிற்றலும்"
3 i-ii-iv-vii "பொருளை ... ... ... சொற்கள் தெரியா நிற்றலும்"
v "பொருள் ... ற்கள் தெரிய நிற்றலும்"
4 ii "உதாகரணம் பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல்"
v "உதாரணம்... ...சொல் இடைச்சொல்"
5 v "பொரு... ...ழிச்சொல்"
6 ii-vi-vii-viii "கூறினார் என்பது"

மற்றொரு சொல் தன்னின் வேறுயதோர் சொல்லைப்பொருண்மையாக உணர்த்தாது, வேறென் கிளவி என்றாற்போல அச்சொல் தன்னையே உணரநிற்றலும் [7]உண்டாம் என்ன அதுவும் சொன்மை தெரிதல் என அடங்கிற்றுப் போலும்.

மற்றும், மேல் எய்திய பொருண்மைதெரிதல் ஈண்டுக்கூறல் வேண்டா எனின், முற்கூறியதிற் பிற்கூறியது வலிஉடைத்தாகலின் அஃது விலக்குண்ணும் என உம்மை கொடுத்தாயினும் [8]ஓதற்பால அதனை நன்கு உணர்தற் பொருட்டு உடன் ஓதினன் என உணர்க. (உ)

151. தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், இதற்கும் அக்கருத்து ஒக்கும்.

இதன் பொருள்:—இச்சொல்லினது பொருள் இது எனத்தெரிந்து வேறு நிற்றலும், அவ்வாறு அன்றிச் சொல்லுவான் குறிப்பினான் இச்சொல்லினது பொருள் இது என அறிய நிற்றலும் என [1]இருபகுதிற்று என்று சொல்லுவர் [2]ஆசிரியர் சொற்கள் உணர்த்தும் பொருளது நிலைமையை என்றவாறு.

உ-ம்:—[3]இடர், திடர் என்பன தெரிபுவேறு நிலையல். சோறுண்ணா நின்றான், கறிகறித்து நன்கு[4]அட்டாய் என்றல் [5]குறிப்பின் தோன்றல். (ங)

---

153-7 v "உண்டாக அதுவும் சொன்மை திரிதல் எனவே"

8 i "ஓதற்பாலவதனை நன்கு"

v "ஓதற்பாலதனை நன்கு"

vi "ஓதற்பாலவதான நன்கு"

154-1 v "இருபகுதித்து"

2 vi "ஆசிரியர் என்றவாறு" (சொற்கள் விடுபட்டுள்ளது)

3 vi "இடாதிடர" (புள்ளிடாமை)

4 ii-vii "என்ற வழித்திங்கட்டா யென்றல்"

5 "குறிப்பிற்றோன்றல்"

155. சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே.

என்பது என்நுதற்றோ எனின், மேற்பொருள் உணர்த்தும் எனப்பட்ட சொல்லிற்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—சொல் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவன பெயர்ச்சொல் [1]என்றும் வினைச்சொல் என்றும் [2]அவை இரண்டும் என்று சொல்லுப, இலக்கணம் அறிந்த ஆசிரியர் என்றவாறு.

பெயர்ச்சொல், [3]பொருளை உணர்த்துதலின் முற்கூறப்பட்டது. வினை, பொருளது புடைபெயர்ச்சியாகிய தொழிலினை உணர்த்தலின் சிறப்பின அல்ல என்று [4]பிற்கூறப்பட்டது. எனச் சிறப்பின்கண் வந்தது. (௪)

156. இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப.

என்பது என்நுதலிற்றோ எனின், இறந்தது காத்தலை நுதலிற்று.

இதன் பொருள் :—இடைச்சொல் ஆகிய சொல்லும், உரிச்சொல் ஆகிய சொல்லும், பெயர்வினைகட்கு இடமாகிய [1]இடத்தேதோன்றும்; தாமாகத் தோன்றா என்றவாறு.

---

155-1 vi "என்றும் அவை வேண்டும்"
(என்றும் என பின்வருவதோடு முன் வருவதனை மயங்கிய மயக்கத்தால் சொற்கள் விடுபட்டன.)

2 ii-vii அவ்விரண்டும்"
iii "இவையிரண்டும்"

3 iv "பொருளை உணர்த்தலின் சிறப்பின அல்ல" (உணர்த்தலின் எனப் பின்வருவதோடு முன்வருவதனை மயங்கிய மயக்கத்தால் விடுபட்ட பாடம். "பிற்கூறப்பட்டது எனப்படுப-சிறப்பின்கண் வந்தது" என்றிருந்தது போலும்.)

4 i "பின் கூறப்பட்டது"

156-1 iv "இடத்தோன்றும்"

[2]மற்றுச் [3]சொல் நான்கு என ஒன்றாக ஓதாத்து என்னை எனின், இடை உரிகள், பெயர் வினைகளை அடைந்து நின்றல்லது பொருள் உணர்த்தாச் சிறப்பின்மை நோக்கிப் பிற்கூறினான்.

இடைச்சொல் முற்கூறிய காரணம் என்னை எனின், எழுகூற்றதாகிய வழக்குப் பயிற்சி [4]நோக்கி முற்கூறினான் என்பது.

மருங்கு என்றதனான், அவ்இடை உரிகள், பெயர் வினைகளை அடைந்து தோன்றுங்கால், தம் [5]மருங்கினான் தோன்றுதலும், பெயரதும் வினையதும் மருங்கினாற்றோன்றுதலும் என [6]இருவகைய என்பது கொள்ளப்படும்.

அதுமன் உறுகால் என்பன தம்மருங்கிற்றோன்றின.

அவன் - அவள் ; உண்டான் - உண்டாள் என்பன அவற்று மருங்கிற்றோன்றின.

இத்துணையும் [7]கூறின, நான்கு சொல்லிற்கும் பொது இலக்கணம்; மேற்கூறுகின்றது பெயரது இலக்கணம் என உணர்க. (ரு)

157. **அவற்றுள்,**
**பெயரெனப் படுபவை தெரியுங் காலை**
**உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்**
**ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்**
**அம்மூ வுருவின தோன்ற லாறே.**

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே பெயர்ச்சொற்களது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

---

156-2 vi (இந்தப்பத்தி முழுவதும் இல்லை)

3 i "சொன்னான்கு"

4 vi நோக்கி என் மருங்கு"

5 i-ii-iii-vii "மருங்கினாற் றோன்றுதலும்"

v-vi "மருங்கினால் தோன்றுதலும்." (பின்னும் இவ்வாறு வருவனவற்றைக் கண்டுகொள்க.)

6 vi "இருவகை என்பது"

7 ii-vii "கூறின்"

i-v-vi "கூறியன"

இதன் பொருள் :—மேற்சொல்லப்பட்ட நான்கு சொல்லுள்ளும் பெயர்ச்சொல் என்று சொல்லப்படுவனவற்றை ஆராயும் காலத்து, உயர்திணைக்கு உரிமையும், அஃறிணைக்கு உரிமையும், அவ் இருதிணைக்கும் ஒத்த உரிமை உடையனவும் என அம்மூன்று கூற்றன, அவை தோன்று நெறிக்கண் என்றவாறு.

[1]அப்பெயர் பெயர்; அம்முறை முறை; அத்தொகை தொகை; என உணர்க. (சு)

158. இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயி னான.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் பெயர்க்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இருதிணையினின்றும் பிரிந்த ஐம்பாற்பொருட்கும் ஒருபாற்கு உரிய தொழில்கள் ஏனைப்பாற்கும் உரியவாம். இவ்வாறு உரியஆவது எச்சொல் இடத்தோ எனின், வினைச்சொல் இடத்து ஆகாது பெயர்ச்சொல் இடத்தே ஆம் என்றவாறு.

[1]உ - ம் :—

நஞ்சுண்டான் சாம் ; நஞ்சுண்டாள்சாம் ; நஞ்சுண்டார்சாவர் ; நஞ்சுண்டது சாம்; நஞ்சுண்டன சாம் என்பது.

மற்று, அவ்ஆண்பால் மேற்கூறற்கு உரிய சாதல் என்னும் வினை மற்றை நான்கு பாற்கண்ணும் [2]தனித்தனியே [3]கூறுமற் சென்றது என உணர்க.

உண்டான் என்பதனைப் படுத்தல் ஓசையாற் பெயர் ஆக்கிக்கொள்க.

பார்ப்பான் கள்ளுண்ணான் என்பது கள்ளுண்டல் அதற்கு இன்மையின் அஃறிணைப்பான் மேற்செல்லாது ஆயிற்று. (எ)

---

157-1 iv "அப்பெயர் அம்முறை"

158-1 vi (உ - ம் என்பது இல்லை)

2 ii-vi-vii "தனித்தனி"

3 ii-vii "கூறுமலே சென்றது"

159. அவ்வழி
அவன் இவன் உவன்என வரூஉம் பெயரும்
அவள் இவள் உவள்என வரூஉம் பெயரும்
அவர் இவர் உவர்என வரூஉம் பெயரும்
யான் யாம் நாம்என வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றொ டப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே.

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்தமுறையானே உயர்திணைப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அவ்வாறு மூன்று கூற்றவாய் நின்றபெயர்களிடத்து அவன் என்பது முதலாக [1]அவர்என்பது ஈறாக ஓதப்பட்ட சுட்டுப்பெயர் மும்மூன்று [2]ஒன்பதும், யான் என்னும் தனித்தன்மைப்பெயர் [3]ஒன்றும்; யாம் என்னும் படர்க்கை உளப்பாட்டுத் தன்மைப் பெயர் ஒன்றும், நாம் என்னும் முன்னிலை உளப்பாட்டுத் தன்மைப்பெயர் ஒன்றும், [4]யாவன் யாவள் யாவர் என்று சொல்லப்படுகின்ற அவ்வினாவிடத்துப்பெயர் மூன்றும் ஆகப் பதினைந்து பெயரும் ஒருவன் [5]ஒருத்தி ... ... ... எனப் பால் அறிய வந்த உயர்திணைப்பெயர் ஆம் என்றவாறு. (அ)

160. ஆண்மை அடுத்த மகன்என் கிளவியும்
பெண்மை அடுத்த மகள்என் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம்ஊர்ந்து வரூஉம் இகர ஐகாரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்

---

159-1 i "உவர்"

2 vi "என்பது"

3 v "ஒன்றும் யாவன் யாவள் யாவர்" (ஒன்றும் என்று பின்னும் வருவதை மயங்கியதால் சொற்கள் விடுபட்டன)

4 "யா ... ... யாவர்"

5 ii-vii "ஒருத்தி பலரென"
vi-viii "ஒருத்தி எனப்பாலறிய"

மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ [1]ஆயிரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டென் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் [2]உயர்திணைப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

[3]இதன் பொருள் :— ஆண்மை என்னும் சொல்லை முன்னடுத்த ஆண்மகன் என்னும் பெயர்ச்சொல்லும், பெண்மை என்னும் சொல்லை முன்னடுத்த பெண்மகள் என்னும் பெயர்ச் சொல்லும், பெண்மை என்னும் சொல்லை [4]முன்னடுத்த இகரஈற்றுப் பெண்டாட்டி என்னும் சொல்லும் [5]நம் என்ற சொல்லை ஊர்ந்து வருகின்ற இகரஐகார ஈற்று நம்பி நங்கை என்னும் பெயர்ச்சொற்களும், [6]முறைமைப் பொருண்மையைக் [7]கருதாத மகன் மகள் என்னும் பெயர்ச்சொற்களும், மாந்தர் மக்கள் என்னும் பெயர்ச்சொற்களும், ஆடூஉ மகடூஉ ஆகிய அவ்விருவகைப்-

---

160. 1 i "ஆயபெரும்"
ii-vi-vii "ஆயிருகிளவியும்"
2 i-ii-iv-vii "உயர்திணைப்பேரை வி ஆண்மை"
v "உயர்திணைப்பேரை ... ... ஆண்மை"
3 i "... ... னுஞ் சொல்லை"
4 ii-vi "முன்னடுத்த பெண்டாட்டி"
5 ii-vii "நம் என்று வருகின்ற"
i "நம் என்று சொல்லை யூர்ந்து வருகின்ற"
v "நம் என்ற .... .... வருகின்ற"
vi-viii "நம் என்பதை அடுத்து வருகின்ற"
6 vi "முறைப் பொருண்மையை"
7 i-v "கருதமகன்"

[8]பெயர்ச்சொற்களும், [9]சுட்டெழுத்தை முதலாக உடைய அவ்வாளன் இவ்வாளன் உவ்வாளன் என்னும் அன்ஈற்றுப் பெயர்ச்சொல்லும், அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான் என்னும் ஆன்ஈற்றுப்பெயர்ச்சொல்லும், இன்னும் [10]அச்சுட்டெழுத்தை முதலாகஉடைய அவ்வாட்டி இவ்வாட்டி உவ்வாட்டி எனப் பெண்டாட்டி என்னும் பொருண்மை உணரவரும் பெயர்ச்சொல்லும், பொன்னன்னன், பொன்னன்னள், பொன்னன்னர் என ஒப்புப் பொருண்மையோடு வரும் பெயர்ச்சொல்லோடு தொக்க பதினைந்து சொல்லும் மேற்கூறிய பெயரே போலப் [11]பாலறிய வந்த உயர்திணைப்பெயராம் என்றவாறு. (௬)

161. எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகன்என் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர்.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் உயர்திணை ஒருசார் பெயர்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—எல்லாரும் என்று சொல்லப்படுகின்ற படர்க்கைப் பெயர்ச்சொல்லும், எல்லீரும் என்று சொல்லப்படுகின்ற முன்னிலைப் பெயர்ச்சொல்லும், பெண்மை என்னும் சொல்லை முன் அடுத்த பெண்மகன் என்னும் பெயர்ச்சொல்லும் இவை மூன்றும் அவைபோலப் பால்அறிய வந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

நாணுவரை [1]இறந்து ஆண்டன்மையளாகிப் புறத்துப்போய் விளையாடும் பெண்மகளைப் பெண்மகன் என்பது முற்காலத்து வழக்கம். அதனை இப்பொழுது [2]மாரேகத்தார் இவ்வாறு வழங்குவர் எனக்கொள்க. மாரேகம் என்பது [3]கொற்கை சூழ்ந்த நாடு. (எ)

---

160-8 i-iv "பெயர்ச்சொல்லும்"
vi "சொற்களும்"
9 ii vi "சுட்டெழுத்தாகிய அகரத்தை முதலாக"
10 i-v "அச்சுட்டெழுத்தினை முதலாக"
11 ii-v "பாலன்றியவந்த"
161-1 ii "யிறந்தா டன்மையளாகி"
vi "யிறந்தாள், தன்மையளாகி"
2 vi "மாரேக்கத்தார் வழங்குவர் மாரேக்கம்"
3 i "கொன்றைச் சூழ்ந்த"

162. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றிவர் என்னும் எண்ணியற் பெயரோ-
டன்றி அனைத்தும் அவற்றியல் பினவே.

*என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் உயர்திணை ஒரு சார்-பெயர்களை உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:*—அருவாளன், சோழியன் [1]என்றாற்போல்வன ஒருவன் தான் பிறந்த நிலத்தினாற் பெற்றபெயர்களும், மலையமான், சேரமான், பார்ப்பான், அரசன் என்றாற் [2]போல்வன தான் பிறந்த குடியாற் பெற்ற பெயர்களும், அவையத்தார், அத்திகோசத்தார் [3]வணிக்கிராமத்தார் என்றாற்போல்வன தாம் திரண்ட திரட்சியினாற் பெற்ற பெயர்களும், [4]உண்டவனென்றாற்போல்வன தான்செய்யும்தொழிலாற்பெற்ற பெயர்களும், அம்பர் கிழாஅன், அம்பநுடையான் [5]என்றாற்போல்வன தனது உடைமையாற்பெற்ற பெயர்களும், [6]கரியான் செய்யான் [7]என்றாற்போல்வன [8]தனக்கு ஓர் பண்பினாற் பெற்ற பெயர்களும், தந்தையார் தாயார் என்-

162-*1* ii-vi-vii "என்றாற்போல"

*2* ii-vi "போல்அவன்" (புள்ளியிடாமையால் வரும் குழப்பம்)

3 i "அவணிக்கிராமத்தார் என்றாற்போலத்தாம்"
ii-vii "வணிக்கிராமத்தார் என்றாற்போலத்தாம்"
vi "வணிககிராமத்தார் என்றாற்போலத்தாம்"

4 i-iv "உண்ட ... ... ற்ற போலவன் தாம் செய்யும்"
ii-vii "உண்டவர் வருவார் என்றாற்போல் அவன்தான் செய்யும்"
vi "உண்டார் என்றாற்போல அவன்தான் செய்யும்"

5 ii-vi-vii "என்றாற்போல் அவன்"

6 ii-vii "கரியன் செய்யான் என்றாற்போலத்"
iv "கரியான் . . த்தந்தையார்" (சொற்கள் விடுபட்டுள்ளன.)

7 i-ii-vi "என்றாற்போலத்"

8 vi "தனது பண்பினாற்"

ருற் [9]போல்வன பல்லோரைக் கருதின தமது முறைமையாற்பெற்ற பெயர்களும், பெருங்காலர், பெருந்தோளர், பெருங்கண்ணர் என்றாற்போல்வன பல்லோரைக் கருதின தமது சினைநிலைமையாற் பெற்ற பெயர்களும், [10]நாடவர், இறவுளர், குன்றவர், என்றாற்போல்வன பல்லோரைக் கருதின [11]குறிஞ்சி முதலாகிய ஐந்திணை நிலைமையாற் பெற்றபெயர்களும், [12]இளந்துணை மகாஅர் தம்மிற் கூடிவரும் வழக்கின்கண் அவர் தமது விளையாட்டு வகையான் தாமே தமக்கு [13]அப்போதுகைக்கு பட்டிபுத்திரர், [14]கங்கைமாத்திரர் என்றாற்போல்வன படைத்திட்டுக் கொண்டபெயர்களும், ஒருவர், இருவர், மூவர், நால்வர் என்றாற்போல்வன இத்துணைவர் எனத் தமது வரையறை உணர நிற்கும் எண்ணியல்பினாற்பெற்ற [15]பெயர்களும் ஆய் உள்ள அனைத்துப் பெயர்களும் மேற்கூறிய பெயர்கள் போலப் பால்அறிய வந்த உயர்திணைப் [16]பெயராம் என்றவாறு. (கக)

163. அன்ன பிறவும் உயர்திணை மருங்கிற்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை அவ்வே.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் [2]உயர்திணைப் பெயர்க்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

---

162-9 i-ii-vi-vii "என்றாற் போல"

10 vi "குறவர் ஆயர்வேட்டுவர் என்றாற்"

11 vi "குறிஞ்சி முதலிய திணைகளாற்பெற்ற"

12 i "இளந்தணை மாகாஅர்"
v "இளந்திணை மகாஅர்"
ii-vi "இளந்துணை மாகார்"

13 ii-vi vii "அப்போதைக்குப்" (திருத்தம் பொருத்தமேயாம்.)

14 i-iv "கங்க மாத்திரர்"

15 ii-vii "பெயர்களும் ஆயுள்ள இவ்அனைத்துப்பெயர்களும்"
vi "பெயர்களும் மேற்கூறிய" (பின்வரும் 'பெயர்களும்' என்பதனோடு மயக்கம்)

16 v "பெயராகும்"

163-1 i-vi "வின்ன பெயருமத் திணையவ்வே—இன்ன=என்ன."
ii வென்ன பெயருமத்திணையவ்வே இன்ன—இன்ன"

2 v "உயர்திணைக்குப் புறனடை
vi "உயர்திணைப்பெயருக்குப் புறனடை"

இதன் பொருள் :—மேற்கூறிய அத்தன்மையன பிறவுமாயுள்ள உயர்திணை இடத்துப் பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை அறிய வந்த எல்லாப் பெயர்களும் அவ்வுயர்திணைக்கு உரிய பெயர்களாம் என்றவாறு.

உ - :—

ஏனாதி, வாயிலான், வண்ணத்தான், சுண்ணத்தான் ;
பிறன், பிறள், பிறர் ;
[3]தமன், தமள், தமர் ;
நுமன், நுமள், நுமர் ;
மற்றையான், மற்றையாள், மற்றையார் எனவரும். பிறவும் அன்ன. (கஉ)

164. அதுஇது உதுஎன வரூஉம் பெயரும்
அவை முதலாகிய ஆய்தப் பெயரும்
அவைஇவை உவைஎன வரூஉம் பெயரும்
அவை முதலாகிய அகரப் பெயரும்
யாது யா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றொ டப்பதி னைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே.

என்பது என்னுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே அஃறிணைப்பெயர் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அது, இது, உது, என்று [1]சொல்ல வருகின்ற சுட்டு முதற்பெயர்களும், சுட்டெழுத்தினை முதலாக உடைய அஃது, இஃது, உஃது [2]என்னும் ஆய்தத் தொடர்மொழிக் குற்றியலுகரப் பெயர்களும், அவை, இவை, உவை என்று சொல்ல [3]வருகின்ற சுட்டு-முதற்பெயர்களும், அச்சுட்டெழுத்தினை முதலாகஉடைய அவ், இவ், உவ்

---

163-3 i-ii-iv-v-vii "தமன் தமர்"

164-1 vi "சொல்லப்படுகின்ற சுட்டு"

2 i-ii-iv-vi "என்னுமாறு தொடர்"

viii "என்னுமாயுதத்தொடர்"

3 i-ii-iv-vii "வருகிற"

என்னும் [4]வகரஈற்றுப்பெயர்களும், யாது, யா. யாவை என்று சொல்ல வருகின்ற அவ்வினைப் [5]பொருளிடத்து வரும் மூன்று பெயரும் ஆகவரூஉம் பதினைந்து [6]பெயர்களும் ஒருமைப் பன்மைப் பால்அறிய [7]வந்த அஃறிணைப் பெயர்ஆம் என்றவாறு. (௧௩)

165. பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக் குறிப் பெயரும்
ஒப்பி னாகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் அஃறிணை ஒருசார் பெயர்களை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பல்ல பல, சில என்று சொல்லப்படுகின்ற பெயர்களும், உள்ள, இல்ல என்னும் பெயர்களும், உண்டது, உண்டன என்றாற்போல வரும் வினைப்பெயரும், கரியது கரியன என்றாற்போல வரும் பண்பினைக்கொண்ட பெயர்ச்சொல்லும், ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் என்றாற்போலச் சொல்லப்படுகின்ற இத்துணைஎன வரையறை உணர்த்தும் எண்ணுக்குறிப்பாற் பெற்ற பெயர்ச்சொல்லும், பொன்னனது, பொன்னன என்றாற்போல உவமத்தினாற்பெற்ற பெயர்ச்சொல்லும் உட்பட அக்கூற்று ஒன்பதும் மேற்கூறிய பெயர்போலப் பால் அறியவரும் அஃறிணைப்பெயர்ஆம் என்றவாறு. (௧௪)

166. கள்ளொடு சிவணும் அவ்இயற் பெயரே
கொள்வழி உடைய பலஅறி சொற்கே.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் பால் அறியவரும் அஃறிணை ஒருசார் பெயர்களை உணர்த்துதல் நுதலிற்று.

---

164-4 i-iii-v "அகரவிற்றுப் பெயர்க ... ... ன்று சொல்ல"
v "வகரவிற்றுப் பெயர்களும் என்று சொல்ல"

5 i-ii-iv-v-vii "பொருளிடத்து மூன்று"

6 i "பேரும்"
v "பெயரும்"
vi "பெயர்களாம்"

7 i "வந்த உயர்திணை அஃறிணைப் பேராம்"

[1]இதன் பொருள் :—கள் என்னும் வாய்பாட்டோடு பொருந்தும் அவ்அஃறிணை இயற்பெயர்கள் பலஅறிசொல்லாதற்குக் கொள்ளும் [2]இடமுடைய என்றவாறு.

கள்ளொடு [3]சிவணின இயற்பெயர் பல அறி சொல்லாகக் [4]கொள்வழி உடைய எனக் கள்ளொடு [5]சிவணாத பெயர்கள் பலஅறிசொல்லாகக் கொள்ளப்படாது,ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்கும் என்றவாறு.

[6]உ – ம் :—

நாய்கள், ஆக்கள் எனப் பன்மை உணர நின்றன, ஆ, நாய் எனக் கள்ளொடு சிவணாமையிற் பொதுவாய் நின்றன எனக்கொள்க. (கரு)

167. அன்ன பிறவும் அஃறிணை மருங்கிற்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே.

[1]என்பது என்நுதலிற்றோ எனின், 'இஃது அவ் அஃறிணைப் பெயர்க்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]மேற்கூறிய அத்தன்மையன பிறவும் ஆகிய அஃறிணை இடத்துப்பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை அறிய

---

166-1 ii "இதன் பொருள் வருமாறு .. .. கள் என்னும் வாய்ப்பாட்டோடு பொருந்தும்"

v "உரை:—கள் என்னும் .... .... பொருந்தும்"

i "இதன் பொருள்...கள் என்னும் வாய்ப்பாட்டோடு பொருந்து'-

2 v "இடமுமுடைய"

3 ii "சிவணின்"

4 vi "கொள்ளுமிட முடைய"

5 i "சிவணாதப் பெயர்கள்"

6 ii-iii-iv-v "நாய்கள்"

167-1 i-ii-vii "என்ன = அன்ன" இஃது அவ் அஃறிணைப் பெயர்க்குப் புறநடை.

2 vi "அத்தன்மையன பிறவும்"

வந்த எல்லாப் [3]பெயர்களும் அவ்அஃறிணைக்கு உரிய [4]பெயர்ஆம் என்றவாறு.

உ - ம்:—

ஆ, நாய், கழுதை, ஒட்டகம், புலி, புல்வாய், எனச் சாதிபற்றி வருவன எல்லாம் கொள்க.

நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்பனவும் அவற்றின்பாற்படும்.

[5]உண்டல், தின்றல் எனப் பால்காட்டாத தொழிற்பெயரும், கருமை செம்மை எனப் பால்காட்டாத பண்புப்பெயரும் மற்றும் அவற்றுப் பாலே படும் எனக்கொள்க. மற்றையது, மற்றையன; பிறிது, பிற [6]என்பனவும் கொள்க. பிறவும் அன்ன. (கசு)

168. தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே.

என்பது என்னுதலிற்றோ எனின், மேற்புறனடையுட் பால் அறிய வருவனவற்றோடு ஒன்றாக ஓதப்பட்ட இயற்பெயர்கள் பால் அறிய வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

[1]இதன் பொருள் :—தெரியும் நிலைமையை [2]உடைய அஃறிணை இடத்து ஒருமையினும் பன்மையினும் [3]இயறலையுடைய பெயர்கள்-யாது தெரியுநிலைமை எனின், ஒருமையும், பன்மையும் ஆகிய பால்கள்-எப்பொழுது தெரிவது எனின்,-பால்காட்டும் வினையொடு வரும் பொழுது என்றவாறு.

167-3 viii "பெயரும்"

4 vi "பெயர்களாம்"

5 ii-iii "உண்டல் உண்டல் தின்றல்"

6 ii-vii "எனவும் கொள்க"

168-1 vi "இதன் பொருள் அஃறிணையிடத்து"

2 iv "உடைய ... து தெரியுநிலை"

vi "உடைய அஃறிணையிடத்து ஒருமையும் பன்மையும் ஆகிய பால்கள் எப்பொழுது தெரிவது எனின்"(கள் விடப்பட்டன-இரட்டித்துவரும் கருத்தினை நீக்குகிறது.)

3 i-ii-vii "இயறலையுடைய ... து தெரியுநிலை"

iii-v "இயறலையுடைய ... யாது"

உ-ம் :—

ஆ வந்தது, ஆ வந்தன எனவும், வினையால் பால் அறிய வந்தவாறு கண்டுகொள்க. (கஎ)

169. இருதிணைச் சொற்கும் ஓரன்ன [1]உரிமையின்
திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையோ டல்லது [2]பாற்றெரி பிலவே.

என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே விரவுப் பெயர் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— இருதிணைப்பொருட்கும் ஒன்று போன்ற உரிமை காரணமாக, அவ்அத்திணைக்கண் செலவு வரவு உடைத்தாய் உயர்திணைக்கண் சென்றகாலத்து உயர்திணைப்பெயராயும் அஃறிணைக் கண்சென்ற காலத்து அஃறிணைப்பெயராயும் வேறுபடுகின்ற விரவுப்பெயர்கள் எல்லாம் ஆராயுங்காலத்து அவ்அத்திணையே [3]உணர்த்துதற்கு உரிய முறைமையினை உடைய வினைச்சொற்களான் அல்லது திணை தெரிதல் இல என்றவாறு.

உ-ம் :—

சாத்தன் வந்தான் ; சாத்தான் வந்தது எனவரும்.

[4]நினையுங்காலை என்றதனான் தத்தம் வினைப்பெயரும், பன்மைச்சினைப்பெயரும், ஒருமைச் [5]சினைப்பெயரும் எனப்பட்ட அந்நான்கும் என்று சொல்லுப சினைப்பெயரது நிலைமைய என்றவாறு.

வினையானேயன்றித் தத்தம் மரபிற் பெயரானும் திணை அறியப்படும் என்பது.

உ-ம் :—

சாத்தான் ஒருவன் ; சாத்தான் ஒன்று எனவரும்.

---

169-1 i "உரிமையிற் றிரிபு"

2 iv "பாறி நிலையே"

3 v "உணர்த்துதற் குறிய"

4 vi (இந்தப்பகுதி முழுவதும் இல்லை)

5 i "சினைப்பேரும்"

இன்னும் அவ்இலேசானே மேற்கூறிய அஃறிணையுடைய பெயர்களும் வினையானே அன்றிப் பெயரானும் பால் அறியப்படும் எனக் கொள்க.

ஆ ஒன்று, ஆ பல எனவரும். (கஅ)

**170. நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்**
**உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே**
**அன்ன மரபின் வினைவயி னான.**

என்பது என்நுதலிற்றோ எனின், அவ்விரவுப்பெயர் தத்தம்மரபின் வினையான் அன்றி விரவு வினையானும் திணை அறியப்படும் என எய்தியதின்மேற்சிறப்புவிதி வகுத்தல் நுதலிற்று.

[1]இதன் பொருள் :—நிகழ்காலத்தை உடைத்தாய் நின்ற, [2]பலரை உணர்த்தாது என்று வரைந்து ஓதப்பட்ட, செய்யும் என் சொற்காரணமாக அவ்விரவுப்பெயர் உயர்திணை ஒருமைப்பால் என்பது தோற்ற நிற்றலும் உரித்து, யாண்டுமோ எனின், [3]அன்று; அத்தன்மைத்தான முறைமையினை உடைய சில செய்யும் என்னும் வினைச்சொல் இடத்து என்றவாறு.

உ - ம் :—

சாத்தன் யாழெழூஉம், குழலூதும், பாடும் எனவும் சாத்தி சாந்தரைக்கும், பூத்தொடுக்கும் எனவும் வரும்.

சாத்தனெடுங் கிடக்கும் என்பன, அன்னமரபின் வினை அன்மையின் திணை தெரியா ஆயின.

இனி வினை இயலுள் வியங்கோளின் பின்னர்ச் செய்யும் என்பதனை இயைபு இன்றி வைத்து ஆராய்ந்ததனுன் வியங்கோளானும் உயர்திணை ஒருமை தோன்றும் என்று கொள்ளப்படும்.

உ - ம் :—

சாத்தன் யாழெழூஉக, குழலூதுக எனவரும்.

இத்துணையும் கூறியது விரவுப்பெயரது இலக்கணம் என உணர்க. (கக)

---

170-1 ii-vii "இதன் பொருள் வருமாறு : - நிகழ்"

2 vi "பலரை உணர்த்தும் என்று"

3 i "அன்றுறத் தன்மை"
ii-vii "அன்று .... ... அத்தன்மையான"

**171.** **இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே**
**முறைப்பெயர்க் கிளவி தாமே தானே**
**எல்லாம் நீயிர் நீஎனக் கிளந்து**
**சொல்லிய அல்ல [1]பிறவும் ஆஅங்-**
**கன்னவை தோன்றின் அவற்றொடும் கொளலே.**

*என்பது என்நுதலிற்றோ எனின், விரவுப்பெயருக்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:—இருதிணைக்கண்ணும் வாளாது இயன்றுவருதலான்* **இயற்பெயர்** *எனவும், ஓர்சினைக்காரணத்தாற் பெற்றமையிற்* **சினைப்பெயர்** *எனவும், சினையோடு தொடர்ந்த முதலை உணர்த்தினமையிற்* **சினைமுதற்பெயர்** *எனவும், முறைமையாற் பெயர்பெற்றமையின்* **முறைப்பெயர்** *ஆகிய சொல் எனவும், ஓர் காரணம் இன்மையின் [2]வாளாது* **தாம்** *எனவும்,* **தான்** *எனவும்,* **எல்லாம்** *எனவும்,* **நீயிர்** *எனவும்,* **நீ** *எனவும், ஆசிரியனால் [3]விதந்து ஓதப்பட்ட அல்லாத பிறவும் பெயர்களிடத்து இருதிணையினும் விரவும் அத்தன்மையன தோன்றுமாயின், அவற்றோடும்கூட ஆசிரியன் விதந்து ஓதின பெயர்களை* **விரவுப்பெயர்** *ஆம் எனக்கொள்க என்றவாறு.*

*அப்பெயர் பெயர்; அம்முறை முறை; அத்தொகை தொகை என்பதாம். [4]இயற்பெயர் முதலாக முறைப்பெயர் ஈறாக ஓதின எல்லாம் பல எனினும், ஞாபக வகையான் ஒன்று எனப்பட்டன.*

**பிறவும்** *என்றதனாற் கொள்வன யாவைஎனின்,* **குறவன், இறவுளன், [5]குன்றவன்** *எனவும்;* **காடன், காடி** *எனவும்;* **நாடன், நாடி** *எனவும்;* **துறைவன், சேர்ப்பன், தரையன், திரையன்** *எனவும் ஒருமைத் திணைப்பெயராய் வருவனவும்* **ஆண், பெண்** *என்பனவும் பிறவும் இன்னோரன்னவும் போலும்.* (௨0)

**172.** **அவற்றுள்,**
**நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்**

---

171-1 i-iv "*பிறவுமாவுங் கன்னவை*"

2 vi "*வாளாது தான் எனவும்*" (*சொற்கள் விடப்பட்டன.*)

3 v-vi "*விதந்தோதப்பட்டன அல்லாத*"

4 i "*இயர் பெயர்*"

5 i-ii-iv-vi-vii-viii "*குன்றுவன்*" (*று - ற மாருட்டம்.*)

நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி இரண்டா கும்மே
ஏனைப் பெயரே தத்த மரபின.

என்பது என் நுதலிற்றோ எனின், மேல்தொகுத்து ஓதின விரவுப்பெயர்களை விரித்து ஓதுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேல் ஓதப்பட்டவற்றுள் இயற்பெயர் எனப்பட்டது நான்கு [1]வகைப்படும். சினைப்பெயர் எனப்பட்டது நான்கு வகைப்படும். சினைமுதற் பெயரினையும் நான்கு வகைப்படும் என்று கூறுவர் ஆசிரியர். முறைப்பெயர்க் கிளவி எனப்பட்டது இரண்டு வகைப்படும். இவ்வாறு இவ்வகைப்பட்டமையின், 'ஏனையவும் அவ்வகைப்படும் கொல்' என்று ஐயுறின், 'அவ்வகைப்படா. ஒழிந்த பெயர்கள் ஐந்தும் அவ்ஓதிய [2]வாய்பாட்டவேஆகும் மரபினை [3]உடைய' என்றவாறு.

[4]மேல் தொகையான் ஒன்பது எனப்பட்ட விரவுப் பெயர் இவ்விரிநிலையால் பத்தொன்பது ஆயின எனக்கொள்க. (௨௧)

173. அவை தாம்,
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயர்என்-
றந்நான் கென்ப இயற்பெயர் நிலையே.

என்பது என் நுதலிற்றோ எனின், மேல் இயற்பெயர் நான்கு என்றமையின் அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — அவ்வாறு வகுக்கப்பட்டனதாம் யாவை எனின், பெண்மை இயற்பெயரும், ஆண்மை இயற்பெயரும், பன்மை இயற்பெயரும், ஒருமை இயற்[1]பெயரும் என்று சொல்லப்பட்ட அந் நான்கும் என்ப, இயற்பெயரது [2]நிலைமை என்றவாறு. (௨௨)

---

172-1 iv "வகைப்படும் சினைமுதற் பெயரினை" (பின்வரும் வகைப்படும் என்பதனோடு மயங்கிய குழப்பம்.)
2 "வாய்ப்பாட்டவே" (vi நீங்க)
3 ii "உடை என்றவாறு"
4 "மேற்றொகையான"

173-1 iii "பெயரும் எனச் சொல்லப்பட்ட"
2 vi "நிலைமையை என்றவாறு"
iii "நிலைமை என்றுணர்த்திற்று"

174. பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயரென்-
றந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், சினைப்பெயர் நான்கு என்றமையின் அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—பெண்மைச் சினைப்பெயரும், ஆண்மைச்சினைப்பெயரும் பன்மைச் சினைப்பெயரும், ஒருமைச் சினைப்பெயரும் எனப்பட்ட அந்நான்கும் [1]என்று சொல்லுப, சினைப்பெயரது [2]நிலைமை என்றவாறு. (௨௬)

175. பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்-
றந்நான் கென்ப சினைமுதற் பெயரே.

என்பது என்நுதலிற்றோ எனின், சினைமுதற் பெயரினையும் நான்கு என்றமையின், அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — பெண்மை சுட்டிய சினைமுதற்பெயரும், ஆண்மை சுட்டிய சினைமுதற்பெயரும், பன்மை சுட்டிய சினைமுதற்பெயரும், ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரும் எனப்பட்ட அந்நான்கும் [1]என்ப, சினைமுதற்பெயர் என்றவாறு. (௨௭)

176. பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்[1]பெயரென்-
றுயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், [2]முறைப்பெயரினையும் இரண்டு வகைப்படும் என்றமையின் அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

---

174-1 iii "எனச்சொல்லும்"
2 ii-vi-vii "நிலைமையை"

175-1 vi "என்று சொல்லுப சினை"

176-1 i "பேரென்"
2 vi "முறைப்பெயரும்"

இதன் பொருள்:—பெண்மை முறைப்பெயரும், ஆண்மைமுறைப்பெயரும் எனப்பட்ட அவ்இரண்டும் [3]என்ப, முறைப்பெயரது நிலைமை என்றவாறு. (உரு)

177· [1]பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே.

என்பது என்நுதலிற்றோ எனின், [2]மேல் விரித்தவற்றுள் பெண்மைப் பெயர் எல்லாவற்றையும் தொகுத்துத் திணைக்கு உரியவாறு [3]உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேல்விரித்து ஓதினவற்றுள் பெண்மையைக் கருதின எல்லாப்பெயரும் அஃறிணையுள் பெண் ஒன்றற்கும், உயர்திணையுள் ஒருத்திக்கும் நிற்றல் பொருந்தின என்றவாறு.

பெண்மை சுட்டியபெயர், பெண்மை இயற்பெயர் எனவும், பெண்மைச் சினைப்[4]பெயர் எனவும், பெண்மைச் சினைமுதற்பெயர் எனவும், பெண்மை முறைப்பெயர் எனவும் நான்கு வகைப்படும்.

உ - ம் :—

பெண்மை இயற்பெயர்:—சாத்தி வந்தது, சாத்தி வந்தாள் [5]எனவும்.

பெண்மைச் சினைப் பெயர்:—முடத்தி வந்தது—முடத்தி வந்தாள் [6]எனவும், — குறனி என்பதும் அப்பாற்படும்.

பெண்மைச் சினை முதற்பெயர்:—முடக்கொற்றி வந்தது, முடக்கொற்றி வந்தாள் எனவும்,

---

176-3 i "என்பது முறைப்பேரது நிலைமை"

vi "என்று சொல்லு முறைப்பெயரது நிலைமையை"

177-1 i-ii-iv-vii "பெண்மைகள்"

2 i-ii-iv-vii "விரித்தவற்றுட்"

3 i "உணர்த்திற்று"

4 i "பேர்"

5 vi-viii "எனவரும்"

6 ii-vii "எனவும் வரும்" (சொற்றொடரை முடிக்க முயலும் திருத்தம்)

பெண்மை முறைப் பெயர்:—தாய் வந்தது, தாய் வந்தாள் எனவும் வரும்.

ஆய் என்பதும் அது. யாய் என்பதோ எனின், தன்மையோடு அடுத்தமையின் முறைப் பெயரேனும் உயர்திணை எனப்படும். (உசு)

**178. ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே.**

என்பது என்நுதலிற்றோ எனின், ஆண்மைப் பெயர் எல்லாவற்றையும் தொகுத்துத் திணைக்கு உரிய ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஆண்மையைக் கருதின பெயர்கள் எல்லாம் அஃறிணையுள் ஒன்றற்கும் உயர்திணையுள் ஒருவற்கும் நிற்றல்பொருந்தின என்றவாறு.

[1]அவை ஆண்மை இயற்பெயர் எனவும், ஆண்மைச் சினைப்பெயர் எனவும், ஆண்மைச் சினைமுதற்பெயர் எனவும், ஆண்மை முறைப்பெயர் எனவும் நான்கு வகைப்படும்.

ஆண்மை இயற்பெயர் :—சாத்தன் வந்தது, சாத்தன் வந்தான் என வரும்,

ஆண்மைச் சினைப்பெயர்: — முடவன் வந்தது, முடவன் வந்தான் [2]என வரும்.

ஆண்மைச் சினைமுதற்பெயர் :—முடக்கொற்றன் வந்தது, முடக்கொற்றன் வந்தான் எனவரும்.

ஆண்மை முறைப்பெயர் :—தந்தை வந்தது, தந்தை வந்தான் என வரும்.

நுந்தை என்பதும் அது, எந்தை என்பது தன்மை அடுத்தமையின் உயர்திணைப் பெயர் ஆம். (உஎ)

**179. பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றே பலவே ஒருவர் என்னும்**
**என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே.**

---

178-1 i "ஆவை." (ஆ - அ மாறுபட்டம்.)

2 ii-vii "எ - ம்" (இவ்வாறு சுருக்கியதனைச் சிலர் 'எனவரும்' என்றும், 'என்றும்' எனவும் என்றும் விரிப்பர் போலும்)

என்பது என்நுதலிற்றோ எனின், பன்மைப் பெயர் எல்லாவற்றையும் தொகுத்துத் திணைக்கு உரிய ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பன்மையைக் கருதிய எல்லாப் பெயர்களும் அஃறிணைக்கண் ஒன்றும் பலவும், உயர்திணைக்கண் ஆண்பாலும் பெண்பாலும் என்று சொல்லப்படும் நான்கு பாற்கும் ஒரு தன்மைய என்றவாறு.

பன்மை சுட்டிய பெயர் **பன்மை இயற்பெயரும், பன்மைச் சினைப்பெயரும், பன்மைச் சினைமுதற்பெயரும்** என மூன்று [1]வகைப்படும்.

ஈண்டுப் **பன்மை** என்றது, இருதிணைப் பன்மையும் அன்று ; பலபான் மேலும் வருதலிற் பன்மை என்று[2]ஞைக் கொள்க.

உ - ம் :—

பன்மை இயற்பெயர் - **யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாள்** எனவரும்.

[3]ஈண்டு [4]**ஒன்றே பலவே** என்றதனை [5]அஃறிணை ஆண் ஒன்றனையும் பெண் ஒன்றனையும் ஆகக் கொள்க. பன்மைக்கும் அஃது ஒக்கும். [6]உயிரில் ஒன்று பலவும் கொள்ளற்க. ஒருவர் என்பதனை உயர்திணை இருபான் மேலும் கொள்க.

[7]பன்மை இயற் பெயர்.

பன்மைச் சினைப் பெயர் :—**நெடுங்கழுத்தல் வந்தது, வந்தன, வந்தான், வந்தாள்** எனவரும்.

---

179. 1 vi "என்று உரைப்படும்"

2 i "ரா"

3 iv "(இந்தப் பத்தி முழுவதும் இந்தச் சூத்திர உரையின் கடைப்பகுதியாக உள்ளது)"

4 vi "ஒன்றே என்றதனை"

5 i "அஃறிணை அஃறிணை ஆண்"

6 ("உயர்திணையில்" என்பது போலும்)

7 vi "பன்மை இயற்பெயர்" என்பதில்லை. "உ-ம்" என மேலேயே வந்திருப்பது கொள்க. "உ - ம்" என வருவது இங்கு இருத்தல் வேண்டும் போலும்.

பன்மைச் சினை முதற் பெயர் :—பெருங்கால் யானை வந்தது, வந்தன, வந்தான், வந்தாள் எனவரும். (உ அ)

180. ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே.

என்பது என் நுதலிற்றோ எனின், ஒருமைப்பெயர் எல்லாவற்றையும் தொகுத்துத் திணைக்கு உரியஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒருமையைக் கருதின எல்லாப் பெயரும், அஃறிணையுள் ஒன்றற்கும் உயர்திணையுள் ஒருவற்கும் நிற்றல் பொருந்தின என்றவாறு.

ஒருமைப் பெயர் ஒருமை இயற்பெயரும், ஒருமைச் சினைப்பெயரும், ஒருமைச் சினை முதற் பெயரும் என மூன்று வகைப்படும்.

உ - ம் :

[1]ஒருமை இயற்பெயர் - கோதை வந்தது, வந்தான், வந்தாள் என வரும்.

[2]ஒன்று என்பதனை அஃறிணை ஆண்பால் மேலும் பெண்பால் மேலும் கொள்க. ஒருவர் என்பதனை உயர்திணை இருபால் மேலும் கொள்க.

ஒருமைச் சினைப் பெயர்:—செவியிலி வந்தது, வந்தான், வந்தாள் என வரும்.

ஒருமைச் சினை முதற் பெயர் :—கொடும்புற மருதி வந்தது, வந்தான், வந்தாள் எனவரும். (உகூ)

181. தாம் என் கிளவி பன்மைக் குரித்தே.

என்பது என்நுதலிற்றோ எனின், தாம் என்பது திணைக்கு உரித்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

180-1 ii "கோதைவந்தாள்"

2 vi (இப்பத்தி முழுவதும் இல்லை)

இதன் பொருள் :—**தாம்** என்பது இருதிணைப் பன்மைக்கும் உரித்து என்றவாறு.

உ - ம் :—

**தாம் வந்தார், தாம் வந்தன** என வரும்.

[1]வாளாது **பன்மை** என்றமையின் ஆண் பன்மையும் பெண் பன்மையும் எனக் கொள்க. (௧௰)

## 182. தான்என் கிளவி ஒருமைக் குரித்தே.

என்பது என்நுதலிற்றோ [1]எனின், தான் என்னும் சொல் திணைக்கு உரித்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : தான் என்னும் சொல் இருதிணை ஒருமைக்கும் உரித்து என்றவாறு.

உ - ம் :—

**தான் வந்தான், தான் வந்தாள், [2]தான் வந்தது** என வரும்.

வாளாதே ஒருமை என்றமையின் பெண்பால் மேலும் ஆண்பால் மேலும் கொள்க. (௧௧)

## 183. எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி
## பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே.

என்பது என்நுதலிற்றோ எனின், எல்லாம் என்னும் சொல் திணைக்கு உரித்து ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—**எல்லாம்** என்று சொல்லப்படும் பெயராகிய [1]நிலைமைஉடைய சொல் இருதிணைப் பன்மை இடத்தையும் கருதிய நிலைமைத்து ஆகும் என்றவாறு.

---

**181-1** iv **"ஆண் பன்மையும் பெண் பன்மையும் எனக் கொள்க" (சொற்கள் விடுபட்டுள்ளன.)**

**182-1** iv **"எனின்......இதன் பொருள்" (சொற்கள் விடுபட்டுள்ளன).**

2 i-ii-iv-vi-vii **"தான் வந்தது" (முதலில் வந்துள்ளது 1-இல் கடையிலும் இரண்டாவதுமுறை வந்துளது).**

**183-1** vi **"நிலைமையை யுடைய"**

உ - ம்:—

எல்லார் வந்தார், எல்லாம் வந்தன, [2]எல்லாம் வந்தீர் என வரும்.

வாளா, பன்மை என்றமையின் இரண்டிடத்து [3]ஆண்மையும் பெண்மையும் கொள்க. (௩உ)

184. தன்னுள் உறுத்த பன்மைக் கல்ல
தூயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் நுதலிற்று.

இதன் பொருள்.—மூன்று இடத்தும் இருதிணை மேலும் சென்றமையின், தன்மை இடத்து அஃறிணைக் கண் ஆகாது [1]என்றமையான் எல்லாம் என்னும் சொல் சொல்லுமான் தன்னை [2]உள்ளுறுத்தஃது அஃறிணை மொழி கூறுமையின் அஃறிணைத் தன்மைப் பன்மைக்கு உயர்திணை இடத்து அல்லது அஃறிணை இடத்து ஆகுதல் இல்லை என்றவாறு.

உயர்திணை மருங்கின் அல்லது என மொழி மாற்றிக் கொள்க.

உ - ம்:—

எல்லாம் உண்டும் என்பது.

மற்று இஃது அஃறிணை மொழி கூறுமையின் அஃறிணைத் தன்மை இல்லை என்பது பெறுதும்; ஆகலின் இது கூறல் வேண்டா எனின், மேல், பல் வழி நுதலிய நிலைத்தாகும் என அதற்கு விதி சென்றமையின் அது [3]விலக்கல் [4]வேண்டும் என்பது.

183-2 i "எல்லாம் வந்திர் எல்லாம் வந்தன" (பிற பிரதிகள் படர்க்கையை முடித்துப்பின் முன்னிலை கூறுகின்றன).

vi "எல்லாம் வந்தன எல்லாம் வந்திர் எல்லாம் வந்தேம்"

3 vi-viii "ஆண் பன்மையும் பெண் பன்மையும் கொள்க"

184-1 i "என்றமையின்"

2 ii-v "உள்ளுறுத்த பன்மைக்கு உயர்திணையிடத்தல்லது அஃறிணை உள்ளுறுத்த பன்மையிடத்தாகுதல் இல்லை"

3 i-ii-iv-v-iii "விலக்கல்ல"

4 v "வேண்டும் மற்று"

மற்று, எல்லாம் உண்டும் என்ற தன்மைக்கண் வருகின்ற வரவினை உயர்திணைப் பெயராக வேறு ஓதற்பாற்று எனின், எல்லாம் என்பது போல உயர்திணைக்கே உரித்து ஆகாது முன்னிலைக் கண்ணும் படர்க்கைக் கண்ணும் விரவாநிற்றலின், ஈண்டே [5]ஓத இன்னுழி வரவன்றி உயர்திணைப் பெயராம் என்றவாறு [6]போதும் என்பது. (௧௩)

185. நீயிர் நீஇ ரை வருஉம் கிளவி
[1]பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள.

என்பது என்நுதலிற்றோ எனின், நீயிர் நீ என்பனவற்றைத் திணைக்குஉரிய ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—நீயிர் எனவும் நீ எனவும் வருஉம் சொற்கள் திணை [2]தெரிவில ; உயர்திணையாயும் அஃறிணையாயும் உடன் உணர்த்தலைப் பொருண்மையாக உடைய என்றவாறு.

மற்றுத்திணை தெரியாமையின் அன்றே விரவுப் பெயர் ஆயது; இது சொல்லவேண்டுமோ எனின், மேல் விரவுப் [3]பெயர்களைத் [4]தத்தமரபின் வினையோடு அல்லது [5]பாறெரிபில என்றமையின் இவையும், தத்தமரபின் திணையான் உணரற்பாடு சென்றமை கண்டு, இவை முன்னிலைப் பெயர் ஆகலின் இவற்றுக்குவரும் முன்னிலை வினையும் விரவா ஆகலான் எய்தியது விலக்குதற்குக் கூறினான்[6] என்பது.

---

184-5 v "ஓதி"

6 v "என்றவாறு."

185-1 "பாறெரிபிலவே"

2 i-ii-iv-vii "தெரிவியல"

v "தெரிபில"

3 ii-vii பொருள்களைத்"

4 vi "தத்தம் வினையோடல்லது" (ஒரு சொல் விடுபட்டது)

5 v "பாறெ......வினையான்"

6 "ர்"

உ - ம் :—

நீயிர் வந்தீர், நீ வந்தாய் [7]எனத்திணை கண்டு கொள்க. (௩௪)

**186. அவற்றுள்,**
**நீ என் கிளவி ஒருமைக் குரித்தே.**

என்பது என்நுதலிற்றோ எனின், நீ என்னும் சொல் பாற்கு உரித்துஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : — அவ்இரண்டனுள்ளும் நீ என்னும் சொல் இரு திணை முன்னிலை ஒருமைக்கு உரித்தாம் என்றவாறு.

உ - ம் :—

நீ [1]வந்தாய் எனவரும்.

இது பாற்கும் உரித்தாயவாறு கண்டுகொள்க. அஃறிணைக்-கண்ணும் பெண் ஒருமைக் கண்ணும் ஆண் ஒருமைக் கண்ணும் கொள்க. (௩௫)

**187. ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே.**

என்பது என்நுதலிற்றோ எனின், நீயிர் என்னும் [1]சொல்...... இருதிணைப் பன்மைக்கும் உரித்துஆமாறு [b]உணர்த்துதல் நுதலிற்று.

[2]இதன் பொருள் :—எஞ்சி நின்ற நீயிர் என்னும் சொல் இரு-திணைப்பன்மைக்கும் உரித்தாம் என்றவாறு.

உ - ம் :—

நீயிர் வந்தீர் என உயர்திணைப் பலர்மேலும் அஃறிணைப் பலவற்-றின்மேலும் வந்தவாறு கண்டு கொள்க.

---

185-7 v "எனத்......"

vi-viii "என்பன திணை கண்டுகொள்க"

ii-vii "என்பன இவைதிணை தெரியாமல் பொதுவாய் நின்றவாறு கண்டு கொள்க"

186-1 i-ii-iii-iv-v-vii "வந்தாய்......பாற்கும் உரித்தாய"

187-1 iii-v "சொற்......லிருதிணைப் பன்மைக்குரித்தாம் என்றவாறு"
i "சொல்லிருதிணைப் பன்மைக்கும் உரித்தாம் என்றவாறு"

2 i-ii-iv-vii "இதன்பொருள் இருதிணைப் பன்மைபடும்"

[3]ஈண்டும் அஃறிணைப் பெண் பன்மையினையும் ஆண் பன்மையினையும் உயர்திணைப் பெண் பன்மையினையும் ஆண் பன்மையினையும் கொள்க.

[4]இத்துணையும் செ....பெயர் ஆராய்ச்சி எனக் கொள்க. (௩௬)

**188. ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை.**

என்பது என்நுதலிற்றோ எனின், உயர்திணை அதிகாரத்தின் ஒழிபுஉணர்த்துதல்நுதலிற்று.

இதன் பொருள் :—ஒருவர் என்று சொல்லப்படுகின்ற [1]பெயர்நிலையுடைய சொல் உயர்திணை ஆண்பாலும் பெண்பாலும் ஆகிய இருபாற்கும் உரிமையை உடைத்து, ஆராயும் காலத்து [2]என்றவாறு.

உ - ம் :—

ஒருவர் வந்தார் என்றால் இருபாற்கும் உரித்துஎனக் கொள்க. இருபாற்கும் உரித்து என்பது ஒருசொல்லுதற் கண்ணேயோ எனின், இரு சொல்லுதற் கண்ணே எனக் கொள்க.

மற்று, இருவரைக் கூறும் பன்மைக் கிளவி எனவும், பிறவும் இருபா - லினையும் ஒருகாலே தழுவியும் வருமால் எனின் ஆண்டு [3]சொல்லாற் படுவது ஒருபாலே மற்றைப்பால்.........பாற்பெறப்படுகின்றது எனக் கொள்க.

மற்று இருபால் என்றாற் பன்மை ஒழிந்த இருபாலும் என்பது, யாங்ஙனம் பெறுதும் எனின், ஒருவர் என நின்ற ஒருமை வாய்பாட்டாற் பன்மை நீங்கிற்று எனக் கொள்க.

[4]பாலதிகாரத்தே சொல்லாதது என்னை எனின், ஒரு பாற்கு உரித்து ஆகாது விரவி வருகின்ற நீர்மையால் ஈண்டுப் போந்தது எனக் கொள்க. (௩௭)

---

187-3 v (இப் பத்தி இல்லை)

4 i-ii-iii-iv-vi-vii-vii "......பெயர் ஆராய்ச்சி எனக் கொள்க"

188-1 i-ii-iv-v-vii "பெ......யடை சொல்"

2 i "என்றது"

3 vi "சொல்லிற் படுவது"

4 i ii-iii-iv-v-vii "......திகாரத்தே"

**189. தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும்.**

என்பது என்னுதலிற்றோ எனின், இஃது ஒருவர் என்னும் சொற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்: —[1]முற்கூறிய......ஒருவர் என்னும் சொல்லினது சொன் முடியும் தன்மையைக் [2]கருதின் தான் காட்டுகின்ற பொருண்மைக்கு ஏற்ப ஒருமைச் சொல்லோடு முடியாது ஒருவர் என [3]ரகர ஈற்றதாய் நின்ற அச்சொற்றன்மைக்கு ஏற்பப் [4]பன்மைச் சொல் கொண்டு முடியும் என்றவாறு.

உ-ம்:—

ஒருவர் வந்தார் எனவரும். இதுவும் ஓர் பால் பற்றிய மரபு வழுவமைதி எனக் கொள்க. (௧அ)

**190. இன்ன பெயரே இவையெனல் வேண்டின்**
**முன்னஞ் சேர்த்தி முறையின் உணர்தல்.**

என்பது என்னுதலிற்றோ எனின், இவ்வொருவர் என்னும் சொற்கும் [1]மேற்கூறிய நீயிர் நீ என்னும் சொற்கும் எய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: — நீயிர் நீ [2]என்றும் ஒருவர் என்றும் நின்ற இவை இரண்டும் 'நீயிர் நீ என்பன உயர்திணைக்கு உரித்து அஃறிணைக்கு உரித்து' என்றும், 'ஒருவர் என்பது ஆண்பாற்குஉரித்து; பெண்பாற்கு உரித்து' [3]என்று......பால்தெரிய நில்லாமையின் அவை

---

189-1 i-ii-iii-iv-v-vii "ய ஒருவர்"

2 "கருதிற்ருன்"

3 ii-vii "ரகார"

4 i-iv "பன்......டியும் என்றவாறு உ-ம்."
ii-vii "பன்மை......முடியும் என்றவாறு உ-ம்."
iii-v "பன்........ உ-ம்."

190-1 ii-vi-vii-viii "முற்கூறிய......யென்னும்"
v "மேற் கூறிய......என்னும்"

2 vi "என்னும் இவை இரண்டும் உயர்திணைக் குரித்து"

3 vi "என்றும் பால் தெரிய"
v "என்று......ற்றெரிய"

ஈண்டு இன்ன பெயர் என்பது அறியல் வேண்டின் அச் சொற்களைக் கூறுவான் கருத்தினை அச் சொற்களோடு சேர்த்தி நீயிர் நீ எனவும், ஒருவர் எனவும் மேல் ஓதிய முறையானே திணையும் பாலும் உணர்ந்து [4]கொள்க என்றவாறு.

விலங்கு வருதற்பாலதல்லதோர் வழியிருந்து நீயிர் வந்தீர், என்றானும், நீ வந்தாய் என்றானும் கூறின் ஈண்டு உயர்திணை எனவும் இனி, மக்கள் இல்வழியிருந்து, அவை கூறின் அஃறிணை எனவும், இனிக் காட்டுக்கட் [5]போத போகா நின்றுழி ஒருவர் புகுந்தார் எனின் ஆண்பால் எனவும் ஆண் மக்கள் புகுதற்பாலதல்வழி ஒருவர் இருந்தார் எனில் பெண்பால் எனவும், இடமும் காலமும் ஆகிய முன்னத்தான் உணர்ந்தவாறு கண்டு கொள்க.

மற்று, இஃது அதிகாரத்தான் ஒருவர் என்னும் சொற்கே கூறியது [6]அன்றே, நீயிர் நீ என்பதனையும் உடன் கூட்டி உரைத்தவாறு என்னை எனின், பன்மை கூறிய அதனானும் ஏற்புழிக் கோடல் என்பதனானும் இம்மூன்றற்கும் [7]கொள்ளப்பட்டது என்பது. (௫௯)

**191. மகடூஉ மருங்கிற் [1]பால்திரி கிளவி**
**மகடூஉ இயற்கை தொழில்வயி னான.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் உயர்திணை ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[2]பெண்பாற் பொ......கு உரிய ஈற்றதாயில்லாப் [3]பெண்மகன் எனப் பெண்பால் ஆண்பாலாகத் திரிந்து நின்ற

---

190-4 i-ii-iii-iv-v-vii "கொள்கவே......தற்பாலதல்லதோர்வழி"
5 ii-vii "பொழுதில் பொழுது போகா நின்றுழி .....ஆண்பால்"
i "பொத்தில பொழுது போகா நின்றுழி.. ...ஆண்பால்"
iii-v "போதல் பொழுது போகா நின்றுழி..... ண்பால்"
6 i-ii-iv-v-vii "அன்றே........பன்மை கூறிய அதனானும் ஏற்புழிக் கூடல்"
7 i-ii-iv-vii "கொள்ளப்பட்டது."
vi-viii "கொள்ளப்பட்டது என்க"

191-1 "பாறெரி கிளவி"
2 i-ii-iv-vii "பெண்பாற்குரிய"
vi-viii "பெண்பாற்பொ......குரிய" ("பெண்பாற் பொருட்கு உரிய" என்பது பாடம்போலும்; இடையிட்டைப் பொருட்படுத்தாது படித்த பாடம் vi)
3 i-ii-iv-vii "பெண் மகள்"

சொல் [4]அப் பெண்பாற் பொருண்மையின் இயல்பிற்று, அச்சொற்கு முடிபாக அதன் தொழில் கூறும் இடத்து என்றவாறு.

உ - ம் :—

[5]பெண்மகன் வந்தாள் எனவரும்.

இதுவும் ஓர் மரபு வழூஉவமைதி எனக் கொள்க.

இதுவும் அந்நீர்மைத்து ஆகலின் ஈண்டுப் போந்தது எனக் கொள்க. (சய)

**192. ஆவோ ஆகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யுள் உள்ளே.**

என்பது என்நுதலிற்றோ எனின், இது பெயர் [1]செய்யுளுள் திரியும் [2]என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— ஆகாரம் ஓகாரம் ஆகி நிற்கும் பெயரும் உள ; அவ் இடங்களை அறிக, செய்யுளிடத்து என்றவாறு.

[3]ஆயிடனறிதல் என்றதனான் ஆகாரமாதற்கு ஏலாதவழியே ஓகாரம் ஆவது இயல்பு எனக் கொள்க.

உ - ம் :—

வில்லோன் காலன கழலே [4]என்றும்.

---

191-4 i-ii-iv-vii "அப் பெண்பாற் பொருண்மையின் இயல்பீற்ற சொற்கு முடிபாகவதன் றொழில் கூறுமிடத்து என்றவாறு"

vi-viii "சொற்கு முடிபாக அதன் தொழில் கூறுமிடத்து அப் பெண்பாற் பொருண்மையின் இயல் பீற்ற என்றவாறு"(முன்பின் மாறி இருத்தல் காண்க)

5 i-iv-v "பெண் மகன்......இதுவும்"

ii-vii "பெண்மகள்......இதுவும்"

192-1 i "செய்யு......ரம் ஓகாரமாகி நிற்கும் பெயரும் உள"

2 ii-vi "என்கின்றது"

3 i-ii-iv-vi-vii "........உ-ம்,"

4 ii "எ-ம்"

தொடியோள் ⁵மெல்லடி மேலவுஞ் சிலம்பே ⁶எனவரும்.

⁷இனி, கிழவோன் என்பது ஆகாரமாக வழக்கின்மையின் அது செய்யுள் விகாரம் அன்று; இயல்பாகிய ஈறு எனக் கொள்க.

இதுவும் செய்யுள் மரபு வழுவமைதி எனக் கொள்க. (சக)

193. இறைச்சிப் பொருள் வயின் செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்து வழி மருங்கில் தோன்ற லான.

என்பது என்நுதலிற்றோ எனின், செய்யுள் இடத்து விரவுப் [1]பெயர் வருவது ஓர் [2]முறைமை கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்:—அச் செய்யுட்கட்குப் பொருள் கூறும் வழி கிளக்கப்படும் இயற்[3]பெயராகிய ... ... யுணர்த்தாது அஃறிணைப்

---

192-5 iii "மேலவடி "விலலோன்""
vi "மேல்லடி"

6 i-ii-iv-vi "எ-ம்" ... (என்றும் வரும் என்றிருத்தல் வேண்டும் போலும்)

v "எனவரும் இனி கிழவ்வோன் என்பது ஆகாரமாக"

vii "எ-ம் .... இன் .... ன என்ற தாகாரமாக"

7 i-ii-iv-vi-vii (என்ற பிரதிகளில் இந்தப் பெயரியலின் எஞ்சிய பகுதிக்கு உரை இல்லை)

iii-v-viii (என்ற பிரதிகளிலேயே பின்பகுதி உரை உள்ளது)

ii "ஐந்தாவது பெயரியல் முற்றுப் பெற வில்லை" ('இறைச்சிப் பொருள்வயின்' 'திணையொடு பழகிய' என்ற இவ்விரு சூத்திரங்களும் அவைகளுடைய உரையும் ஈண்டு எழுதப்பெற வில்லை மாதுருகையில் அவை இல்லையாதலால் என்று எழுதுவோர் குறித்துள்ளார்).

193-1 iii "பொருள் வருவது"

2 viii "பெயர் கூறுதல்"

3 viii "பெயராகிய ... என்னை எனின்"

[4]பொருள் உணர்த்தும். அதற்குக் காரணம் என்னை எனின், அவ்வந்நிலங்களினிடமாகிய இடத்து அவற்றுக்கு உறுப்பாய்த் தோன்றுதலான் என்றவாறு.

உ - ம்:—

**கடுவன் முதுமகன் கல்லா மூலர்க்கு[5]**
**வதுவை வந்த வன்பறழ்க்குமரி** எனவரும்.

[6]அஃறிணையை நோக்கிநின்றன எனக் கொள்க.

மற்று இவ் விரவுப்பெயர்கள் கருப்பொருள்களுள் அந்நிலத்து மக்கட் பெயராய் உயர்திணை மேல்வரின் என்னை குற்றம் என்றார்க்கு அவ் அம்மக்களை......கூறுதல் சான்றோர் [7]செய்யுட் கண்டிலாமையின் அது மரபு அன்று என்றார் எனக் கொள்க. (சஉ)

194. திணையொடு பழகிய பெயரலங் கடையே.

என்பது என்னுதலிற்றோ எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இதன் பொருள்:—[1]செ... ....தாது நிற்பது [2]இவ்வைந்திணையோடும் அடிப்பட்டு அவ் ஐந்திணை உடையானது [3]உடைமைக்கிழமை உணர்த்தி நிற்கும் பெயர் அல்லாத இடத்துக்கண்ணே ; ஆண்டாயின் உயர்திணையை உணர்த்தும் என்றவாறு.

[4] ......ஊரன் செய்யுட்கண் இறைச்சிப் பொருட்டாய் வந்தும் உயர்திணையை நோக்கியவாறு கண்டு கொள்க.

---

193-4 "பெயர் உரைத்தும் அதற்குக் காரணம்" (ஊர்.. ரை மாறுபாடு)

5 ("மூலற்கு") எனல் வேண்டும்.

6 viii " ... க்கி நின்றன"

v "...றிணையை நோக்கி நின்றன" ("இவை அஃறிணையைநோக்கி நின்றன எனக்கொள்க" என்றிருந்தல் வேண்டும் போலும்.)

7 ("செய்யுட்கண்" என இருத்தல் வேண்டும் போலும்.)

194-1 iii "செ ... இவ் ஐந்திணையோடு"

2 v "அவ் ஐந்திணையோடு"

3 viii "உடைமைகிழமை"

4 viii " ... ட்டாய வந்தும்"

மேல், **உயர்திணை** சுட்டா என்றது [5]விரவுப்பெயர்க்கு அன்றே இவை உயர்திணைப் பெயர் ஆயினமையின் எய்தியது [6]வில......**திணை** சுட்டா என்று ஒழிவதன்றி **நிலத்துவழி மருங்கிற் றோன்றலான** என்று காரணம் கூறினமையின் உயர்திணை [7]பெயரானவற்றிற்கும் இவ்விதி எய்தும் கொல்லோ என்று மாணாக்கன் [8]ஐயுறு **வானாயினு......று** போலும். **(௪௬)**

ஐந்தாவது

பெயரியன் முற்றிற்று.

---

**194.5** v "விரவுப் பெயர ... ன்றே"

6 iii-v "**வி ... திணை** சுட்டா என்று ஒழி பதன்றி **நிலத்து வழி** மருங்கிற்றோன்று"

viii "**வில...நிலத்துவழி** மருகிற் றோன்**றலான்**"

7 viii "பேரான"

8 viii "ஐயுறுவானாயினு ... பெயரியன் முற்றிற்று"

v "ஐயுறு வானாயினு ... று போலும் ஐந்தாவது பெயரியல் முற்றிற்று"

iv "பெயரியல் முற்றிற்று"

## ஆருவது

# வினையியல்

195. [1]வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

என்பது என்நுதலிற்றோ எனின் :—இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், வினையது இலக்கணம் உணர்த்தினமையின் வினையியல் என்னும் பெயர்த்து.

மேல் ஓத்தினோடு [2]இவ்வோத்திடை இயைபு என்னையோ எனின், முன்னைப் பெயரியலுள் நிறுத்த முறையானே பெயர் உணர்த்தி அதன் பின்னர் வினை உணர்த்திய தொடங்கினார் என்பது.

இதன் தலைச் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், வினைச்சொற்கெல்லாம் பொதுவாயதோர் [3]இலக்கணம்.......

[4]இதன் பொருள் : — வினைச்சொல் என்று சொல்லப்படுவது அறுவகை உருபினையு மேலாதே ஆராயுங்கால், காலத்தோடு புலப்படும் என்றவாறு.

---

195-1 i-ii-iv-vi-vii (பின்வருகிற 206ம் சூத்திரம் வரையில் இவற்றில் காணப்படவில்லை ஆதலின் iii-v-viii பிரதிகள் கொண்டே இப் பகுதி அச்சிடப்படுகிறது)

iii "... கொள்ளாது"

viii "... மொடு தோன்றும்"

2 viii "இவ் ஓத்திடை ... னே பெயருணர்த்தி"

iii "இவ் ஓத்திடை ... முன்னைப் பெயரியலுள் நிறுத்த முறையானே பெயர்"

3 iii--viii "இலக்க ... "

v "இலக்கணம் ... " (இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று என்பது விடுபட்டிருத்தல் வேண்டும்)

4 ("இதன் பொருள்" என்பதும் விடுபட்டுப் போயிருந்தாலும் எல்லாச் சூத்திரங்களிலும் வருவதால் அச் சொற்றொடர் பதிப்பிக்கப் பெற்றுள்ளது).

viii ".... னையு மேலாதே ஆராயுங்கால்"

iii-v "... ச் சொல்லென்று சொல்லப்படுவது அறுவகை யுருபினையும்" (இப் பிரதிகளில் விடுபட்ட எழுத்துக்கள் "வினை" என்பனவாம் கிடைத்த பிரதிகளில் இல்லாமையால் இவற்றைப் பகர வளைவுக்குள் பதிப்பித்துள்ளோம்)

உ - ம் :—

**உண்டான் என்பது** [5]வேற்றுமை கொள்ளாது எனல்வேண்டியது.

மேற் கூறிய முறையின் என்ற சூத்தி...... மன்றது வினைக்கு யாதும் ஆகாது என்பதே யன்றி வினைக்காயின் முதலும் இடையும் எல்லாம் ஆம் என்பதும் கொள்ளக் கிடந்தமையின் அது விலக்கிய என்பது.

நினையுங்காலை என்றதனுன் காலம்தன்னை மூன்று [6]என்பாரும்...... இரண்டே என்பாரும் எனப் பலமதம் உண்டு என்பது அறிவிக்கப் பட்டது. (க)

196. காலந்தானே மூன்றென [1]மொழிப.

என்பது என் நுதலிற்றோ எனின், மேற்காலமோடு [2]தோன்றும் என்ருன் அக்காலத்தை இனைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று.

[3]இதன் பொருள் :—காலம் எனப்படுவனதாம் மூன்று என்று சொல்லுப ஆசிரியர் என்றவாறு. (உ)

197. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ரு
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய [1]தோன்ற லாறே.

---

195-5 iii "வேற்றுக் கொள்ளாது"

viii "வேற்றுமைக் கொள்ளாது"

6 viii "என்பாரும் .... ரும் என பல மதம் உண்டு"

196-1 iii "மொழிய"

2 iii "தொன்றும்"

3 v "உரை காலம் எனப்படுவன"

iii " ... ப் படுவன" ('இதன் பொருள்' என்ற பகுதியும் கிடைத்த பிரதிகளில் இல்லை, v-ம் பிரதி முன்னே கண்டபடி இங் கெல்லாம் ' உரை ' என்றே எழுதி வருகின்றது. ஆதலின், அது உரை எனக் கூறுமிடத்தில் பழைமை போல் ' இதன் பொருள் ' என்பதே பதிப்பிக்கப் பெற்றுள்ளது)

viii (இப் பத்தி முழுதும் சிதைந்துள்ளது)

197-1 iii "தென்றலாறே"

என்பது என்நுதலிற்றோ எனின், மேல் தொகைகூறப்பட்ட [2]காலத்திற்குப்......வினைக் குறிப்பிற்கும் வினைச்சொற்கும் [3]உண்டு என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இறப்பும் நிகழ்வும் எதிர்வும் [4]என்று சொல்லப்படுகின்ற அம்[5]முக்காலமும் வினைக்குறிப்பொடும் கொள்ளப்படும் உண்மை நிலையினையுடைய [6]அவைதோ......என்றவாறு.

[7]இறப்பு நிகழ்வு எதிர்வு என்பன பெயர். முறைகிடந்த முறையே.

உ-ம் :—

**கரியன் செய்யன்** என்பன. இவை [8]ஆசிரியற்கே காலம் புலப்பட நின்றமையின் மேலைச் சூத்திரத்து அடங்காது என்று வேறு கூறப்பட்டது என்பது.

மெய்ந்நிலை [9]என்பது வினைக்......டாமையான் வினையல்ல என்று கருதினும் கருதற்க; இதுவும் வினையது இலக்கணம் மெய்ம்மையாக உடையது என்றவாறு. (௩)

198. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
[1]உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ வுருவின தோன்ற லாறே.

---

197-2 viii "காலத்திற்குப் ... ன் பதூஉ முணர்த்துதல்"
3 v "உண்டு என்பதூம்"
4 iii "என"
5 viii "முக்காலத்தும்"
6 v "அவை ... என்றவாறு" (அவை தோன்றுமிடத்து என்று இருத்தல் வேண்டும் போலும்)
viii "அவை தோ ..."
7 viii " ... கிடைந்த முறையே"
8 "ஆசிரியர்க்கே"
9 viii "என்பது வினைத் ... இதுவும் வினையதிலக்கணம்"
198-1 viii "உயர்திணை ...
... ... ...
... ... ... யும்
அம்மூவுருபின தோன்றலாறே"

என்பது என்நுதலிற்றோ எனின், வினைச் சொற்களது பாகுபாடு கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—குறிப்புவினைத் தன்மையானும், தெரிநிலை-வினைத் தன்மையானும், [2]முறைமை......த்தொடுவருகின்ற வினைச் சொற்கள் எல்லாம் உயர்திணைக்கு உரியனவும் அஃறிணைக் குரியனவும் அவ் இருதிணைக்கும் ஒன்று போன்ற உரிமை உடையனவும் என அம்-மூன்று கூற்றை உடைய தோன்று நெறிக்க......[3][என்றவாறு.]

[4]......பற்றிக் குறிப்பு முன் கூறப்பட்டது.

வினைக்குறிப்பிற்கும் காலம் உண்டே என்பது வலியுறுத்தற்குப் பின்னும் காலமொடு தோன்றும் என உடன் கூறப்பட்டது. (௪)

199. அவைதாம்,
அம் ஆம் எம் ஏம் [1]என்னும் கிளவியும்
உம்மொடு வரூஉம் கடதறஎன் கிளவியும்
பன்மை யுரைக்கும் தன்மைச் சொல்லே.

என்பது என்நுதலிற்றோ எனின், மேல் நிறுத்த முறையானே உயர்திணை உணர்த்துதல் நுதலிற்று.

உயர்திணை வினைதாம் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும்...... [2]நிலைவினை முன்னுணர்த்திய வெடுத்துக்கொண்டான். அது தானும் தன்மை வினையும் படர்க்கை வினையும் என இருவகைத்து. அவற்றுள் தன்மை முன் உணர்த்திய தொடங்கினன். தன்மைதானும் [3]உளப்-

---

198-2 viii "முறைமை ... ம் உயர்திணைக்குரியனவும்"

3 (என்றவாறு என்று இருத்தல் வேண்டும் எனப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது)

4 viii "... ... னக் குறிப்பிற்கும் காலம்"

199-1 viii "என்னும் கி ... ச ... ர யென் கிளவியும் பன்மை யுரைக்கும்"

2 viii • " ... வடுத்துக்கொண்டான்"

3 viii " உளப்பாட்டுத்தன்மை ... முன் உணர்த்திய தொடங்கினன் என உணர்க" (உளப்பாட்டுத்தன்மை தனித்தன்மை என இரு வகைத்து அவற்றுள் உளப்பாட்டுத் தன்மை என்று இருத்தல் வேண்டும் போலும்)

பாட்டுத் தன்மை......அவற்றுள் உளப்பாட்டுத் தன்மை முன் உணர்த்திய தொடங்கினன் என உணர்க.

இதன் பொருள் :—மேற் பகுக்கப்பட்ட வினையின் முப்பாகுபாடும் ஆகிய அவைதாமாறு இனிச் சொல்லுவல். அம் ஆம் என்னும் ஈற்றைஉடைய [4]சொ......டு வருகின்......ப் படுகின்ற அந்நான்கு ஈற்றுச் சொல்லுமாகிய அவ் எட்டுச் சொல்லும், அவன் தனோடு பிறனையும் கூட்டிப் பன்மையினைச் சொல்லும் தன்மைக்கு உரிய சொல்லாம் என்றவாறு.

[5]அம் —— தாய் வரும்.

உ - ம் :—

உண்டனம். உண்டிலம் ;

உண்ணுநின்றனம், உண்கின்றிலம்; [6]உண்ணுநின்றிலம், உண்கின்றனம் ;

உண்பம், உண்குவம், உண்ணலம் என வரும்.

இவற்றுள் [7]நிகழ்காலம் நிற்கின் ........னம் என்றாற் போலவரும் வாய்பாட்டு விகற்பமும் அறிக.

இனிஅம்மறை ஒருவாய்பாட்டதாய்ச் சொல்,தன்னோடே உண்டிலம் என்றாற்போல மறுத்து வருதலே அன்றி [8]உண்டனம் அல்லம் ... ... ... வாய்பாட்டான் மறுத்து— —.

உ - ம் :—

உண்ணுநின்றும் ; உண்டாம் : உண்டிலாம்,
உண்கின்றும், உண்ணு நின்றிலாம் ;
உண்பாம், உண்குவாம், உண்ணும் என வரும்.

---

199-4 iii-viii "சொ ... ப் படுகின்ற"

5 viii "அம் .... உ ... ம் உண்டனம்"

6 viii "உண்ணு நின்றிலம் உண்கின்றிலம் உண்பம்"

v "உண்ணுநின்றிலம் உண்பம்"

(உண்ணு நின்றனம் உண்கின்றனம் உண்ணு நின்றிலம் உண்கின்றிலம் என்ற முறை எழுதும்போது பிறழ்ந்துள்ளது போலும்)

7 v "நிகழ்காலம் ... னம் என்றாற்போல"

iii "நிகழ்காலம் ... னின் கின்ன மென்றாற்போல"

viii "நிகழ்காலம் நிற்கின் ... போலவரும்"

8 viii "உண்ட ... இல்லம் எ ... உ - ம்"

ஏம் :—உண்டனேம், உண்டிலேம்; [9]உண்ணாநின்றேம், உண்கின்றேம்; உண்ணாநின்றிலேம்; உண்கின்றிலேம்; உண்பேம், உண்குவேம்; உண்ணேம் எனவரும்.

எம் :—[10]உண்டெம்: உண்டிலெம்; உண்ணாநின்றெம்; உண்கின்றெம்; உண்ணாநின்றிலெம், உண்கின்றிலெம்; உண்பெம், உண்குவெம்; உண்ணெம் எனவரும்.

[11]இவற்றிற்கும் உண்டாமல்லெம், [12]உண்டாமல்லேம் .... விகற்பமும் அறிக.

இனி, உம்மொடு வரூஉங்கடதறக்கள், உண்கும், உண்டும், வருதும், சேறும் என எதிர்காலம் ஒன்றுமே பற்றி வரும் எனக் கொள்க.

இவற்றுண் [13]மறைவாய்பா ...... .... ந் நாற்கிளவியுமென்பான் எண்ணும்மையினைத் தொகுத்து ஓடு விரித்தான் எனக் கொள்க. (௯)

200. கட தற என்னும்
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ
[1]டென் ஏன் அல் என வரூஉம் ஏழும்
தன்வினை உரைக்குந் [2]தன்மைச் சொல்லே.

என்பது என்நுதலிற்றோ [3]எனின், தனித்தன்மை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

199-9 viii "உண்ணாநின்றனேம் உண்கின்ற . லம் என வரும்"

iii "உண்ணாநின்றேம் உண்கின்றேம் உண்ணா . உண்கின்றிலேம் உண்பேம் .... எனவரும்"

10 (அன் சாரியைபெற்ற வடிவங்கள் சிறப்பிலும் நிகழ்விலும் எம் பெற்று வரும். உண்டனேம் உண்டேம் இவை இடம்மாறி வந்துள்ளன போலும். என் ஏன் விகுதி பின்வருவதனைக் காண்க.)

11 viii "இவற்றிற்கும் உ...ற்ப மூன் அறிக"

12 iii "உண்டாமல்லாமெ"

13 viii "மறைவாய்பா ... ந்நாற் கிளவியு ... பான் எண்ணு ... னை தொகுத்து"

200-1 viii "டென்னெனல்லண"

2 viii "தன்மை...ன் தனித்தன்மை யாமாறுணர்...ற்று"

iii-v "எனின் ... தனித்தன்மை"

இதன் பொருள் :—கட தற என்று சொல்லப்பட்ட அந் நான்கு ஒற்றினையும் ஊர்ந்த குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் நான்கும் என் ஏன் அல் என்னும் மூன்று ஈற்றுச் சொல்லும் எனச் சொல்லவருகின்ற அவ்ஏழு சொ......[3]போலச் சொல்லுவான் தன்னோடு பிறன்வினையையும் உணர்த்தாது தன் வினையையே உணர்த்தும் தன்மைச் சொல்லாம் என்றவாறு.

ஒடு, எண்ணொடு.

இவற்றுள் முன்னைய நான்கும் எதிர்காலம் ஒன்றுமே பற்றிவரும்.

உ - ம் :—

உண்கு......என வரும்.

இவற்றுள் தகர உகரம் :—[4]கழிந்து பொழிந்தென வான்கண் மாறினுந் தொல்லது [5]விளைந்தென நிலம் வளங்கரப்பினும்,

என்னும் புறப்பாட்டினுள் பொழிந்து எனவும் விளைந்து எனவும் இறந்த காலம் பற்றி வந்தமையின் எ......[6]சிறு பான்மை இறந்த காலமும் உண்டேனும் அறிந்து கொள்க.

இனி, ககர உகரத்திற்கு :—அழாஅற் கோவினி நோய் நொந்துறைவி. என்னும் குறுந்தொகைப் பாட்டினுள் [7]அழுந என்னும் உடன்பாட்டிற்கு அழாஅற்கு என எதிர்மறை வந்தமையின் ஒழி ... எதிர்மறை வாய்பாடும் உளவேல் அறிக.

இனி என் ஏன் என்பன இரண்டு ஈறும் முக்காலத்தும் உடன்பாட்டினும் மறையினும் வரும், எனக் கண்டு கொள்க.

---

200-3 iii "பாலச்"

4 iii "கழி தந்து"

v "கழிந்தது"

5 iii-viii "விளைந்தே னிலம்"

6 iii " .... று பான்மை யிறந்த காலமுண்டேனும்"

7 iii-viii "அழகு"

உ - ம் :—

உண்டனென், உண்டிலென்; உண்ணா நின்றனென், உண்கின்றனென், [8]உண்ணாநின்றி ... ; உண்பென், உண்குவென், உண்ணலென் [9]என வரும். இவை என்.

இனி ஏன்:—உண்டேன், உண்டிலேன், உண்ணாநின்றேன், உண்கின்றேன், உண்ணாநின்றிலேன், உண்கின்றிலேன்; உண்பேன், உண்குவேன், உண்ணேன் என வரும்.

... [10]உண்டேனல்லேன் எனவரும் மறைவிகற்பமும் அறிக.

இவ்விரண்டறும் மூன்று காலத்தும் வருதலால் முன்வைக்கற்பாற்று எனின், முன் சூத்திரத்துக் கடதறக்கள் கடைக்கண்நின்ற அதிகாரம் பற்றி அவற்றை முற்கூறினன் எனவு ...

[11]பல், தின்பல் என எதிர் காலம் ஒன்றுமே பற்றிவரும்.

உண்ணாநிற்பல் எனச் சிறுபான்மை நிகழ்காலம் உண்டேனும் அறிக.

ஒழிவல், நவில்வல், எனச் சில வினைக்கண் மறைவாய்பாடும் அறிக.

அல்லாதவற்றிற்கும் உண்ணாதொழிவல் என்ற .......... வாய்பாடுதானே மறையாய்ச் சொல்லுமாறு அறிக. (சா)

201. அவற்றுட்
[1]செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்.

---

200-8 (உண்ணா நின்றிலென் உண்கின்றிலென் என்று இருத்தல் வேண்டும் போலும்)

9 iii "என வரும் இனி என்" (viii-ம் பிரதியில் இவை என் என்ற பகுதியிலுள்ள 'ஏ' என்பதின் மேல் வட்டப் புள்ளி இடப்பெற்றுள்ளது. புள்ளியிட்டால் குற்றெழுத்தாம் என்பது நன்னூல் வரை வந்த வழக்கு")

10 iii-v "... னல்லேன்"

11 v "... என எதிர்காலம்" ('உண்பல் தின்பல்' என்றிருத்தல் வேண்டும்.)

201-1 iii-viii "செய்யென்"

என்பது என்நுதலிற்றோ எனின், அவ் ஏழனுள்[2] ககர உகர ஈற்றிற்கு முடிபு வேற்றுமை கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[3]மேற் சொ ... னுள்ளும் செய்து என்னும் சொல் பெயரொடு முடியாதே வினையொடு முடியினும் பெயரோடு முடிந்தன போல அம் முற்றுச்சொல்லாகல் இயல்பின்[4] திரியாது என்றவாறு.

உ - ம் :—

உண்டுவந்தேன் என்பது. இனி ஒன்றென முடித்தல் [5]என்ப...... பதும் இவ்வாறே வினையோடு முடியும்.

உ - ம் :—

உண்கும் வந்தோம் என்பது.

வினையெச்ச முற்றாய் அமையாதோ எனின், முன் முற்றாய்ப் பெயர் கொண்டு நின்று, பின் வினையெச்ச முற்றாய் வந்தன அன்மையின், இவ்வாறு ஓதினான்.

... .... [6]காயான் என்னப் பெயரோடு முடிந்ததால் எனின் அவ்வாறு வருவன, உள வேனும் சிறுபான்மை; வினை கோடலே பெரும் பான்மை என உணர்க. (எ)

202. அன் ஆன் அள் ஆள் என்னு நான்கும்
ஒருவர் மருங்கிற் [1]படர்க்கைச் சொல்லே.

---

201-2 "ட்"

3 iii-v "மேற் சொ ... னுள்ளும்" (மேற்சொல்லப்பட்ட ஏழனுள்ளும் என்று இருத்தல் வேண்டும் போலும்).

4 "ற்றி"

5 (என்பதனுள் உண்கும் என்பதும் இவ்வாறே என்று இருந்தது போலும்)

6 v "தாயானே என"

iii "தாயான் என"
(உண்கோயான் என்பது போலும் க-த மாறுபட்டம்.)

202-1 iii "படர்க்கை ..."

viii "படர்க்கைச் ..."

என்பது என்நுதலிற்றோ எனின் .... [2]திணைத் தன்மை வினை உணர்த்தி [3]அத்திணைப் படர்க்கை வினை உணர்த்துவான் எடுத்துக் கொண்டான் என்பது. அப் படர்க்கை வினைதான் ஒருமை வினையும் பன்மை வினையும் என இருவகைத்து. அவற்றுள் ஒருமை [4]வினைதான் ஆண்பால் ஒருமையும் [5]பெண்பால் ஒருமையும் என இருவகைத்து.

அவ் இருவகை ஒருமையும் இதனாற் கூறுகின்றது என உணர்க.

இதன் பொருள் :—அன், ஆன், அள், ஆள் என்று சொல்லப்பட்ட நான்கு ஈற்றுச் சொல்லும், ஒருவன், ஒருத்தி என்னும் ஒருமைப் [6]பாலிட...உணர்த்தும் சொல்லாம் என்றவாறு.

[7]......க்காலத்தும் உடன்பாடும் மறையும் என இருவகையாய் வரும்.

அவற்றுள் அன்:-உண்டனன் : உண்டிலன், உண்ணாநின்றனன், உண்கின்றனன் : உண்ணாநின்றிலன், உண்கின்றிலன், [8]உண்ணலன் எனவரும்.

இனி ஆன்:-உண்டான், உண்டிலான் : உண்ணாநின்றான், உண்கின்றான்: உண்ணாநின்றிலான், உண்கின்றிலான் ; உண்பான், உண்குவான், உண்ணான் எனவரும்.

இவை ஆண்பால் ஒருமை.

---

202-2 iii ".. ணைத் தன்மை வினை"

v "... தன்மை வினை" (உயர்திணைத் தன்மை என்பது போலும்)

3 iii-viii "அத்திணைப் ... படர்க்கை"

4 iii "வினைதா ... ண் பால் ஒருமையும்"

viii "வினைதா ... யும்"

5 viii "பெண்பா ... மையும் என ... த்து"

6 viii "பாலிட .... லா மென் ... று" (ஒருமைப்பாலிடத்தில் படர்க்கையை உணர்த்தும் சொல்லாம் என்பது போலும்)

7 viii "...லத்தும்" (முக்காலத்தும் என்பது போலும்)

8 viii " .... யான் உண்ணா நின்றான்" ('உண்பன் உண்குவன்'— விடுபட்டது போலும்)

[9]இனி அள் :-[10]உண்டனள், உண்டிலள், உண்ணாநின்றனள், உண்கின்றனள், உண்ணாநின்றிலள், உண்கின்றிலள், உண்பள், உண்குவள் : உண்ணலள் எனவரும்.

இனி, ஆள் :-உண்டாள், உண்டிலாள் ; உண்ணாநின்றாள், உண்கின்றாள் ; உண்ணாநின்றிலாள், உண்கின்றிலாள் ; [11]உண்பாள், உண்குவாள் ; உண்ணாள் என வரும்.

இவை பெண்பாலொருமை.

இவற்றிற்கு உண்டனனல்லன், உண்டனனல்லான் ; உண்டனளல்லள் உண்டனளல்லாள் எனப் பிறவாய்பாட்டாய் வரும் மறையும் அறிக. (அ)

203. அர் ஆர் ப என வரூஉ மூன்றும்
[1]பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

என்பது என்னுதலிற்றோ எனின், ... னை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—அர் ஆர் ப என்று சொல்ல வருகின்ற மூன்று ஈற்றுச் சொல்லும் பல்லோர் இடத்துப் படர்க்கை உணர்த்தும் சொல்லாம் என்றவாறு.

இவற்றுள் முன்னையன இரண்டு [2]மூன்று காலத்து ... ம்.

[3]உ - ம் :—

அர் :-உண்டனர், உண்டிலர்; உண்ணாநின்றனர், உண்கின்றனர்; உண்ணாநின்றிலர், உண்கின்றிலர் ; உண்பர், உண்குவர் ; உண்ணலர் என வரும்.

ஆர் :—உண்டார், உண்டிலார்; உண்ணாநின்றார், உண்கின்றார் ; [4]உண்ணாநின்றிலார், உண்கின்றிலார், உண்பார், உண்குவார், உண்ணார் என வரும்.

---

202-9 iii "அள்"

10 viii "உண்டனள் .... உண்பள்"

11 viii "உண் .... ள் .... மை"

203-1 viii "பல்லோ ... னையாமாறுணர் - ற்று"

2 (மூன்று காலத்தும் வரும் என்பது போலும்)

3 viii "உ-ம் .... ண்ணா நின்றனர்"

4 viii "உண்ணா நின்றிலார்......பார் உண்குவார்"

இவற்றிற்கு உண்டனரல்லர், உண்டனரல்லார் எனவரும் மறை-விகற்பமும் அறிக.

இனிப் பகரம் எதிர்காலம் ஒன்றுமே பற்றிவரும்.

உ - ம் :—

உண்ப, [5]உண்குவ என வரும்.

உண்ணுநிற்ப, ... [6]பாடும் உண்டேல் அறிக.

இனி [7]ஒழிப, தவிர்ப எனச் சில வினைக்கண் மறைவாய்பாடும் உண்மை அறிக.

உண்ணுதொழிப என்னும் மறைதானே ஏனையவற்றிற்கு மறை ஆமாறும் அறிக. (கூ)

204. மாரைக் கிளவியும் பல்லோர் [1]படர்க்கை
[2]காலக் கிளவியொடு முடியும் என்ப.

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் படர்க்கைக்கு உரியது ஓர் ஈறும் அதன் முடிபு வேற்றுமையும் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் : — மார் என்னும் சொல்லை ஈறாகவுடைய சொல்லும் பல்லோரை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். அது தான் [3]பிறமுற்......பெயரொடுமுடியாது காலத்தை உணர்த்தும் சொல்லாகிய வினைச்சொல்லோடு முடியும். அவ்வாறு முடிந்த-தாயினும் முற்றும் இயல்பிற்றிரிபின்று என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

மார் எதிர்காலம் [4]ஒன்றுமே பற்றிவரும்.

---

203-5 iii-viii "உண்குப"

6 iii-v " ... டு முண்டேல்"

7 viii "ஒ ... தவிர்ப"

204-1 iii "படர்க்கையும்"

2 iii-viii " .... முடியும் என்ப"

3 viii "பிற முற் ... பயரெடு" ("பிறமுற்றுச் சொற் போற் பெய ரொடு" என்பது போலும்)

4 iii-viii "ஒன்று மேக ... தார் கொண்மார்"

v "ஒன்றுமே பற்றி வரும் உ-ம் ... தார் கொண்மார்" (ஆர்த்தார் கொண்மார் என்பது போலும்).

உ - ம் :—

...தார், கொண்மார் வந்தார், என வரும்.

உண்மார், தின்மார் என நிகழ்காலம் உண்டேனும் அறிக,

இதுவும் வினை யெச்ச முற்று அடங்காதோ எனின், மேற்கூறியவாறே கூறுக

[5]உண்ணன்மார் என எதிர்காலம் உண்டேனும் அறிக.

[6]இனி......ாகிய வுலகத்து நிலவன்மாரோ புலவன்மார் என்றும், பாடின் மன்னரைப் பாடன்மார் எமர் என்றும், நோய்மலி வருத்தங் காணன்மார் எமரே என்றும் பெயர் கொண்டு முடிந்தனவால் எனின் அவை நிலவுக, பாடுக. [7] ... ங் கோளிற்கு எதிர் மறை.

இதன் மறை அல்ல என்று போகலும் ஒன்று. வினை கோளும் என்பது பெரும்பான்மை. சிறுபான்மை பெயர் ஆயினும் வரும் என்பதும் ஒன்று. இரண்டனுள் நல்லது தெரிந்து உரைக்க. (ம)

205. [1]பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நாலைந்தும் மூன்று தலையிட்ட
[2]முன்னுறக் கிளந்தன உயர்திணை யவ்வே.

என்பது என்நுதலிற்றோ எனின், விரித்துத் தொகுத்தல் என்னும் இலக்கணத்தான் இவை உயர்திணைக்கு உரிய எனத் தெரிநிலை வினையைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—[3]........ருமையும் ஆகிய பால்களை அறிய வந்த மூன்றனை முடியிலே உடைய இருபதும் மேற் கிளவியாக்கத்து முன்னுறச் சொல்லப்பட்ட உயர்திணையன ஆம் என்றவாறு.

மூன்று தலையிட்ட அந் நாலைந்து எனக் கொள்க.

மூன்று தலையிட்டு என்றும் ஓர் ... டு.

---

204-5 (உண்மார் என்பது போலும்)

6 v-viii " ... கிய உலகத்து"

7 (காண்க என வரும் வியங்கோளிற்கு எதிர்மறை என்பது போலும்)

205-1 viii " ... லறி வந்த"

2 viii "முன்னூற் கிளந்தன"

3 (பன்மையும் ஒருமையுமாகிய என்பது போலும்)

உதாரணம் மேற்காட்டினவே கொள்க.

அவ் இருபத்து மூன்றனுள் பன்மைக்கு உரிய ஈறு உளப்பாட்டுப்-பன்மைஈறு எட்டும், படர்க்கைப் பன்மை ஈறும் மாரும், உட்பட நான்கும் எனப் பன்னிரண்டாம்.

இவற்றுள் உளப்பாட்டுத் தன்மை [4]ஈறெட்டு.... .....வான் பிறவினை-யும் உள்ளிட்ட மாத்திரமேயாய்த் தன்வினை கூறும் தன்மையன ஆகலிற் படர்க்கைப் பன்மை நான்கும் போலப் பன்மை சிறப்பின்மை அறிக.

ஒருமைஈறு:- தனித் தன்மை ஈறு ஏழும் படர்க்கை யொருமை-ஈறு நான்கும் ஆகப் [5]பதி ... .....இப்பதினொன்றுள் அன் ஆன் என்னும் இரண்டும் ஆண் பாற்கே உரிய ஒருமை. அள் ஆள் என்னும் இரண்டும் பெண்பாற்கே உரிய ஒருமை. தனித்தன்மை ஏழும் இரு-பாற்கும் உரிய ஒருமை. ஆகலின் முன்னையன போல [6]ஒருமைச்சி ..... எனக் கொள்க.

மேற் கூறுகின்ற [7]மார் என்பதனோடுகூட உயர்திணை ஈறு இரு-பத்து நான்காம் எனக்கொள்க.

இவ் உயர்திணை ஈறு இருபத்து நான்கும் இவ்ஈற்று வினைச்சொற்-கட்கு முடிபாய்வரும்.

பெயர்க்கும், ஒன்று என [8]முடித்தல் எ ...... ஈறாய் அவ்விடமும் பாலும் உணர்த்தும் என்பது கொள்ளப்படும்.

இவற்றைப் பெயர்ச்சொற்கும் ஈறாகப் பெயரியலுள் ஓதாதது என்னை எனின், இவையே அன்றிப் பிறவும் ஈறு உண்மையின் [9]ஓதான் ஆயினான் போலும்.

---

205 4 ("ஈறு எட்டும் சொல்லுவான் பிறர் வினையும் உள்ளிட்ட." என்பது போலும்)

5 iii-v ப ... ("பதினொன்றும்" என்பது போலும்)

6 ('ஒருமைச் சிறப்பில எனக் கொள்க' என்பது போலும்)

7 viii 'பார்'

8 ('முடித்தல் என்பதனால் ஈறாய்' என்பதுபோலும்)

9 'ஓதார் ஆயினார்"

அஃதேற் [10]பிறவற்றை ..... ட்டி வரையறை செய்க எனின், அப்பிற ஈறுகள் நம்பி என ஆண்பான் மேனின்ற இகர ஈறு. அவ்வாட்டி எனப் பெண்பான் மேனின்றும், நங்கை என நின்ற ஐகாரம் தந்தை என ஆண்பான் மேனின்றும், ஆடூஉ என [11]ஆண்பால் மேல் நின்ற ஊகாரம் மகடூஉ [12]எனப் பெண்பால் மேல் நின்றும். அவன் என ஆண்பான் மேனின்ற னகரம் சாத்தன் என விரவின் மேனின்றும் அவள் என நின்ற ளகரம் மக்கள் எனப் பன்மை மேனின்றும், அவ்வாறு மயங்கி வருதலின் வரையறுக்கப் ... [13]ன்றொழிந்தான் போலும் ... (யக)

**206.** [1]அவற்றுள்,
**பன்மை உரைக்குந் தன்மைக் கிளவி**
**எண்ணியன் மருங்கிற் றிரிபவை உளவே.**

என்பது என்னுதலிற்றோ [2]எனின், உளப்பாட்டுத் [3]தன்மை என்று கூறப்பட்டவற்றிற்கு ஓர் சிறப்பு விதி கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் : [4]மேற்கூறியவற்றுள் உளப்பாட்டுத் தன்மைச் [5]சொற்கள் ஆராயும் இடத்து வேறுபாடுடையன உள என்றவாறு.

---

205-10 ('பிறவற்றையும் சுட்டி வரையறை செய்க என்பது போலும்)
v "பிறவற்றை......வரையறை."

11 iii-viii "ஆண்......னின்ற ஊகாரம்"

12 viii "எனப் பெ......னின்றும்"

13 viii " வப்.. ...ன் றொழுந்தன பே ....."
v "...ன் றொழிந்தான் போலும்" ('வரையறுக்கபடா என்றொழிந்தான் போலும்' என்பதுபோலும்).

206-1 iii "பன்மையுரைக்கும்"

2 i-ii-iv-vii "எனின் ... ... ... லெனின் திரிபவை யென்னுந் தொழிற் பெயர்"

3 vi "பன்மைத்திரிபு கூறுதல் நுதலிற்று"

4 v "மேற்கூறப்ப ... ... மூன்றீற்றினுள்ளும் ... ந்தன்மைச் சொற்கள்"
iii "மேற்கூறப்ப ... .... ந்தன்மைச் சொற்கள்" "மேற்கூறப் பட்ட இருபத்து மூன்றீற்றினுள்ளும்பன்" (?) (இவ்வாறு குறிக்கப்படுவன இப்பதிப்பின் ஊகங்களாம்)

5 vi 'சொற்கள் எண்ணும்போது அஃறிணையையும் உளப்படுத்தி திரிவன உள" என்றவாறு

என்றது யாதோ எனின், முன்னிலையுளப்பாடுப் படர்க்கையுளப்பாடும் [6]அவ் விரு...... அம் மூவகையும் அம் முதலிய எட்டற்கும் உரிய என்பதுபடச் சூத்திரம் கூறி நின்றதேனும், அவை எல்லாம் ஒரு ...... [7]நிகரன அல்ல: தம்மில் வேறுபாடு உடையன என விதி ......[8]ன்பது வழூஉத்திரிபன்று; தம்முள் ஒன்றனோடு ஒவ்வாத வேறுபாடு. அஃதேல் திரிபவையுள என்ற வாய்பாடு திரிபலாவற்றிற்கும் செல்லாது அவற்றுள் சிலவே திரிவன போன்று நின்றதால் எனின், திரிபவை என்னும் [9]தொழிற்பெயர் ... திரிபு என்னும் [10]தொழின்மேலது பொருணிலை ஆக்கித் திரிபுகள் உள என எட்டன் மேலும் ஏற்றுக.

இனித் திரிபவை [11]என்னும் சொல்லினைத் [12]திரிபாகிய அவை என இரண்டாக்கி அவை [13]என்றதும் திரிபுகளையாக்கியும் உரைக்க.

இனி, அவைதிரி ... [14]அம், ஆம் என்னும் இரண்டும் தன்னோடு முன்னின்றானை [15]உளப்படுக்கும். [16]எம், ஏம் என்னும் இரண்டும்.

---

206-6 iii "அவ்விரு இட்ட உளப்பாடும் என்ற அம்மூவகையும் (?) திரிபவை என்னுந் தொழிற் பெயர் ... .... திரிபு என்று" (ஒரு பந்தி விடப்பட்டுள்ளது)

7 viii நிகரென வல்லதம்மில் ... ... வெனவ .... .... த்திரிபன்று"

8 v "... ... .... வழு"
iii "என்பது வழூஉத்திரிபன்று"

9 v "தொழிற் பெயர் ... .... ன்னுந் தொழின்"

10 vi 'தொழிலின் மேலது"

11 i-ii "என்னு ந சொல்லினை"

12 i-ii-vi "திரிபாகியவை என"

13 vi "என்பதுந்தங்கு ... ...ளையாக்கியும் உரைக்க"
ii "என்றதுங் தங்கு ... ... ளையாக்கியும்"

14 iii-v " ... ... என்னும் இரண்டும் அவை திரிபவை என்றவற்றுள் அம் ஆம் என்னும் இரண்டும் (?)"

15 iv "உளப்படுக்கும் உம்மொடுவரூஉம்" (உளப்படுக்கும் எனப் பின் வருவதனோடு முன்வந்த இதனை மயங்கியதால் ஒரு தொடர் விடப்பட்டது.)

16 ii "உளப்படுக்கும் எம் ஏம் என் என்னும்"

தன்னோடு படர்க்கையாரை உளப்படுக்கும். [17]உம்மொடு வரூஉம் கடதறக்கள் நான்கும், அவ்இருவரையும் உளப்படுக்கும் எனக் கொள்க.

இச் சூத்திரத்து வேறுபாடுள என்றது அல்லது இவ்வகை விளங்கக் கூறுமையின் இதனை உரையிற் கொள்ளப்படும்.

உ - ம்:—

யானும் நீயும் உண்டனம், யானும் நீயும் உண்டாம்; யானும் அவனும் [18]உண்டனெம், யானும் அவனும் உண்டேம்; யானும் நீயும் உண்கும், உண்டும், வருதும், சேறும்; யானும் அவனும் உண்கும், [19]உண்டும், வருதும், சேறும்; யானும் நீயும் அவனும் உண்கும், உண்டும், வருதும், சேறும் [20]என ஒட்டிக் கொள்க. (கஉ)

207. யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே.

என்பது என்னுதலிற்றோ எனின், உயர் திணைத் தெரிநிலை வினை உணர்த்தி, அதன் வினைக்குறிப்பினுள் ஒன்றனை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—யார் என்று சொல்லப்படுகின்ற வினாப்பொருளை உணரநின்ற சொல் [1]மேற்சொல்லப்பட்ட உயர்திணையிடத்தும் முப்பாற்கும் உரித்து என்றவாறு.

உ - ம் :—

யார் அவன், யார் அவள், யார் அவர் என வரும்.

---

206-17 vi "உம்மோடு வருங்கள் நான்கும்',
viii "உம்மோடு வரூஉம தற்கணென்கும்" (ம-ட மாருட்டம்)
i-vi உம்மோடுவரூ உங்கட்தர்க்கணென்கு" (ர-ற மாருட்டம்)

18 i-ii "உண்டனம்"

19 i-viii "உடும்"

20 ii-vi "சேறும் என ஒடிக்கொள்க" (தொடர் விடுபட்டுள்ளது)

207-1 i-ii "ன் (புணர்ச்சி)

மேல், வினைக்குறிப்புக் [2]கூறுழி கூறுக எனின், ஆண்டுக் கூறுவன [3]போல ஒருபாற்கு உரித்தாய் நில்லாது, தான் ஒன்றே மூன்றுபாற்கும் [4]உரித்தாயினமையின் வேறு கூறினன் எனக் கொள்க. (கரு)

208. பாலறி மரபின் அம்மூ ஈற்றும்
ஆ ஓ ஆகும் செய்யுள் உள்ளே.

என்பது என் நுதலிற்றோ எனின், அவ்இருபத்துமூன்று ஈற்றுள்ளும் மூன்றற்கும் செய்யுள் அகத்துப் பிறப்பதோர் திரிபுகூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பால் அறியப்படும் மரபினை உடைய அம்மூன்று ஈற்றின் [1]கண்ணும் ஆகாரம் ஓகாரமாம், செய்யுள் இடத்து என்றவாறு.

அம்மூன்றாவன :—மேல் ஆ ஓ ஆகும் என்றமையான், [2]ஆன், ஆள், ஆர் [3]எனக் கொள்க.

உ - ம் :—
வினவி [4]நிற்றந்தோனே
நல்லை [5]மன் என நகூஉப் பெயர்ந்தோளே.
சென்றோர் அன்பிலர் தோழி என வரும்.

இம் மூன்றும் படுத்தல் ஓசையால் தொழிற்பெயர் ஆயவழி ஆ ஓ ஆதல் பெயரியலு[6]ள் கொள்ளப்படும். (கசு)

---

207-2 iii "கூறுவழி கூறுக"
i-iv "கூறுழிக் கூறுக"
3 i-ii-iv-vii "போல ... .... .... தானொன்றே"
vi "போலாது... ...தானொன்றே"
iii "போல ஒரு பாற்கு உரியதாய் நில்லாது தானொன்றே"
4 i "உரித்தாயின்மையின்"
208-1 i "கண்ணும் மாகாரம்"
2 i "ஆ ஆள்"
3 vi "என்பனவுங் கொண்டார் என்பது"
4 i "நிற்றந்தானே நல்லை"
ii "நிற்றந் தோனே சென்றோரன் பிலர்,' (தொடர் விடுபட்டுள்ளது)
5 i-iv "மன்றநகூ"
iii "மன்ற நகூ"
6 "ட்" (புணர்ச்சி)

**209. ஆய்என் கிளவியும் [1]அவற்றொடு கொள்ளும்.**

*என்பது என்நுதலிற்றோ எனின், இஃது மேலதன் முடிபு முடிதல் உடையது, பிறிதும் உண்டு என்பதும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:—ஆய் என்னும் ஈற்றுச் சொல்லும் மேற்சொல்லப்பட்ட மூன்று ஈற்றினோடும் ஆகாரம் ஓகாரமாதல் கொள்ளப்படும் என்றவாறு.*

[2]உ - ம்:—

வந்தோய் மன்ற [3]தெண்கடற் சேர்ப்ப எனவரும்.

*இது விரவுவினை உள்ளதாகலான், ஈண்டுக் கூறியது என்னை எனின், விரவே எனினும் இவ்வாறு திரிவது உயர்திணையின்மேல் வந்ததுஆகலானும், ஆ ஓ ஆதல் அதிகாரப்பட்டமையானும் எனக் கொள்க.* (கரு)

**210. அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்**
**கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்**
**ஒப்பி னானும் பண்பி னானும் என்-**
**றப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்.**
**[1]அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்**
**அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்**
**என்ன கிளவியும் குறிப்பே காலம்.**

*என்பது என்நுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே உயர்திணைத் தெரிநிலை வினை உணர்த்தி அதன் குறிப்பு வினை உணர்த்திய எடுத்துக் கொண்டான் என்பது.*

*இதன் பொருள்:—ஆறாம் வேற்றுமையது உடைமைப் பொருட்பெயர்க் கண்ணும், ஏழாம் வேற்றுமையது நிலப் பொருட் பெயர்க்-*

---

209-1 iv "அவற்றோரன்ன"

2 iii "வந்தோய்"

3 i "தெணிகடற் கொப்பன்" (ண்-ணி, ச-க; ே-ெ ர-ா; மாறுபட்டம்)
v "தண்டகட் சேர்ப்ப"
v-iii "தண்கடற் சேர்ப்பன்"

210-1 v (இங்கிருந்து மூன்று அடிகள் விடுபட்டுள்ளன)

கண்ணும், உவமப் பொருட்பெயர்க்கண்ணும், கருமை முதலிய நிறப் பண்புப் பெயர்க் கண்ணும் என்று சொல்லப்பட்ட அந் நான்கு-கூற்றுப் பெயர்க்கண்ணும் வருகின்ற வினைச்சொல், வினைக்குறிப்பாய்த் தோன்றும்.

[2]அவையே அன்றி, அன்மை என்னும் பண்புப் பெயரடியாக வருவதும், [3]இன்மை என்னும் பண்புப் பெயரடியாக வருவதும், உண்மை என்னும் பண்புப் பெயரடியாக வருவதும், வன்மை என்னும் பண்புப் பெயரடியாக வருவதும், அத்தன்மையினையுடைய பிறபண்புப்-பெயர்களும் பிற பெயர்களும் அடியாக வருவனவுமாய் [4]உள்ளதைக் குறித்துக் கொள்ளப்படும் எல்லாச் சொல்லும் குறிப்பு வினைச்-சொல்லாம் என்றவாறு.

அப்பால் காலம் [5]என்பது ஆகுபெயரால் காலமுடைய வினைச்-சொல்லினைக் குறிப்பாய்த் தோன்றும் என்பான் குறிப்பொடு தோன்றும் என்றான் ஆகக் கொள்க.

[6]இனி, அக் கூற்றுக் [7]காலம் குறித்துக் கொள்ளப்படும் எனக் காலம் தன்மேலதாயும் படும்.

குறிப்பே காலம் என்றது முன் குறிப்பொடு தோன்றும் என்ற காரணத்தால் அச்சொற்கட்குக் குறிப்புவினை எனப் [8]பெயரிட்டவாறு-ஆகக் கொள்க.

ஈண்டும் காலம் [9]என்றது ஆகுபெயரான் வினை, வினைக்குறிப்பு என்றதனோடு குறிப்புவினை என்றதனோடு [10]வேற்றுமை இல்லை என உணர்க.

---

210-2 v (பின்வரும் பகுதியை இடம்விட்டு எழுதியுள்ளது)

3 vi "இன்மை உண்மை என்னும் பண்புப் பெயரடியாக வருவதும் வன்மை"

4 viii "உள்ள குறிப்பு"

5 iii-v "என்றது"

6 i (இப்பத்தி சிதிலம்)

7 iv "காலம் கொள்ளப்படும்"

8 i-ii-iv-vii "பேரிட்டவாறு"

9 iv "என்பது"

10 i "வேற்று இல்லை."

இதனாற் சொல்லியது ஒருபொருட்கு உடைமையாகிய உடைமைப்பெயரும், ஒருபொருள் நிகழ்தற்கிடமாகிய இடப்பெயரும், ஒருபொருளது குணமாகிய ஒப்புமைப் பண்பும் நிறப்பண்பும் குணப்பண்பும் ஆகிய பண்புப்பெயரும், இன்னும் ஒருபொருள் [11]நிகழ்வதற்கிடமாகிய காலப் பெயரும், ஒருபொருளது புடைபெயர்ச்சியாகிய தொழிற்பெயரும், ஒரு [12]பொருளது உறுப்பாகிய சினைப்பெயரும் என இவ் அறுவகைப் பெயரும் அடியாக இவற்றோடு பாலும் காலமும் காலம் காட்டும் [13]இடைச்சொற்களைக் கூட்டக் காலமும் குறித்துக் கொள்ளும் நீர்மையாய் வருவனஎல்லாம் வினைக்குறிப்பு என்பான், பெரும்பான்மையனவற்றை எடுத்து ஓதி, அல்லனவற்றை [14]அன்ன பிறவும் என்றதனாற் கொள்க என்றான் என உணர்க.

ஒப்புமைப்பண்பு குணப்பண்பினுள் அடங்காதோ எனின் அஃது ஒருபொருட்கண்ணே கிடப்பதன்றி அவ் இருபாற் பொருட் கண்ணும் கிடத்தலின் வேறு ஆயிற்றுப் போலும்,

பண்பு என [15]ஒன்றாக .... ... ண்பு எனப் பிரிக்கின்றது என்னை எனின் நிறப் பண்புக் கட்புலம், மற்றையன பிறபுலம் என்பது [16]கருதிப் போலும்.

---

210.11 i-ii-iv-vii "நிகழக்கூட்டமாகிய காலப் பெயர்"

12 i "பொருளது அப்பாகிய" று-அ மாருட்டம்;

13 i "இடைக்கனைக் கூட்ட"

v "இடைச் சொ .... ... க்காலமும்"

14 i-ii-iv-vii "அன்ன ... ... என்றதனாற் கொள்க — — உணர்க. ஒப்புமைப் பண்பு"

iii-v "அன்னபிற என்றதனாற் கொள்க ... ... ... ஒப்புமைப் பண்பு"

15 i-ii-iii-v-vii "ஒன்றாக ... ... ... ... ண்பு எனப் பிரிக்கிறது.

vi "ஒன்றாக இருக்கப் ... ஒப்பு எனப் பிரிக்கின்றது"

viii "ஒன்றாக ... ... ... எனப் பிரிக்கின்றது" ஒன்றாக ஓதிய தனை ஒப்புமைப் பண்பு நிறப்பண்பு குணப்பண்பு எனப் பிரிக்கின்றது (?)

16 vi "கருதிப் போலும் அன்மை இன்மை" (தொடர் விடுபட்டுள்ளது)

குணப்பண்பு என ஒன்றாக [17]ஓதாது **அன்மை இன்மை** எனப் பிரித்து ஓதியது என்னை எனின் [18]இவை ஒரு பொருட்குப் பெயர்-ஆகிநின்றுழி நன்மை தீமை என்பனவற்றோடு வேறுபாடுஉடைய என்றதனால். இவற்றின் மேல் வரவு பெரும்பான்மை என்றுதல், பிற ஆதல் கருதிப் போலும்.

**உடைமை** என்றும், **நிறம்** என்றும் ஓதாது வேற்றுமைப்-[19]பொருள்களோடு அடுத்து ஓதியது என்னை எனின், அப்பெயரடியாக வினைக்குறிப்பு வந்தவழி அவ்வேற்றுமைப் பொருள் உணர்ச்சி உண்டு என்பது கருதிப் போலும்.

[20]......தேரன் எனப் பொருள்பற்றி வந்த தெரிவினை உடையவன் என இரண்டாவதன் பொருண்மை அன்றே [21]எனின் அச்சொல் முடிந்து நின்றவழி உணர்ச்சி அவ்வாறு ஆயினும் உடைமைக்கு அடியாய் உள்ளது ஆறுவது என்பது கருதிப் போலும்.

அறுவகைப் பெயராவன. [22]பண்புப்பெயர், காலப்பெயர், தொழிற் பெயர் சினைப் பெயர்......என இவை.

இவற்றிற்கு எல்லாம் உதாரணம் இதன் ஈறு கூறுகின்ற மேலைச் சூத்திரத்துட் காட்டுதும். (கசு)

---

**210**-17 ii "ஓதாது"

18 i-ii-iv-vii "இவை நின்றுழி நன்மை"
viii "இவவ ஒரு ... ... இன்றுழி"

19 i-ii-iv-vii "பொருள்களொடுத்து"
vi "பொருள்களை யெடுத்து"

20 i-ii-iv-vii " .... .... தோன் எனப் பொருள் பற்றிவந்த தெரிவினையுடையவன்"

vi " .... .... கலத் தோன் எனப் பொருள் பற்றிவந்த தெரிநிலை வினையுடையவன்"

21 ii-vi "எனின் அன்று சொல் முடிந்து"
i "எனின்று சொல்ல முடிந்து"

iii "எனின் சொல் முடிந்து"

viii "எனின் அது சொல் முடிந்து"

22 vi "பண்புப் பெயர் இடப் பெயர் காலப் பெயர் தொழிற் பெயர் சினைப் பெயர் உடைமைப் பெயர்" (?)

211. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்கூறிய வினை வினைக்குறிப்பிற்கு ஈறுஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :- பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை அறிய வந்த அத்தன்மைத்தான மரபினை உடைய காலம் குறித்துக்கோடலொடு வரும் வினைச்சொற்கள் உயர்திணையிடத்து மேற்கூறிய தெரிநிலை வினை ஈறுகளோடு ஈறு வேறுபாடு இல என்றவாறு.

என்றது, இவற்றிற்கு என ஈறுவேறு இல்லை; மேற்கூறிய இருபத்துமூன்று ஈறுமே இவற்றிற்கும் ஈறு ஆவது என்றவாறு.

இருபத்து மூன்றும் ஈறு ஆதல் சென்றதேனும், இதுபொழுது காண்கின்றது உளப்பாட்டுத்தன்மையுள் [1]அம் முதலிய நான்கும், அத் தன்மையுள் என் ஏன் [2]என்னும் இரண்டும், படர்க்கையுள் அன் முதலிய ஒருமை நான்கும், அர் ஆர் என்னும் பன்மை இரண்டும், அல்லனவும் உளவேற் கொள்க.

உ - ம் :—

[3]உடையம், உடையாம் ; [4]உடையெம், உடையேம் ;

உடையென், உடையேன் ;

உடையன், உடையான் ; உடையள், உடையாள் ;

உடையர், உடையார் என அநுச்சொல்வேற்றுமை உடைமை வந்தவாறு.

இவற்றுள், ரகாரமுதலாகிய ஈறுகள் பெயர் நோக்கு ஒழிய, வினைநோக்கு உள் வழிக்கொள்க

---

211-1 iii "அம் முதலிய .... .... ஒருமை நான்கும்"
2 v "என இரண்டும்"
3 ii "உதாஹரணம் உடையம்"
4 iii "உடையெம் உடையென்"

இனி, பொருளுடையன், பொருளுடையான், [5]வில்லையுடையன், [6]வில்லையுடையான் என்றாற்போல இரு சொல்லாய் வாராது [7]பொருளன் வில்லன் என்றாற்போல்வன ஒரு சொல்லாய் வருதலும் அது. [8]பல பொருளன வல்வில்லன் என்றாற் போல்வன [9]அடை அடுத்து வருதலும் கொள்க.

நிலத்தம், நிலத்தாம்; நிலத்தெம், நிலத்தேம்; நிலத்தினென், நிலத்தினேன்; நிலத்தன், நிலத்தான்; நிலத்தள், நிலத்தாள்; நிலத்தர், [10]நிலத்தார் எனக் கண் எனும் வேற்றுமை வந்தவாறு. இவற்றின் விகற்பமும் அறிக.

பொன்னன்னம், பொன்னன்னாம்; [11]பொன்னன்னெம், பொன்னன்னேம்; பொன்னன்னென், பொன்னன்னேன்; பொன்னன்னன், பொன்னன்னான்; பொன்னன்னள், பொன்னன்னாள்; பொன்னன்னர், பொன்னன்னார் என இவை ஒப்புவந்தவாறு. இவற்றின் விகற்பமும் அறிக.

கரியம், கரியாம்; கரியெம், கரியேம்; கரியென், கரியேன், கரியன், கரியான்; கரியள், கரியாள்; கரியர், கரியார் என இவை பண்பு வந்தவாறு. [12]ஒழியச் செம்மை முதலிய [13]பண்பொடும் இவ்வாறு ஒட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

[14]அல்லம், அல்லாம்; அல்லெம், அல்லேம்; அல்லென், அல்லேன்; அல்லன் அல்லான்; அல்லள், அல்லாள்; அல்லர், அல்லார் என இவை அன்மை

---

211-5 vi "வில்லுடையன்"

6 vi "வில்லுடையான்"

7 i-ii "பொருளா ... ... வில்லன்"
v "பொரு ... ... ... வில்லன்"

8 iii-v "பல பொருள்கள் வல் வில்ல"

9 i-vi "அடை யெடுத்து"

10 i-iv "நிலை ... ... என கண்ணெனில் வேற்றுமை"
vi "நிலத்தார் ... ... எனக் கண்ணென்னும்"

11 v (இங்கிருந்து பொன்னனெம் என இரண்டாவது 'ன்' இல்லாமலே உதாரணங்கள் வருகின்றன)

12 vi "இவை யொழிய"

13 vi "பண்பு ஆறும் இவ்வாறு"

14 v (இந்தப்பத்தி முழுதும் இல்லை)

வந்தவாறு. இன்மை முதலியனவும் இவ்வாறு ஒட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

வன்மை என்பதனை இரட்டுற மொழிதல் ஆகக்கொண்டு வன்மையும் [15]வலுமையும் ஆக்கி வல்லம், வலியம் என [16]இருவாறும் ஒட்டுக. நல்லம், தீயம், [17]சேயம், அணியம் எனப் பிற பண்போடும் [18]எல்லா ஈற்றையும் ஒட்டுக. இவற்றின் விகற்பமும் அறிக.

ஓராட்டையம், ஒரு திங்களம், ஒரு நாளம் என எல்லாக் காலத்தோடும் எல்லா ஈற்றோடும் ஒட்டுக. ஊணம், தீனம், செலவினம், வரவினம் என எல்லாவற்றோடும் [19]எல்லா ஈற்றையும் ஒட்டுக. [20]முடவம், குருடம், செவிடம் என எல்லாச் சினையோடும் எல்லா ஈற்றையும் ஒட்டுக. இவற்றின் வாய்பாட்டு விகற்பமும் அறிக.

உடைமைப்பெயரும், பண்புப்பெயரும், காலப்பெயரும், தொழிற்பெயரும், சினைப்பெயரும் வந்தவாறு. (கஎ)

212. அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை.

என்பது என்னுதலிற்றோ எனின், நிறுத்த முறையானே உயர்திணை வினையும் வினைக்குறிப்பும் உணர்த்தி அஃறிணைவினை உணர்த்துதல் நுதலிற்று.

[1]அஃறிணை வினைதான் ஒருமைவினையும் பன்மைவினையும் என இருவகைத்து. அவற்றுட் பன்மைவினை உணர்த்திய தொடங்கினான்[2] என்பது. ஒருமை அன்றோ [3]முன்னது எனின். யாண்டும் ஒருமையை

---

211-15 vi "வலிமை"

16 vi "இருவாற்றானும் ஒட்டுக"

17 i-ii-iv "சேயம்"

18 v "எல்லாவற்றையும்"

19 vi "எல்லா ஈற்றோடும்"

20 vi "முடவன் குருடன் செவிடன்"

212 - 1 i-ii-vii "இதன் பொருள் அஃறிணை"

2 "†"

3 vi "முன்னையது எனின்"

முன்[4]கூறின் அதற்கு ஓர் சிறப்பு உண்டுகொல் என்பது படும் என்று முந்து மொழிந்ததன் றலை[ந்] [5]தடுமாற்று என்பது ஓர் தந்திர உத்தியும் [6]உண்டு ஆதலான் இவ்வாறு கூறினன் என்க.

[7]இதன் பொருள்:— அ ஆ வ என்று சொல்லவருகின்ற ஈறுகளையுடைய அக்கூறு மூன்று சொல்லும் பலவற்றை உணர்த்தும் படர்க்கைச் [8]சொல்லாம் என்றவாறு.

உ - ம்:—

உண்டன, உண்டில; உண்ணாநின்றன. [9]உண்ணாநின்றில; உண்கின்றன, உண்கின்றில; உண்பன, உண்ணல என அகரம் வந்தவாறு.

இவ் அகரம் வருங்கால் உடன்பாட்டின்கண் [10]னகர ஒற்றொடு கூடியும், மறைக்கண் லகர ஒற்றொடு கூடியும், அல்லது வாராது போலும்.

உண்ட, தின்ற, வந்த, போய என வருமால் எனின், [11]அவ்வ-……எல்லாக் காலங்களினும் [12]வாராமையின் அந்நிகரனவற்றின் னகரம் செய்யுள் விகாரத்தால் குறைந்தது என்க.

---

212·4 i-ii-iv-vii 'கூறியதற்கு'

5 v "தடுமாற்றம் என்பது"

6 v "உண்டாகலான்"

7 i-ii-vi "அ ஆவ என்று"
v "உரை அ ஆவ என்று"

8 "சொல்லேலாம்"

9 vi "உண்ணுகின்றில"

10 i-ii-iv-vii "ணகர"

11 iii "அவ்வ … ரோ எல்லாக் காலங்களினும்"

i "அவ்வ … லங்களினும்"

v "அல்ல அவை … எல்லாக் காலங்களினும்"
அவ்வகரம் ணகரத்தோடன்றி எல்லாக் காலங்களினும் வாராமையும் ?

12 v "வாராமையான்"

உண்ணு, தின்னு என ஆகாரம் வந்தவாறு. இதற்கு உடன்பாடு [13]எக்காலமும் இல்லை எனக்கொள்க. [14]இதற்கு எதிர்காலமே உள்ளது.

இதற்கு மறை [15]உண்ணல என அகரத்தின் மறை எனக் கொள்க. உண்டன அல்ல உண்டன இல்லை எனப் பிறவாய்பாட்டு மறையும் அறிக. (கஅ)

213. ஒன்றன் படர்க்கை தடற [1]ஊர்ந்த
குன்றிய லுகரத்து இறுதி ஆகும்.

என்பது என்னுதலிற்றோ எனின், ஒருமை(ப்) படர்க்கை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—ஒன்றனை உணர்த்தும் படர்க்கைச் சொல் [2]தடறக்களை ஊர்ந்த 'குற்றிய லுகரம் ஆகிய ஈற்று எழுத்தினை உடைய [3]சொற்கள் என்றவாறு.

உ - ம்—

வந்தது, வந்திலது; [4]வாராநின்றது, [5]வாராநின்றிலது; வருகின்றது வருகின்றிலது; வருவது, வாராது எனத் தகரம் வந்தவாறு.

[6]கூயிற்று தாயிற்று என றகரம் இறந்தகாலம் பற்றி வந்தவாறு. இது உண்டல் தின்றல் என்னும் எல்லாத் [7]தொழிலோடும் ஒட்-

---

212-13 i-ii "தற்காலமும்"
vi "எக்காலத்தும்"
14 v "இதற்கும் எதிர்காலமே"
15 i "உண்ணல் என"
213-1 i "ஊர்ந் ... ... என்நுதலிற்றோ எனின்"
2 vi "தறடக்களை"
3 vi "சொற்களாம்"
4 iv "வாரா நின்றது எனத்தகரம் வந்தவாறு" (ஐந்து சொற்கள் விடுபட்டுள்ளன)
5 vi "வாராநின்றிலது"
6 i "கூறிற்று"
7 i-vi-vii "தொழிலோடு மோடாமை"

டாமையும் [8]அறிக. தனக்கு என ஏற்ற [9]மறை இன்மையும் அறிக. குண்டுகட்டு [10]கொடுந்நாட்டு என்பன டகரம். [11] இது வினைகுறிப்பின்கண் வருவது எனக் கொள்க.

"மற்று இது வினைக்குறிப்பு ஓதும் வழி ஓதாதது என்னை எனின், மேல், [12]குறிப்பினைத் தெரிநிலை [13]வினைஈறோடு மாட்டெறியும் ஆகலான் [14]இத்தெரிநிலையுளடங்கா [15]உகரம் இல்லது கண்டு ஆண்டு [16]மாட்டேலாது ஈண்டே [17]கூறினான் என உணர்க.

இவ்வாறு பன்மையும் ஒருமையும் அறிவிக்கும் ஈறுகள் கிளவியாக்கத்துக்குள்ளே ஓதினான்[18] அன்றே எனின், ஆண்டு இடவரையறை [19]இன்மையின் அவற்றிற்கு இடம் வரையறுத்தவாறு ஆகக் கொள்க.

இக்கடாவும் விடையும் உயர்திணைப் படர்க்கை வினைக்கும் ஒக்கும் எனக் கொள்க.

---

213-8 vi "அறிக குண்டு கட்டு" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது)

9 viii "பிறை" (ஆனால் தெளிவாக இல்லை) (பி-ம்)

10 v "குறுந்நாட்டு"

11 ii-vi-vii "இது குறிப்பின் கண்"

i "இது வினை ... ... கண் வருவது"

12 v "அக்குறிப்பினை"

13 vi "வினையினோடு"

14 "இத்தெரிநிலையுள் டகர உகரம் இல்லாது கண்ட (?)

15 vi "டுகரம்"

16 vi "மாட்டேலாது என"

ii-vi "மாட்டேலாத ஈண்டே"

17 ii "கூறினார்"

18 "ர்"

19 "இன்மையின் ஈண்டு அவற்றிற்கு"

அவற்று[20]ள் பால் உணர்த்தும் என்ற னகரஈறு தனித்தன்மைக்கண் என் என்புழி இருபாற்கும் பொதுவாய் நின்றதாலெனின், ஆண்டும் [21]ஒருமையும் என்னும் துணையும் உணர்த்தியது எனக் கொள்க.

அக்குறைபாடுகளான் அன்றே அவ் எழுத்துப் பதினொன்றற்கும் படர்க்கை வினை என இடம் வரையறுத்தது எனக் கொள்க. (கக)

214 பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ இரண்டும் அஃறிணை யவ்வே.

என்பது என்நுதலிற்றோ எனின். மேல் [1]விரித்தவற்றையெல்லாம் தொகுத்து இன்ன திணைக்கு உரிய என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பன்மையும் ஒருமையும் ஆகிய பால்களை அறிய வந்த அவ் ஆறும் அஃறிணை உடையன என்றவாறு.

ஆறுவன :—அகர, ஆகார வகரங்களும், [2]தகர றகர டகரங்களை ஊர்ந்த குற்றியலுகரம் மூன்றும் எனக் கொள்க.

ஒன்றெனமுடிந்தல் என்பதனான் இவ்ஈறு பெயர்க்கும் ஈறுஆதல் கொள்க. (உ0)

215. அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினவே.

என்பது என்நுதலிற்றோ எனின், அஃறிணைத் தெரிநிலை வினை உணர்த்தி அதன் வினைக் குறிப்புக் கூறுவான் இருபாற்கும் உரியது ஓர் குறிப்பு உணர்த்துகின்றான்[1] என்பது.

இதன் பொருள் :—மேற்சொல்லப்பட்ட அஃறிணை இடத்து ஒருமைப்பன்மை ஆகிய [2]இருபாற் பொருண்மைக்கு மிகுதி குறைவு இன்றி ஒக்கும் என்று சொல்லுவர் [3]ஆசிரியர். அதனையாது எனின், எவன் என்று சொல்லப்படும் வினாப் பொருண்மையை உடைய [4]சொல்வினை என்றவாறு.

---

213-20 "ட்"
21 "ஒருமை யென்னும் துணையும்"
214-1 vi "விரிந்தனவற்றை"
2 v "தகர டகர றகரங்களை"
215-1 ii "ர்"
2 i "இருபாற்கு பொருண்மை"
3 vi "ஆசிரியர் எவனென்று சொல்லப்படும்"
4 vi "சொல்லில் எ-று"

உ - ம் :—

**எவன் அது, எவன் அவை.**

*இதனை மேற்கூறுகின்ற வினைக்குறிப்போடு கூறாதது என்னை எனின், இஃது ஈறுதிரியாது இருபாற்கும் ஏற்பது ஒன்று ஆகலின் வேறு கூறினா[5]ன் என்பது.*

*தெரிநிலைவினை ஈறுகளே குறிப்பிற்கும் ஈறாம் என்று [6]மாட்டேற்றற்கு ஏலாதால் எனின், அவ்வாறு ஏலாமையின் [7]அன்றே இதுவேறு கூறியது என்க. இதனோடு அஃறிணைஈறு ஏழு என்பது [8]பெற்றாம்.*

*இவ்வாறு னகரம் அஃறிணைப்[9]பால் மேல்நிற்றலான் னஃகானொற்றே ஆடூஉஅறிசொல் என்றவழிப் படர்க்கை இடத்து முற்றுச்சொற்கு ஈறாய வழித் திரிபின்றி [10]உணர்த்தும் என்ற துணிவிற்கு வேறுபாடாம் அன்றோ எனின், அஃது [11]ஒக்கும். பன்மை உணர்த்தும் என்ற ரகாரம் [12]யார் என்னும் வினாவின்கண் ஒருமைக்கும் உரித்தாய் நின்றது [13]அன்றோ எனின், அவை ஆகின்றவாறு [14]அறிந்துகொள்க. (உக)*

216. இன்றில உடைய என்னும் கிளவியும்
அன்றுடைத் தல்ல என்னும் கிளவியும்

---

215-5 ii-vi-viii "ர்"

6 i "மாட்டேதற்கு"
v "மாட்டேத்தற்கு"
ii-vi "மாட்டேற்றுதற்கு"

7 i "அன்றே வேறு இது"

8 i "என்பதுபே ... .... றும்"
iii "என்பது ... ... ... ... ..."

9 "பான்மே னிற்றலான்" (புணர்ச்சி)

10 vi "உணர்த்து மென்ற ரகாரம்"
(பின்வரும் உணர்த்து மென்ற தொடரோடு முன் வந்த இதனை மயங்கிய மயக்கம்)

11 i-viii "ஒக்க பன்மை"

12 i-ii-iv-vii "யாவென்னும் வினாவின்கண்"

13 v "அன்றோ அவை ஆகின்றவாறு"

14 vi "அறிந்தது, உக"

பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்.

என்பது என்நுதலிற்றோ எனின், அஃறிணை வினைக்குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—**இன்று, இல, உடைய,** என்னும் சொற்களும், **அன்று, உடைத்து, அல்ல** என்னும் சொற்களும், நிறப்பண்புப் பெயரினைத் தனக்கு அடியாகக்கொண்ட சொல்லும், உள [1]என்னும் சொல்லும், நிறப்பண்பும் குணப் பண்பும் எனப்பட்ட இருவகைப் [2]பண்புப் பெயரும் காரணமாக உளதாகிய அப்பண்பு அடைந்த சினையொடு முதலை உணர்த்தும் சொல்லும், உவமைப் பெயரைத் தனக்கு அடியாகக் கொண்டுவரும் சொல்லொடு தொக்க அக்கூற்றுப் பத்துச் சொல்லும் காலம் குறித்துக் கோடலொடு [3]வினைச்சொல்லாகக் கொள்ளப்படும் என்றவாறு.

உ-ம்:—

இன்று:—இவ்வெருது கோடின்று; இல:—இவ்வெருது கோடில.

கோட்டினது இன்மை முதற்கு ஏற்றிக் கூறும்வழி[4] இவ்வாறாய், இனி, அக்கோடுதனக்கே இன்மை [5]கூறும்வழி இவ் எருதிற்குக் கோடின்று என ஒரு [6]பொருண்முதற் கூறியானும், இவ்விடத்துக் கோடின்று என ஓரிடம் கூறியானும், இக்காலத்துக் கோடின்று [7]என ஒரு காலம் கூறியானும் [8]வரும்.

---

216-1 ii "என் கிளவியு சொல்லும்"
vi "என் சொல்லும்"

2 vi "பண்பும் காரணமாக"

3 vi "வரும் வினைச் சொல்லாக"

4 ii-iv "இவ்வாறும், இனி"

5 ii-vi-vii "கூறும் இவ்வெருதிற்கு"

6 vi "பொருள் கூறியானும்"

7 ii-vi-vii "என ஒரு கால இடம்"

8 vi "வரும் இவ்வெருது கோடுடைத்து இவ்வெருதுகள் கோடுடைய உழுந்தல்ல பயறு"

உடைய :—இவ் எருதுகள் கோடுடைய : அன்று :—நாய் அன்று நரி ; உடைத்து:—[9]கோடுடைத்து : அல்ல:—உழுந்தல்ல பயறு.

பண்பு கொள் [10]கிளவி :—செய்து ; செய்ய.

இது பொதுவாக ஓதினன் ஆதலின் எல்லா சிறப்பண்பினேடும் ஒருமைப் பன்மைப்பட ஒட்டிக் [11]கொள்க.

உள என்பது:—உழுந்துள [12]எனவரும்.

பண்பினகிய சினை முதற்கிளவி :—[13]குறுங்கோட்டது குறுங் ...... ...... வெண்கோட்டது வெண்கோட்டன என இருவகைப் பண்பும் பற்றி வரும்.

ஒப்பொடு வருஉம்கிளவி:—[14]பொன்னன்னது ; பொன்னன்ன என வரும்.

[15]உடைமைப் பொருட்பெயர் முதலாய அறுவகைப் பெயரினும் உடைமைப் பொருட் [16]பெயர் பற்றிவரும்...டயன என்ற வாய்பாட்டால் கொள்ளப்பட்டது.

அவ்வுடைமைதான் தற்கிழமையும் பிறிதின் கிழமையும் என்னும் இருவகையினும் வரும்.

---

216-9 " இவ்வெருது கோடுடைத்து " (?)

10 i-ii-iv-vi-vii-viii "கிளவி ... .... ... இது"

11 ii-vi "கொள்க, உழுந்துள"

12 vi " எனக் குறிப் புணர்த்தியும் வரும் "

13 ("குறுங் கோட்டது ; குறுங் கோட்டன ; வெண் கோட்டது ; வெண்கோட்டன என" என்பது போலும்.)
i-ii-iv-vi " குறுந்தாட்டும் கோட்டது அறும்...வெண்கோட்டன " (அ - கு மாருட்டம்)
iii-v "குறுங்கோட்டது குறுங் .. வெண் கோட்டன "

14 i-ii-iv-vi-vii "பொன்னன்னது எனவரும்"

15 ("உடைமைப் பொருள், பொருட் பெயர் முதலாய் அறுவகைப் பெயரினும் உடைமைப் பொருள் பொருள் பெயர் பற்றி வரும்" கோடு உடைத்து ; 'உடைய' என்ற வாய்பாட்டால் கொள்ளப்பட்டது என்பது பாடம் போலும்.)

16 i-ii-iv-vi-vii-viii " பெயர் ... ... .... என்ற வாய்பாட்டால் "

[17]இவ்வெருது மணி உடைத்து எனப் பிறிதின்கிழமை வந்தவாறு.

இனி, உண்டு உள என்றும், [18]இன்று இல என்றும், ஒரு பொருள்தனது உண்மையும் இன்மையும் கூறும்வழி அன்றி, அப்பொருளினைப் பிறிதொரு பொருட்கண் உண்மையும் இன்மையும் கூறிய[19]வழி, அது உடைமையாய் [20]விடுமாகலால், இவற்றானும் உடைமைப் [21]பெயர் பற்றி வருதல் கூறப்பட்டதாம்.

[22]பண்புப் பெயருள் நிறப்பண்புப் பற்றிவருதல் **பண்பு கொள்கிளவியும்** என்றதனாற் பெறப்பட்டது.

இனிக் குணப்பண்புப்பெயர் அன்று அல்ல என்பனவற்றானும், ஒரு [23]பொருள் தனது உண்மையும் இன்மையும் உணர்த்திவரும் உண்டு உள [24]இன்று இல என்பனவற்றானும் கொள்ளப்பட்டது.

உள என்ற [25]பன்மை வாய்பாடு ஓதிய அதனான் அதன் ஒருமை ஆகிய உண்டு என்பதனையும் தன்னின முடித்தல் என்பதனாற் கொள்க.

நன்று, தீது, சேய்த்து, அணித்து என்னும் [26]பிறபண்புகளை இன்று இல[27]என ஓதியவாற்றானே ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்க.

---

216-17 ("இவ் எருது கோடுடைத்து எனத் தன் கிழமை வந்தவாறு" என்பது விடுபட்டது போலும்.)
vi "இப்பொழுது மணி"

18 ii-vii "இன்று ... ... ... பொருடனது"
i-iv "இன்று ... ... ... பொருடன்றினது"
iii "இன்றில என்னும் ஏ ... ம் பொரு"

19 "வழியது டைமையாய்"

20 i-ii-iv-v-vii "விழுமாகலால் இவற்றானும்"
v "விழுமாக ... ... .... வற்றானும்"

21 i-ii-vii "பெரியாப் பற்றி"
vi "பொருள் பற்றி"

22 i-ii-iv-vi-vii "பண்புப் பொருள் நிறப்பண்பு"

23 i "பொருடன்னும்"

24 i-ii-iv-vii "என்று இல"

25 v "என்ற பண்பு வாய்பாடு"
vi-viii "என்று பன்மை"

26 i "பிறப் பண்புகளை"

27 vi "எனவேறு ஓதியவாற்றானே"

இவற்றுள் உண்டு உள என்பவற்றிற்கும் உடைத்து உடைய என்பனவற்றிற்கும் இன்று இல என்பனவற்றை எதிர்மறையாகக் கொள்க.

இவைதம்மைச் சேரவைத்து [28]ஓதானாயது செய்யுள் நோக்கிப் போலும்.

ஒப்புமைப் பண்புப் பெயர் ஒப்பினானும் என்பதனால் கொள்ளப்பட்டது.

சினைப்பெயர் பண்பினாகிய சினை முதற் பெயரும் என்பதனால் கொள்ளப்பட்டது.

இனி [29]இவன் ஈண்டு கூறாதன இடப் பெயரும், காலப் பெயரும், தொழிற்பெயரும் என [30]மூன்றுமே; அவற்றை உயர்திணை வினைக்குறிப்பு ஓதியவழி அன்னபிறவும் என்று வைத்து, அதன் பின்னர் அச்சூத்திரத்தும் அன்ன மரபின் என்று [31]ஓதினதால் கொள்ளப்படும் என்று உணர்க.

வடாது வேங்கடம்; மூவாட்டையது; செலவிற்று எனவரும்.

இவற்றின் உதாரண வாய்பாட்டு விகற்பங்களும் அறிந்துகொள்க.

[32]இதன்பொருட் பெயர் முதல் அறுவகைப் பெயரினும் வரும் வரவினைத் தொகுத்தானும், விரித்தானும் ஓதாது சிலவற்றை விரித்தும், சிலவற்றைத் தொகுத்தும், சிலவற்றைக்கூறாதும், அப்பாற்படுத்தும் குறிப்பு என்று விட்ட கருத்து என்னை எனின், இவை, பெரும்பான்மையன என்றவாறு. பிறிது காரணம் உண்டாயினும் அறிந்திலம். (உஉ)

---

216-28 i "ஓதனாயது"

ii-vi "ஓதலினாயது"

29 vi "இவண்"

30 vi "மூன்றும், அவற்றை"

31 i "ஓதினதல்"

32 ("இதன் கண் பொருட் பெயர்" என்பது பாடமோ?)

217. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉம்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்கூறிய வினைக் குறிப்பிற்கு ஈறு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—பன்மையும் ஒருமையும் ஆன பால்களை அறிய வந்த அத்தன்மைத்தான மரபினை உடைய [1]குறிப்பாய் வரும் வினைச்சொற்கள், அஃறிணை இடத்து மேற்கூறிய தெரிநிலை வினை ஈறுகளோடு, ஈறுவேறுபாடு இல என்றவாறு.

மேற்[2]கூறிய அறு வகை ஈற்றும் டகர உகரம் ஈண்டு [3]மாட்டேற்றிற்கு ஏலாமையின் ஆண்டே கூறப்பட்டது.

அஃது ஒழிந்த ஐந்து ஈறும், மேல் [4]எடுத்து ஓத்தானும், இலேசானும் வந்தவற்றிற்கு ஈறாயவாறு கண்டு கொள்க.

உடைத்து [5]எ-ம், சிறிது எ-ம், [6]கருங்கோட்டது எ-ம், குறுங்கோட்டது எ-ம், பொன்னன்னது எ-ம், வடாது எ-ம், மூவாட்டையது எ-ம், உண்டிலது எ-ம், தகர உகரம் வந்தது.

[7]செம்மற்று எ-ம், அற்று எ-ம், குறுங்கோட்டிற்று எ-ம், மேற்று எ-ம், வைகற்று எ-ம், செலவிற்று எ-ம். றகர உகரம் வந்தது.

---

217-1 vi "காலம் குறிப்பாய்"

2 vi-viii "மேற் கூறிய .... ... ம்டகர"
i-ii-iv-vii "மேற்கூறியவாறு .... ... ம்டகர"

3 i "மாட்டேட்டிற்கு"
vi "மாட்டேற்றிக்கு ஏலாமை"

4 i "எடுத்தோத்தினும் இலேசானும்"

5 v "என்றும்"
vi-vii "எனவும்" (இவ்வாறே இச்சூத்திரம் முழுதும் வரும்)

6 i "கறுங்கோட்டது எ-ம், கறுங்கோட்டது எ-ம், குறுங்கோட்டது எ-ம், பொன்னன்னது"
ii "கறுங்கோட்டது ... ம் பொன்னன்னது"
("கருங்கோட்டது" இங்கு வேண்டா.)

7 i "செம்மறு எ-ம், அன்று"

பொருள எ-ம், அல்ல எ-ம், [8]கரிய எ-ம், [9]கோட்ட எ-ம், [10]பொன்னன்ன எ-ம், வடக்கண்ண எ-ம், [11]மூவாட்டைய எ-ம், செலவின எ-ம் அகரம் ஈறாய்வந்தது.

இனி, ஆகாரம் இம்மணிநல்ல என்னும் உடம்பாட்டுக் குறிப்பிற்கு மறையாக இம்மணி பொல்லா என வந்தவாறு கண்டுகொள்க.

[12]கதவ்வாற் றக்க[13]வோ காழ்கொண்ட விளமுலை என்புழிக் [14]கதவ் எனக் [15]கதத்தினை உடைய என்னும் பொருண்மைக்கண் [16]வகாரம் ஈறாய்வந்தவாறு கண்டுகொள்க.

[17]மேல் தெரிநிலை வினைக்க[18]ண் கூறிய டகர உகரம் [19]பூணை உடைத்து என்னும் பொருண்மைக்கண் பூட்டு [20]எ-ம், இடத்துஎன்னும்

---

2 7-8 i "கரியம்"

9 iii "கோட்டன்"

10 v "பொன்னன"

i-ii-iv-vii "பொன்னன்னன்"

11 i-ii-iv-vii "மூவாட்டையன்"

iii-v "மூவாட்டையண"

12 v-vi "கதவவா"

13 vi "தோ"

14 i-ii-iv-vii "கதெவ்வென்"

v "கதவ என"

15 "கத அத்தினை"

16 i-vii "வாகரம்"

17 "மேற்றெரி"

18 "ட்"

19 i "பூணை"

20 i "எ-ம் தெரிய வியனை உடைத்து எ-ம்"

ii-vi-vii "வினைவினை" (இடையே சொற்றொடர்கள் விடுபட்டுள்ளன. பொருளிடம் காலம் பண்பு தொழில் உறுப்பு என எடுத்துக் காட்டுகள் வருவதாகக் கூறுவது காண்க.)

பொருண்மைக்கண் **வகை தெரிவான் கட்டே** உலகு எ-ம், எந்நாளிடத்து என்னும் பொருண்மைக்கண் **எந்நாட்டாகும் நும்போரே** எ-ம், உண்மையை உடைத்து என்னும் பொருண்மைக்கண் உண்டு [21]எ-ம், வினையுளை உடைத்து என்னும் பொருண்மைக்கண் **வேலியாயிரம் வினையுட்டாக** எ-ம், குழிந்த கண்ணையுடைத்து என்னும் பொருண்மைக்கண் **குண்டுகட்டு** எ-ம், பொருள் இடம் காலம் பண்பு தொழில் உறுப்பு என்னும் அறுவகைப் பெயரும் அடியாக வந்தவாறு கண்டுகொள்க. (உங)

218. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
பிரிவு வேறுபடூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய.

என்பது என்நுதலிற்றோ எனின், [1]மேல் நிறுத்த முறையானே விரவுவினை உணர்த்துவான் [2]தொடங்கி, அவற்றது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—முன்னிலை இடத்தினைத் தனக்குப் பொருண்மையாக உணர்த்தும் சொல்லும், ஏவலைத் தனக்குப் பொருண்மையாகக் கொண்ட சொல்லும், வினைச்[3]சொல்லை ஒழிபாக உடைய சொல்லும் இன்மை என்னும் பண்பினை உணர்த்துதலுடைய சொல்லும், வேறு என்னும் சொல்லும், செய்ம்மன என்னும் சொல்லும், செய்யும் என்னும் சொல்லும், செய்த என்னும் சொல்லும் என்று சொல்லப்படுகின்ற அவ் [4]அடைவின் கண் நின்ற அவ் எட்டுச்

---

217-21 iii "எ-ம் வியு உள்ளை"

218-1 i "மேனிறுத்த"

2 "ரு"

3 i-ii 'சொல்லு யொழிவாக"

4 "வ" (இவ்வாறு பிரித்தலை இப்பதிப்பு மேற்கொண்டிருத்தலின் அதனை எங்கும் கண்டுகொள்க. உடம்படுமெய் இன்றிப் பிரித்தும், மெய்ம்மேல் ஏறிய உயிரினைத் தனியே பிரித்தும்-மெய்யிரட்டும் இடத்து இரட்டாது பிரித்தும், குற்றிய, லுகரத்தின் மேலேறிய பிற உயிரையும் தனியே உகரத்தின்பின் வேறாகப் பிரித்தும் வருவனவற்றையும் கண்டுகொள்க, இக்குறிப்பால் ஏட்டில் எவ்வாறு எழுதப்பெற்றது என்பது புலனாகும்.)

சொல்லும், ஒருகால் உயர்திணைக் [5]கண்ணும் ஒருகால் அஃறிணைக் கண்ணும் பொதுமையின் [6]திரிந்து வேறுபட்டு நிற்கும் தொழிலினை [7]உடையவாகி, இருதிணையாகிய பொருட்கும் ஒன்று போன்ற உரிமை உடைய என்றவாறு.

முன்னிலை என்பது முன் உயர்திணைக் கண்ணும் அஃறிணைக் கண்ணும் தன்மையும் படர்க்கையும் கூறிய இடங்களுள்[8] கூறுது [9]நின்றது அது ஆகலானும், தான் [10]பல ஈற்றான் பயின்று வருவதாகிய [11]வழக்கிற் பயிற்சி உடைமையானும், முற்றுச் சொல் ஆதலானும், முன்வைக்கப்பட்டது.

இனி, அதன் பின்னர் வியங்கோ[12]ள் முற்றுச் சொல்லுமாய்ப் பெரும்பான்மை வரவு, படர்க்கை என [13]ஓரிடத்துமாய்ப் பல வழக்கிற்றும் ஆகலான் வைக்கப்பட்டது.

இவை இரண்டும் அவற்றுப் பொருண்மையால் பல ஈற்றை ஒன்றாக அடக்கப்பட்டன.

அவற்றின் பின்னர் அவைபோல வழக்குப் பயிற்சி உடைமை யான் வினையெச்சம் வைக்கப்பட்டது. இஃது அச் சொல்லும் முடிபிலக்கணத்தான் ஒன்றாக அடக்கி ஓதப்பட்டது.

---

218·5 i "கண்ணு ஒருகால்"

6 "ற்றி"

7 i "உடைய வாகி ... ... ணையாகிய"

ii "உடைய வ வாகி ... ... ணையாகிய"

8 "ட்"

9 vi "நின்றது ஆகலானும்"

10 i-ii-iii-iv-v-vii "பலவி ... யவழக்கிற்"

11 i "வழிக்கிற்"

vi "வழக்கு"

12 "ன்"

13 vi "ஓரிடமாய்"

**இன்மை செப்பலும் வேறென்கிளவியும்** முன்னிலையும் வியங்கோளும் போ[14]ல் முற்றே எனினும் [15]வினையெச்சம் போலாது சிறுவரவின ஆகலானும் வினைக்[16]குறிப்பன்மையானும் வினையெச்சத்தின் பின் வைக்கப்பட்டன.

அவற்றின் பின்னர் [17]**செய்ம்மன** என்பது தெரிநிலை முற்றே எனினும் பலவாய்பாட்டது[18]என்னும் பயிலவழங்குவார் இன்மையின் பின் வைக்கப்பட்டது.

அதன்பின்னர்ச் **செய்யும்** என்பது ஒருவழி முற்றும் நிலையும் உடைத்து ஆகலின் அதன் பின் வைக்கப்பட்டது.

அதன் பின்னர் அதனோடு ஒத்த பெயரெச்சம் ஆகலிற் **செய்த** என்பது வைக்கப்பட்டது.

இன்மை செப்பன் முதல் ஐந்தும் அச்சொற்கள் தம்மையே ஓதின எனினும் **வேறு** என்பது ஒன்றும் ஒழிய மற்றையன எல்லாம் பலவாய்பாட்டன என்று கொள்க.

அஃது என்னை ஆமாறு எனின், **இல்லை** என்னாது **இன்மை செப்பல்** என்றதனால் **இல்லை** என்பதும் **இல்** என்பதும் என இரண்டு ஆயிற்று.

**செய்ம்மன, செய்யும், செய்த** என்பன **உண்மன, தின்மன** எ-ம், **உண்ணும், தின்னும்** எ-ம், **உண்ட, தின்ற** எ-ம், பலவாய்பாட்ட ஆயின.

**செய்ம்மன** என்றால் **உண்மன, தின்மன** பெறுமாறு என்னை எனின், அச்சொற்களின் பொருண்மையும் ஒருவழிச் **செய்ம்மன** என்பதனாற் சொல்லப்படுதலின், இஃது அவற்றிற்கு எல்லாம் பொதுவாய்பாட்டது என்பது.

---

218.14 "ன்"

15 vi "வினையெல்லாம் போலாது"

16 vi "குறிப்பின் பன்மையானும்"

17 i-ii "செய்ம்மன்" (பின்வரும் செய்ம்மன என்னும் வாய்பாடுகளும் 'ன்' என்றே முடிகின்றன.)

18 v "எனினும் பயில வழங்குவார்" (இதுவே பாடம் போலும்.)

vi "ஆயினும் வழங்குவார்"

ii "என்னும் மில வழங்குவார்"

அஃதேல் அவ்வாறாகப் பொருள் உணர நின்ற வழிஅன்றே இஃது; அச்சொல் தன்னை உணர நின்ற இடமால் எனின், அஃது ஒக்கும் ; பொருண்மையால் பொதுமை உடைய சொல்லினைக்கூறவே அதன் உள்வகை ஆகிய சொற்களும் 'தன்வினை முடித்தல்' என்னும் தந்திர உத்தியான் அடங்கும் என்பது போலும் கருத்து. **(உச)**

219. அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவற்கும் ஒன்றற்கும்.

என்பது என்நுதலிற்றோ எனின், மேல்நிறுத்த முறையானே முன்னிலை வினை உணர்த்துவான், அவற்றுள், ஒருமை [1]உணர்த்துதல் நுதலிற்று

இதன் பொருள்:—[2]அவ் எட்டனுள் [3]முன்னிலைச் சொல்ஆமாறு [4]உணர்த்துவல். இ ஐ ஆய் என்று சொல்ல வருகின்ற மூன்று ஈற்றுச் சொல்லும் உயர்திணை ஆண்பாலும் பெண்பாலும் ஆகிய ஒருமைப்பாற்கும் அஃறிணை ஒருமைப்பாற்கும் மிகுதி [5]குறைவு இன்றி ஒப்பத் தோன்றும் என்றவாறு.

ஒன்று [6]என்றனே எனினும் உயிர் உடைய ஒன்றன்மேலது பெரும்பான்மை என உணர்க.

---

219-1 v "உணர்த்திற்று"

2 v "அவ்வெட்டனுள்ளும் முன்னிலைச் சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று ... உரை ; அவ்வெட்டனும்"

i-ii-iii "அவ்வெட்டனுள்ளும் முன்னிலைச் சொல்லாமாறு நுதலிற்று. அவ்வெட்டனும்" (முன்வரியும் பின்வரியும் சேர்த்து எழுதிய குழப்பம்.)

3 i "முறுநிலைச் சொல்லாமாறு உணர்வல்"

4 iii-v "சொல்லுவல்"

5 i "குன்றலின்றி"

6 v "என்றெனினும்" "பிற என்றாரே எனினும்"

உ - ம் :—

உண்டி என [7]எதிர்காலமே பற்றிவரும். உண்ணாநின்றி எனச் சிறுபான்மை நிகழ்கால [8]வரவுண்டேனுங் கொள்க.

இவ்வீற்றுவினைக் குறிப்பும் உண்டேலும் அறிக.

ஐ:—உண்டனை, உண்ணாநின்றனை, உண்குவை, உண்பை, கரியை என வரும்.

ஆய்:—உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய் [9]எ-ம், கரியாய், செய்யாய், பொல்லாய் எ-ம், வரும்.

உண்ணாதி எ-ம், உண்டிலை, உண்ணாநின்றிலை, உண்ணலை எ-ம், உண்டிலாய், உண்ணாநின்றிலாய், உண்ணலாய் எ-ம் வரும் மறைவாய்பாடும் அறிக. (உரு)

220. இர் ஈர் மின் என வரூஉ மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்.

என்பது என்நுதலிற்றோ எனின், முன்னிலைப் பன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இர், ஈர், மின் என்று சொல்ல வருகின்ற மூன்று ஈற்றுச் சொல்லும் உயர்திணைக்கண்[1] பல்லோர் இடத்தும் அஃறிணைக்கண் பலவற்றின் இடத்தும் சொல்லுதற்கு ஒரு தன்மையாக உடைய என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உ - ம் :—

இர்:—உண்டிர், உண்ணாநின்றிர், உண்பிர் எ-ம், கரியிர் எ-ம்[2] வரும்.

ஈர்:—[3]உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர் எ-ம், கரியீர் எ-ம் வரும்.

மின்:—உண்மின், நின்மின் என எதிர்காலமே பற்றிவரும்.

---

219-7 vi "இகர ஈறு எதிர்காலம்"

8 i-ii "வரவுண்டலும்"
v "வரவுண்டேனும்"

9 v "என்றும்"
vi "எனவும்" (இவ்வாறு எங்கும் வரும் எனக் கொள்க.)

220-1 "ட்"

2 vi "வரும் மின்" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது.)

3 ii "உண்டீர் கரியீர் எ-ம்"

உண்ணாநின்மின் என நிகழ்கால வரவுண்டேனுங் [4]கொள்க. இவ்வீறு ஏவற்கண்ணே வருவது எனக்கொள்க.

உண்டிலிர், உண்ணாநின்றிலிர், [5]உண்ணிலிர் எ-ம்; உண்டிலீர், உண்ணாநின்றிலீர், உண்ணீர் எ-ம்; உண்ணான்மின் [6]எனவரும் மறையும் அறிக.

மேலைச் சூத்திரத்து எதிர்காலம் ஒன்றினும் வரும் இகரம் முன் கூறினமையான், ஒழிந்த முன்னிலை ஈறும் கொள்ளப்படும். அவையாவன:—மொழிக்கு ஈறும் எனப்பட்ட இருபத்து நான்கு ஈற்றுள்ளும் எடுத்து ஓதிய அவை ஒழித்து ஒழிந்தன எனக் கொள்க.

உ-ம் :—

நட, [7]வா, ச, [8]கோடு, தூ, மே, [9]ஓ, ஓஓ, போ, [10]கௌ, என இவை [11]உயிர் ஈறுள் எடுத்து [12]ஓதாதன. இவை முன்னிலை [13]ஏவல் ஒருமை எடுத்து ஓதின இகர ஐகார ஈற்றுள்ளும் அறி எனவும் உரை எனவும் ஏவற்கண் வருவனவும் அறிந்து கொள்க.

உரிஞ், உண், பொருந், [14]திரும், தின், தேய், பார், செல், தெவ், தாழ், [15]கோள் என இவை புள்ளியீறு [16]பதினொன்றும் வந்தவாறு.

---

220-4 vi "சொல்லுக. உண்டிலிர்" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது.)
5 ii-iv-vii "உண்ணலிர்"
6 vi "எனவும்"
7 vi "வா ஈரி இ"
8 ii-vi "கொடு கூ நெ"
v "கொடு தான் ஓ"
iii "கொடு தாண் மே ஓ"
9 ii-vi "கை நொ பொ"
10 ii "கவ் வென என"
11 v "உயிரிற்றுள்"
vi "உயிரிறுடன்"
12 i "ஓதான"
13 vi "ஏவ வொருமை" (ல - வ மாறுபட்டம்.)
14 i-iv "திரும் ய ... சர் செல்"
iii "திரும் ... வெய் ... செல்"
v "திரும் ... வெய் சர் செல்"
15 i-iii-v "கௌ" (இடையில் கால்விட்ட குழப்பம்)
16 i "பதினெறும்"

ஊட்டு என்பது குற்றியலுகரஈறு. இதுவும் ஏவல் ஒருமை. ஆய் எ-ம், இர், ஈர் எ-ம், மின் எனவும் ஓதினமையின் யகர னகரங்களில் ஐகாரம் கொள்ள வெண் ... ... ... ... ... னின் அவை அவ்-எழுத்து ஈறு அன்றிச் சொல் வாய்பாடாய் வேறு வருதலின் இவை வேறாகக் கொள்ளப்பட்டன எனக் கொள்க.

உண்ணும் தின்னும் எனப் பன்மைக்[17]கண் வரும் உம்ஈறு மகர ஈற்றின் வேறுபாடாகக் கொள்க,

லகரஈறு, மறைக்கண் உண்ணல் எனவரும். [18]அல்ஈறும் ஆல் எனவரும். ஆல்ஈறும் அழேல் எனவரும். ஏல்ஈறுங் கொள்க.

ணகர [19]ஈற்றுள், உண்டுகாண், சொல்லிக்காண், வருங்காண் என்னும் காண்ஈறுங் கொள்க.

உண்டு பார் என்பதோ எனின் அஃது ஒரு சொல் ஆதல் அன்றி அத்தொழிலைச் செய்து அதன் விளைவை மேற்பார் என்னும் ஒருமை தோன்ற [20]நிற்றலின் வேறுசொல் என்க.

உண்டுகாண் என்பதும் [21]இவ்வாற்றான் வேறு அன்றோ எனின், அது சொல்லுவான் கருத்து அன்று என்க.

அவன் வருவன் காண் என்பதோ எனின், ஆண்டுக் [22]காண்டல் தொழில் கருத்து அன்மையின் அசை நிலையாகல் [23]தத்தம் குறிப்பானே வேறொரு பொருள் [24]உடைத்தாகலான் எனக் கொள்க.

---

220-17 vi "கள் உள்ளீரு"

18 iii-v "அல்லீறும் ... ... மாலென"

i "... ... ஈறும் ... ... ஆலென வரும்" அல்லீறும் அழாஅல் எனவரும் (?)

19 i-ii-iv-v-vii "ஈற்று உண்டு"

20 vi "நின்றலின்"

21 vi "இவற்றுள்"

22 i "கொண்டல்"

23 i "அத்தங்"

24 i "உடைத்ததாகலான்"

[25]உண்கிடு உண்கிடா என்பனவோஎனின், அவை சான்றோர் செய்யுட்கண் இன்மையிற் 'கடிசொல்லில்லை காலத்துப்படினே' என்பதனான்[26] கொள்ளப்படும். அது முன்னிலைஆயவாறு என்னைஎனின், இவற்றுள் உண்கிடு நீ எனப் பிற முன்னிலை போல முற்றாய் முன்னிலைப் பெயர் கொள்வது அன்றி [27]அவனுண்கிடு என்றானும், யான் உண்கிடு என்றானும் பிறபெயர் வந்த பிற தொழிலினை "நீ உடம்படு" [28]என்னும் முன்னிலை நீர்மை தோன்ற நிற்றலின் முன்னிலை ஆயிற்றுப் போலும். இவற்றுள் உண்கிடா என்பது ஒருவழி நீ உண்கிடா [29]என முன்னிலைப் பெயர் கொண்டு நிற்றலும் உண்டு.

இனி, உண்ணுங்கோள் என்பதோ எனின், அது, உண்ணுங்கள் எனக் கள்ளொடு உண்ணும் என்பது. அசை நிலை அடுத்த உம் ஈறு மரீஇயவாறு எனக் கொள்க.

முன்னிலை ஈற்றுவகை எல்லாம் தொகுத்து நோக்க எழுத்துவகையான் இருபத்துநான்கு ஈறும், சொல்வகையால் யகரஈற்றுள் ஆய் என்பதும் ரகரஈற்றுள் இர் ஈர் என்பனவும், னகர ஈற்று மின் என்பதும், ணகர ஈற்றுக் காண் என்பதும் [30]மகரஈற்று உம் என்பதும் லகரஈற்று அல் [31]ஆல் ஏல் என்பனவும் ஆக முப்பத்து மூன்று ஆயின. பிறவாறும் உளவேலும் அறிக. (உசு)

221. எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே.

என்பது என்நுதலிற்றோ எனின், விரவு வினை எட்டனுள்ளும் முன்னிலை ஒழித்து [1]ஒழிந்தனவற்றிற்கு எய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

---

220-25 i-ii-iii-iv-vii "உண்டுகிடு"

26 " ற் "

27 vi "அவன் உண்டு"

28 vi "என்றும்"

29 vi "எனப் பெயர் கொண்டும்"

30 vi "மகர ஈற்றுள் உன் என்பது"

31 vi "ஆல் என்பனவும்"

221-1 i-ii "முன்னிலை ஒழிந்து"
vi-viii "முன்னிலை வினை ஒழிந்து"

இதன் பொருள் :—முன்னிலை [2]ஒழித்து எஞ்சிய சொற்கள் எழுமூன்று இடத்தும் பொருந்தி ஐந்து பாற்கும் உரியவாம்; அவை தோன்றும் நெறிக்கண் என்றவாறு.

அவ்ஏழனுள்ளும் மேற் சிறப்பு விதி உடைய வியங்கோளும் வினையெச்சமும் செய்யும் செய்த என்பனவும், ஒழித்து ஒழிந்தன இன்மை செப்பலும், வேறு என்கிளவியும், செய்ம்மனவும் என்னும் மூன்றற்கும் [3]ஈண்டு உதாரணம் காட்டுதும்.

உ - ம் :—

[4]யான் இல்லை, யானும் நீயும் இல்லை, யானும் அவனும் இல்லை, யானும் நீயும் அவனும் இல்லை, [5]நாம் இல்லை, யாம் இல்லை, நீ இல்லை, நீயிர் இல்லை, அவன் இல்லை, அவள் இல்லை, அவர் இல்லை, அது இல்லை, அவை இல்லை என இன்மை [6]செப்பல் வந்தவாறு.

யான் வேறு, யானும் நீயும் வேறு, [7]யானும் அவனும் வேறு, யானும் நீயும் அவனும் வேறு, [8]நாம் வேறு, யாம் வேறு, நீவேறு, நீயிர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு என வேறு என்கிளவி வந்தவாறு.

யான் செய்ம்மன, [9]யானும் நீயும் செய்ம்மன, யானும் அவனும் செய்ம்மன, யானும் நீயும் அவனும் செய்ம்மன, நாம் செய்ம்மன, யாம் செய்ம்மன, நீ செய்ம்மன, நீயிர் செய்ம்மன, அவன் செய்ம்மன, அவள்

---

221-2 i-ii-iv-vii "ஒழிந்து எஞ்சிய"

3 v "ஈறு தாரணம்"

4 i "... வில்லை யானு மவனும் இல்லை"

5 i-ii-iv-vi-vii "நாமில்லை நீயில்லை"

6 i-ii-iv-vii "செப்பல் பல வந்தவாறு காண்க" (செப்பல் கோடிட்ட பகுதி இரட்டியது)

vi "செப்பல் பல வந்தவாறு"

7 i "யானு மவனும் ... நீயுமவனும் வேறு"

iii "யானுமவனும் யானும் நீயும் .... வேறு"

8 i-ii-iv-vi-vii "நான் வேறு"

9 i-iv-vii "யானும் நீயும் யானும் அவனும் யானும் நீயும் அவனும் செய்ம்மன."

செய்ம்மன, அவர் செய்ம்மன, [10]அது செய்ம்மன, அவை செய்ம்மன எனச் [11]செய்ம்மன வந்தவாறு.

செய்ம்மன என அகரஈற்றதே எனினும், யான் செய்ம்மன என்புழி யான் செய்வேன் என்றும், நீ செய்ம்மன என்புழி நீ செய்வை என்றும், அவன் செய்ம்மன என்புழி அவன் [12]செய்வன் என்றும் முற்றுச் [13]சொல் நீர்மைத்தாய்ப் பால் காட்டும் என்பது. இஃது [14]இக்காலத்து இறந்த வழக்கிற்று.

இடத்தொடு என வாளாது ஓதினமையின் மூன்று இடமும் கொள்ளப்பட்டது. (உஎ)

222. அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீர் இடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி.

என்பது என்நுதலிற்றோ எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இதன் பொருள்:— முன்னிலை தன்மை என்று சொல்லப்பட்ட அவ் இரண்டு இடத்தொடு நிலை [1]பெருதாகும், அவற்றுள், ஏவற்பொருண்மையை உணர்த்தும் சொல் என்றவாறு.

உ - ம்:—

அவன் செல்க, அவள் செல்க, அவர் செல்க, அது செல்க, அவை [2]செல்க எனவரும்.

தன்மை முன்னிலை என்னாது முன்னிலை தன்மை என்றதனான் சிறுபான்மை முன்னிலை தன்மைக்கண்ணும் வரும் எனக் கொள்க.

---

221-10 vi "அது அவை செய்ம்மன"

11 ii "செய்ம்மன்"

12 i "செய்வேள்"

13 i "சொனீர் அமைத்தாய்" (ை-அ.)

14 i-ii-iv-vi-vii "இறந்தகால வழக்கில்"

222-1 vi "பெருதாகும் ஏவற்பொருண்மை"

2 i "செல்வ" (க-வ மாருட்டம்)

உ - ம் :—

"கடாவுக [3]பாகநின் காலவ னெடுந்தேர் ; யான் செல்க காட்டிற்கு என வரும்.

மற்று, இவ்வியங்கோள் ஏவல் கண்ணியதும், ஏவல் கண்ணாததும் என இருவகைத்து.

ஏவல் கண்ணுதல் ஆவது, உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல். ஏவல் கண்ணாதது ஆவது, இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்யப்பெற வேண்டிக் கோடல்.

மற்றது பெரும்பான்மையும் உணர்க என்றாற்போலக் ககரம் கிடைத்துவருமே எனினும், வாழியர் என அர் ஈறும், வாழிய என யகர ஈறும், இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல் என அல் ஈறும், மறைக்குங்காலை மரீஇய தொ[4]ராஅல் என ஆல் [5]ஈறும், மறைக்கண் [6]நோய் மலிவருத்தங்காணன்மாரெமர் என மார் ஈறும், அஞ்சாமை அஞ்சுவது ஒன்றின் என ஐகார ஈறும் வரும்.

இவற்றுள் அஞ்சாமை என்பது தொழிற் பெயர் மறை அன்றோ [7]எனின் தொழிற் பெயர் மறையும் உண்டு எனினும், [8]அஞ்சுதல் என்னும் தொழிற் பெயர் வாய்பாடும் ஒருவழி வியங்கோளாம் ஆகலின் மறையும் அங்[9]ஙிகர்த்தாம் என்பது.

மற்று, உண்ணற்க, உண்ணேற்க, உண்ணுற்க, என்பனவோ எனின் [10]அவை அப்பதத்திடை வேறுபாடு அல்லது முன்கூறிய ககர ஈற்ற ஆகல் [11]ஒக்கும் என்பது. (உஅ)

---

222-3 i-iii-iv "போக"

4 ii-vi "ரால்"

5 vi "ஈறும் காணன்மார்"

6 ii "நொய்மலி வருத்தம்"

7 v "எனின் அத் தொழிற் பெயர்"

8 i-ii-iv-vii "அஞ்சுக என் ... ... தொழிற் பெயர் வாய்ப்பாடும்"
vi-viii "அஞ்சு வென் ... ... தொழிற் பெயர் வாய்ப்பாடும்"

9 vi "நிகர்த்ததாம்"

10 i-ii-iv-vi-vii "அவையப்பத்திடை ... " (எந்தப்பாடமும் விளக்கம் இல்லை.)

11 i-iv "ஒக்கு ... ..."
ii-vi-vii "ஒக்கும் .... ...."

223. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா.

*என்பது என்நுதலிற்றோ எனின், இதற்கும் அக்கருத்து ஒக்கும்.*

*இதன் பொருள் : — பலரது படர்க்கையும் [1]முன்னிலையும் தன்மையும் ஆகிய [2]அவ்வயின் என்று சொல்லப்பட்ட மூன்றும் நிகழ்காலத்தைத் தமக்கு காலமாக உடைய செய்யும் என்னும் சொல்லோடு வருவனஆகக் கொள்ளப்படா என்றவாறு. எனவே படர்க்கையிற் பல்லோர் படர்க்கை [3]ஒழித்து ஒழிந்த நான்கு படர்க்கைக்கண்ணும் வரும் என்பதாம்.*

உ - ம் :—

அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும் என வரும்.

அஃதேல் ஒஓதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை யாஅதும் என்னுமவர் எ-ம்.

என் குறை [4]சொல்லவேண்டுமா வலவ எ-ம்.

யான் போகல்வேண்டும் எ-ம்.

*ஒழிந்த இடத்தும் வந்ததால் எனின், வாராது: அவற்றிற் கெல்லாம் சொன்னிலை வேருகப் பொருள் உரைக்கப்படும் என்பது.*

---

223-1 i "*முன்னி ... ...*"

ii "*முன்னிலையும் தன்மையும் ... ... என்றவாறு ... (உகூ)" (இச்சூத்திரத்தின் பொருள் மாதுருகையில் எழுதப்பெறவில்லை.)*

iv "*முதல் பிரதி போன்றது" இந்தக் குறிப்பின் பின்கண்ட குறிப்பு உள்ளது.* "Not found the remaining of this Suthiram and the Poem of 29th Suthiram. So began with the meaning of 29th which is found in the original."

vi "*முன்னிலையும் தன்மையும் ஆகிய எஞ்சிய கிளவிக்கண் வரும் மூன்றும் நிகழும் காலத்து வரும் செய்யும் என்னும் முற்றுச் சொல்லொடு பொருந்தா என்றவாறு. உ-ம்.(உகூ)*"

2 iii-v "*ஆகிய அவ்வெஞ்சிய கிளவி ... ... ... க்கப்பட்ட மூன்றும் நிகழ்காலத்தே ஆகிய அவ் எஞ்சிய கிளவிகளாக அவ்வயின் என்று கிளக்கப்பட்ட மூன்றும்*" (?)

3 viii "*ஒழித்தொ ... ... கு ... ... வருமென்பதாம்*"

4 viii "*சொல்லவே ... எ-ம் ... வேண்டும் எம்.*"

நிகழும் காலம் என்றது என்னை! அவன் உண்ணும் என எதிர் காலத்தும் வருமால் எனின், அது கால மயக்கம் எனக் கொள்க.

நிகழ்கால வரவு இக்காலத்து இல்லையால் எனின் உண்டு. அவன் என் செய்யும் என்றார்க்கு அவன் இப்பொழுது ஓதும் என்றாற் போல்வன நிகழ்காலத்தது எனக் கொள்க.

செய்யும் என்னும் [5]சொல்தான் முற்றும் எச்சமும் என இரு-வகைத்து. அவற்று[6]ள் முற்று விலக்கியது ஈண்டை விலக்கு எனக் கொள்க. முற்றிற்கும் என்பதோர் ஈறாகக் கொள்க.

இதனோடு முன்கூறிய முற்றுஈறெல்லாம் தொகுத்து நோக்க, உயர்திணைஈறு இருபத்து நான்கும் அஃறிணைஈறு ஏழும். இனி விரவு, வினை எச்சமும் பெயர் எச்சமும் முற்றும் என மூவகைத்து.

அவற்றுள் மூன்று ஈறாகிய முன்னிலையும், வியங்கோளும், இன்மை செப்பலும், வேறென் கிளவியும், செய்ம்மனவும் ஆகிய ஐந்தனுள்ளும் முன்னிலைஈறு முப்பத்து மூன்றும் வியங்கோள் ஈறு ஏழும், இன்மைசெப்பல் ஈறு இரண்டும், வேறு என் கிளவியது ஈறு ஒன்றும், செய்ம்மன என்பதன் ஈறு ஒன்றும் ஆக நாற்பத்து நாலாம்; பிறவும் ஆம். மேலும் அறிக. (உ௯)

224. செய்து செய்யூச் [1]செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
[2]அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி.

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் மேல் எஞ்சிய கிளவி என்று ஓதிய பொதுவிதி யுள்[3]பட்ட வினையெச்சம் என்பதற்கு வாய்பாட்டு வேற்றுமையும் முடிபு வேற்றுமையும் கூறுவான் [4]தொடங்கி அவ்வினையெச்சங்களுள் சிறப்புடைய வாய்பாடுகளைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

---

223-5 "சொற்றான்"

6 "ண்"

224-1 i "செய்து"

2 i "வ்வகை" (இடையில் வகரம் விடுபட்டது.)

3 "ட்"

4 i-ii-iv-vi-vii "தொடங்கிய அவ்வினை"

இதன் பொருள் :—செய்து என்பது முதலாகச் செயற்கு என்பது ஈறாக ஓதப்பட்ட அக்கூற்று ஒன்பது வாய்பாட்டதாம், முன் வினையெஞ்சு கிளவி என்று ஓதப்பட்டது [5]என்றவாறு.

[6]அவற்றுள் செய்து என்பது முதலாகச் செய்தென என்பது ஈறாக [7]அந்நான்கும் இறந்த [8]காலத்த ஆகலான் முன்னே உடன்வைக்கப் [9]பட்டது.

அவற்றுள் செய்து என்பது பெருவழக்கிற்று ஆகலின் [10]அவற்றுள்ளும் [11]முன்வைக்கப்பட்டது.

அவற்றுள் செய்தென [12]என்பது அவற்றிற்கு எல்லாம் சிறுவழக்கிற்று ஆதலானும், பிறவினையும் கோடலானும் பின் வைக்கப்பட்டது.

இனிச் செய்யியர் என்பது முதலாகச் செயற்கு என்பது ஈறாக ஐந்தும் எதிர்காலத்த ஆகலானும் பிறவினையும் கோடல் உண்மையானும் பிறவினை [13]கோடலும் உடைய செய்தென வினையின் பின்னர் உடன் வைக்கப்பட்டன.

அவ் ஐந்தும் எதிர்காலத்தவேனும் [14]செய்யியர் செய்யிய என்பன இரண்டும் வாய்பாடு வேற்றுமை அல்லது பொருள் வேற்றுமை இன்மையின் உடன் வைக்கப்[15]பட்டன.

---

224-5 i-ii-iv-vii "என்பது"

6 i-ii-iv-vii "அ ... ... செய்து"

7 i-iv-iii-v-viii "நான்கும்"

8 i "காலத்தவர்க்கலான்"

9 ii-vi-vii "பட்டன"

10 i-ii-iv-vi-vii "அவற்றுண்"

11 i-ii-iv-vii "முன் வைக்கப்பட்ட அவற்றிற் ... ... ... பிறவினையும் கோடலானும்" (தொடர் விடுபட்டுள்ளது.)

12 vi "என்பது பிறவினையும் கோடலானும்" (தொடர் விடுபட்டுள்ளது.)

13 v "கோடலுடைய"

14 i-ii-iv-vii "செய்யிர் செய்யிய என்னு பன்னிரண்டும்"

15 vi "பட்டன. செயினென்பது"

அவற்றின் பின்னர்ச் செயின் என்பது வாய்பாட்டு வேற்றுமையோடு பொருள் வேற்றுமையும் உடைமையின் [16]பின்வைக்கப்பட்டது.

செய என்பது [17]எதிர்காலத்தே அன்றி [18]பிறகாலத்தும் சிறுபான்மை வருதலான் அதன் பின்வைக்கப்பட்டது.

செயற்கு என்பது அவைபோல வழக்குப் பயிற்சி இன்மையின் எல்லாவற்றினும் பின்வைக்கப்பட்டது.

[19]இதன்முன் செய்து என்று ஓதியவாய்பாடு குற்றியலுகரத்தா[20]ன் ஆராயப்பட்ட கடதற என்னும் நான்கு ஈறும், இகர ஈறும் [21]யகர ஈறும் என [22]அறுவகைப் பட்டதாம். அவ் அறுவகையும் செய்து எனப் பொருண்மையால் ஒன்றாக வைக்கப்பட்டது.

அஃதேல் செய்யூ செய்பு செய்தென என்பனவும் இதனுள் [23]அடங்காவோ [24]எனின், அடங்குமேனும் இவற்றிற்கு வேறுபாடு உண்டு என்பது [25]அறிவித்தற்கு வேறு ஓதினன் என்பது. யாதோ வேற்றுமை எனின், செய்து என்றதன்ஈறு [26]உழுதல் என்னும் தொழிற்கண்ணே [27]உழுது எனத் தகர உகர ஈறாயும், உண்டல் என்னும் தொழிற்கண்ணே

---

224-16 i-ii-iv-vii "அவற்றின் பின்"

17 vi "காலத்தே"

18 ii "பிற்காலத்தும்"

19 v "இதன் செய்து என்று" (சொல் விடுபட்டுள்ளது.)

20 i-ii-vi " ல் "

21 i "யகர ஈறும் அறுவகை"

22 i-vi-vii "அறுவகைப்பட்டது"

23 iii-v "அடங்காதோ"

24 ii-vi-vii "எனின் அவ்வாறு அடங்குமேனும்"

25 i "அறிவித்ததற்கு"

26 ii-vi-vii "செய்தல்"

27 ii-vi-vii "செய்து"

உண்டு என டகர உகர ஈறும், தின்றல் என்னும் தொழிற் [28]கண்ணே தின்று என றகர உகர ஈறும், புகுதல் என்னும் தொழிற்கண்ணே புக்கு எனக் ககர உகர ஈறும், ஓடல் என்னும் தொழிற்கண்ணே ஓடி என இகர ஈறும், தூவுதல் என்னும் [29]வினைகண்ணே தூய் என யகரஈறும், ஒரு [30]தொழிற்கண் வேறுபட வந்தவாறு.

ஒரு தொழிற்கண் வேறுபடவாராமை உடைய அத்தொழில் எல்லாவற்றினும் உழூஉ எ-ம், உழுபு எ-ம், [31]உழுதென எ-ம், [32]உண்ணூஉ எ-ம், உண்குபு எ-ம், [33]உண்டென எ-ம், தின்னூஉ எ-ம், தின்குபு எ-ம், [34]தின்றென எ-ம், [35]புகூஉ எ-ம், புகுபு எ-ம், [36]புக்கென எ-ம், ஓடூஉ எ-ம், ஓடுபு எ-ம், [37]ஓட்டென எ-ம், தூஉ எ-ம், தூபு எ-ம், [38]தூயென எ-ம் வேறுபடாது வருதல் உடைமையின் வேறு கூறினன் என்பது.

செய்யூ என்பதற்குச் செய்யா என்பதூஉம் ஓர் வாய்பாடு; அதுவும் [39]ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்ளப்படும். இதனை [40]"இறந்தகாலம் விரைவு பொருட்டு" என்பாரும் உளர்.

---

224.28 i "கண்ணே தின்று என் றககர உகர" (புள்ளியிட்ட குழப்பம் எழுத்தை இரட்டிய குழப்பம்")

v "கண்ணே றகர உகர ஈறும்"

29 ii-vi-vii "தொழிற்கண்ணே"

30 ii-vi-vii "கண்ணே"

31 i-ii-vi-vii "உழுதேன்"

32 ii-vi "உண்ணூஉ எ-ம், உண்ணூவு எ-ம்"

i "உண்ணு உண்ணு எ-ம், உண்குபு"

33 i-ii-vi-vii "உண்டேன்"

34 i-ii-vi-vii "தின்றேன்"

35 i "புகுஉ"

36 i-ii-vi-vii "புக்கேன்" (இடை இடையே எ-ம் என்பது சில இடத்து இல்லாமலும் உள்ளன. எனவும் என்றும் வருகின்றன.)

37 ii vi i-ii-iv-vii "ஓட்டேன்"

38 vi "தூய்"

39 ii vi vii "ஒன்றின முடித்தல்"

40 vi "இறந்தகால விரவிப் பொருட்டு"

செய்து என்பதற்குச் செய்யாநின்று என்பதூஉம் ஓர் நிகழ்காலவாய்பாடு ; அதுவும் ஒன்றெனமுடித்தல் என்பதனால் கொள்ளப்படும்.

இனிச் செய்யியர் என்பது மழை பெய்யியர் எழுந்தது என்பது.

செய்யிய என்பது மழை பெய்யிய எழுந்தது என்பது.

செயின் என்பது மழை பெய்யிற் குளம் நிறையும் என்பது. இது நிகழின் [41]அது நிகழும் என்னும் காரணப் பொருள்பற்றி வரும்.

இதற்கு மழை பெய்தாற் குளம் நிறையும் [42]என ஆன் என்பதும் ஓர் வாய்பாடு. அதுவும் ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்க.

நனவிற் புணர்ச்சி [43]நடக்கலும் என உம் ஈறுதலும் கொள்க. இதுவும் ஒன்றென முடித்தல் என்பதனாற் [44]கொள்க.

மழை பெய்தக்கால் என்பதோ எனின், அது பின் ஓதுகின்ற கால் என்னும் வாய்பாடு எனக் கொள்க.

மழை பெய்யுமேலும், மழை [45]பெய்யுமேனும் எனவரும் ஏல் ஏன் என்பனவோ எனின், அவற்றையும் இதன் குறிப்பு என்று கோடலும் ஒன்று. அன்றி இவ்வெச்சப் பொருள் படுவன சில இடைச்சொல் என்று [46]கோடல் ஒன்று.

ஒன்றூனும் தீச்சொல் என்புழி ஆனே எனின், அதுவும் அப்பால் ஓர் இடைச்சொல் என்றலும் ஒன்று. ஆயினும் என்னும் சொல் ஆனும் என இடைக்குறைந்து நின்றது என்றலும் ஒன்று.

---

224-41 i-ii-vii-viii "இது நிகழும்"

42 v "என வரும் ஓர் வாய்பாடு"

43 i-ii-vii "நடக்கலாம்" என … … …. … இதுவும்
iii "நடத்தும் மென" … …. …. … … இதுவும்
vi "நடக்கலும் என உ-ம் ஈறுதலும் கொள்க. இதுவும்"

44 vi "கொள்க மழை பெய்யு மேற் குளநிறையும் … …. என்பனவோ எனின் அவற்றையும் இதன் ,குறிப்பென்று கோடலும் ஒன்று" 3,4 வரிகள் விடுபட்டுள்ளன,

45 i-ii-iv-vii "பெய்யுமெ எனவரும் … … என்பனவோ யெனின்"

46 i-ii-iv-vii "கோடன்று"
v "கோடல் நன்று"

நுணங்கிய கேள்வியர் [47]அல்லால் என்புழி அல்லால் என்பதோ எனின் அன்றி என்னும் செய்து என் எச்சக்குறிப்பிற்கு அதுவும் ஓர் வாய்பாடு என்பது. அல்ல ஆயின் என்பது பொருளாக்கி இதன் குறிப்பு என்பாரும் உளர்.

இனிச் செய என்பது மழை பெய எழுந்தது என்பது. மழை [48]பெய்யக் குளநிறைந்தது என இறந்தகாலத்துக் கண்ணும் வரும். மழை பெய்யக் குளநிறைந்தது என நிகழ்காலத்தும் சிறுபான்மை வரும். இவ் எச்சந்தான் ஒருவழி மழை பெய்யக் குளநிறைந்தது எனக் காரணப்பொருளாயும், குளநிறைய மழை பெய்தது என காரியப் பொருளாயும், மழை பெய எழுந்தது என அதற்பொருட்டு என்னும் பொருட்டாயும் மழை பெய்யச் சாத்தன் [49]வந்தான் என உடனிகழ்ச்சியாய் நிகழ்தற்கண் என இடப்பொருட்டாயும், பிறவாற்றுயும் வரும் என்பது.

[50]இனி, துன்னிப் பெரிய ஓதினும் சிறியஉணரா என்புழிப் பெரிய சிறிய என்பன பெருமை சிறுமைப் பண்படியாக வந்தமையின் இவ்எச்சத்தின் குறிப்பு என்றலும் ஒன்று. இவ்எச்சப் [51]பொருள்படும் உரிச்சொல் என்றலும் ஒன்று.

இனிச் செவ்வன்றெரிகிற்பான் எ-ம், புதுவதன் இயன்ற [52]வணியன் எ-ம், புதுவது புனைந்த வெண்கையாப்பு எ-ம், பொய்கைப்பூப்புதிதீன எ-ம், பெருங்கையற்ற [53]வென்புலம்பு எ-ம், சிறுநனி நீ துஞ்சியேற்பினும் எ-ம், ஒல்லைக் [54]கொண்டான் வல்லைக் கொண்டான் எ-ம் பிறவும் அகரஈறு இன்றிப் பிறஈறும் வருவனவும் அவ்வாறே உரைக்கப்படும்.

---

224- 47 i-ii-iv-vii "அல்லா வென்புழி அல்லா வென்பதோ"

48 i-ii-iv-vii "பெய்யா"

49 vi "வந்தான் உடனிகழ்ச்சியால்"

50 i-vi "இனி துன்னி"
ii "இனித்துன்னி"

51 ii-vi-vii "பொருளுரிச்சொல்"
i "பொருள் முரிச்சொல்" (படு விடுபட்டுள்ளது)

52 i "அணிய எ-ம்"

53 viii "வன்புலம்பு"
vi "பெண்புலம்பு"

54 ii-vi-vii "கொண்டான் எ-ம்"

இனிச் செயற்கு என்பது உணற்கு வந்தான் என்பது. இஃது அதற் பொருட்டு என்னும் பொருள்பற்றி வரும். இது உணல் என்னும் தொழிற் பெயர் நான்காம் உருபு ஏற்றவாறு அன்றோ எனின், அதுவும் ஓர் வழக்கு உண்டு. பெயர்ப்பொருண்மை நோக்கிய[55]வழி அது ஆகவும் கால நோக்கியவழி வினைஎச்சமாகவும் கொள்க. ஏற்றுக்கு என்பது இதன் குறிப்பு வாய்பாடாகக் கொள்க. (௩௦)

**225. பின்முன் கால்கடை வழிஇடத் தென்னும்**
**அன்ன மரபிற் காலம் கண்ணிய**
**என்ன கிளவியும் அவற்றியல் பினவே.**

என்பது என்நுதலிற்றோ எனின், இதுவும் ஒரு சார்வினையெச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—பின் என்பது முதலாக இடத்து, என்பது ஈறாக ஓதப்பட்ட [1]அத்தன்மைத்தான [2]வாய்பாட்டு முறைமையினையுடைய காலத்தைக்குறித்த எல்லாச் சொல்லும் மேற் சொல்லிய ஒன்பது-போல வினையெச்சத்துக்கு வாய்பாடாம் இயல்பினை உடைய என்றவாறு.

உ - ம்:—

பின்: "இன்மையுந் தருவதோ [3]இறந்த பின்னே" என [4]வரும்.

முன்: வருமுன்னர்க் [5]காவாதான் எனவரும்.

பின் என்பது பின்னர் என்றும் பின்னை [6]என்றும் வரும்.

முன் என்பது முன்னர் [7]என்றும் முன்னை [8]என்றும் முன்னம் என்றும் வரும்.

---

224-55 i-ii-iv-vii "*வழி அதுவாக வாக ஆகவும்*"

225 - 1 ii "*அத்தன்மைத் தானவாய் வாய்ப்பாடு*"

2 iv "*வாய்ப்பாட்டு*"

3 i "*இருந்த*"

4 ii "*வரும் பின்னென்பது*"

5 iv "*காவாதான் வாழ்க்கை என*"

6 iv "*என்றும் முன்*"

7 i-iii "*என்றும் வரும்*"

8 i-ii-iv-vii "*என்றும் வரும்*"

இனிப் பின் என்பதும் முன் என்பதும் ஒரு வினை [9]அடைந்து வாராது பிற்கொண்டான் முற்கொண்டான் எனத் [10]தாமேயும் வரும்.

கால் :—வலனாக வினை என்று வணங்கி நாம் விடுத்தக்கால் என வரும்.

கடை :—தொடர் [11]கூத்தூவாமை வந்தக்கடை என வரும்.

வழி :—படு சுடர்மாலையொடு பைதலேய் [12]உழப்பானைக்
குடிபுறங் காத்தோம்புஞ் செங்[13]கோலான் வியன்றானை
[14]விடுவழி விடுவழிச் சென்றாங்[15]கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கி[16]ற்றாற் பசப்பே என வரும்.

இடத்து :—கலையுநர் கைகோல்லுங் காழ்த்த [17]இடத்து.

இவை காலம் [18]விளங்கி நில்லாது குறிப்பாதலிற் போலும் காலம் கண்ணிய என்றது.

[19]இவையிற் குறிப்புப் போலாது ஓரோர் காலங்களைக் குறித்துக் கொள்ள நிற்கும் என்பது, விடுத்தக்கால் என்பது விடுத்து என இறந்த-

---

225-9 i-ii-iii-vii "இடைந்து"
vi "இடத்து"

10 i "தாமாயும்"

11 ii-vi-vii "கூறத்தூவாமை"

12 vi "உழப்பானை"
ii-vii "உழப்பாகை"

13 v "கோலால் இயன்றானை"
i-ii "கோலர் வியந்தானை"

14 i-ii-vi-vii "வடுவழிச் சென்றாங்"

15 i "ய"

16 "ன்"

17 ii-vi-vii "இடத்து எனவரும். இவை"

18 vi "விளக்கி"

19 v "இவை குறிப்பு"

காலக் குறிப்பு ஆயிற்று. வாரிவளம் [20]குன்றிக்கால் என்பது குன்றின் என எதிர்காலக் குறிப்பு ஆயிற்று.

முன், செய்து செய்யூ என்ற வாய்பாடு தம்மையே ஓதினவாறு-போல் அன்றி ஈண்டு அன் [21]ஆன் அள் ஆள் என்றாற்போல அவற்றை ஈறுபற்றி ஓதினா[22]ன் எனக் கொள்க.

மற்று இக்காட்டிய [23]உதாரணங்கள் எல்லாம் பெயரெச்சமும் பெயரும் [24]ஆகற்பால எனின், அவற்றின் பொருள்[25]நோக்கும் சொல்நிலையும் சந்தி [26] நிலையும் அன்ன அன்மையின் இவ்வாறு வருவன வற்றை வினையெச்சம் என்கின்றாற் போலும் ஆயினும், இவை செய்த செய்யாநின்ற செய்யும் என்னும் பெயரெச்சங்களும் இவற்றின் மறைகளும் இவற்றின் தொகையாகிய வாய்பாடும் போலும் வாய் பாடுகளை அடைந்தல்லது வாராது [27]என்பது.

என்னகிளவியும் என்றதனால், [28]பான் என்றும், பாக்கு என்றும், வான் என்றும், வாக்கு [29]என்றும் பிறவாறும் வருவன கொள்க.

உ - ம் :—

உண்பான் வந்தான், உண்பாக்கு வந்தான், கொள்வான் வந்தான் கொள்வாக்கு வந்தான் என வரும். பிறவும் அன்ன.

ஆக, வினையெச்ச வாய்பாடு எடுத்தோத்துவகையான் பதினைந்தும், தந்திர உத்திவகையானும் இலேசானும் நோக்கப் பலவகையும்

---

225-20 ii-vi-vii "குன்றியக்கால்"

21 vi "ஆன் அர் ஆர் என்றாற் போல"

22 "ர்"

23 ii "உதாஹரணங்கள் எல்லாம்"

24 v "ஆதற்பால"

25 ii-vii "னோக்கம்"

26 i-ii-vi-vii "நிலைமையும்"

27 "என்பது." (இதனோடு மூன்றும் பிரதி முடிகிறது.)

28 ii-vi-vii "பான் பாக்கு வான் வாக்கு"

29 vi "எனவும்"

முடிந்தது. இ[30]லேசென்பது ... யந்து கூறல் [31]குறிப்பு [32]வெளிப்படுப்பது. (௩௧)

226. அவற்றுள்,
முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின.

என்பது என்னுதலிற்றோ எனின், அக்கூறப்பட்ட எச்சங்களுள் முதற்[1]கண் நின்ற மூன்றற்கும் முடிபுகூறுதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேற்கூறப்பட்ட வினையெச்ச வாய்பாடுகளுள் முதற்கண் எடுத்து ஓதப்பட்ட செய்து செய்யூ செய்பு என்னும் மூன்றும் அவ்வெச்ச வினையை நிகழ்த்தின கருத்தாவினது வினையை உணர்த்தும் சொல்வினையே பின்பு முடிபாகக் கொண்டு முடியும் என்றவாறு

உ - ம் :—

உண்டு வந்தான், உண்ணூஉ [2]வந்தான், உண்ணு வந்தான், உண்குபு வந்தான் எனவரும். செய்து என் எச்சத்தின் குறிப்பாகிய இன்றி அன்றி என்பனவும் தம்மின்றமையா நந்நயந்தருளி எனவும், தொல்லெழில் [3]வரைந்தன்றி வயவுநோய் நலிதலின் [4]எனவும் வினைமுதல் வினையாய் முடிந்தவாறு கண்டுகொள்க. (௩௨)

---

225-30 i "லே"

31 vi "குறிப்பான்"

32 viii "வே ... படுப்பது"

i-ii-iv-vii "வெளிப்படுவது"

226-1 "கணின்ற" (சந்தி)

2 vi "வந்தான் உண்குபு"

3 i-iv "வரைந்தன்றி"

ii-vi-vii "வரைத்தன்றி"

4 i-v " ... னைமுதல்"

ii "எனவினை"

v "எனவும் அவ்வினை"

227. அம்முக் கிளவியும் சினைவினை தோன்றிற்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய என்மனார் புலவர்.

என்பது என்னுதலிற்றோ எனின், இதுவும் [1]மூனறன் [2]திறத்துப் படுவது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—அம்மூன்று சொல்லும், சினைப்பொருள்-இடத்து வினையெச்சமாய்த் தோன்றின், [3]முன்கூறின விதிக்கு ஏற்ப வினைமுதலாகச் சினைவினையான் [4]முடியாது, அச்சினையுடைய முதல் வினையோடு ஒன்றாய் [5]முடியினும், அப்பிறவினையும் முன்[6]கூறிய வினையொடு ஒன்றுஆதற்றன்மையை உடைய, என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உ - ம் :—

கையிற்று வீழ்ந்தான், கையிறூஉ வீழ்ந்தான், கையிறுபு வீழ்ந்தான் எனவரும்.

மற்றிது [7]கையிற வீழ்ந்தான் எனச் செயவெனச்சத்திரிபு ஆகற்பாற்று எனின் அவ்வாறு ஆவது இறுதற்றொழில் [8]கையதும் வீழ்தற்றொழின் முதலதும் ஆயின்அன்றே; இறுதலும் வீழ்தலும் கையதாகக் கூறுகின்றதா[9]கின் அதனுள் அடங்காது என்பது. அதன் பொருள் கையிற்று வீழ்ந்தவாறாகக் கொள்க.

---

227.1 i-ii-vii "மூன்றின்"

2 "றி" (சந்தி)

3 i "ம"

4 vi-viii "முடியாதுச் சினைமுதல் வினையொடு"

ii-vii "முடியாதச்சினையை முதல் வினையோடு"

5 vi "முடியினும் பிறவாற்றுமை முடியினும் முன்கூறிய"

ii-vii "முடியினும் அப்பிறவினையும் முன்வினையும் மூன்கூறிய"

6 v "கூறின"

7 vi "கையிற்று"

8 i-ii-ivi-vii "கையுதும்"

9 v "வி"

காலழுகி வீழ்ந்தான் என்பதும் அது.

கையிற்றான் காலழுகினான் என்பன [10]ஆண்டைக்கு உதாரணமோ எனின் [11]அவை வினையெச்சம் அன்மையிற் கண்ணும் தோளும் முலையும் பிறவும் என்னும் ஆண்டைக்கே உதாரணம்[12]ஆகக் கொள்க

மற்றுக் கையிற்று வீழ்ந்தான் காலழுகி வீழ்ந்தான் என்பனவும் ஆண்டைத் திணைவழுவமைதிக்கு உதாரணம் [13]ஆதலின் ஈண்டைக் கூறவேண்டா எனின், திணைவழுவுக்கன்று ஈண்டுக்[14]கூறுகின்றது; அதற்கு விதி கண்ணும் தோளும் என்பதே; [15]ஈண்டுக் கூறியது, [16]மேல்தன் வினையான் முடியும் [17]என்றனை ஒருவழித் தன்னோடு தொடர்ந்த [18]பிறவினையானும் முடியும் என்பது ஆயிற்று.

சினையொடுமுடியா முதலொடு முடியினும் வினையோரனைய [19]என்றமையான் இதுவும் ஓர் மரபு வழுவமைதி எனக் கொள்க.

குரங்கு கையிற்று வீழ்ந்தது என இம்முடிபு அஃறிணை வினைக்கும் கொள்க.

ஈண்டுச் சினைவினை [20]முதல் வினையொடு முடியும் என்பதே சொல்லியது எனி[21]ன் சாத்தனது கையிற்று வீழ்ந்தது என வினைமுடிபுள்ள வழியும் சாத்தனது கையிற்று வீழ்ந்தான் எனவும் ஆம்பிற, எனின், ஆகாது; அம்[22]முதல்தானும் எழுவாய் ஆகிய வழியது இம்முடிபு எனக் கொள்க. (௯௫)

---

227-10 vi 'ஈண்டைக் குதாரணமாமோ'
11 i-ii-iv-vii "அவ்வினை"
12 vi "எனக் கொள்க"
13 v "ஆதல்"
14 vi "கூறுகின்றது கண்ணுந் தோளும்"
ii "கூறுகின்றதற்கிறுதி கண்ணுந் தோளும்"
15 vi "ஈண்டு மேல்"
16 "மேற்றன்" (சந்தி)
17 v "என்று கூறியன"
18 i-ii-iv-vii "பிறவினையானும் என்பது"
19 ii-vi-vii "என்பதனால்"
20 vi "வினைமுதல்"
21 "ற்" (சந்தி)
22 "முதற்றானு" (சந்தி)

228. ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்
தாம்இயல் மருங்கின் முடியும் என்ப.

*என்பது என்நுதலிற்றோ எனின், ஒழிந்த எச்சங்கட்கு முடிபு கூறுதல் நுதலிற்று.*

*இதன் பொருள்:— முதனிலை மூன்றும் ஒழித்து ஒழிந்த வினையெச்சங்கள் எல்லாம் அவ்வினைமுதல் வினையானும் அவ்விடத்து வந்து பொருந்தும் பிற[1]வினை முதல்வினையானும் தாம் நடக்குமிடத்து முடிபுபெறும் என்று சொல்லு[2]வர் ஆசிரியர் என்றவாறு.*

உ-ம்:—

மழை பெய்து என [3]அறம் பெற்றது. மழை பெய்து என உலகம் [4]ஆராய்ந்தது.

மழை பெய்யிய எழுந்தது. மழை பெய்யிய மாதவர் அருளினர்.

மழை பெய்யியர் எழுந்தது. மழை பெய்யியர் மாதவர் அருளினர்.

மழை பெய்யின் அறம்[5]போலும். மழை பெய்யிற் குளநிறையும்.

மழை பெய்ய எழுந்தது. மழை பெய்யக் குளநிறைந்தது.

மழை பெயற்கு எழுந்தது. மழை பெயற்கு மாதவர் அருளினர்.

சாத்தன் தானுண்டபின் வந்தான். சாத்தனுண்டபின் [6]கொற்றன் வந்தான்.

---

228-1 vi "*வினையானும்*"
i-ii-iv-vii "*வினை நிலையானும்*"

2 "*ப*"

3 i-ii-iv-vii "*வரம்*"
vi v "*வளம்*"

4 vi "*ஆர்ந்தது மழை பெய்யியர்*"
ii *ஆராய்ந்தது மழை பெய்யியர்*"

v "*ஆராய்ந்தது மழை பெய்யியர் மாதவர் அருளினர் மழை பெய்யிய எழுந்தது மழை பெய்யின் அறம் பெறும்*"

5 v "*பெறும்*"
vi "*பெருகும்*"

6 i-iv-vi "*கொற்றவன்*"

சாத்தன் தான் [7]உண்டமுன் வந்தான். சாத்தன் உண்டமுன் கொற்றன் வந்தான்.

சாத்தன் உண்டக்கால் வரும். சாத்தன் உண்டக்காற் கொற்றன் வரும்.

சாத்தன் தான் உண்டக்கடை வரும். சாத்தன் உண்டக் கடை [8]வரும் கொற்றன்.

சாத்தன்தான் உண்டவழி வரும். சாத்தன் உண்டவழிக் கொற்றன் வரும்.

சாத்தன் தான் உண்டவிடத்து வரும். [9]சாத்தன் உண்டவிடத்துக் கொற்றன் வரும் *என இருவழியும் ஒட்டுக.*

*எடுத்து ஓதாத பிற வாய்பாட்டிற்கும்,* உண்பான் வந்தான், சாத்தன் உண்பான் கொற்றன் வந்தான் *என்றாற்போல ஒட்டுக.*

*இவ்வெச்சங்களுள் குறிப்பு உள்ளவற்றிற்கும் இவ்வாறு கொள்க.* (௩௮)

229. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே.

*என்பது என்நுதலிற்றோ எனின்,* இவ் எச்சங்களுள் எடுத்து-*அடுக்கிய வழிப்படுவது ஓர் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—பலவாற்றானும் வினையெச்சமாகிய* [1]*சொற்கள் ஒரு சொல்லோடு ஒரு சொல்லாய் முறை முடியாதே பலவாய் அடுக்கி-வரினும் முன்னின்ற* எச்சம் *முடியவே அல்லாதனவும் பொருண்* [2]*முடிந்தன என்றவாறு.*

உ - ம் :—

உழுது உண்டு தின்று ஓடிப் பாடி வந்தான் *எனவரும்.*

---

228-7 vi "*உண்ணுமுன்*"

8 v "*கொற்றன்வரும்*"

9 i-vi-vii "*சாத்தன்றான் உண்ட*"

229-1 vi "*சொற்கள் ஒரு சொல்லாய்*"

2 vi-viii "*முடிந்தனவாம்*"

i-ii "*முடிந்தன என்று ...*"

உண்ணூஉ தின்னூஉ ஓடூஉ பாடூஉ வந்தான் எனப் பிற [3]எச்சங்களும் அடுக்கிவருவன கொள்க.

பன்முறையானும் என்றதனான் ஓரினத்து எச்சமேயன்றிப் பல இனத்து எச்சங்களும் மயங்கி [4]அடுக்குதலும் கொள்க.

உ - ம்:—

உழுது[5]கிழுதுண்பான் தின்பான் [6]ஓடூஉப் பாடூஉ [7]வந்தான் என்பது.

இனிச் சொன்முறை முடியாது அடுக்கிவரினும் என்று சொற்கண் முறை முடித்து அடுக்கலும் உண்டு என்பது போதரக் கூறிய அதனாற் சொற்கண் முறை முடித்து அடுக்கிவரினும், முன்னது முடியவே முடியாக்கான் முடிந்தனவும் முடிந்திலவாம் என்பது கொள்க.

உ - ம்:—

உழுது[8]வந்தான், கிழுதுவந்தான், ஓடிவந்தான், பாடி ... என நின்றவழி முடியாதவாறு அறிந்து கொள்க.

[9]ஒன்றென முடித்தல் என்பதனாற் பெயரெச்சம் அடுக்கியவழியும் முன்னது முடிய முடியும் என்பது கொள்க.

உ - ம்:—

"நெல்லரியு [10]மிருந் தொழுவர்" என்னும் [11]பாட்டினுள், பாயுந்து எ-ம், [12]தூங்குந்து எ-ம், [13]தருஉந்து எ-ம், பாயும் எ-ம், தெரிய

---

229-3 iv "எச்சங்களும் மயங்கி அடுக்குதலுங் கொள்க" (இந்தொடர் விடுபட்டுள்ளன)

4 v "அடக்கலும்"

5 vi "உழுது"

6 ii "ஆடு"

7 vi "வந்தான் என்பன"

8 vi "வந்தான் ஓடி" ("வந்தான் இன்று" என்பது பாடம்போலும்)

9 ii-vi-vii "ஒன்றின முடித்தல்"

10 i-ii "மிந்தொழுவர்"

11 ii-vi-vii "புறப்பாட்டினும்"

12 v "தாங்குந்து"
i-ii-vii "தூங்குந்து என்றும் பாயுமென்றும்"

13 viii "தருவுந்து"

எ-ம், அடுக்கி நின்ற பெயரெச்சம் எல்லாம் **மிழலை** [14]**என்னும்** பெயர் கொண்டு முடிந்ததாம் என்று உணர்க. **(௩௫)**

230. நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய
செய்யுஞ் செய்த என்னும் சொல்லே.

*என்பது என்நுதலிற்றோ* [1]*எனின்,* **எஞ்சிய கிளவி** *என்று எடுத்தவற்றுள் வினையெச்சம்* [2]*உணர்த்திப் பெயரெச்சமாகிய* **செய்யும் செய்த** *என்பனவற்றிற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—* நிலப் பொருட்பெயரும் **செயப்படு பொருட்பெயரும்** காலப் பொருட்பெயரும் கருவிப் பொருட்பெயரும் **வினைமுதற் பொருட்பெயரும்** [3]வினைப் **பொருட்பெயரும்** *ஆகச் சொல்லப்பட்ட அவ்அறுவகைப் பொருட்*[4]*பெயர்க்கும் ஒரு தன்மையான உரிமையினையுடைய,* **செய்யும் செய்த** *என்னும் இருவகைப்பட்ட சொல்லும் என்றவாறு.*

*உ - ம் :—*

நிலம் :—அவன் உண்ணும் இல்லம், அவள் உண்ணும் இல்லம், அவர் உண்ணும் இல்லம், அது உண்ணும் இல்லம், அவை உண்ணும் இல்லம் *எனவரும்.*

பொருள் :—அவன் உண்ணும் சோறு, அவள் உண்ணும் சோறு, அவர் உண்ணும் சோறு, அது உண்ணும் சோறு, அவை உண்ணும் சோறு *எனவரும்.*

[5]காலம் :—அவன் உண்ணும் காலை, அவள் உண்ணும் காலை, அவர் உண்ணும் காலை, அது உண்ணும் காலை, அவை உண்ணும் காலை எனவரும்.

---

**229-14** i-ii-vii ***"என்று பெயர்"***

**230-1** vi ***"எனின் பெயரெச்சமாகிய செய்யும் செய்த"***

2 i-ii-vii ***"உணர்த்திய"***

3 i ***"வினைபொருட் வினைப்பொருட்"***

4 i-ii-iv-vii ***"பெயரும்"***

5 i-ii-iv-vii ***"காலை"***

**கருவி** :—அவன் எறியும் கல், அவள் எறியும் கல், அவர் எறியும் [6]கல், அது எறியும் கல், அவை எறியும் கல் எனவரும்.

**வினை** முதல் :—உண்ணும் அவன், உண்ணும் அவள், உண்ணும் அவர், உண்ணும் அது, உண்ணும் அவை எனவரும்.

**வினை** :—அவன் உண்ணும் ஊண், அவள் உண்ணும் ஊண், அவர் உண்ணும் ஊண், அது உண்ணும் ஊண், அவை உண்ணும் ஊண் என வரும்.

இனி செய்த என்பதற்கும் இவ்வாறே யான் உண்ட இல்லம், நீ உண்ட இல்லம், அவன் உண்ட இல்லம் என்றாற்போல மூன்று இடத்திற்கும் இவ்விடத்து வாய்பாடு விகற்பங்களும் அறிந்து ஒட்டிக்கொள்க.

[7]ஈண்டுச் செய்யும் என்பது முற்றும் [8]எச்சமும் என இரு[9]ஈற்றதாகும் சிறப்புடைமையின் முற்கூறப்பட்டது.

மற்றுச் செய்யும் என்பது பல்லோர் படர்க்கை என்புழிக் கூறிற்று ஆகலின் ஈண்டுக் கூறவேண்டா எனின், ஆண்டு முற்றாய நிலைமைக்குக் கூறியது; ஈண்டு அஃது எச்சம் ஆகிய நிலைமைக்குக் கூறியது எனக் கொள்க. [10]மற்று இது இவ்இரு நிலைமையும் பெயரொடு [11]முடியுமேல் அவ்வேறுபாடு அறியுமாறு என்னை எனின், முற்றாய்ப் பெயர்கொண்டவழி மற்றோர் [12]சொல் நோக்காது [13]செப்பு......மு......க்காற் போல [14]அமைந்து மாறும்; எச்சமாய்ப் பெயர்க் கொண்டக்கால் அமையாது மற்றும் ஓர் சொல் நோக்கிற்றுப்போல நிற்கும் என்பது.

---

230-6 i-iv "கல் அவை" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது)

7 i "ஈண்டு செய்யும்"

8 i-iv "எச்சம் என"

9 ii-vi-vii "ஈற்றதற்கும்"

10 i-ii-iv-vii "மற்ற இவ்விரு நிலைமையும்"

vi "மற்றது அவ்விரு நிலைமையும்"

11 i-ii-vi-vii "முடியமேல்"

12 "சொன்றேக்" (சந்தி)

13 v "செய்யு"

14 i-ii-vi-vii "அமைத்து"

இனி முற்றாயவழி உண்ணும் என ஊன்றினாற்போல நலிந்து சொல்லப்படும் என்றும், எச்சமாயவழி ஊன்றாது நெகிழ முடிபு சொல்லப்படும் என்றும் கொள்க.

அஃதேல், **பல்லோர் படர்க்கை** என்புழிக் கூறியது [15]முற்றிற்கு என்றும், ஈண்டுக் கூறியது எச்சத்திற்கு என்றும் பெறுமாறு என்னை எனின், ஈண்டுச் **செய்த** என்பதனோடு [16]படுத்து முடிபு கூறினமையானும், ஆண்டு முற்றாயவழிக் கொள்ளாதனபற்றி விலக்கினமையானும் [17]பெறுதும் என்பது.

மற்று, இம்முற்று நிலைமையையும் எச்சநிலைமையையும் [18]இரண்டாகப் பகுத்து ஓதாதது என்னை எனின், பொருள்வேற்றுமை அல்லது வாய்பாட்டு வேற்றுமை இன்மையிற் கூறா[19]ன் ஆயினான் என்பது.

இவ் அறுவகைப் பெயருள்ளும் வினைமுதற் பெயர் ஒழித்து, ஒழிந்தவற்றிற்கு எல்லாம் வினைமுதற்பெயர் முன்வந்தல்லது பொருண் முற்றாது என்பதூஉம், வினைமுதற்பெயர் வருவழிப் "பின்நின்ற எச்சத்தோடு எழுவாயாய் [20]இயைகின்றதோ? பிற வேற்றுமையாய் இயைகின்றதோ?" என்னும் விகற்பமும், ஈண்டு வினைமுதற் பெயரே அன்றிப் பிற பெயரோடு முடிபு ஆதற்குக் காரணம் **வினையே செய்வது** என வினை இலக்கணம் கூறியவழி வினைச்சொற்குறிப்பாய்ப் பிற பெயரும் புக்கு அமையாது என்பதூஉம் அவ் எட்டனுட் கடைக்கண் இரண்டும் ஒழிய மற்றை ஆறும் ஈண்டு ஓதப்பட்டன என்பதூஉம் அறிந்துகொள்க.

**யான் ஆடை ஒலிக்கும் இல்லம்; ஆடை ஒலித்த கூலி** என்றாற் போல்வன முடியுமாறு என்னை எனின், அவ்வினை இலக்கணத்துள், **இன்னதற்கு இது பயன்** என்னும் அவ்[21]இரண்டன் பெயர்வகை ஆகலின் **தன்னினமுடித்தல்** என்பதனான் கொள்ளப்படும் என்பது.

---

**230-15** ii-vi-vii "முற்றுக்கு"

16 vi "பகுத்து"

17 i-ii-iv-v-vii "பெறும்"

18 i-ii-iv-vi-vii "இரண்டிரண்டாக"

19 " ர்"

20 i-ii-iv-vi-vii "இருக்கின்றதோர்"

21 i-ii-iv-vi-vii "இரண்டு என்"

மற்றிந்நோய் தீரும் மருந்தருளாய் ஒண்டொடீ[22]இ எ-ம், நின்முகங் காணும் [23]மருந்தினேன் எ-ம் [24]வருவனவும் ஆமாறு என்னை எனின், தீரும் மருந்து என்பது தீருதற்குக் காரணமாகிய [25]மருந்து என்றவாறு.

[26]காணும் மருந்து [27]என்றது காண்டல் காரணமாக அதன் காரியமாகப் பிறந்த மருந்து [28]ஆதல் தன்மைய என்றவாறு.

இவ்வாறு வரும் காரணப் பெயரும் காரியப் பெயருமாய் வருவன அவ் இலக்கணம் எட்டனுள்ளும் அடங்காமையின் ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்ளப்படும்.

யான் செல்லும் ஊர்; யான் போந்த ஊர் என்பன நிலப் பெயருள் [29]அடக்குக, [30]ஊர் களிறு மிதித்த நீர் எனவும், நூலாக்கலிங்கம் எ-ம், எள்ளாட்டின எண்ணெய் எ-ம், உண்ட எச்சில் எ-ம் வருவன செயப்படுபொருளின் விகற்பமாக்கி அதனுள் அடக்கிக் [31]கொள்க, என இவ்வாறு [32]வரும் பிறபெயர் விகற்பங்களும் அறிந்து அடக்கிக்கொள்க.

அவையாவன :—தேரோடும் புறம், குண்டுசுனைப் பூத்தவண்டு, படுகண்ணி என்றாற் போல்வன.

---

230-22 i "டீ இன் எனவும் வருவன"

ii "டீ எனவும் வருவன"

23 vi-viii "மருந்தினேன் எனுமால்"

24 i "வருவனவாம்"

25 vi "மருந்து என்றது"

26 ii-vii "முகங்காணும்"

vi "காண்டல் காரணமாக" (மூன்று சொல் விடப்பட்டன)

27 v "என்றல்"

28 "ஆதற்றன்மைய" (சந்தி)

29 vi "அடங்கும்"

30 ii-vii "ஆர்களிறு"

31 vi "கொள்க இவ்வாறு"

32 v "வரும் பெயர்"

*இனி,* **செய்யும்** *என்பது* **செய்யாநிற்கும்** *எனவும்* **செய்த** *என்பது* **செய்யாநின்ற** *எனவும் வரும் வாய்பாடு வேற்றுமையும்* **தன்வினை முடித்தல்** *என்பதனுற் கொள்க.*

*இனிச்* **செய்த** *என்பதன் குறிப்பாய்* இன்ன, அன்ன, என்ன *எ-ம்,* **கரிய,** செய்ய *எ-ம் வரும் இவையும்* [33]*அவற்றுற் கொள்க.* *(௩௬)*

231. அவற்றெடு வருவழிச் செய்யும்என் கிளவி
முதற்கண் [1]வரைந்த மூவீற்றும் உரித்தே.

*என்பது என்நுதலிற்ருே எனின்,* **செய்யும்** *என்பதற்கு* [2]*இன்னும் முடிபு வேற்றுமை கூறுதல் நுதலிற்று.*

*இதன் பொருள் :—மேற்கூறிய அறுவகைப் பெயரோடு முடிந்து-வரும் இடத்துச்* **செய்யும்** *என்னும் சொல்முன்* **பல்லோர் படர்க்கை** *என்றதன்கண் வரையப்பட்ட மூன்று கூற்றின் கண்ணும் உரிமை உடைத்து என்றவாறு.*

*மூன்று கூருவன : — பல்லோர் படர்க்கையும் முன்னிலையும் தன்மையும்.*

*அவையாவன :—*அவர் உண்ணும் இல்லம், அவர் உண்ணும் சோறு, அவர் ஓதும் காலே, அவர் எறியும் கல், உண்ணும் அவர் வந்தார், அவர் உண்ணும் ஊண் *இவை பல்லோர் படர்க்கை.*

நீ உண்ணும் இல்லம், நீயிர் உண்ணும் இல்லம், நீ உண்ணும் சோறு, நீயிர் உண்ணும் சோறு, நீ ஓதும் காலே, நீயிர் ஓதும் காலே, நீ எறியும் கல், நீயிர் எறியும் கல், உண்ணும் நீ வந்தாய், உண்ணும் நீயிர் வந்தீர், [3]நீ உண்ணும் ஊண், நீயிர் உண்ணும் ஊண் *இவை முன்னிலே.*

[4]நான் உண்ணும் இல்லம், யாம் உண்ணும் இல்லம், நாம் உண்ணும் இல்லம் ; யான் உண்ணும் [5]சோறு, நாம் உண்ணும் சோறு, யாம் உண்ணும்

---

230-33 vi "*அதனுற் கொள்க*"

231-1 i "*அரைந்த*"

2 v "*இன்னுமோர்*"

3 i-viii "*உண்ணும் உம்*"

4 v "*யான் உண்ணும்*" *(பிறபிரதிகளிலும் இங்கன்றிப் பின்வரும் இடங்களிலும் யான் என்றே உள்ளது)*

5 vi "*சோறு நானுண்ணுஞ் சோறு நாமுண்ணுங் காலே*" *(மூன்று தொடர்கள் விடப்பட்டுள்ளன)*

viii "*சோறு நானுண்ணுஞ் சோறு நாம் உண்ணுஞ் சோறு*"

**சோறு; [6]யான் உண்ணும் காலை, நாம் உண்ணும் காலை, யாம் உண்ணும் காலை; யான் எறியும் [7]கல், நாம் எறியும் கல், யாம் எறியும் கல்; உண்ணும் யான் [8]வந்தேன், உண்ணும் நாம் வந்தோம், உண்ணும் யாம் வந்தோம்; யான் உண்ணும் ஊண், நாம் உண்ணும் [9]ஊண், யாம் உண்ணும் ஊண்** இவை தன்மை.

**யானும் நீயும் உண்ணும் இல்லம், யானும் அவனும் உண்ணும் இல்லம், யானும் நீயும் அவனும் உண்ணும் இல்லம்** என்றாற் போலவரும் வாய்பாடும் ஒட்டிக்கொள்க.

இதனாற் சொல்லியது **செய்யும்** என்பதற்கு முற்றுயவழி விலக்கிய இடங்கள் எச்சமாயவழி வரும் என [10]இறந்தது காத்தாயிற்று. (கூஎ)

## 232. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும் எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா.

என்பது என்நுதலிற்றோ எனின், பெயரெச்சமும் வினை எச்சமும் தனித்தனி முடியுமாறு கூறிவிட்டு, இனி அவ்இரண்டற்கும் உடன்எய்துவது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று,

இதன் பொருள்:—பெயர் எச்சமாகிய சொல்லும், வினையெச்சமாகிய சொல்லும் தொழிலினை எதிர்மறுத்துச் சொன்ன [1]இடத்தும் அவ்அச் சொல்லாதற் பொருண்மை [2]நிலையினை வேறுபடா என்றவாறு.

---

231-6 vi "(யான் யாம் நாம் என்று வரிசைப் படுத்தப்பட்டுள்ளன)"

7 vi-viii "கல் நான் எறியுங் கல் நாம்"

i "கல் நா .... ... யான் வந்தான் உண்ணும் யாம் வந்தோம்"

8 iv-vi "வந்தேன் உண்ணும் யாம் வந்தோம்" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது)

9 iv "ஊண் இவை தன்மை" (ஒரு தொடர் விடுபட்டுள்ளது)

10 i-ii-iv-vi-vii "இறந்ததுக் காயிற்று"

232-1 i-ii-iv-vi-vii "இடத்து அவ்வச் சொல்"

2 vi "நிலையின்"

ii-vii "நிலையில்"

உ - ம்:—

உண்ணும் சாத்தன் என்பது உண்ணாச் சாத்தன் என வரும். செய்த என்பதற்கு இதுவே மறை. கரிய சாத்தற்குச் செய்ய சாத்தன் எ-ம், நல்ல சாத்தற்குப் பொல்லாச் சாத்தன் எ-ம் [3]தீய சாத்தன் எ-ம் வரும் [4]குறிப்பு மறை விகற்பமும் அறிக.

இம் மறைக்கண் உண்ணாச் சாத்தன் என ஆகார ஈறுயே நிற்கும். இவை பெயரெச்சம்.

இனி வினையெச்சம்: உண்டு வந்தான் என்பது உண்ணாது வந்தான் என வரும்.

இவ்வெச்சம் சோறுண்டாயிருந்தது எ-ம், சோறுவதாயிருந்தது எ-ம், ஓர் சொல் அடுத்தபோது சோறின்றி எ-ம், வேறு குறிப்பு வாய்பாட்டதாம் எனக் கொள்க.

செய்யூ செய்பு என்பனவற்றிற்கும், இதுவே மறை.

இனிச் செய்தென என்பது முதல் வினையோடு முடிந்த வழி இம்மறையானே வரும். மழை பெய்தென மரங் குழைத்தது எனப் பிறவினையாய வழிச் செய்து என் எச்சத்து எதிர்மறையே தனக்கு மறையாய், மழை பெய்யாமல் மரம் குழையாதாயிற்று என வரும்

இனிச் செய்யியர் செய்யிய என்பன இரண்டற்கும் மறைபடுவழித் தன்வினை பிறவினை என்னும் இருவழியும் செய என் எச்சத்தின்மறையானே முடியும். மழை பெய்யாமல் எழுந்தது; மழை பெய்யாமன் மரங் குழையாதாயிற்று.

இனிச் செய்யிய என்பதற்கும் இவ்வாறே கொள்க.

செயின் என்பதற்குச் சொற்றன்னன் மறையின்றி [5]மழை பெய்யாவிடின் அறம் பெருது; மழை பெய்யாவிடின் மரங் குழையாது எனப் பிற சொல்லானே மறையாய் வரும்போலும்.

---

232-3 iv "செய்ய சாத்தன்"

4 vi "பெயரெச்சக் குறிப்பு மறை"

5 i "மறை"

v "பெய்யாவிடின்"

உண்ண [6]என்பதற்கு உண்ணாமல் எ-ம், உண்ணாமை எ-ம், அல்லும் ஐயும் என இரு ஈற்றதாம். உண்ணாமே என்பதோ எனின், அதுவும் மருஉ என்க. இனிப் பெரிய ஒத்தினும் என்பதற்குச் சிறிய ஒத்தினும் என வரும் குறிப்பு மறை விகற்பமும் அறிக. செயற்கு என்பதற்கு உணற்குவந்தான் உண்ணாமல் வந்தான் என இதன் மறையே மறை எனக் கொள்க. உண்ணாது ஒழிவான் எனப் பிற வாய்ப்பாட்டாயும் வரும்.

இனிப் பின் என்பது உண்ணாத பின் என வரும், முன் என்பது உண்ணாத முன் என வரும். [7]கால்: உண்ணாக்கால் என வரும். [8]கடை; உண்ணாக்கடை எ-ம். [9]வழி: உண்ணாத வழி என வரும். [10]இடத்து: உண்ணாத[11]இடத்து என வரும்.

பான் பாக்கு என்றாற் போல்வன உண்ணாதொழிவான் என்றாற் [12]போல [13]வேறு பாட்டவாய் வரும். மற்று மறைவிகற்பம் உள்ளன அறிந்துகொள்க.

இதனால் சொல்லியது: இவ்வாறு பெயரெச்சமும் வினையெச்சமும் எதிர்மறுத்து வரும் என்பது போதரக் கூறினமையின் அதனுள் அடங்கிற்று என்பதும் த..............வழியும் பெயரெச்சம் எனப் [14]படுதலும் [15]பெயரோடும் வினையோடும் முடிதலுடைய என்றாயிற்று.

---

232-6 i-ii-iv-vi-vii 'என்பதற்கு உணற்கு வந்தான்' மூன்று சொற்றொடர்களுக்கு மேல் விடப்பட்டுள்ளன முன்வரும் 'என்பதற்கு' என்பதைப் பின்வரும் 'என்பதற்கு' என்பதோடு மயங்கிய மயக்கம்)

7 vi "கால் என்பது" (இவையே பாடம் போலும்)

8 vi "கடை என்பது" ,,

9 vi "வழி என்பது" ,,

10 vi "இடத்தென்பது" ,,

11 i-iv "இடத்துப் பான்பாக்கு"

12 v "போல்வன வேறு"

13 vi "வேறு பாட்டாய்"

14 ii-vii "படுத்தலும்"

15 i-ii-iv-vi-vii "பெயரோடும் முடிதல்"

[16]அஃதேல், முற்றுச்சொல் மறுத்த வழியும் [17]முற்று என்பது எற்றாற் பெறுதும் எனின், வேற்றுமை இலக்கணத்துள் எதிர்மறுத்து மொழியினும் என்பதனுள் அவ்வேற்றுமையினை எதிர்மறுத்து வரும் என்பது போதரக் கூறினமையின் அதனுள் [18]அடங்கிற்று என்பது.

மற்று, இவ்எச்சமும் அதன்பால் அடங்காதோ எனின் எடுத்து [19]ஓத்து இல்வழியது இலேசும் உத்தியும் என்க.

அஃறிணை [20]வினையுள் அ ஆ என்று ஆகார ஈற்றை ஓதினமையானும் மறையும் ஆம் என்பது பெறுதும். முற்றுச்சொல் எதிர்மறுத்த வழி உண்டான் என்பதற்கு உண்ணான் என ஈறு வேறுபடாது வருதலானும் உண்ணுமுன் என்பதற்கு உண்ணாமுன் என்றும் உண்ண என்பதற்கு உண்ணாமல் என்றும் எச்சங்கள் ஈறு வேறுபட்டு வருதலானும் அவை இயல்பு என்று, விகாரம் [21]உடைமையின் இவ்எச்சங்களை எடுத்து ஓதினான் என்றலும் ஒன்று. முற்றுச் [22]சொல் மறை விகற்பம் எல்லாம் அவ்ஈற்றுள்ளே காட்டினவாறு கண்டுகொள்க.

இனிச் செய்யும் என்பது முற்றாய வழி அதன் எதிர்மறை ஆண்டுக் கூறும் உயர்திணை [23]அஃறிணைப்[24]பால்மேல், வினையாய் [25]உண்ணும் அவன் என்பதற்கு உண்ணா அவன் எ-ம், உண்ணும் அது என்பதற்கு உண்ணாதது எ-ம் வரும் என்று அறிக.

---

232-16 i-ii-iv-vii "அஃதேன்"

17 vi "முற்றென்பதென்றாற் பெறுதும்"
v "முற்றுச்சொல் என்பது எற்றாற் பெறுதுமோ"

18 v "அடங்கிற்று மற்று"

19 i-ii-iv-vi "ஓதில் வழியதிலே சும்"

20 i-ii-iv-vi "வினையும்"

21 v "உடைமையான்"

22 "சொன்" (சந்தி)
v "சொல் விகற்பமெல்லாம்"

23 v "அஃறிணை வினைப்பால் மேல்"
i-ii-iv-vi-vii "அஃறிணைப் பான்மை மேல்"

24 "ன்" (சந்தி)

25 i-ii-iv-vii உண்ணுமன்"

மற்று இவ் விரவுவினை முற்றுயும்[26] அவற்றில் தனக்கு ஏற்ற வினை-யில்லன ஆண்டு உணர்த்தும் உயர்திணை அஃறிணை வினையான் மறைபடு[27]மாறு அறிந்து கொள்க. (௩,அ)

233. தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்
எச்சொல் [1]ஆயினும் இடைநிலை வரையார்.

என்பது என் நுதலிற்றோ [2]எனின், இதுவும் அவ்வெச்சங்களிடை நிகழும் முடிபு வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— முன்கூறிய பெயரெச்சமும் வினையெச்சமும் தத்தம் எச்சமாகிய பெயரொடும் வினையொடும் பொருள் இயையும் கருத்தினையுடைய பெயர் முதலிய எவ்வகைச் சொல்லாயினும் அம்முடிதற்கு இடைநிற்றலை நீக்கார் ஆசிரியர் எனவே கொள்வர் என்றவாறு.

வரையார் என்றமையின் இதுவும் ஓர் மரபு வழுவமைதி நீர்மைத்து என்பது போந்தது. சிவணுங்குறிப்பு என்றமையிற் சிவணாக்[3] குறிப்பின வரையப்படும் என்பது.

உ - ம் :—

அடும் செந்நெற் சோறு; அட்ட செந்நெற் சோறு என வரும். இவை பெயரெச்சம்.

'உப்பின்று புற்கை யுண்கமா, கொற்கை [4]யோனே' என்பது வினையெச்சம்.

சிவணாக் குறிப்பினது 'வல்லமெறிந்த நல்லிளங்கோசர்'

'தந்தை மல்லல் யானைப் பெருவழுதி' என்பது.

---

232-26 v "அவற்றிற்றனக்கு"

27 iv "மாற்றெரிந்து கொள்க"

233-1 iv "ஆயினும் .... ... அம்முடிவிற்கு இடை நிற்றலை"

2 i-ii-vi-vii "எனின் .... அம்முடிவிற்கு இடை நிற்றலை"

3 i-ii-vi-vii "குறிப்பின் அறையப்படும்"

4 i "கொற்கையானே"

இனி [5]ஒன்றென முடித்தல் என்பதனான் உண்டான் பசித்த சாத்தன் என்றாற்போல வரும் முற்றிடைக் [6]கிடப்பும் கொள்க. (௩௩)

234. அவற்றுள்,
செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடும் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் [1]என்மனார் புலவர்.

என்பது என் நுதலிற்றோ எனின், [2]இவ்எச்சங்களுள் செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கு [3]ஈறு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— மேற்[4]கூறிய பெயரெச்சங்களுள், செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கு ஈற்றின்[6]மேல் நின்ற உகரம் தன்னாற் பற்றப்பட்ட மெய்யொடும் கெட்டு முடியும். அவ்வாறு கெடும் இடங்களை அறிக என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

உ - ம் :—

[7]வாம் [8]புரவி வழுதி, யான் [9]போம் [10]புழை என வரும்.

---

233-5 i-ii-iv-vi-vii "ஒன்றிரண்டல ... என்பதனான்"

v "ஒன்றின முடித்தல் என்பதனான்"

6 i-ii-iv-vii "கிடப்பங் கொள்க"

234-1 i-iv "என்மனார்;—என்பது என் நுதலிற்றோ எனின்"

2 v "அவ்வெச்சங்களுள்"

3 v "ஈறு உணர்த்துதல்"

4 ii-ii-iv-iv-vii "கூறிய எச்சங்களுள்"

5 "ட்" (சந்தி)

6 "மேனின்ற" (சந்தி)

7 i-ii-iv-vi-vii "வாவும்"

8 i "பூ"

9 ii-vi-vii "போகும்"

10 ii-vi-vii "புழை என்பனவாம் புரவி போம்புழை என வரும்"

இனி உருவுதிரை என்றாற் [11]போல ஈறு தான் கெடுவனவும், உளவால் எனின் அது வினைத்தொகை என மறுக்க.

சாரல்நாட என்[12]றோழியுங் கலுழ்மே என அவ்உகரம் தான் ஏறியமெய் ஒழியக் கெட்டவிடம் உளவால் எனின் அவ்இடனறிதல் என்ற மிகை வாய்பாட்டான் ஓரோவழி மெய் ஒழியக் கெடுதலும் உண்டுஎன்பது கொள்ளப்படும்.

இனிச் செய்யும் என்னும் பெயர் எஞ்சுகிளவிக்கு என்றான் அன்றே; மற்றது [13]அம்பலூரு மவனொடு மொழிமே என முற்றாய [14]வழியும் அற்றாய் வந்ததால் எனின் அதனையும் இவ்இலேசினாற் கோடலும் ஒன்று. இதனையும் உதாரணமாகக் [15]கூறிய உரையிற் கோடலும் ஒன்று.

இனி வாவும் புரவி என உகரம் கெடாது வருதற்கு விதி யாது எனின் மெய்யொடும் கெடும் என்ற உம்மை எதிர்மறை ஆகலான் மெய்யொடும் கெடாது நிற்றல் பெரும்பான்மை [16]என்பதூஉம் பெறப்படும். ஏற்புழிக் கோடல் என்பதனால் ஆடுநாகம் என்றாற் போல்வுழிக் கெடாமையும் கொள்க. (௪௰)

235. செய்தெ னெச்சத் திறந்த காலம்
எய்திட னுடைத்தே வாராக் காலம்.

என்பது என் நுதலிற்றோ எனின், செய்து என்னும் வினையெச்சத்துக் காலமயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—இறந்த காலத்தை உடைய செய்து என்னும் வினையெச்சம் தன் இறந்த காலத்தினை நோக்க வாராதவாகிய இயல்பினையுடைய எதிர்காலத்தினையும் நிகழ்காலத்தினையும் பொருந்தும் கூற்றினையுடையது என்றவாறு.

---

234-11 v "போல்வன"

12 i-ii "றோ"

13 i "அமரனூரும் மவனோடு மொழிமே"

14 ii-vii "வழியுமுற்றாய் வந்தால்"
vi "வந்ததாலெனின்"

15 ii-vi-vii "கூறியது"

16 v "என்றதூஉம்"

இறந்த காலத்துச் செய்து என் எச்சம் என மொழி மாற்றிக் கொள்க. [1]கிடந்தவாறும் வாராக்காலம் என நிகழ்காலமும் அடங்கிற்று.

உ-ம்;—

உழுது வருவான் சாத்தன் என்பது. இது, வருவான் என்னும் எதிர்கால வினை கொண்டமையான் முன் உழுது என நின்ற இறந்தகாலம் உழுவது மேல் என எதிர்காலத்து ஆயிற்று.

கொடிஆடித் தோன்றும் என்பது. அத்தோற்றமும் [2]ஆட்டமும் உடன் நிகழ்தலான் நிகழ்காலம் ஆயிற்று.

ஒன்றென முடித்தல் என்பதனாற் செய்யூ செப்பு என்பனவற்றிற்கும் இவ்வாறே மயக்கம் [3]கொள்க.

[4]மற்றும் வினையெச்ச வாய்பாடுள்ளும் காலம் மயங்குவன உளவேல் அவையும் இவ்வாற்றானே கொள்க. இச்சூத்திரம் கால வழுவமைதி. இது ஒரு சொன்மயக்கம். (சரு)

236. முன்னிலைக் காலமும் தோன்றும் இயற்கை
[1]எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்.

என்பது என் நுதலிற்றோ எனின், எல்லா வினைச் சொற்களும் பொருளது உண்மை இயற்கை கூறும்வழிச் செய்யும் என்னும் வினைச் சொல்லொடு காலம் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மூன்று வகைப்பட்ட நிலைமையினை உடைய காலத்தும் தோன்றும் இயல்பினையுடைய எவ்வகைப்பட்ட பொருளையும் நிகழ்காலத்தினைத் தனக்குக் காலமாக உடைய [2]பிற காலத்தினையும் [3]பொதியும் பொருள் நிலைமையினை உடைய செய்யும் என்னும் சொல்லினாற் சொல்லுதலை விரும்பும் ஆசிரியர் என்றவாறு.

---

235-1 (தொடர் சிதைந்துள்ளது. "கிடந்தவாறும் ஆம்" என்பது போலும்)
2 i-ii-iv-vi-vii "ஆட்டமுடன்"
3 iv "கொள்க இச்சூத்திரம்" (ஒரு தொடர் விடுபட்டது.)
4 i-ii-iv-vi-vii "அவ்வினையெச்சம்"

236-1 i "யே, அம்முறை"
2 ii-vii "பிற்காலத்தினையும்"
3 v "பொதியுஞ்"

உ - ம் :—

மலை நிற்கும்; யாறொழுகும்; தீச்சுடும் என்னும் இவை. தீ எத்தன்மையது என்றால் அதன் தன்மை எக்காலத்தும் உளவாதலி[4]ன் பண்டு சுட்டது; இன்றும் சுடுகின்றது; மேலும்சுடுவது என மூன்று காலத்தானும் கூறவேண்டுவதனை நிகழ்காலத்தாற் சொல்ல அவை எல்லாம் கூறியவாறு ஆயிற்று எனக் கொள்க.

"முந்நிலைக்காலமும் தோன்றும் இயற்கை [5]எம்முறைச் சொல்" என்றமையான், ஒரு [6]பொருள் ஒருகாலத் தொழில் அன்றி எக்காலத்தும் நிகழும் தொழில் இயல்பு கூறும் வழியது இம்மயக்கம் எனக் கொள்க.

சொல் [7]என்றதற்குப் பெயர்ப் பொருளை என்க. இனிச் சொல் எனினும் படும்.

[8]மெய்நிலை என்றதனாற் [9]பிற நிகழ்காலச் சொல்லோடு ஒவ்வாது மூன்று காலத்தையும் பொதியு நிலைமையது இச்செய்யும் என்னும் சொல் என்பது பெறப்பட்டது. இதுவும் காலமயக்க வமைதி.

ஈண்டு மயங்கியது எச்சொல்லோ எனின், நெருப்புச் சுடும் என்றவழிச் சுட்டது சுடாநின்றது சுடுவது என்று மூன்றுகாலச் சொல்லும் செய்யும் என்பதனாற் சொல்லப்படுதலின் அவை மயங்கின எனப்படும். இச் சுடும் என்ற சொற்றானும் தன் நிகழ் [10]காலத்ததாய் [11]நிற்றலையிட்டு ஒரு சொல்லுதற்கண்ணே மூன்று காலமும் பட நிற்றலின் அதுவும் மயங்கிற்று எனப்படும். இஃது ஒருசொன் மயக்கம். (சஉ)

---

236 - 4 "ற்" (சந்தி)

5 iv "அம்முறை"

6 v "பொருளது ஒரு"

7 v "என்றது ஆகு பெயர்ப் பொருளை"

8 i-ii-iv-vii "மேனிலை"
viii "மேநிலை"

9 vi "பின்"

10 v "காலத்தாய்"

11 v "நிற்றலை விட்டு"

237. வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்.

என்பது என் நுதலிற்றோ எனின், வினைச்சொல் [1]எல்லாவற்றினும் விரைவு பொருட்கண் எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலத்தொடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:— [2]எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒரு படியாக வருகின்ற வினைச் [3]சொல்லாகிய சொல்லின் பொருண்மையை இறந்த காலமாகக் கருதிக் கூறுதல், விரைவுப் பொருண்மை உடைய என்று சொல்லுவர் புலவர் என்றவாறு,

உ - ம்:—

ஒருவனை ஒருவன் ஓர் துறை பொருட்டால் [4]இன்னும் உண்டிலையோ [5]போதாயோ என்புழி, [6]உண்பேன் போதுவென் [7]எனற்பால உண்டேன் [8]போந்தேன் என்னும், இனி உண்கின்றானைக் கேட்பினும் உண்ணாநின்றேன் போதுவல் என்னாது உண்டேன் போந்தேன் என்னும். இவை அமைதற்குக் காரணம் செய்யாததனைச் செய்ததாக்கித் தன் விரைவு தோன்றக் கூறும் கருத்தினன் ஆதலின், என்பது. இதுவும் சொல்லொடு சொன்மயக்கம். இஃது எல்லாச் சொன்மேலும் கொள்க. (சஎ)

238. மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.

---

237 - 1 iv "எல்லாவற்றானும்"
2 ii-vi-vii எதிர் காலத்து நிகழ் காலத்து ஒரு படி
3 v "சொல்லாகின்ற"
4 i-ii.iv-vii "இன்றும்"
5 v "ஓதாய்"
6 v "உண்போன்"
7 ii-vi-vii "என்றற்பாலதனை"
8 i "போந்தேன்"

என்பது என் நுதலிற்றோ எனின், வினைச்சொல் எல்லாவற்றினும் [1]நன்மையானும் தீமையானும் மிக்கதோர் பொருட்கண் ஒருவன் செய்தி கூறும் இடத்து எதிர்காலம் இறந்தகாலத்தொடும் நிகழ்காலத்தொடும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—உலகத்து ஒருவழி நன்மையானும் ஒருவழித் தீமையானும் தவம் செய்தல் தாய்க்கொலை[2] என்பன [3]மிக்க தொழிலிடத்து வரும் தவம் செய்வான் தாயைக் கொல்வான் என்னும் வினைப்பெயர்ச் சொல்லால் ஒருவன் [4]தன்னை வேறு கூறுதலைக் குறித்த வினைப்பெயர்க்கு முடிபாக அம் மிக்க வினைப்பயனாகிய [5]சுவர்க்கம் புகுதலும் [6]நிரயம் புகுதலும் என்னும் பண்பினை மேல்வரும் சுவர்க்கம் புகுவன் நிரயம் புகுவன் என்னும் சொற்களா[7]ன் தன்னைச் சொல்லுதலையும் [8]குறித்த அவ் வினைமுதலாகிய பொருள் தான் மிக அத்தொழிலினைச் செய்யாதிருந்த நிலைமைக்கண்ணே அத்தொழிலைச் செய்யத் தன் பயனை உறுகின்றானைக் கண்டான்போல ஒருவன் தவம் செய்தான் சுவர்க்கம் புகும் தாயைக் கொன்றான் நிரயம் புகும் எனச் சொல்ல நிகழ்காலத்தின்கண்ணே உண்மை பெறத் தோன்றும் பொருண்மையினை உடைத்தாம் என்றவாறு.

உ - ம்;—

தவம் செய்தான் சுவர்க்கம் [9]புகும்; தாயைக் கொன்றான் நிரயம் புகும் என முன் கண்ணழிவுள் வந்தனவே எனக் கொள்க.

---

238 - 1 v நன்மையானுந் தீமையானுங்

2 i "மெ"

3 v "போல மிக்க"

i "மிகத் தொழிலிடத்து"

4 "ற" (சந்தி)

5 i "சுவற்கம்"

6 i "நிரையம்"

7 i-ii-vii "ற்றன்னை"

8 v "குறித்து"

9 v "புகும் என முன்"

viii "புகும்......என"

இதனாற் சொல்லியது 'இவ்வினை செய்வான் மேல் இவ்வினை எய்தும்' என்னும் பொருண்மை 'இவ்வினை செய்து பின்னை இவ்வினை [10]செய்கின்றான்' எனக் காலம் மயங்க வரும் என்பது கூறக் கருதினான் கூறியவாறு ஆக்கி இதற்கேற்பச் சொன்னிலை அறிந்து [11]படுத்திக்கொள்க.

ஒன்றென முடித்தல் என்பதனால் அறம் செய்தான் சுவர்க்கம் புக்கான் என இரண்டு வினையும் இறந்த காலத்தாற் கூறுதலும், அறம் செய்யா நிற்கும் அவன் சுவர்க்கம் [12]புகுவான் என நிகழ்காலம் ஒன்றனையும் மயங்கக் [13]கூறுதலும் மற்று உள்ளதும் கொள்க.

நிகழும் காலத்து மெய்பெறத் தோன்றும் என்றதனால் சுவர்க்கம் புகுவான் என்னாது சுவர்க்கம் புகும் என்பது அன்றி அறம் செய்வான் என்பதனை அறம் செய்தான் எனக் கூறுதல் சூத்திரத்துப் பெற்றிலமால் எனின், அது முன்னின்ற [14]சூத்திரத்துள் அப்பொருளினைக் கூறும் 'இலக்கண வாய்பாடு இது' என நிறுத்தின அதிகார ஆற்றலாற் பெற வைத்தா[15]ன்போலும்.

மற்றும் முன் இவ்வினை[16]செய்வான் இவ்வினை செய்யும் என்பது படச் செய்தது இல்லாமை தோன்றக் கூறிவைத்து பின்னையும் செய்வதில்வழி என்றது என்னை எனின், அங்ஙனம் செய்வானாய் முன்னின்றவன் பின்னை அதனைச் செய்த வழிக் கூறுதலும் ஒன்று உண்டாதலின், அது நீக்கிய கூறினான்[17] போலும். அதுவும் சொல்லொடு சொன் மயக்கம். (சச)

---

238-10 i "செய்கின்றான் அவ்வினை செய்கின்றான் என"

iv "செய்கின்றான் அவ்வினை செய்யின்"

11 i "படுத்துக்கொள்க"

12 i-ii-iv-vii "புகுவன்"

13 v "கூறுதலும் கொள்க"

14 ii "சூத்திரத்து உளப் பொருளினை"

15 " ர் "

16 i "செய்வான் இவ்வானைச் செய்யும்"

ii-vi-vii "செய்வானைச் செய்யும்"

17 " ர் "

239. இதுசெயல் வேண்டும் [1]என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்.

என்பது என் நுதலிற்றோ எனின், இது வினை முற்றுச் சொல்லது பொருள்படு நிலைமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— 'இக் காரியத்தினைச் செய்தல் வேண்டும்' என்று சொல்லப்படும் முற்றுச் சொல் இரண்டு இடத்தும் நிலைபெறும் பொருண்மை உடைத்தாகும். அவை இரண்டு இடமும் யாவை எனின், அக்காரியத்தினைச் செய்வான் தன்னிடத்தும் அவன் செய்தலை வேண்டி இருப்பான் பிறன் ஒருவனிடத்தும் என்றவாறு.

உ - ம் :—

சாத்தன் [2]ஓதல் வேண்டும் என்பது. இதனுள் வேண்டும் என்னும் முற்றுச்சொல் ஒருவழிச் சாத்தன் என்பது எழுவாயாய் வேண்டும் என்னும் [3]பயனிலையோடு முடிந்த வழி அது வேண்டுதல் சாத்தனதாயும், சாத்தன் என்னும் எழுவாய் ஓதல் என்னும் சொல்லோடு முடிந்த வழி, இவன் ஓதவேண்டியிருக்கு[4]மா...... தந்தை எனப் பிறர் மேலதாயும் நின்றவாறு அறிந்துகொள்க.

இதனாற் சொல்லியது சொற்பொருள் உணர்த்தும் வழி [5]இயல்பாற்றான் உணர்த்துவதனை ஒழிய [6]அடைசொற்களாற் பிறவழியும் நோக்கும் எனக் கால வழுவமைதிக்கு இடையே இதுவும் ஓர் மரபு வழுவமைதி [7]என்பது கூறியவாறு ஆயிற்று. (சரு)

240. வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையும் உடைத்தே.

---

239 - 1 i-ii-iv-vii "என்கிளவி"

2 i "ஓதவேண்டும்"

3 i "பயனிலையோடு...வழி"

4 i-viii "மாராய் தந்தை"

ii-vii "மாருய்......"

vi "மானுற்........"

5 i-ii-vi-vii "இயல்பான் உணர்த்துவன"

6 i-ii-iv-vi-vii "வட சொற்களால்"

7 v "எனக் கூறியவாருயிற்று"

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் [1]வினைச்சொல்லது பொருள்படும் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :— ஒருவன் ஓர் தொழிலினைச் செய்தானாகத் தன்னை ஒருவன் மனம் கொண்டிருந்த வழித் தான் அது [2]செய்யாமை அவன் மனத்து வலியுற[3]வேண்டிய அது செய்திலேன் என எதிர்மறைப்பொருட்கண் வருகின்ற வினாவினை உடைய வினைச்சொல் அவ்வாறு தான் அது செய்யாமை உணர்த்துதற்கு [4]நின்ற நிலைமை [5]எதிர்மறுத்துத் தான் அது செய்தானாக உடன்பட்டமை அவற்கு உணர்த்துதற்கு [6]உரிமையினையும் உடைத்து என்றவாறு.

உ - ம் :—

[7]கதத்தானாதல், களியானாதல் மயங்கி இன்னாங்கு உரைத்துப் பின் [8]தெருண்டவழி அவ்வின்னாங் குரைக்கப்பட்டான், நீ என்னை வைதாய் என்றக்கால், யான் வைதேனே எனத்தான் அது வையாமையை வலியுறுத்தற்குக் [9]கூறிய அதுதானே அப்பொழுது வைதேன் நோகாதே என்று [10]நேர்ந்தமைபட [11]நிற்கும் என்பது.

---

240 - 1 i-ii-iv-vii "வினைவுடை"

2 vi "செய்யாமையான் மனத்து"

3 "வேண்டியது"

v "வேண்டியது செய்திலேன் எதிர்மறை"

4 i "நின்ற நி...னையு முடைத்தென்றவாறு உவமை எதிர் மறுத்துத் தான்"

ii-vi-vii "நின்ற வினையும் உடைத்து என்றவாறு உம்மை எதிர் மறுத்து"

5 vi "எதிர் மறுத்தான் அது"

6 "உரிமைவினையும் உடைத்து" (?)

7 i "காத்தானாதல்"

viii "காதத்தானாதல்"

8 v "தேருண்ட வழி"

9 vi "கூறியதுதானே"

10 i "நொந்தமை ப ... நிற்கும்"

ii-v-vii "நொந்தமை படநிற்கும்"

11 vi "நிற்கும். உம்மை எதிர்மறை"

உம்மை எதிர்மறையாகலான் மறுத்தல் பெரும்பான்மை [12]நேர்வு சிறுபான்மை எனக் கொள்க.

[13]இவ்வாறு பொருள் உணர்த்துகின்ற தொடைக்கண் வினா விடைச்சொல் [14]ஆகலான், அஃது ஆண்டைக்கு ஆராய்ச்சி அன்றோ எனின், அச்[15]சொல்லடுப்பானே [16]வைதேன் என்னும் உடன்பாட்டு வினைச்சொல் வைதேனே என ஒருவழி வைதிலேன் என்னும் எதிர்மறைப் பொருள் பெரும்பான்மையாயும், ஒருவழி அம் மறைநிலையை [17]விட்டு இது தன்னுடம்பாட்டுப் பொருண்மை சிறுபான்மையாயும் நின்றமையான் ஈண்டைக்கும் ஒரு வழுஉவமைதி ஆராய்ச்சித்து ஆயிற்று என்பது. (சகூ)

**241.** **வாராக் காலத்து வினைச்சொற் கிளவி**
**இறப்பினு நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்**
**இயற்கையும் தெளிவும் கிளக்கும் காலை.**

என்பது என் நுதலிற்றோ எனின், இயற்கை தெளிவு என்னும் பொருட்கண் [1]எதிர்காலத்தோடும் இறந்தகாலம் நிகழ்காலத்தோடும் மயங்குமாறு [2]உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:— வாராக் காலமாகிய எதிர்காலத்துப் பிறக்கும் வினைச்சொல்லாகிய சொல்லின் பொருண்மை, இறப்புக்காலச்[3]சொல்-

---

240-12 i-v "நோவு"
ii-vii "நோதல்"
vi "நேர்தல்"

13 iv "அவ்வாறு"

14 v "ஆகலின்"

15 ii-vi-vii "சொல்லெடுப்பான்"

16 i-ii-vi "வைதான்"

17 vi "விட்டுத் தன் உடன்பாட்டு"

241 - 1 ii-vi "எதிர்காலம் இறந்தகால நிகழ்காலத்தோடு"
vi "எதிர்காலம் இறந்த காலத்தோடும் நிகழ்காலத்தோடும்"

2 v "உணர்த்தல்"

3 ii-vii "சொல்லானும் மிக"

லானும் நிகழ்காலச் சொல்லானும் மிகத் தோன்றும். யாண்டு எனின், ஒன்றனது இயற்கையினையும் ஒன்றனது தெளிவினையும் ஒருவன் சொல்லும் காலத்து என்றவாறு.

இயற்கை என்பது [4]வழங்குங்கால் தான் ஒன்றனை [5]இஃது இப்பெற்றியதாகும் என்று அறிந்திருந்த இயல்பு என்றவாறு.

தெளிவு என்பது ஒரு [6]நூல் நெறியான் [7]நிகழும் எனக் கண்டு [8]வைத்த துணிவு என்றவாறு.

உ-ம் :—

[9]இக்காட்டிற் புகிற் கூறை [10]கோட்பட்டான் எ-ம், [11]படுகிறான் எனவும் கூறுதல், இஃது இயற்கை.

எறும்பு முட்டைகொண்டு தெற்றி ஏறுவது கண்டுழி மழை பெய்வதாம் என்றது பெய்தது எ-ம், பெய்கின்றது எ-ம் கூறுதல், [12]இது தெளிவு.

இதுவும் சொல்லொடு சொல் மயக்கம். (௪௭)

242. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே.

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் சொற்கண் நிகழும் மரபு வழூஉவமைதி கூறுதல் நுதலிற்று.

---

241-4 v "வழங்கலால்"
i "வழங்குங் காலால்"

5 i-v "இப்பெற்றி.......றிந்திருந்த"

6 "நூனெறியான்" (?)

7 ii-vi-vii "இது நிகழும்"

8 vi-viii "வைத்துத் துணிதல்"

9 v-viii "இக்காட்டுள் போகின் கூறை கோட்படுவன் என்றது இக் காட்டில்"

10 i "கொய்யப்பட்டான்"

11 ii-vii "கூறை கோட்படுகிறான்"
viii "கோட்படுகிறான்"

12 i "இஃது"

இதன் பொருள் ;— [1]பிறிதொன்றனாற்றான் ஒரு தொழில் செய்யப்படுவதாகிய பொருளினைத் [2]தான் அத்தொழிலினைச் செய்தது போல [3]அத்தொழில் தன் மேற்படக் கூறுதலும் வழக்கின்கண்ணே நடக்கும் முறைமையுடையதாம் என்றவாறு.

உ - ம்:—

இல்லமெழுகிற்று ; சோறு அட்டது என வரும்.

இனி ஒன்றெனமுடித்தல் என்பதனால் இவ்வாள் எறியும் இச்சுரிகை குத்தும் எனச் செய்தற்கு [4]உடலாகிய கருவியைத் தான் செய்ததாகச் சொல்லுவதும், அரசன் எடுத்த ஆலயம் என்றாற்போல ஏவினானைக் கருத்தாவாகச் சொல்லுவதும் அமைத்துக்கொள்ளப்படும். எனவே, கருத்தாக் கருத்தாவும் ஏதுக் கருத்தாவும், கருவிக் கருத்தாவும், கருமகருத்தாவும் என நான்கு [5]வகைப்படும் என்பதூஉம், அவற்றுள் இது [6]கருத்தா [7]என்பதும் பெறப்பட்டது.

இன்னும் இந்நயத்தானே உண்டல் தின்றல் என்னும் தொழில்தன்னையும் உண்டது தின்றது என்று கருத்தாவினைப்போலக் கூறும் வாய்பாடும் [8]கொள்ளப்படும், (சஅ)

243. இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி.

என்பது என்நுதலிற்றோ எனின், மேற்கூறிய கால [1]மயக்கம் போல ஒரு பொருண்மையைக் குறியாது பல பொருட்கண்ணும்

242 - 1 ii-vi-viii "பிறிதொன்றனான்"
i 'பிறிதொன்றனாற்றேன்"
2 ii-vi-vii "தானத்தொழிலினை"
3 ii-vi-vii "தொழில் அதன் மேற்பட"
4 ii-vi-vii "உடலாகிய"
5 ii-vi-vii "வகைப்படூஉம் என்பதும்"
v "வகைப்படும் என்பதாம்"
6 vi "கரும கருத்தா"
7 v "என்பது பெறப்பட்டது"
8 i-ii-iv-vi-vii "கொள்க"
243 - 1 ii-vi-vii "மயக்கம் ஒவ்வொரு பொருண்மையை"

மயங்குவனவற்றுள், இறந்தகாலம் எதிர்காலத்தோடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்.— இறப்பும் எதிர்வும் என்று சொல்லப்பட்ட அவ்இருகாலமும்மயங்கும் சொல்லாகிய சொற்களிடத்து மயக்கமாய்த் [2]தோன்றும் என்றவாறு.

உ - ம் :—

யாம் பண்டுவிளையாடுவது இக்கா. யாம் பண்டு சூது பொருவது இக்கழகம் என வரும். (சகூ)

## 244. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்.

என்பது என் நுதலிற்றோ எனின், [1]இதுவும் பொருட்கண் [2]இறந்ததனோடு நிகழ்வது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—ஒழிந்த நிகழ்காலம் இறந்ததனோடு மயங்குதல் நீக்கார் ஆசிரியர் என்றவாறு.

உ - ம் :—

யாம் பண்டு விளையாடும் கா என வரும்.

இனி, ஒன்றென முடித்தல் என்பதனால் இறந்ததனோடு எதிர்வதும் நிகழ்வதும் மயங்கியவாறு போல நிகழ்வதனோடு இறந்ததுவும் எதிர்வும், எதிர்வதனோடு இறந்ததும் நிகழ்வதும் மயங்குமாறு கொள்க.

யாம் இன்று விளையாடா நின்றது இக்கா என்புழி [3]விளையாட்டிற்கு இக்கா எனவும் கூறுதல் நிகழ்கால மயக்கம்.

யாம் நாளை விளையாடுவது இக்கா என்புழி விளையாடிற்று எனவும் விளையாடா நின்றது எனவும் கூறுதல் எதிர்கால மயக்கம்.

---

243-2 v "தோற்றும்"

244-1 vi "இதுவும் அப்பொருட்கண்"

2 v "சிறந்ததனோடு"

3 i-viii "விளையாட்டிற்கி.......றிக்கா"
v "விளையாட்டி......றிக்கா"
ii-vii "விளையாடிற்று விளையாடுவது இக்கா"
vi "விளையாடிற்று எனவும் விளையாடுவது எனவும்" (இதுவே பொருத்தம் : டிற்றி—ட்டிற்கி மாருட்டம் ; இடையே சொற்கள் விடுபட்டன.)

அது மன் [7]மற்றையது இவை பெயர்.

மற்று, இச் சூத்திரத்தின் பொருண்மையும் இலேசின் பொருண்மையும் இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும் என்ற சூத்திரத்துள்ளும் அதன் இலேசினுள்ளும் அடங்குமால் எனின், அது நிரனிறை வாய்பாட்டதாகலான் [8]பெயரோடு இடைவரும் என்றும், வினையோடு உரிவரும் என்றும் கொள்ளக் கிடந்தமையின் இடையும் இரண்டோடு வரும் [9]என்றற்குக் கூறினன் என்பது. இனி அவ்இலேசு நிரனிறைச் சூத்திரத்ததாகலாற் புறத்து வழி வருதல் இடைச்சொற்காகவும் உள்வழி வருதல் உரிச்சொற்காகவும் கொள்ளக் கிடக்கும் என்பது கருதி [10]ஈண்டும் இருவகையானும் இடைவரும் என்பதற்கு [11]இலேசு கூறினன் போலும். (௧)

246. அவை தாம்,
புணரிய னிலையிடைப் பொருநிலைக் குத[1]நவும்
வினைசெயன் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவு
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியான் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங் காலை.

என்பது என் நுதலிற்றோ எனின், அவ் இடைச்சொற்களின் பாகுபாடு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

245-7 vi "மற்றையது எனவரும் இவை வினை"

8 i-ii-iv-vi-vii "பெயர் எனப்பட்டு வரும் என்னும்"

9 v "என்பதற்கு"

10 v "இரண்டும் இருவகையானும்"

11 i "இலேசு கூறினர்" (இந்த இயல் முழுவதும் இப்பிரதியில் இலேசு என்பது "இலேசு" என்றே வருகிறது. ஆதலின் பின் இப்பிரதி பேதம் காட்டப்பெற வில்லை.)

246.1 i "ன"

இதன் பொருள் :— மேல் இடைச்சொல் என்று [2]சொல்லப்பட்டவைதாம், இருமொழி தம்மிற் புணர்தல் இயன்ற நிலைமைக்கண் அவற்றின் பொருள்நிலைமைக்கு உதவிசெய்து வருவனவும், வினைச்சொற்களை முடிக்குமிடத்துக் காலம் காட்டும் இடைச் சொற்களோடு கூடித் [3]தாம்பால்காட்டும் சொற்களாய் வருவனவும், வேறுபாடு செய்த பொருண்மையிடத்து வேற்றுமையுருபாய் வருவனவும், வழக்கின்கண் தமக்கு ஓர் பொருளன்றித் தாம் அடைந்த பெயர்வினைகளை [4]அடையப்பண்ணி நிற்கும் [5]நிலைமையவாய் [6]வருவனவும், செய்யுளிடத்துப் பொருளின்றி ஓரோர் [7]ஓசையை நிறைத்தற் பொருண்மையவாய் வருவனவும், பெயர்வினைகள் போல விளங்கப் பொருளுணர்த்தாத [8]சொற்கள் தத்தம் குறிப்பானே ஒரு பொருளை உணர்த்தி வருவனவும் [9]ஒத்தல் என்னும் வாய்பாடு [10]தன்கண்ணில்லாக் கூற்றானே [11]நின்ற ஒப்புமைப் பொருண்மையை உணர்த்திவருவனவும் என்று சொல்லப்பட்ட அவ்விலக்கணங்களை உடையனவாம்; அவற்றைச் சொல்லுங்காலத்து என்றவாறு.

---

246 - 2 i-iv "சொல்லப் பட்டவை மொழி தம்மிர் புணர்தலியன் ... ....கண் அவற்றின்"
v "சொல்லப்பட்டவை தாம் மொழி தம்மிற் புணர்தலியன்ற நிலைக்கண் அவற்றின்'

3 i "தம்பால் காட்டும்"

4 i "அசையப்பண்ணி"

5 ii-vii "நிலைமையனவாய்"

6 i-ii-iv-vi-vii "வருவனவும் பெயர்ப் பொருளிடத்தும் பொருளன்றி"

7 i-ii-iv-vi-vii ' ஓரோர் அசையை"
v "ஓரோசையை"

8 i-ii-iv-vi-vii "சொற்கள் தம் குறிப்பானே"

9 vi "ஒத்த என்னும்"

10 ii-vi-vii "தன் கண் நில்லாத கூற்றானே" (ந - க மாறாட்டம்)
v "தன் கண் இல்லாக் கூற்றானே" ("தன் கணில்லா" என்பதனைப் பிரித்து எழுதுவதால் வந்த மாறுபாடுகள் காண்க)
i-v-viii "தன் கண்ணில்லா கூற்றானே"

11 v "நின்ற .... ... புப் பொருண்மையை '
ii-vi-vii "நின்ற வொப்புமைப் பொருண்மையை"

[12]உ - ம்:—

புணர்ச்சிக்கண் வருவன எழுத்தோத்தினுள் [13]இன்னேவற்றே என்னும் சூத்திரத்தான் ஓதப்பட்டன.

இனித் தன்வினமுடித்தல் என்பதனுல் காரம், கரம், கான் என்னும் எழுத்துச் சாரியையும் கொள்ளப்படும்.

வினைச் [14]சொற்கள் பால் காட்டி வருவன, வினையியலுள் [15]அம் ஆம் முதலாக ஈறுபற்றி [16]ஓதின எல்லாம் எனக் கொள்க,

இனி, அவ் வினைச்சொற்கள், காலமொடு வருவனவும், என்றனுற் காலங்காட்டி வருவன, உண்டான் என்புழி இடைக்கட் டகரமும், உண்ணு நின்றன் என்புழி [17]நின்றும், உண்பான் என்புழிப் பகரமும் அத்தன்மைய பிறவும் எனக் கொள்க.

காலம் உணர்த்தி வருதலான் அவை, காலம் எனப்பட்டன.

உண்டான் என்புழிக் காலங்காட்டும் டகரத்துடனே பால்காட்டும் ஆன் கூட வந்தவாறு அறிக.

இவ்வாறு பாலும் காலமும் காட்டுவன வினைக்கு என்று [19]ஓதினனேனும், அதனைப் பெரும்பான்மையாக்கி உண்டவன் என்றாற்போலப் பெயர்க்கும் கொள்க.

---

246-12 vi "புணர்ச்சிக்கண்"

13 i-ii-iv-vii "இன்னவற்றே"

14 i "சொற்கள் பால் பால் காட்டி"

15 i-iv "அம்மாடும் முதலாக"
ii-vii "அம்மாறும் முதலாக"

16 ii "ஓதி எல்லாம்"

17 ii-vi-vii "ஆ நின்றும்"

18 vi "ஆன் வந்தவாறறிக"

19 i-ii-iv-vii "ஓதினும்" ("ன-னே" விடுபட்டது)
v "ஓதினனேனும்"

இனி, ஒன்றென முடித்தல் என்பதனால் [20]வினைக்கட் பால் உணர்த்துவனவேயன்றிப் பெயர்க்கே உரிய வாய்பாட்டால் உணர்த்துவனவும் கொள்ளப்படும்.

அவை, நம்பி, நங்கை என்னும் இகர ஐகார [21]ஈற்றுப்போல்வன [22]எனக் கொள்க. வேற்றுமையுருபாய் வருவன வேற்றுமையோத்தினுள் அவைதாம் [23]பெயர் ஐ என்னும் சூத்திரத்துள் [24]பெயரை ஒழிந்த ஏழும் எனக் கொள்க.

இவற்றை [25]ஓத்தடைவு பற்றி முன் கூறாதது, வினைக்கண் வருவன பெரும்பான்மையாகல் பற்றிப் போலும்.

மற்றை, அசைநிலையும் இசைநிறையும் குறிப்பிற் பொருள் [26]செய்குநவும் இவ்வோத்தினுள் தத்தம் சிறப்புச் சூத்திரத்துள்ளே உதாரணம் காட்டப்படும்.

ஒப்பில் வழியாற் பொருள் [27]செய்குநவற்றிற்கு உதாரணம் இதன் [28]பின்னதிகாரத்துள் உவமையியலுள் காணப்படும்

இச்சூத்திரத்து முன்னைய மூன்றும் முன்னர் ஓதிப் போந்தன ஆகலான் முன் வைக்கப்பட்டன. பின்னையது பின்னதிகாரத்துக் கூறலால் பின் வைக்கப்பட்டது. இடையன இவ்வோத்தினுள் கூறப்படுதலான் இடைநின்றன. ஆயின் இடைக்கண் நின்ற மூன்ற-

---

**246**-20 ii-v-vi-vii-viii "வினைசொற்கட் பால்"

21 vi "ஈறுபோல்வன"

22 i "யெனக் கொள்க" (எ-யெ என ஒலிந்தல்)

23 i-ii "பெறு ... ... ரை என்னும்"

v "பெயரை என்னும்"

vi "பெயர் ஐ ஒடு கு என்னும்"

24 vi "பெயர் ஒழிந்த"

25 i-ii-v "ஒத்தடைவு" (ஓ - ஒ மாறுபட்டம்)

26 ii "செய்குவனவும்"

27 ii "செய்குவனவற்றிற்கு உதாரணம் இதன் பின்"
vi "செய்குநவற்றிற்கு இதன்பின்"

28 ii-vi "பின்னதிகாரத்து உவமை"

னுள்ளும் பொருள் செய்வதனை முன் [29]சொல்லாது, அசைநிலை இசை நிறைகளை முன் சொல்லியது என்னை எனின், இவை இரண்டும் ஒழிய ஈற்றின் முன்னும் பின்னும் நின்றவை எல்லாம் [30]பெரும்பான்மையினவையாய் நிற்றலானும், இவை தாம் [31]அவையாய் நிற்றலானும் இவை தாம் [32]அவையாய் நிற்றல் சிறுபான்மையாகலானும் என்பது. (உ)

247\. அவை தாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்மீறு திரிதலும் பிறிதவ ணிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

என்பது என் நுதலிற்றோ எனின், இன்னும் அவற்றிற்கு ஆவதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—மேல்[1]வகுக்கப்பட்டவை தாம் முன்னிடத்தும் பின்னிடத்தும் பெயர்வினையாகிய மொழிகளை அடைந்து வருதலும், அச்சொற்கள் தம் ஈறு ஒரு வழி எழுத்து வேறுபட்டு வருதலும், மற்றோர் இடைச்சொல் தான் நிற்குமிடத்தே நிற்றலும் ஆகிய அத்தன்மையையுடைய இலக்கணம் [2]எல்லாவற்றிற்கும் இலக்கணமாதற்கு உரிய என்றவாறு.

உ - ம்:—

முன்னடுத்தது : அது மன் கேண்[3]மியா என்பன.

---

246-29 i-ii-iv-vii "சொல்லாத அசைநிலை"

30 i-ii-iv vi-vii-viii "பெரும்பான்மையிவையாய்" (ன - ை மாறாட்டம்)

31 v "அளவையாய்"

32 v "அளவையாய் நிற்றலானும் பெரும்பான்மை யினவாய்" (இவைதாம் சிறுபான்மையாய் நிற்றலானும் என்றிருத்தல் வேண்டும் போலும்)

247-1 v "பகுக்கப்பட்டவை"

2 i-ii-iv-vii "எல்லாவற்றிசை இலக்கணம்"
v "எல்லாவற்றி ... ... இலக்கணம்"

3 i "கண்மியா"

பின்னடுத்தது : கொன்னூர் : [4]ஓ ஓதந்நார் என்பன.
ஈறு திரிந்தது : மன்னைக் காஞ்சி; இஃதொத்தன [5]என்பன.

மன்னைச் சொல் தில்லைச்சொல் என்பனவோ எனின், அவை பொருள் உணர்த்தாது சொல்தம்மை உணரநின்ற ; ஆகலான் ஈண்டைக்கு ஆகா எனபது. மற்று [6]என்னை திரிபு பெறுமாறு எனின், உடம்பொடு புணர்த்தல் என்பதனுன் அவற்றை இவ்வாறு ஓதிய சூத்திரங்களால் பெறுதும்[7] என்பது.

பிறிதவணிலையல் : மகவினை மடவை மன்றம்ம என்பது. (௩)

248. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

என்பது என்நுதலிற்றோ எனின், இது தத்தம் குறிப்பிற்பொருள் செய்குவனவற்றுள் [1]ஒன்றன் பொருட் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—[2]கழிவுப் பொருண்மைக்கண் வரும் மன்னும், ஆக்கப் பொருண்மைக்கண் வரும் மன்னும்,ஒழியிசைப் பொருண்மைக்கண் வரும் மன்னும் என மூன்று கூற்ரும் என்ப, மன் என்னும் சொல்லது[3]பொருள் பாட்டு வேற்றுமை [4]என்றவாறு.

உ - ம் :—

சிறிய கட்பெறினே யெமக் கீயுமன்னே ; இது கழிவு.

பண்டுகாடுமன்: இஃது ஆக்கம்.பண்டு காடுஎன்பதன்றே இன்று நாடு என்று ஆக்கம் உணர்த்துகின்றது எனின், அதன் பொருளை இதுவும் கூடிநின்று உணர்த்திற்று என உணர்க.

---

247.4 i "ஓ ஓ ததந்தார்"
5 vi "என்பன. பிறிதவணிலையல் மகவினை மடவை மன்றம்ம என்பது" (பின் முன்னுக எழுதப்பட்டது)
6 i "என்னைய" (ஒலிப்புமுறை காண்க.)
7 vi "என்பது. ௩ — கழிவே ஆக்கம்"
248.1 i "ஒன்றெனப் பொருட் பாகுபாடு"
2 i-ii-iv-vi "கழிவு பொருண்மைக்கண்"
3 v "பொருள் பாகுபாட்டு"
4 i-ii-iv-vii "ஒன்று. உ - ம்"

இவ்வாறு பொருள் உணர்த்தலும் அவ் இடைச் [5]சொற்கு ஆவதோர் இலக்கணம் [6]என்பது. அவ்வுதாரணம் உரையிற் கொள்ளப்படும்.

பண்டு [7]கூரியதோர் வாண்மன்; இஃது ஒழியிசை. இன்று ஓர் குறைவுபாடுடைத்தாயிற்று என்னும் சொல் ஒழிந்தமை தோற்றுவித்து [8]நின்றமை காண்க. (௪)

249. **விழைவே காலம் ஒழியிசைக் கிளவிஎன்**
**றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.**

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் அது.

இதன் பொருள்:-விழைவின் கண்ணதும், காலத்தின் கண்ணதும்; ஒழியிசைக் கண்ணதும் என மூன்று கூற்றதாம் [1]என்ப; தில் என்னும் சொல் என்றவாறு,

உ - ம் ;—

[2]**சின்மொழி யரிவையைப் பெறுகதில் லம்ம யானே**; இது விழைவு.

[3] **பெற்றாங் கறிகதில்** என்பது காலம்.

**வருகதில்லம்ம** [4]**எம் சேரி சேர** [5]என்பது ஒழியிசை. (௫)

---

248-5 i-ii-iv-vii "சொற் காரி ... ... இலக்கணம்"
v "சொற்கோர் இலக்கணம்"
6 i-ii-iv v-vii "என்பது இவ்வுதாரண உரையிற் கொள்ளப்படும்"
7 i-iv "கூறி தோர்"
ii-vii "கூறியதோர்"
8 v "நின்றது"

249-1 v "என்பது தில்"
2 i-iv "சின்மொழியரிவைப் பெறுக்கல்லம்மயானே" (புள்ளி மாறுபட்டம்; க - த மாறுபட்டம்)
ii vi "வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின் மொழியரிவையைப் பெறுகதில் லம்மயானே"
3 i-iv "பெற்றாங் கறிதகில்"
ii-vi-vii "பெற்றாங்கறிகதில்லம்ம விவ்வூரே"
4 i-iv "என்சேரி"
5 i-iv "என்ப குதாழியிசை" (ெ - கு மாறுபட்டம்)

250. அச்சம் பயமிலி காலம் பெருமைஎன்
றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் அது.

இதன் பொருள் :— அச்சத்தின் கண்ணும், [1]பயனின்மைக்-கண்ணும், காலத்தின் கண்ணும், பெருமைக் [2]கண்ணும் என அக் கூறு நான்காம் கொன்னைச்சொல் என்றவாறு.

உ - ம் :—

கொன்முனை யிரவூர் என்பது அச்சம், கொன்னே வந்தான் என்பது பயனின்மை. [3]கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ [4]இது காலம். கொன்னூர் துஞ்சினும் என்பது பெருமை. (சூ)

251. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம்என்
றப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

என்பது என் நுதலிற்றோ எனின், இதுவும் அது.

இதன் பொருள்:—எச்சத்தின் கண்ணதும்,சிறப்பின் கண்ணதும், ஐயத்தின் கண்ணதும், [1]எதிர்மறைக் கண்ணதும், முற்றின் [2]கண்-ணதும், எண்ணின் கண்ணதும், தெரிநிலைக் கண்ணதும், ஆக்கத்தின்-கண்ணதும் என[3] இக்கூறு எட்டாம் உம் என்னும் சொல் என்றவாறு.

---

250-1 i-ii-iv "பயனின்மை கண்ணும்"
2 ii "கண்ணும் அக்கூறு"
3 i "கொல் ... ... டை நின்றதெனக் கொண்டேனோ"
vi "கொன்வரல வாடை"
viii "கொன்வரலவாடை நின்றதென கொண்டேனோ"
4 i "காலம்"
ii-vi "என்பது காலம்"
251-1 v "கண்ணதும் எண்ணின்"
2 viii "கண்ணதும் தெரிநிலை"
3 vi "அக்கூறு எட்டாம் உம் என் என்று"
ii-vii "இக்கூற்றதாய் எட்டாம் உம் என்று"

எச்சம் இறந்தது[4] தழீஇயது எதிரது தழீஇயது என [5]இரு- வகைத்து.

முன் சாத்தான் வந்தான்; பின் கொற்றனும் வந்தான் என்பது இறந்தது தழீஇயிற்று.

வேறு ஒருவனும் வரும் என்பது பட நின்று சாத்தனும் வரும் என்பது எதிரது தழீஇயிற்று.

இன்னும் இவ்வெச்சம் [6]முழுவதும் ஒருபுடை தழுவுவதும் என இருவகைத்து.

அவையாவன : யான் கருவூர்க்குச் செல்வேன் என்றாற்கு யானும் அவ்வூர்க்குப் போதுவல் என்பதும், அவ்வாறு கூறினார்க்கு, யானும் உறையூர்க்குப் [7] போதுவன் என்பதூஉம் என இவை.

இனிச் சிறப்பு:—உயர்வு சிறப்பும், இழிவு சிறப்பும் என இருவகைத்து.

உயர்வு : [8]தேவர் வேண்டினும் வேம்புகைக்கும் என்பது.

ஊர்க்கு மணித்தே பொய்கை என்பதும் அது.

இழிபு :-அவ்வூர்ப் பூசையும் புலாற்றின்னாது எனவரும்.

ஐயம் :-பத்தும் எட்டும் உள என்பது.

[9]செய்தது மன்று என்பதும் அது.

---

251-4 ii-vi-vii "தழீஇயதும் எதிரது தழீஇயதும்"

5 i-ii-iv-vi-vii "இருவகைத்து அவையாவன" (மூன்று சொற்றொடர்கள் விடுபட்டுள்ளன.)

6 "முழுவதும் தழுவுவதும் ஒருபுடை" (?)

7 i-iv "போகுவல்"

v-viii "போகுவன்"

ii-vi "போதுவல்"

8 vi "தேவர்க்கும் வேம்பு"

9 ii-vii "செய்தது மன்றே"

vi (இச் சொற்றொடர் முழுதும் விடுபட்டுள்ளது.)

எதிர் மறை:-கொற்றன் வருதற்கும் உரியன் என்பது. இவ்வெதிர்-மறை அஃறிணை விரவுப் பெயரியல்பு மாறுளவே [10]என்றாற்போலப் பண்பு பற்றியும் வரும்.

எச்சத்தோடு இதனிடை வேற்றுமை என்னை எனின், அது பிறிதோர் பொருளினைத் தழுவும்; இஃது அப்பொருட்டானும் ஒரு-கூற்றைத் தழுவும் என்பது,

இனி முற்று:-தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் என்பது. யாதும் ஊரே நாளுமானுன் புகழுமன்னை என்பனவும் அவை.

இனி எண்:-நிலனும் நீரும் என்பது.

இனித் தெரிநிலை:-[12]நன்று தீதும் அன்று எ-து. [13]இடைநிகர்த்தது என்று ஓர் பொருண்மையைத் தெரிவித்து [14]நிற்றலான் தெரிநிலை என்று ஆயிற்று.

இனி ஆக்கம்:-நெடியனும் வலியனும் ஆயினுன் என்பது. இஃது எண்ணன்றே எனின், ஒரு பொருள் தன்னையே [15]சொல்லுதலின் அன்று ஆயிற்றுப் போலும்.

மற்றும் இதன் அகத்து விகற்பமெல்லாம் அறிந்து கொள்க. (எ)

252. பிரிநிலை வினவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக்கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே.

என்பது என்நுதலிற்றே எனின், இதுவும் [1]அதாம்.

---

251-10 ii-vi-vii "எனப் பண்பு"

11 ii-vi-vii "நாளுமன்னுன் புகழுமன்னை என்பனவும் முற்றும்மை. இனி எண் நிலனும் நீரும் வளியும் ஆகாயம் எனப் பூதமைந்து"

12 ii-vi-vii "நன்று மன்று தீது மன்று"

13 ii-vi-vii "இஃது இடை"

14 v "நிற்றலிற் றெரிநிலை"

15 v-viii "சொல்லுதலி னன்றாயிற்று"
i-vi "சொல்லுதலின் நன்றாயிற்று"

252-1 ii-vi-vii "அது"

இதன் பொருள்:-பிரிநிலைப் பொருண்மை, வினாப் பொருண்மை, எதிர்மறைப் பொருண்மை, ஒழியிசைப் பொருண்மை, தெரிநிலைப்-[2]பொருண்மை இவற்றைச் சிறப்புப் பொருண்மையோ[3]டே தொகுத்து ஆறு என்று சொல்லுப ஆசிரியர்; ஓகாரத்துப் பொருண்மை என்றவாறு,

உ - ம் :—

பிரிநிலை :- அவனோ கொண்டான் என்பது. இஃது இப்போது வினவாய் நடக்கின்றது என உணர்க.

இனி, வினா:-அவனோ அல்லனோ என்பது.

இனி எதிர்மறை:-யானோ கொள்வேன் என்பது.

இனி, ஒழியிசை:-கொளலோ கொண்டான் என்பது.

இனித் தெரிநிலை:-நன்றோ [4]அன்று தீதோ அன்று என்பது.

இனிச் சிறப்பு:-[5]ஓ ஓ பெரிது [6]என்பது. (அ)

253. [1]தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.

என்பது என்றுதலிற்றோ எனின், இது பெரும்பான்மை பொருள் பாடும் சிறுபான்மை அசைநிலையுமாவது [2]உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—தேற்றப் பொருண்மை, வினாப் பொருண்மை, பிரிநிலைப் பொருண்மை, எண்ணுப் பொருண்மை, ஈற்றசையாதல் என இவ்வைந்து [3]வகைப்படும் ஏகாரம் என்றவாறு.

---

252-2 ii-vi-vii "பொருண்மை என"

3 ii-vi-vii "டு"

4 i "வென்று"

5 i "ஓரு பெறி தென்பது"
vi ' ... ... ... (அ)"

6 i-ii "எ - து"

253-1 vi (இச் சூத்திர முழுதும் உரையும் இல்லை)
vi "தோற்றம் பிரிநிலை"

2 viii "என்று ... ... ற்று"
i-iv "என்றவாறு"

3 iv "கைகப்படும். உ-ம் தோற்றம்"

[4]உ - ம்:—

தேற்றம்:அவனே கொண்டான்.

[5]இனி வினா:-நீயே கொண்டாய்[6]

இனிப் பிரிநிலை:-அவனே கொண்டான்.

இனி [7]எண்:-நிலனே நீரே.

இனி ஈற்றிசை: - கடல்[8]போல் தோன்றல் காடிறந்தோரே. ஈற்றசை என்றமையான் மொழி முதற்கண் அசையாகாது என்பது. (௬)

254. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலத்தே எனஎன் கிளவி.

என்பது என்நுதலிற்றோ எனின், இது பொருள்படுவ தொன்று உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—முன்னின்ற வினைச் சொல்லைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் [1]பொருண்மை, குறிப்புப் பொருண்மைக்கண் வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் [2] சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மை, இசைப் பொருட்கண் வரும்

---

253 4 viii "தோற்றம்"

5 v "வினா நீயே கொண்டாய்" ('இனி' என்பது பின் வருவனவற்றுள்ளும் இப்பிரதியில் இல்லை,)

i-iv "இனி வினாவென் கொண்டாய்"

6 ii-vii "என்பது வினா"

7 iv "எண் இனி ஈற்றசை"
ii-vii ' எண்: நிலனே நீரே தீயே வளியே ... ... எனவரும்"

8 viii "தே ... ... ல காடிறந்தோரே"
ii-vii "போ ரேன்றல் காடிறந்தோரே என்பது ஈற்றசை"

254-1 vi "பொருண்மையும்" (இவ்வாறே பொருண்மை எனப் பின்வரும் இடத்தெல்லாம் உம்மை கொடுத் தெழுதுகிறது இப்பிரதி.)

2 i-iv "சொல்லோ ... ... இசைப் பொருட்கண்"

உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மை, பண்புப் பொருட்கண் வரும் உரிச்சொல்லினைப் பின் வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் பொண்மை....[3]. (ம)

[1]மியாயிக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயினாறும் முன்னிலை யசைச் சொல்.

என்பது என்நுதலிற்றோ எனின், ... ... ......

... ... .... ... ... யூர் கண்டி.

“காமம் செப்பாது கண்டது மொழிமோ ... ...”

“சென்மதி .....”

[2]இகும்;—“மெல்லம் புலம்ப [3]கண்டிகும்”

சின் :—காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்” (உசு)

[4]அவற்றுள்,

இகுமுஞ் சின்னும் ஏனையிடத் தொடுந்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்.[5] (உஎ)

---

254-3 (இதன் பின் v-vii-viii பிரதிகளில் இல்லை).

ii (இவ் விடைச் சொல்லியல் பத்தாஞ் சூத்திரமாய விதுமுதல் இறுதியான சூத்திரம் வரையிலுள்ள பாகமில்லை என்ற குறிப்புண்டு.)

1 i (இச் சூத்திரம் இல்லை)

2 i “இதும்”

3 ii “கண்டிகும் எனவரும் இனி சின்”

4 i “அவற்றுள் ... ... ... நிலையுடைய”

5 (இதன் பின் எந்தப் பிரதியிலும் மூலமும் உரையும் இல்லை.)

# [1]தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

### கிளவியாக்கம்

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து. சொல்லதிகாரம் என்பது இடுகுறியோ காரணக் குறியோ எனின், காரணக்குறி ; என்னை ? சொல் உணர்த்தினமையாற் [2]பெற்றேம் என்க. அதிகாரமாவது முறைமை என்றவாறும்.

இனிச் சொல் என்றபொருண்மை என்னை எனின், ஓசை என்றவாறும். "ஓசையைச் சொல் என்றிரால்; கடலொலியும், சங்கொலியும், விண்ணொலியும் சொல்லாகாதோ" எனின், இசை எனினும் அரவம் எனினும் எழுத்தாகிய ஓசைக்கும் எழுத்தல் ஓசைக்கும் பொதுவாம் ; சொல் எனினும், கிளவி எனினும், மொழி எனினும், எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை மேல் நிற்கும். முற்கும் வீளையும் இலதையும் என்னும் தொடக்கத்தனவோ எனின், அவை எழுத்தொடு புணராமையின் சொல் ஆகா. அவையும் பொருள் அறிவுறுக்கும் என அறிக. இனி, எழுத்தொடு புணர்ந்த ஓசையே சொல் எனப்படுவது என்றறிக. அச்சொல் எழுத்தினான் ஆகி வருதலான், ஆக்குவதை முன் உணர்த்தி, ஆக்கப்[3]படாததினைப் பின் உணர்த்தினார். வரியெழுத்தும் சொல்லாம். பிறவாமையின் சொன்முன் வைக்கற்பாலீர் எனின், [4]அகரம் என்றவிடத்து நான்கு சொல்லின் ஒன்று மூன்று சொல்லின் ... ... என்பது இயற்றிற்கும்.

---

A-1 "தொல்காப்பியம் சொல்லதிகாரம் (உரையுடன்) சொல்லதிகாரம்" (என்பது மற்றொரு பாடம். இந்த உரை நச்சினார்க்கினியர், சேனாவரையர், இளம்பூரணர், கல்லாடர், தெய்வச்சிலையார் இவர்கள் உரையினும் வேறு.)

2 "பெற்றேம்"

3 "பட்டதனை" என்பது போலும்.

4 "இப்பகுதி விளங்கவில்லை"

இனி, அச்சொல் எனைத்துவகையான் உணர்த்தினானோ எனின், எட்டு வகையான் உணர்த்தினா[5]ர். அவ்வெட்டு வகைப்பட்ட இலக்கணமும் உணர்ந்தான் சொல்லுணர்ந்தான் ஆம். அவ்வெட்டு-வகையும் யாதோ வெனின், இரண்டு திணை வகுத்து, அத்திணைக்கண் ஐந்து பால் வகுத்து, எழுவகை வழூஉ வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறுவகைப்பட்ட தொகை வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டு இடம் வகுத்தலான் இவை சொல்லாராய்ந்த எட்டிலக்கணமும் ஆவன.

அவற்றுள், இரண்டு திணை என்பன ; உயர்திணை, அஃறிணை.

ஐந்து பாலென்பன : ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல.

ஏழ்வழூஉவாவன : திணைவழூஉ, பால்வழூவு, இடவழூஉ, கால-வழூஉ, மரபுவழூஉ, செப்புவழூஉ, வினாவழூஉ.

எண்வகை வேற்றுமை யாவன : எழுவாய் வேற்றுமை முதலாக விளி வேற்றுமை ஈறாகப்பட்டன.

அறுவகைப்பட்ட தொகையாவன : வேற்றுமைத் தொகை, உவமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத்-தொகை, அன்மொழித் தொகை.

மூன்றிடம் என்பன : தன்மை, முன்னிலை, படர்க்கை.

மூன்று காலம் என்பன : இறந்த காலம், எதிர் காலம், நிகழ்-காலம்.

இரண்டிடம் என்பன : வழக்குளிடம், செய்யுளிடம்.

என இவ்வாறு சொல்லுப.

இவ்வெட்டன் புடைபெயர்ச்சியே கிளவியாக்கம் முதலாக எச்ச-வியல் இறுதியாகக் கிடந்த ஒன்பது [6]ஓத்தினுள்ளும் ஆராயப்பட்டது எனக் கொள்க.

இனி, கிளவியாக்கம் என்பது இடுகுறியோ, காரணக்குறியோ எனின், காரணக்குறி. என்னை காரணம் எனின், கிளவி என்பது சொல் ; ஆக்கம் என்பது அமைத்துக் கோடல் ; சொற்களை அமைத்துக்

---

A - 5 "ன்"

6 "ஒற்றி"

கொள்ளப் பட்டமையின் கிளவியாக்கம் என்னும் பெயர் பெற்றது; அரிசி ஆக்கிக்கொண்டார் என்பது போல. மற்றரிசி ஆக்குமிடத்து நொய்யும் நுறுங்கும் களைந்து கொள்ளப்படுவது போல ஈங்கும் களைந்து கொள்ளப்படும் சொல் உளவோ எனின், உள. அவை, வழீஇயினசொற் களைந்து வழூவாதன கொள்ளப்பட்டது இவ்-ஓத்தினுள் என்பது.

இன்னமும் ஒன்று: கிளவி என்பது சொல். ஆக்கம் என்பது சொற்களை பொருண்மேலாமாறு உணர்த்தினமையான் சொல்லாக்கம் என்று பெயர் [7]பெற்றது. என்னை, ஒருவன் மேலாமாறு இது, ஒருத்தி-மேலாமாறு இது, பலர் மேலாமாறு இது, ஒன்றன் மேலாமாறு இது, பலவற்றின் மேலாமாறு இது, வழூவாமாறு இது, வழூவமையுமாறு இது, பொருட்கண் மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்று பெயர் பெற்று, மற்று ஏனை ஓத்தின் உணரும் பொருள் மேலாய் நின்றவாறு இலக்கணம் உணர்த்தினர், ஈண்டும் அவை தம்மையே ஒன்பது ஓத்தினுல் உணர்த்தினர் என்பது.

இனிப் பெயர் முதலாகிய நான்கு வகைப்பட்ட சொல்லிற்கு இவ்வோத்தினுட் பொதுவிலக்கணம் உணர்த்தினர். பெயர்ச் சொல்லது இலக்கணம் வேற்றுமை ஓத்தினுள்ளும், வேற்றுமை-மயங்கியலுள்ளும், விளிமரபினுள்ளும் உணர்த்தி [8]பெயர் முதல் உரி ஈருக அவற்றது இலக்கணம் அடைவே விரித்துணர்த்தி, எஞ்சி நின்ற சொற்களை எச்சவியலான் உணர்த்தினர் என்க. இவ்வகையான் எல்லாம் உணர்த்தினர் ஆகலின் ஒன்பது ஓத்தும் வேண்டிற்று என்க.

**1. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே**
**அஃறிணை என்மனார் அவரல பிறவே**
**ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.**

எ - து. மக்கள் என்று சுட்டப்படும் பொருளை உயர்திணை என்று சொல்லுப ஆசிரியர். மக்களல்லாத பிற பொருளை அஃறிணை என்று சொல்லுப ஆசிரியர். அவ்விரு திணையினையும் சொல்லும் சொல்லும் உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லுமாம்.

எனவே சொல்லும் பொருளும் வரையறுக்கப் பட்டது.

---

A - 7 "பெற்றுது"

8 "புணர்த்திப் பெயர்"

உயர்திணை என்றது பிறப்பினிற் சிறப்பெய்துதற்கு மக்கள் நிலைமை மிக்க சார்வாகலான், என்மனார் என்பது [1]என்ப என்னும் [2]முற்றுச் சொல் குறைக்கும் வழிக் குறைத்தல் என்பதனாற் பகரத்தைக் குறைத்து விரிக்கும் வழி [3]விரித்தல் என்பதனான் மன்னும் ஆரும் என்பன இரண்டு இடைச்சொற் பெய்து விரித்தார்.

என்றார் என்பதனை என்மனார் என எதிர்காலத்தாற் சொல்லியது என்னை?

இறப்பே எதிர்வே ஆயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்றும் மயங்கு மொழிக் கிளவி என்பதாகலாற் கூறினார்.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். மன் என்ற இடைச்சொல் மன என ஈறு திரிந்தது. மன் என்று பாடம் ஓதுவாரும் உளர். [4]உயர்த்ததிணை எனும் இறந்தகால வினைத்தொகை உயர்திணை எனத் தொக்கது.

[5]ஆசிரியர் என்பது இச்சூத்திரத்து இல்லை எனின், [6]என்ப என்னும் முற்றுச் சொல்லே பெறும். முற்றுச் சொல் எச்சப் பெயர் கொண்டு முடியும் என்பதாகலான்.

அவ்விரு திணையினை என இரண்டாவது விரித்து உரைக்க. (க)

2. ஆடூஉவறி சொன் மகடூஉவறி சொற்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
யம்முப் பாற்சொ லுயர்திணை யவ்வே.

எ - து. ஆண்மகனையும் [1]பெண்டாட்டியையும் அவ்விருவரது பன்மையாகிய பல்லோரையும் அறிவிக்கும் சொல்லொடு பொருந்திய

---

1 - 1 " யெ "

2 " முற்றச் சொல் "

3 " விருத்தல் "

4 (உயர்ந்த போலும்)

5 " ஆசரியர் "

6 " யெ "

2 - 1 (இவ்வழக்கு இவ்வுரை பழையது என்பதனை உணர்த்தும். சேனாவரையரும் இவ்வாறு வழங்குவர்.)

அம்: மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணையை அறிவிக்கும் சொல்லாம்.

அவ்வே என ஆருவதன் பன்மையாகக் கொள்க. (உ)

3. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொ லஃறிணை யவ்வே.

எ-து. ஆண் பெண்ணாகிய ஒன்றனையும் அவ்விரண்டினது பன்மையாகிய பலவற்றையும் அறிவிக்கும் சொல்லொடு பொருந்திய அவ்விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையை அறிவிக்கும் சொல்லாம்.

உயர்திணையவ்வே, அஃறிணையவ்வே எ-து, உயர்திணை என அம் முப்பாற் சொல் அஃறிணை [1]என ஆயிருபாற் சொல் என.

ஏ ஈற்றசை. (ங)

4. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கி
னாண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியுந்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியு
மிவ்வென வறியு மந்தந் [1]தமக்கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.

எ-து [2]பெண்மைத் தன்மை எய்திய உயர்திணையிடத்து ஆண்மை நீங்கிய பெயர்ப் பொருளும் தெய்வஞ் சுட்டிய பெயர்ப்பொருளும் [3]பாலறிய நிற்கும் ஈற்றெழுத்து இத்தன்மையன எனத் தமக்கு உடையவல்ல; உயர்திணை முப்பாலினையும் விளக்கும் எழுத்தினையே ஈறாக இசைக்கும்.

[4]உ-ம்:—பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார்.

---

3-1 "யன"

4-1 "பாடம் நோக்குக"

2 "பெண்மை தன்மை"

3 "பாலறிக"

4 "உதாரணம்"

வாசுதேவன் வந்தான், திருவினள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார் [5]என[6]வரும். [7]உயர்திணை மருங்கின் என்பதனை ஆண்மை சுட்டிய என்று மொழிமாற்றி உரைக்க. அந்தந் தமக்கிலவே என்றதனுற் நாகன் வந்தான், நாகி வந்தாள், நாகர் வந்தார் எனத் தேவரும் மக்களும் அல்லாத நாகர்க்கும் அம் முடிவு கொள்க. (௪)

5. னஃகா னொற்றே [1]யாடூஉ வறிசொல்.

எ-து. னகர வொற்றே ஆண்மகனை அறிவிக்கும் சொல்.

உ-ம்:—உண்டான், உண்ணு [2]நின்றான், உண்பான் [3]என மூன்று கால வினையானும், கரியன் செய்யன் எனக் காலந் தோன்றாத வினைக்குறிப்பானும் அறிக. (௫)

6. ளஃகா னொற்றே [1]மகடூஉ வறிசொல்.

[2]எ-து.

உ-ம்:—உண்டாள், உண்ணா நின்றாள், உண்பாள் [3]என்னும் மூன்று கால வினையானும், கரியள், செய்யள் என்னும் வினைக்குறிப்பானும் உணர்க. (௬)

---

4-5 "யெ"

6 "வரும். வாசுதேவன் வந்தான்; திருவினள் வந்தாள்; முப்பத்து மூவரும் வந்தார் என வரும். உயர் திணை" (பால் பிரிந் திசைப்பினவற்றை வேறு காட்டிய சொற்கள் விடுபட்டன போலும்.)

7 (இங்கும் சொற்கள் விடுபட்டுள்ளன. பிறவுரை காண்க.)

5-1 "யாடு"

2 "நின்டான்"

3 "யென"

6-1 "மகடு"

2 (எ-து என்று மட்டும் உள்ளது. உரையின்றி உதாரணமே தாப்பட்டுள்ளது. பின் சூத்திரங்களில் எ-து என்பதும் இல்லை. உதாரணமும் குறிப்புமே உள.)

3 "யெ"

7. ரஃகா னொற்றும் பகர விறுதியும்
மாரைக் கிளவி யுட்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

*உ-ம்:*—உண்டார், உண்ணா நின்றார், உண்பார் [1]*என்னும் மூன்று கால வினையானும்;* கரியார், செய்யார் *என்னும் வினைக் குறிப்பானும்* **உண்ப, தின்ப, கொண்மார்** வந்தார் *என எதிர்கால முற்றுச் சொல்லானும் அறிக.* (௭)

8. ஒன்றறி கிளவி தறட வூர்ந்த
குற்றிய லுகரத் திறுதி யாகும்.

*உ-ம்:*—உண்டது, உண்ணா நின்றது, உண்பது; கரிது, செய்து *எனக் காலம் மூன்றானும், வினைக் குறிப்பானும்,* கூயிற்று; தாயிற்று; கோடின்று; குளம்பின்று; உகிரின்று; மயிரின்று *என இறந்த காலத்தானும் வினைக்குறிப்பானும்,* குண்டுகட்டு; கொடுந்தாட்டு *என்ற வினைக்குறிப்பானும்* **தறடக்களை** *ஊர்ந்துவந்த குற்றியலுகரத்தான்* ஒன்றறிசொல் *என்று அறிக.* (௮)

9. அ ஆ வ [1]வென வரூஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவறி சொல்லே.

*உ-ம்:*—உண்டன; உண்ணா நின்றன; உண்பன; கரிய; செய்ய [2]*எனக் காலங்களானும், வினைக்குறிப்பானும்* உண்ணா; தின்னா *என்னும் முற்றுச் சொல்லானும்* உண்குவ; தின்குவ *என எதிர்காலத்தானும்* ஆக அ ஆ வ *என்னும் அம் மூன்று சொல்லானும் பன்மையானும் உணரப்படும் என்று அறிக.* (௯)

10. இருதிணை மருங்கி னைம்பா லறிய
வீற்றுநின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

[1]*உ-ம்: — உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும்* ஒருவன், ஒருத்தி, *பலர்,* [2]*ஒன்று, பல என்னும் ஐந்து பாலும் அறிய* இறுதியி-

7-1 "*யெ*"
9-1 "*யென*"
2 "*யெ*"
10-1 **(எ-டு என்றிருத்தல் வேண்டும். இங்கிருந்து உதாரணத்தைக்-கொண்டே பொருளை விளக்காது, பொருள் கூறிப் பின்னர் உதாரணம் தருதல் காண்க.)**
2 "*யொ*"

னின்றுணர்த்தும் பதினோரெழுத்தும் புலப்படுமிடத்து வினையொடு நடக்கும். அவையாவன :—னகாரமும் ளகாரமும் ரகாரமும் பகாரமுமாகும். துவ்வும் றவ்வும் டவ்வும் அவ்வும் ஆவும் வவ்வும் [3]என இவை முன்சொன்ன சூத்திரங்களின் வினையொடு நடக்குமாறு கண்டு கொள்க. (௰)

**11. வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்**
**பெயரிற் றோன்றும் பாலறி கிளவியு**
**மயங்கல் கூடா தம்மர பினவே.**

எ - து. வினையினாற் பாலறியப்படும் பொருளும், பெயரினாற் பாலறியப்படும் பொருளும் மயங்குதலைப் பொருந்தா. அவை தத்தம் இலக்கணத்தனவாயே வரும்.

உ - ம் : — உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை என வினை [1]நிற்ப பெயர்மேல் தத்தம் மரபினான் வந்தன.

அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அது உண்டது, அவை உண்டன [2]என இவைப் பெயர் நிற்ப வினைமேல் தத்தம் மரபினான் வந்தன.

[3]இனி மயங்கல் கூடா எனவே அவற்று மயக்கம் உண்டென்பது சொல்லப்பட்டதாம். அம் மயக்கம் எழுவகைப்படும்.

அவை ஆவன:-[4]திணை மயங்கிவந்துழி வழுவென்று கொள்க (கக)

**12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி**
**யாண்மை யறிசொற் காகிட னின்றே.**

---

10 - 3 "யெ"

11 - 1 "நிறப் பெயர்"

2 ' யென"

3 " யினி"

4 (சொற்கள் விடுபட்டுள்ளன. பிற உரை காண்க.)

எ - து. ஆண்மையிற்றிரிந்து பெண்மை நோக்கி நின்ற பெயர்ப் பொருள் [1]ஆண்மை அறிவிக்கும் ஈற்றெழுத்திற் சொல்லுதற்கு ஏலாதாம்; எனவே பெண்பாலானும் பன்மைப் பாலானும் சொல்லுக என்பதாம்.

உ - ம் :—பேடி வந்தாள், பேடியர் வந்தார் என வரும். [2]ஆகிடனின்றே என்றமையாற் சிறுபான்மை பேடிவந்தான் என ஆண்பாலும் கொள்க. (கஉ)

## 13. செப்பும் வினவும் வழாஅ லோம்பல்.

எ - து. செப்பினையும் வினாவினையும் வழுவாமற் போற்றிச் சொல்லுக.

[1]அவை வருமாறு :—'நுங் நாடியாது' என்றக்காற் பாண்டி [2]நாடு என்பது. [3]இது வினாவானும் சொல்லானும் வழுவாது வந்தது. வழாஅலோம்பல் எனவே, செப்பு ஆறு வகைப்படும், வினவெதிர் வினதலும், [4]ஏதலும், மறுத்தலும், உற்றதுரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும் என.

அவற்றுள் : வினவெதிர் வினதலாவது :—சாத்தா சோறுண்ணுயோ? என்றால் உண்ணேனே என்பது.

ஏதலாவது :—சாத்தா சோறுண்ணுயோ ? என நீ உண் என்பது.

மறுத்தலாவது :—சாத்தா சோறுண்ணுயோ ? என உண்ணேன் [5]என்பது.

உற்றதுரைத்தலாவது :—சாத்தா சோறுண்ணுயோ ? என [6]வயறு குத்தும் என்பது.

---

12 - 1 "ஆண்மைகளை"

2 "ஆகி நின்றே"

13 - 1 "யவை"

2 "ஞ"

3 "யிது"

4 "ஏவுதலும்"

5 "யெ"

6 "வயிறு"

[7]உடம்படுதலாவது: — சாத்தா சோறுண்ணாயோ? என உண்பேன் என்பது.

[8]அவற்றுள் மறுத்தலும் உடம்படுதலும் செப்பிலக்கணமாகக் கொள்க.

வழுவாமற் சொல்லுக எனவே வழுவாதலும் உண்டு.

அது வருமாறு:—கருவூர்க்கு வழி ஏதோ? என்னப் பருநூல் பன்னிரண்டு தொடி என்பது. [9]இது வினாவிற்கு இறைபட வாராமையின் வழுவாயிற்று. இத்தொடக்கத்தன சொல்லற்க.

இனி முன்னை இலேசினால் வினா ஐந்து வகைப்படும்.

அறியான் வினாதல், அறிவொப்புக் காண்டல்,
[10]ஐயம் மறுத்தல், அவனறிவு தான் காண்டல்,
மெய்யவற்குக் காட்டலோ டைந்து.

அவற்றுள், அறியான் வினாதலாவது:—இச்சூத்திரத்திற்குப் பொருள் என்னையோ? என்பது.

[11]அறிவொப்புக் காண்டலாவது:—[12]இச்சூத்திரத்திற்குப் பொருள் யானறிந்தாங்கே அறிந்தான் கொல்லோ என்று அறிதற்கு வினாதல்.

ஐயமறுத்தலாவது:—இச்சூத்திரப் பொருள் கேட்டுத் துணியாது நின்றான் அறிந்தானை வினாவியறிதல்.

அவனறிவு தான் காண்டலாவது:—இவன் இச்சூத்திரத்திற்குப் பொருந்துமாறு உரைத்தல் காண்டல் என்று அவனுணர்வின் பகுதி தான் ஆராய்வான் வினாதல்.

மெய்யவற்குக் காட்டலாவது:—இவன் இச்சூத்திரத்திற் பொருளைத் திரியக் கொண்டான் என்பதனைத் தானறிந்தானவன்

---

13 - 7 "யு"
8 "ய"
9 "யி"
10 "அய்ய"
11 "ய"
12 "யி"

பிழைத்துரைத்தக்[13]காற் பிழைப்பித்துத் தெருட்டித் தான் நன்குரைப்பான் வினுதல். இவை ஐந்தும் வினுவுதலேயாம். இனி வினுவழு வருமாறு:—[14]கருவூரோடு காவிரிப்பூம் பட்டினத்திடை [15]என் உண்டு என்பது. காதமேயறியலுறுவதெனின் எனைத்துக் காத முண்டு எனற்பாற்று. அவ்விடைப் பொருளை அறியலுறுவ தெனின், என்னுள [16]எனற்பாற்று. [17]அவ்வாறு சொல்லாமையின் வழுவாயிற்று. [18]ஆகையால் இத்தொடக்கத்தன வினுவற்க. (கங)

14. வினுவுஞ் செப்பே வினுவெதிர் வரினே.

எ - து. வினுவும் செப்பாகும் அதற்கு இறைபட வரின்.

உ - ம்:—சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ என்று வினுவினுற்குச் செல்லேனே என்று வினுவவே செல்வேன் என்னும் பொருள் பட்டமையின் வழுவே ஆயினும் செப்பாயிற்று. [1]இது வழுவமைதி. (கச)

15. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
யப்பொருள் புணர்ந்த கிளவி யான.

எ - து. சூத்திரம். செப்புதல் வழீஇயினவிடத்து மாற்றப்[1]படாது, பொருளொடு புணர்ந்த [2]சொல்லாயின்.

உ - ம்:—சாத்தா [3]கருவூர்க்குச் செல்லாயோ எனக் [4]கால் முட்குத்துற்றுத் தலை நோகின்றது என்ற வழியும், சாத்தா [5]கருவூர்க்குச் செல்லாயோ எனக்-

---

13 - 13 "காஎப் பிழைப்பித்து" ("கால் பிழையைத் தெருட்டி" என்பது பாடம் போலும்.)

14 "கருயூரோன்"

15 "யேன்"

16 "என்ற பாற்று"

17 "ய"

18 "யா"

14 - 1 "யிது"

15 - 1 "படாத"

2 "சொல்லாயின"

3 "கருயூர்க்கு"

4 "கால"

5 "கருயூர்க்கு"

கடனுடையார் வளைப்பர்; பகைவரேறிவர் எனச் சொல்லுதலும், சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ என நீ செல் என்பதும் வழுவே ஆயினும், உற்றதுரைத்தலும், உறுவது கூறலும், [6]ஏதலுமாய் வந்து செல்லேன் என்னும் பொருள் பட்டமையின் அமைக.

[7]இதுவும் வழுவமைதி. (கரு)

16. செப்பினும் வினாவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே.

எ - து. செப்புமிடத்தும் வினாவுமிடத்தும் சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் முதலொடு முதலும் சினையொடு சினையும் [1]பொரூஉக.

உ - ம் :— கொற்றன் மயிர் நல்லவோ சாத்தன் மயிர் நல்லவோ என்று வினாவினவிடத்துக் கொற்றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல ; சாத்தன் மயிரிற் கொற்றன் மயிர் நல்ல என்று செப்புக. [2]இந்நங்கை முலை நல்லவோ, [3]அந்நங்கை முலைநல்லவோ என்று வினாவினவிடத்து இந்நங்கை [4]முலையின் அந்நங்கை முலைநல்ல ; அந்நங்கை [5]முலையின் இந்நங்கை முலை நல்ல என்று செப்புக. கண் பல் என்னும் தொடக்கத்தனவும் அவை. இவை சினையொடு பொரீஇயவாறு.

இனிக் கொற்றன் நல்லனோ சாத்தன் நல்லனோ என்று வினாவின விடத்துக் கொற்றனிற் சாத்தன் நல்லன், சாத்தனிற் கொற்றன் நல்லன் என்று செப்புக. அரசர் முதலாயினாரையும் இத்தன்மை கொள்க.

இனி அப்பொருளாகும் உறழ்துணைப் பொருள் [6]என்றமையால், [7]இந்நங்கை கண் நல்லவோ [8]அந்நங்கை முலை நல்லவோ [9]என்றும்,

---

15 - 6 " ஏவுதலும் "
7 " யிது "

16 - 1 ( பழமை காண்க )
2 " இன்னங்கை "
3 " அன்னங்கை "
4 " முலையில் "
5 " முலையில் "
6 " யெ "
7 " இன்னங்கைக் கண் "
8 " அன்னங்கை "
9 " என்னும் "

எம்மூர் அரசன் நல்லனே [10]உம்மூர்க் கோலிகன் நல்லனே என்றும் சினையு முதலும் பிறழப் பொருஉவற்க.

> உப்பக்க நோக்கி [11]னுபதேசி தோண்மணந்தா
> னுத்தர மாமதுரைக் கச்சென்ப — விப்பக்க
> மாதான பங்கி மறுவில் [12]புகழ்ச் செந்நாப்
> போதார் புனற்[13]கூடற் கச்சு.

மாதானபங்கியாவார் திருவள்ளுவ தேவர்.

> நறுநீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப்
> பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
> [14]பறநாட்டுப் பெண்டி ரடி.

> மேற்றா னிருந்த வுயர்சினைக் கொன்றானிற்
> றேற்றா வொழுக்கம் படுவனகொன் — மாற்றார்
> உறுமுரண் சாய்த்தா னுயர்குடந்தை யாட்டிச்
> சிறுமருங்குல் செற்ற முலை.

என்னும் பாட்டுக்கள் முதலும் சினையும் பிறழ்ந்தன வாயினும் பிறழ்வல்ல என்று இத்துணையன பொருஉக.

இந் நங்கை கண் நல்லவோ, கயல் நல்லவோ எனவும், புலிபோலப் பாய்ந்தான் எனவும், மழை வண்கை எனவும், துடிபோல் நடு எனவும், வேய்போலுந் தோள் எனவும், பொன்போலு மேனி [15]முத்துப்போலும் பல் எனவும் வந்தனவால் எனின் அன்னவை பிறழ்வல்ல. என்னை?

> வினைபய மெய்யுரு வென்ற நான்கே
> வகைபெற வந்த வுவமத் தோற்றம் [16]என்பதனா னுறழ்க.

அப்பொருளாகும் என்றதனால் எண்ணுமிடத்து முத்தும் பவளமும் மணியும் பொன்னும் என்றெண்ணுக; முத்துங் கருவிளம் பரலு மணியுங் காளங் கோழியும் பொன்னும் என்று எண்ணற்க. (கசு)

---

16 - 10 "யும்மூர்க் கொலிகள் :"
11 "நுபதேசி"
12 "புகழ்ச் சொன்னு"
13 "கூடாகச் சுக்"
14 "யறநாட்டுப்"
15 "முற்று"
16 "யென்பத"

**17. தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்**
**பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.**

எ - து. தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் பொருந்தி நடக்கும் இலக்கணப் பகுதிச் சொ[1]ல் கடியப்படா.

தகுதி இரண்டு வகைப்படும்: — மங்கல மரபினாற் கூறுதலும் இடக்கர் அடக்கிக் கூறுதலும் என.

செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், விளக்குப் பெருகிற்று என்றலும் இத்தொடக்கத்தன மங்கல மரபு.

கண்கழீஇ வருதும், கான்மேல் நீர் பெய்துவருதும், அந்திதொழுதுவருதும், கைக்குறியராயிருந்தார், பொறையுயிர்த்தார் [2]என்னுந் தொடக்கத்தன இடக்கரடக்கு.

இனி வழக்காவது நான்கு வகைப்படும். அவை, இலக்கண வழக்கு, இலக்கணத்தொடு பொருந்திய மரூஉவழக்கு, மரூஉவழக்கு, குழூஉவின் வந்த குறுநில வழக்கு [3]என்பவற்றுள் நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், சோறு, கூழ், பால், பாளிதம், மக்கள், மரம், தெங்கு, கமுகு இத்தொடக்கத்தன இலக்கண வழக்கு.

இல்முன் என்பதனை முன்றில் என்றும், கண்மீ என்பதனை மீகண் என்றும், யாவர் என்பதனை யார் என்றும் வருதல் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉவழக்கு.

அருமருந்தன்னான் என்பதனை அருமருந்தான் என்றும், பொதுவில் என்பதனைப் பொதியில் என்றும், மலையமானாடு என்பதனை மலாடு என்றும், சோழநாடு என்பதனை சோணாடு என்றும் சொல்லுதல் மரூஉ வழக்கு.

பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றலும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும், யானைப்பாகர் ஆடையைக் கூறை என்றலும், இழிசினர் சோற்றைச் சொன்றி என்றலும் குழூஉவின்வந்த குறுநில வழக்கு.

---

17 - 1 " ற் "

2 " யெ "

3 " யெ "

[4]இனி ஒரு சாரார் குழுவின்வந்த குறுநிலவழக்கும், இடக்கரடக்கலும் மங்கல மரபினாற் கூறுதலும் என்ற இம் மூன்றையும் தக்கவாறு சொல்லுதலான் தகுதி என்றாக்கி, ஒழிந்தவற்றையெல்லாம் [5]வழக்காறு என்ப.

இனி, அவர் வழக்காறு சொல்லும்படி :-கரிது வெளிது என்கையும், கிழக்கு [6]மேற்கு என்கையும், சிறிது பெரிது என்கையும், கருமைசெம்மையாகிய பண்பினாலன்றி வெள்ளாளரை வெண்களமர் [7]என்றும், புலையரைக் கருங்களமர் என்றும் சாதிபற்றி [8]வெள்ளாடு என்றும் சொல்லுதல் வழுவன்று; செவ்வழக்கு என்ப, தழீஇயின ஒழுகும் என்றமையால் என்ப. (கஎ)

18. இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

எ - து. இனத்தைச் சுட்டாது பண்பு கொண்டு நின்ற பெயர்ச்சொற்கள் வழக்கு [1]நெறியல்ல, செய்யுள் நெறியாம்.

உ - ம் :—செஞ்ஞாயிற்றுக் கவின, வெண்கோட்டு யானை, நெடுவெண்திங்கள், வெண்முத்தம் [2]எனச் செய்யுளுள் வரும்.

இனிக் குறுஞ்சூலி, நெடுந்தகடு, குறுமுந்தி, நறும்பூ [3]என்பனவும் இனஞ்சுட்டாது வழக்கினில் வந்தனவால் எனின், அவை அவற்றின் பேரே ; இனஞ்சுட்டாது வந்தன அல்ல என்று மறுக்க. (கஅ)

19. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

எ - து. உலகத்தியல்பாகி வாராநின்ற பொருள்களைச் சொல்லுமிடத்[1]தித்தன்மை யென்றே சொல்லுக.

---

17 - 4 " யி "
5 " வழக்காரென்ப "
6 " மேற்கையும் சிறிது "
7 " யெ "
8 ( சொற்கள் விடுபட்டன போலும் )
18 - 1 " நெறியல்லச் செய்யுள் "
2 " யெ "
3 " யெ "
19 - 1 " து "

[2]உ - ம் :—நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் [3]என இவ்வாறு சொல்லுவது.

இனி, நிலம் வலிதாயிற்று, நீர் தண்ணிதாயிற்று [4]என்று சொல்லற்க. மற்று நிலம் வலிதாயிற்று என்றும் சொல்லுபவால் எனின், அஃது இயல்பன்று. சேற்றுநிலம் மிதித்து வன்னிலம் மிதிக்கையால் விகாரம் என்பது. (கசு)

### 20. செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்.

எ - து. செயற்கையாகிய பொருள்களை எல்லாம் ஆக்கங் [1]கொடுத்துச் சொல்லுக.

உ - ம் :—மயிர் நல்ல ஆயின, பைங்கூழ் நல்ல ஆயின [2]எனச் சொல்லுக. ஆயின என்பது ஆக்கம். (உ0)

### 21. ஆக்கந் தானே காரண முதற்றே.

எ - து. அவ் ஆக்கந்தன்னைச் சொல்லுமிடத்துக் காரண முன்வைத்து ஆக்கத்தைப் பின் வைத்துச் சொல்லுக.

உ - ம் :—கடுவுங் கைபிழி [1]யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல ஆயின எனவும், எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால்யாத்தமையாற் பைங்கூழ் நல்ல ஆயின [2]எனவும் சொல்லுக. கடுவுங் கைபிழி எண்ணெயும் காரணம்; மயிர் நல்ல ஆயினது [3]என்ப ஆக்கம். (உக)

---

19 - 2 " ... ரணம் "

3 " வெ "

4 " வெ "

20 - 1 " கொடுற்றுச் "

2 " வெ "

21 - 1 " எண்ணேயும் "

2 " வெ "

3 (என்பது என்றிருத்தல் வேண்டும் போலும்; அல்லது " ஆக்கம் என்ப " என்றும் முடிக்கலாம்.)

22. ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

எ - து. ஆக்கமொடு புணர்ந்த பொருளைக் காரணம் இன்றியும் சொல்லுதல் வழக்கினு[1]ள் குற்றம் இல்லை.

உ - ம்:—மயிர் நல்ல ஆயின, பைங்கூழ் நல்ல[2]ஆயின எனக் காரணம் இன்றியே வந்தன. உம்மையாற் காரணங் கொடுத்துச் சொல்லுதல் வலியுடைத்து.

இனிப் போக்கின்று என்ப வழக்கினுள்ளே என்ற விதப்பாற்செய்யுளகத்தாயிற் காரணமும் ஆக்கமும் கொடுத்துச் சொல்லுக என்பதாம்.

வரலாறு:—

வெண்பா.

வருமழை வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி — திருநுதலாய்
இன்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்
தஞ்சாயல்[2]க் ஆயின தோள்.

[3]இதனுள் கருமுருகன் சூடிய கண்ணி பெய்தமையான் என்பது காரணம். பண்டைத்தஞ்சாயல்[2a] ஆயின தோள் [4]என்பது ஆக்கம். ஆதலால், இது காரணமும் ஆக்கமும் கொடுத்து வந்தது. அவை இரண்டும்உடன் வரவும், ஒன்று வரவும் பெறும். (உ௨)

23. பான்மயக் குற்ற வையக் கிளவி
தானறி பொருள்வயிற் பன்மை கூறல்.

எ - து. ஒருவன் திணையறிந்து பான்மயக்[2] குஉற்றவழி ஐயப்பொருளைத் தான் உயர்திணை என்பதறிந்தான் அதனை அத்திணைப்பன்மைமேல் வைத்துச் சொல்லுக.

---

22 - 1 "ட"

2 "வா"

2 a"வாயின"

3 "இதனுள்க்கு"

4 "யெ"

உ-ம்:—[1]சேயதாய்த் தோன்றுவது ஓர் மக்கட் பிழம்பு கண்டு மக்கள் என்பது உணர்ந்து, ஆண்பால் பெண்பால் உணராத வழிப் பெண்டாட்டி கொல்லோ ஆண்மகன் கொல்லோ தோன்றுகின்றவர் எனப் பன்மையாற் சொல்லுக.

அஃது இருபாற்கு உரித்து ஆதலான், திணையின் என்னுது தானறி பொருள் வயின் எனப் பொதுபடக் கூறிய அதனால் ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ கறவை யுய்த்த களமர்; ஒருத்தி கொல்லோ பலர்கொல்லோ குருக்கத்தி நீழல் வண்டல் அயர்ந்தார் எனத் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மையொருமைப் பால் ஐயமும் கொள்க.

இதற்கு [2]வேறுமொரு காரணங் காட்டுதும்.

ஒரு மக்கட்டலை [3]ஓடு காட்டுட் கிடந்தது கண்டு பெண்டலை ஆண்டலை என்றுணராதான் பெண்டாட்டி தலைகொல்லோ ஆண்மகன்றலைகொல்லோ இஃதோ கிடந்த மக்கட்டலை என்க.

மக்கள் என்பது இருபாற்கும் பொதுவாகலான் ஐயப்படுமிடத்து ஒருபாற்கு உரிய சொல்லாற் சொல்லாது ஒழிக. பன்மையாற்சொல்லுக. (உ௩[4])

24. உருவென மொழியினு மஃறிணைப் [1]பிரிப்பினு
மிருவீற்று முரித்தே சுட்டுங் காலை.

எ-து. திணையையந் தோன்றியவழி உரு வென்று சொல்லுதலும், அஃறிணையை ஒன்று பல வென்று பிரித்துச் சொல்லுதலும் இவையும் மேலதேபோலப் பொதுவினானே சொல்லுதலாம்.

---

23-1 "செய்ததாய்த்"

2 ("வேறும் ஓர் உதாரணம் காட்டுதும்" என்பது பாடமோ?)

3 "யொடு"

4 ("ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியு
மொன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கா றாகிய வுயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல."

எ:— ... ... ... ... என வழுவமைக்கு மாகலா லென்ப மயக்குற்றதனைக் கிளவிமேல் வையாது ஒருவன் மயக்குற்ற விடத்தென்க). (உ௪)

24-1 "பிறிப்பினு"

²இருவீற்று முரித்தே சுட்டுங்காலை என்பது உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஒருமைக்கும் பன்மைக்கும் உரித்தான பொதுச்சொல்லாற் சொல்லுக, சுட்டிச் சொல்லுமிடத்து.

உ-ம்;—மும்முழங் ³கையரைப் போல ஒக்கமும் அதற்குத்தக்க பிழம்பும் மம்மர் மாலைப் பொழுதுகண்டு ஐயுற்றான் குற்றிகொல்லோ மகன் கொல்லோ தோன்றுகின்ற உரு என்று இருதிணைக்கும் பொதுவாகச் சொல்லுக.

உருவினும் என்றது உருவென மொழியினும் என்றதனான் உருவின் பொருளவாகிய வடிவு எனினும் பிண்டம் எனினும் பிழம்பு எனினும் ஒக்கும். தோன்றுவான் தோன்றுவாள் தோன்றுவது என்று சொல்லற்க.

இனி, அஃறிணைப் பாலையத்துக்க⁴ண் சொல் நிகழுமாறு:—ஒருவன் செய்புக்குத்தின்ற பெற்றச்சுவடு பலவாய்க் கிடந்தன கண்டான்; ஒன்று பல சுவடுபடத் திரிந்து தின்னினும் பல ஒருங்கு புக்குத் தின்னினுஞ் சுவடுபலவாகும்; ஆதலான் ஐயுற்று நின்றவழி, ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம் என்க.

பெற்றம் என்பது இருபாற்கும் உரித்து ஆகலின் புக்கது புக்கன ⁵என்னற்க. ⁶உருவென மொழியினும் என்பதற்குத் திணையையம் என்பது ஒப்பினுற் கொள்க. (உச)

25. தன்மை சுட்டலு முரித்தென மொழிப
வன்மைக் கிளவி வேறிடத் தான.

எ-து. உண்மைத் தன்மையான பொருளைச் சுட்டல் உரித்தாமென்பர், அன்மைச் சொல்லைத் துணிந்த பொருண்மேல் வைத்துச் சொல்லின்.

---

24-2 "யி"

3 ("கையரை போல" என்பதோ பாடம்? $3\frac{1}{2}$ முழம் $5\frac{1}{4}$ அடியாம் மனிதனின் சராசரி உயரத்தை அக்காலத்து அவ்வாறு கொண்டனர் போலும்.)

4 "ட்"

5 "என்றற்க"

6 "யு"

[1]உ - ம்:—வேற்றிடந் துணிந்த பொருள் ஆண்மகன் கொல்லோ, பெண்டாட்டி கொல்லோ என்று ஐயுற்றால், ஆண்மகன் என்று துணிந்து சொல்லுமிடத்து பெண்டாட்டியல்லன் ஆண்மகன் என்க.

[2]இனிப் பெண்டாட்டி என்று துணிந்தவழி ஆண்மகனல்லள் பெண்டாட்டி என்க. இது [3]உயர்திணைப்பாலையம்.

குற்றிமகன் எனத் திணையையந் தோன்றியவழி மகனன்று குற்றி என்றும் குற்றியல்லன் மகன் என்றும் சொல்லுக.

அஃறிணைப் பாலையத்துக்கண் [4]ஒன்றல்ல பல என்றும் பல அன்று [5]ஒன்று என்றும் சொல்லுக.

ஐயப்பட்டுத் [6]துணிந்துழி எல்லாம் துணி பொருளிடத்து-அன்மைச் சொல்லை வைத்துச் சொல்லுக.

இவ்வாறு சொல்லுங்கால் ஐந்தாம் உருபுபுலப்படாதுநீக்கத்தின்-கண்ணே [7]நிற்கும் என்று கொள்க.

யாதோ நின்றவாறு எனின் பெண்டாட்டி யல்லன் [8]என்புழி, பெண்டாட்டியினல்லன் என்றும், குற்றியல்லன் என்புழிக் குற்றியின் அல்லன் என்றும், [9]ஒன்றின் அல்ல என்றும் இவ்வாறு மற்றையனவும் அறிக.

[10]இனி யொருசார் அன்மைச் சொல்லை ஐயப் பொருளின்கண் வைத்துச் சொல்லுப.

---

25 - 1 " ... தாரணம் "

2 " யி "

3 " யு "

4 " ஒன்றல்லப் பல "

5 " ஒன்னென்றுந் "

6 " துணிந்துழிஇ "

7 " நிக்கும் "

8 " யெ "

9 " ஒன்றி நல்ல "

10 " யினி யொரு சாரனமைச் சொல் "

சொல்லுமாறு : — பெண்டாட்டி அல்ல[11]ள் ஆண்மகன் என்றும், ஆண்மகன் [12]அல்லன் பெண்டாட்டி என்றும், ஒன்றன்று பல என்றும், பல அல்ல ஒன்று என்றும் சொல்லுப. அவர் சொன்முறை அறியார்; ஆதலான் அஃது உரையன்மை அறிக. இது அம்மூன்றிடத்தும் துணிவு தோன்றியவழிச் சொன்னிகழ்வுமாறு கூறிற்று. (உரு)

**26. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை**
**நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.**

எ - து. வண்ணச் சினைச் சொல்லாவது அடையும் சினையும் முதலும் மூன்றும் அடங்காமை அடைவே வழக்குப் பெற்று நடக்கும்.

அடையென்பதொரு பொருளது குணம்; சினை உறுப்பு; முதல் அவ்விரண்டையும் உடைய பொருள்.

உ - ம் :—பெருந்தலைச் சாத்தன், பெருந்தோள் மண்ணை, நெட்டிலைத்தெங்கு, செங்கண் வரால், செங்கானாரை என வரும்.

அடைசினை முதல்என மூன்றும் என்னாது முறை என்றதனான் அம் முறையின்றி நடத்தலும் உடைய. அவை வழக்கினுள் குணம்இரண்டடுக்கி முதலொடு வருதலும் செய்யுளுள் குணம் இரண்டடுக்கிச் சினையொடு வருதலும் என ;

அவை வருமாறு :—

இளம்பெருங் கூற்றன்; சிறுகருஞ் சாந்தன்[1] இது வழக்கு.
சிறுபைந்தூவி, செங்காற் பேடை இது செய்யுள். பிறவும் அன்ன.
முதலொடு குணம் இரண்டடுக்குதல் வழக்கியல்.
சினையோடடுக்குதல் செய்யுளாறே. [2]இது பிற சூத்திரம்.

அதனான் அவ் இலேசு கொள்க. (உசு)

**27. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்**

---

25-11 " ன் "

12 " அல்ல "

26-1 " யி "

2 " பி "

வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

எ - து. உயர்திணை ஒருவரைப் பன்மையாற் சொல்லுதலும் அஃறிணை ஒன்றனைப் பன்மையாற் சொல்லுதலும் என இவை வழக்கினாகின்றகத்துஉயர்த்துச் சொல்லப்படும்; இலக்கண முறைமையாற் சொல்லுமிடத்து நெறியல்ல.

உ - ம் :—ஒருவனையும் தாம் வந்தார் என்ப. ஒருத்தியையும் தாம் வந்தார் என்ப. [1]ஒன்றனையும் தாம் வந்தார் என்ப. இது வழுவேஆயினும் அமைக.

அன்றியும் யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என ஒருவனையும் ஒன்றனையும் உயர்த்திச் சொல்லியவாறு தாம் வந்தார் தொண்டனார் [2]என்பது உயர்சொல் குறிப்புநிலையாயின், இழிபுவிளக்கிற்று.

இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல என்றதனால் உயர்பினும் இழிபினும் உவப்பினும் சிறப்பினும் உயர்திணையை ? அஃறிணையே போலச் சொல்லுதலும் அஃறிணையை உயர்திணையே போலச் சொல்லுதலும் வழக்கினுள் வரும்.

குரிசில் வந்தது என்பது உயர்பு. பொறியிலி வந்தது இழிபு. ஒருவனை என் யானை வந்தது என்றும், ஒருத்தியை என் பாவை வந்தது என்றும், ஓரெருத்தினை என் எந்தை வந்தார் என்றும், ஒரு பசுவினை என் அன்னை வந்தாள் என்றும் சொல்லுதல் உவப்பு. சாத்தனார் வந்தார், நரியினார் வந்தார் எனல் சிறப்பு. இவற்றில் திணை பால் மயக்கம் காண்க. (உஎ)

28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் [1]அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலைப் படர்க்கை யென்னு
மம்மூ விடத்து முரிய வென்ப.

எ - து. செல்லும் வரும் தரும் கொடுக்கும் என நிலைபெற்றுப் புலப்பட்டு நின்ற [2]அந்நான்கு சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்[3]றிடத்திற்கும் உரிய.

உ - ம் :—முன்னர்க் காட்டுதும். (உஅ)

---

27 - 1 " யொ "
2 " யென்ப துயர்சொற் குறிப்புனிலை "

28 - 1 " அன்னாற் "
2 " அன்னான்கு "
3 " றிடத்திடற்குமுறிய "

29. அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை யாயீ ரிடத்த.

எ - து. [1]உ - ம்.—எனக்குத்தருங் காணம், எனக்குவருங் காணம், நினக்குவருங் காணம் என வரும். (உக)

30. ஏனை யிரண்டு மேனை யிடத்த.

எ - து. செல்லும் கொடுக்கும் என்பன படர்க்கையிடத்தன.

உ - ம் :—அவர்க்குச் செல்லுங் காணம், அவர்க்குக் கொடுக்குங் காணம் [1]என வரும்.

[2]அந்நாற் சொல்லும் தன்மை-முன்னிலை படர்க்கை-என்னும் அம்மூவிடத்தும் உரிய வென்ப என்றதனான் அவை மயங்கிவரவும் பெறும்.

"தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
[3]புனறரு பசுங்காய் தின்றதன் றப்பல்"—[4]எனவும்,

"அரிமல ராய்ந்தகண் ணம்மா [5]கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா தணங்காகி
யையத்து நின்ற தரா."

எனவும் [6]மயங்குவன அமைக்க. கடைசி! என முன்னிலை ஆக்குக. (௩0)

31. யாதெவ னென்னு மாயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

எ - து. யாது எவன் என்னும் [1]இரண்டு சொல்லும் தன்னால் அறியப்படாத பொருட்கண் வினவாய்த் தோன்றும்.

---

29 - 1 (சூத்திரம் தெளிவாதலின் உரை எழுதப் படவில்லை போலும். நினக்குத் தருங் காணம் என்ற உதாரணம் விடுபட்டுள்ளது.)

30-1 "யெ"
2 "அன்னாற்"
3 "புணரருட்"
4 "யெ"
5 "கடைசித் திருமுகம்"
6 "மயங்கு வனவமைக்க"

31-1 "யி"

உ - ம் :—

[2]நுந்நாடி யாது ? இப்பண்டியுள்ளது எவன் ? மடியுள்ளது யாது? மடியுள்ளது எவன் ? கையுள்ளது யாது ? கையுள்ளது எவன் ? [3]எனவரும். இச்சொற்குப் பொருள் யாது [4]இச்சொற்குப் பொருள் எவன் எனவும், எவன் என்பது இக்காலத்துள் என் என்றும், [5]என்னையென்றும் திரிந்து நடக்கு[6]ம். செறிய என்றதனால் யாவன், யாவள், யாவர், யாது, யாவை எனவும், யாங்கு, யாண்டு, எப்பொருள் [7]என இவையும் திணைபால் முதலியனவும் [8]அறியப்படாதன அவ்விடத்துத் தோன்றும் என்பது கொள்க. (௩௧)

32. அவற்றுள்,
யாதென வருஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயி னையந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.

எ-து. யாது என்னும் வினாச்சொல் அறியாப்பொருளை வினவுதலேயன்றி அறிந்த பொருட்கண் ஐயந்தீர்தற்கு ஆராய்ந்த சொல்லாதலும் உரித்து.

உ - ம் :—நம் எருது ஐந்தினுள் கெட்ட எருது யாது [1]எனவரும்.

தெரிந்த கிளவி யாதலுமுரித்து என்றதனால் நமருள் யாவன் போயினான் என ஐந்திணோடும் ஒட்டுக. கடி சொல்லில்லை என்பதனால் நமருள் எவன் போயினான், அவற்றுள் எவ்வெருது கெட்டது [2]என்பனவும் கொள்க. (௩௨)

33. இனைத்தென வறிந்த சினைமுதற்[1] கிளவிக்கு
வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்.

---

31-2 "நுன்னாடி யாது"
3 "வெ"
4 "யீ"("இச் சொற்குப் பொருள் எவன் எனவும் வரும்" என்றிருத்தல் வேண்டும் "வரும்" விடுபட்டுள்ளது.)
5 "யெ"
6 "ஞ்"
7 "யெ"
8 "அறியப் படாதனவ் விடத்துத்"
32-1 "யெ.
2 "யெ"
33-1 "கிளவி"

எ-து. இத்துணை யென்று வரையறுக்கப்பட்டு நின்ற சினைக்கிளவிக்கும் முதற் கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லும் இடத்து இறுதி உம்மை கொடுத்துச் சொல்லுக.

உ-ம்:—நம்பி கண்ணிரண்டும் நொந்தன; நங்கை முலையிரண்டும் வீங்கின-சினைக்கிளவி உம்மை பெற்றவாறு.

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; முப்பத்து மூவரும் வந்தார். நமர் நால்வரும் வந்தார். முதற்கிளவி உம்மை பெற்றவாறு.

அன்றியும்,

பன்னிரு கையும் பாற்பட வியற்றி எனவும்,
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி [2]எனவும்,
அருமை நாற்கா லிர்க்கீழ் வரும் எனவும்,
[3]இருதோ டோழர்பற்ற எனவும்

கண்களியாற் சென்றமர்ப்பக்[4] கைநாஞ்சின் மேலசைஇ
யொண்குழை யொன்றொல்கி யெருத்தலைப்ப—வொண்சுடர்ப்பூ
ணேர்மலர்த்தா ரையரி னேஎ ருடைத்தரோ
தேர்மணிப்பூண் வெள்ளை நிலை.

எனவும் இவை உம்மை இல்லையாமெனிற் செய்யுளாதலின்[5] தொக்கது என்க. (௩௩)

34. மன்னுப் பொருளு மன்ன வியற்றே.

எ-து. [1]மன்னுப் பொருள் இல்லாப் பொருள்.

உ-ம்:—பவழக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை. முயற்கோடுமியாமை மயிர்க் கம்பளமும் அம்மிப்பித்துந் துன்னூசிக்குடருஞ் சக்கரவர்த்திக் கோயிலுள்ளும் இல்லை எனவும், [2]என் அங்கையுளும்

---

33- 2 "கூடினுர் யெனவும்"

3 "இருத்தோள்"

4 "சென்றமைப்ப கைந்தாஞ்சினை"

5 "செய்யுள்ளாதற்"

34-1 [இங்கே அருள்பொருள் கூறி அமைகிறது இவ்வுரை]

2 "என்னங்கை மயிரில்லை,"

மயிரில்லை, இக்கழுதைக்குங் கோடில்லை எனவும் உம்மை கொடுத்துச் சொல்லுக. உம்மை கொடாது சொல்லிற் [3]பிறுண்டு உண்டு எனச்செல்லும். பிறுண்டு வேறோரிடம். உம்மை எச்ச உம்மை.(௩௪)

**35. எப்பொரு ளாயினு மல்ல தில்லெனி**
**னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.**

என்-து. எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன்னுழை உள்ளதல்லதனை இல்லை என்று சொல்லின் அவன் கூறிய பொருளல்லாப் பிறிது பொருள் கூறி இல்லை என்க.

தன்னுழையுள்ளதன் உண்மை கூறி இல்லை என்பது இதன் கருத்து.

உ-ம் :— பயறுளவோ வணிகீர் என்றக்கால் உழுந்தலது இல்லை [1]கொள்ளலது இல்லை என்றும் நூறு விற்கும் பட்டாடை உளவோ என்றார்க்கு[2]ஐம்பது விற்குங் கோசிகம் அல்லது இல்லை என்றும் சொல்லுக. இது அஃறிணை ஒருமைப்பாற்கு உரித்தேனும் எப்பொருளாயினும் என்றமையால் இருதிணையைம்பாற்கண்ணும் அல்லது என்னும் சொற் கொடுத்துச் சொல்லுக.

[3]வரலாறு:-அவன் அல்லது இல்லை. அவளல்லது-அவரல்லது-அதுவல்லது அவையல்லது-இல்லை என்று சொல்லுக.

நாணு நட்பு மில்லோர்த் தேரின்
யானல்ல தில்லை யிவ்வுலகத் தான.

எனச் சான்றோர் [4]செய்யுளுட் பயின்று வருமாறும் காண்க.

பயறுளவோ என்றார்க்கு அதற்கினமாகிய உழுந்தான் முடித்தலன்றி அதற்கினமாகாப் பாம் புண்ணிக் கருங்கல்லான் முடியற்க. (௩௫)

**36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.**

என - து:—வேறொரு பொருள் கூறாது வினாயின பொருளையே [1]கூறில் தன் முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச் சொல்லுக.

உ-ம்:—இப்பயறல்லது இல்லை என்க. வினாயின பயறு இன்மையும் தீமையும் உணர்ந்துகோடற்கும் தவிர்தற்குமாக இவ்வாறே கூறுக.

---

34-3 "பிறுண்டுண்டான் செல்லும்."
35-1 'கொள்ளதிஇலை''
2 "அன்பது"
3 [உதாரணத்தை வரலாறு எனக் கூறல் காண்க.]
4 "செய்யுட்"
36-1 "கூறிற்றன்"

தன்வினை முடித்தல் என்பதனாற் பெரும் பயறல்லது இல்லை; பசும் பயறல்லது இல்லை எனக்கிளந்து கூறுதலும் கொள்க. (௩௬)

37 பொருளொடு புணராச் சுட்டுப் பெயராயினும்
பொருள் [1]வேறுபடாஅ தொன்றா கும்மே.

உ - ம்:—இஃதொருத்தன் என்ற வழி இஃது என்று அஃறிணைப்பொருளை உணர்த்திய சுட்டு இவனொருத்தன் என உயர்திணைப்பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க.

[2]இன்னும் ஓர் கருத்து. பெயர்ப்பொருளோடு புணரா ஆயினும் சுட்டுப் பொருள் வேறு[3] படாது ஒன்றாகும் : இதன் கருத்து சில பொருட்பெயர் சுட்டுப் பொருளை உணர்த்தா [4]வாயினும் தான் சுட்டுவதோர் பொருளிடத்து வேறுபட நில்லாமல் பொருளையே உணர்த்தி நிற்கும்.

உ - ம்:—

கொய்தளிர்த் தண்[5] டலைக் [6]கூற்றப் பெருஞ் [7]சேந்தன்
வைகலும்[8] ஏறும் வயக்களிறே—கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக்[9] காணவெஞ்
சாலேகஞ் சார [10]நட.

இதனுள் உன்னை எனவும் சுட்டிக் கூறுதல் காண்க. (௩௭)

38. இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
ரியற்பெயர் [1]வழிய வென்மனார் புலவர்.

எ - து. இயற்பெயரும் சுட்டுப்பெயருமாகிய இரண்டும் ஒன்றனை ஒன்று கொள்ளாது, இரண்டும் பிறிதுவினை கோடற்கு ஒருங்கு நிகழும்காலம் தோன்றுமாயிற் சுட்டுப்பெயரை முற்படச் சொல்லார்; இயற்பெயர்க்குப் பின்னாகச் சொல்லுவர்.

---

37. 1 "வேறுபடா தொன்றாகும்மே".
2 "யி"
3 "படாதென்றாகும்"
4 "வாயினு தானுசுட்டு"
5 "படலைக்"
6 "கொற்ற" ("கூத்தப்" என்று பிற இடத்தில் பாடம்)
7 "செந்தேன்"
8 "யே"
9 "காண்கமெஞ்"
10 "சால"

38. 1 "வழீஇய"

உ-ம்:— சாத்தன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க, சாந்து கொடுக்க; சாந்தி வந்தாள் அவட்குச் சாந்து கொடுக்க, பூக் கொடுக்க.

ஒருங்கியலும் என்றதனால் ஒரு பொருளை உணர்த்துதல் கொள்க.

இயற் பெயர் வழிய என்றதனால் விரவுப்பெயர் அன்றி உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின் வருதல் கொள்க.

உ-ம்:—நம்பிவந்தான் அவற்குச் சோறு கொடுக்க; நங்கை வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க; எருது வந்தது அதற்குப் புல்லிடுக; நாய் வந்தது அதற்குச் சோறிடுக; குதிரை வந்தது அதற்கு முதிரை கொடுக்க எனவரும்.

வினைக் கொருங்கியலும் என்றதனாற் பெயர்க்குச் சுட்டாயினும் இயற்பெயராயினும் ஒன்று முற்கூறினும் அமையு[2]ம். சாத்தனவன் அவன் சாத்தன் [3]என வரும். (ங அ)

39. முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே.

எ-து. உ-ம்:—

"அவனணங்கு நோயென்று னுயிழாய் [1]வேலன்
விறன்மிகுதாரச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னை[2]கொல்
பின்னை யதன்கண் வினைவு."

இதனுள் அவன் என்பது சுட்டுப் பெயர். [3]சேந்தன் என்பது இயற் பெயர். (ங கூ)

---

38-2 "ஞ்"

3 "யெ"

39-1 "வேலன் விரன்"

2 "சொல்"

3 "சேந்தன்னென்ப"

40. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்.

எ - து. சுட்டுப்பெயர் இயற்பெயரின் பின் கிளக்கப்பட்டது போலச் சுட்டு முதலாகிய காரணச் சொல்லையும் இயற்பெயரின் பின்வைத்துச் சொல்லுக.

உ-ம்-:சாத்தன் கையெழுதுமாறு வல்லன் அதனாற் றம்ஆசிரியன் உவக்கும் [1]சாத்தி சாந்தரைக்குமாறு வல்லள் அதனாற் கொண்டான் உவக்கும் என வரும். சுட்டு முதலாகிய காரணக் கிளவி; இது வினைக்கொருங்கியலும் வழி வரும் என்று கொள்ளுக. (௪௦)

41. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கு
மியற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.

எ - து. சிறப்பினாகிய பெயர்க்கு முன் இயற்பெயரை வைத்துச் சொல்லார். உம்மையால் தவங் கல்வி குடிப்பிறப்பு முதலியனவும் கொள்க.

உ - ம் :—

ஏனாதி நல்லுதடன்; வாயிலான் சாத்தன்; படைத்தலைவன் தீரன்; சேரமான் சேரலாதன்; [1]சோழன் நலங்கிள்ளி; பாண்டியன் மாறன்; முனிவன் அகத்தியன்; தெய்வப் புலவன் திருவள்ளுவன்; பார்ப்பான் கண்ணன்; வேளாளன் கொற்றன்; வண்ணான் சாத்தன்; கோலிகன் சாத்தன்; தச்சன் கொற்றன்; [2]கொல்லன் செய்யான்; நாவிதன் மாறன் என வரும். (௪௧)

42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே.

எ - து. ஒரு பொருள் கருதிவந்த பல சொற்களுக்கு ஒரு தொழிலே [1]முடிபாகக் கூறுது பெயர் தோறும் வேறுதொழில் கொடுப்பின் ஒரு பொருளவாய் ஒன்றுதல் இலவாம்.

---

40 - 1 "சாந்தி"

41 - 1 "சோழனங் கிள்ளி"

2 "கொல்லான்"

42 - 1 "முடிப்பாக"

உ - ம் :— ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்று சொல்லுக.

[2]இனி ஆசிரியன் வந்தான், பேரூர்கிழானிருந்தான், செயிற்றியன் கிடந்தான், கண்ணன் போனான், சாத்தனின்றான் [3]என்னற்க. [4]அன்றியும் ஆசிரியன் வந்தான், பேரூர் கிழான் வந்தான் எனப்பெயர் தோறும் ஒருவினை கொடுப்பினும் வேறு வேறு பொருளாம்.

[5]இனியித்தன்மையன கொள்க,

[6]எந்தை வருக எம்மான் வருக
மைந்தன் வருக மணாளன் வருக
பைந்தொடிப் பணைத் தோட்கிழவன் வருக.

[7]எனக் காதல்பற்றிப் பலகால் ஒரு தொழில் வந்தன கொள்க.

[8]அன்றியும் இனித் தொழில் வேறு கிளப்பி னொன்றிடனிலவே என்பதனால் வேறு தொழில் கொடாது ஒரு தொழிலே கொடுப்பின் ஒன்[9]றிடனும் எனப் பெயர் தோறும் ஒரு தொழில் கொடுத்துத் துதியிடத்துச் சொல்லுக.

உ - ம்:—

தேமல ரங்கட் டிருவே புகுதுக
மாமலர்க் கண்ணி மணாளன் புகுதுக
காமன் புகுதுக காளை புகுதுக
நாம வெழில்விஞ்சை நம்பி புகுதுக.

[10]என்பன கொள்க. (சஉ)

---

42 - 2 "யினி"
3 "யெ"
4 "ய"
5 "யினி"
6 "ஒத்தை"
7 "யெ"
8 "யன்றியும்"
9 "று"
10 "யென்பண"

**43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி யென்**
**றெண்ணு வழி மருங்கின் விரவுதல் வரையார்.**

எ - து: — தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் அவை எண்ணும் இடத்து விராய் வருதலை நீக்கார்.

உ - ம் : —

“யானும் என்எஃகமுஞ் சாறும்.
அவனுடைய யானைக்குஞ் சேனைக்கும் போர் [1]எனவரும்.

இது இரு திணையும் விராயெண்ணி அஃறிணை உயர்திணையோடு முடிந்தது. எண்ணுவழி மருங்கு என்றதனால் நீயு நின்படைக்கலமுஞ் சாறிர், அவனுந்தன் களிறுஞ் சாறும் என முன்னிலையினும் படர்க்கையினும் கொள்க. (௪௩)

**44. ஒருமை யெண்ணின் பொதுப் பிரிபாற் சொல்**
**ஒருமைக் கல்லது யெண்ணுமுறை நில்லாது.**

எ - து:—ஒருமை எண்ணினை உணர்த்தும் ஒருவர்என்னும் பொதுமையினின்றும் பிரிந்து பால்உணர்த்தும் சொல்லாகிய ஒருவன் ஒருத்தி என்னும் சொல் ஒருமைக்கல்லது இருமை முதலிய எண்களின் ஓடாது.

பொதுவாவது - ஒருவர். அது இருபாற்கும் பொது, அது பிரியாக்கால் ஒருவர், இருவர், மூவர், [1]நால்வர் என எவ்வளவும் எண் ஓடுமாறு காண்க. அப்பொது பிரிந்து ஒருவன் என நின்றபின் இருவன் மூவன் என ஆகாது. ஒருத்தி எனநின்றபின் இருத்தி முத்தி எனவும் ஆகாது. இவ்வாறு கூறியது னகரவீறும் [2]இகரவீறும் எண்ணுதற்கு இயைபு இன்மையானும் ரகரஈறு இயைபுடைமையானும் என்க. (௪௪)

**45. வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.**

எ - து:—வியங்கோளொடு தொடரும் எண்ணுப்பெயர் இருதிணையும் விராய் வருதலை நீக்கார்.

---

43-1 “யெ” (இவ்வெடுத்துக் காட்டு இங்கு வேண்டா)
(இத்தகையன இனிக் காட்டப் பெறு.)

44-1 “ஞ”
2 “மகர”

உ - ம்:—

**ஆவும் ஆயனுஞ் செல்க; யானையும் பாகனும் வருக.** [1]எனவரும்.

**உம்மை - எண்ணும்மை.** (சரு)

## 46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.

எ - து வெவ்வேறு வினையையுடைய பலபொருட்குப் பொதுவாகிய சொல்லை யாதானும் ஒருவினையாற் கூறார். ஒரு வினையாற்கூறாரெனவே எல்லாவற்றையும் உள்ளடக்கி நிற்கும் பொது வினையாற்கூறுவர் என்பதாம்.

உ - ம்:—

அடிசில் என்பது உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவற்றிற்கும் பொது.

அணி என்பது கட்டுவன, கவிப்பன, செறிப்பன, பூண்பன வற்றிற்கும் பொது.

இயம் என்பது கொட்டுவன, [1]ஊதுவன, எழூஉவனவற்றிற்கும் பொது.

படை என்பது எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்கும் பொது.

ஆதலின் **அடிசில் உண்டார், அடிசில் கைதொட்டார்** எனவும், **அணிஅணிந்தார், மெய்ப்படுத்தார்** எனவும், **இயம்இயம்பினர், படுத்தார்** எனவும், **படை வழங்கினர், தொட்டார்** எனவும் பொது வினையாற் கூறுக. அல்லது **அடிசில்குடித்தார், பருகினர்** என்றும், **அணிகவித்தார், கட்டினர்** என்றும், **இயம்கொட்டினர்; [2]ஊதினர்** என்றும், **படை எய்தார் [3]குத்தினர்** என்றும் ஒன்றன் தொழிலாற் கூறற்க.

**அறுசுவை யடிசி லணியிழை தருதலின்**
**உறுவயி றார வோம்பாது தின்றேன்** என வேறு வினையால் வந்ததால் எனின் இழித்தற்கண் வந்தது என்க. (சசு)

---

45-1 "வாம்" "எனவும் வரும்"

46-1 "யூதுவன, எழுதுவன" (எழுப்புவன என்றும் இருக்கலாம். )

2 "ஊடி"

3 "குற்றினர்"

**47. எண்ணுங் காலும் அதுவதன் மரபே.**

*எ - து:— வேறுவினைப் பொதுச்சொற்களைப் பொதுச்சொல்லாற் கூருது பிரித்து எண்ணுமிடத்தும் ஒரு வினையாற் கிளவாது பொதுவினையாற் கிளக்க.*

உ - ம்

சோறுங் கறியும் நன்றென்று உண்டார்; யாழுங் குழலும்பறையும் இயம்பினர் என்க; [1]தின்றார், ஊதினர் என்னற்க.

ஊன்றுவை கறி சோறுண்டு வருந்தும் என்புழி எல்லாவற்றிற்கும் உண்டு எனப்பொதுவினை வந்தவாறு காண்க. (சஎ)

**48. இரட்டைக் கிளவி [1]இரட்டிற்பிரிந் திசையா.**

*எ - து:—இரட்டித்து நின்று பொருள்உணர்த்தும் சொற்கள் இரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லா. அவை வருங்கால் இசையும், குறிப்பும், பண்பும் பற்றி வரும்,*

உ - ம்:—

சுருசுருத்தது, மொடுமொடுத்தது என்பன இசை

கொறுகொறுத்தார், மொறு மொறுத்தார் என்பன குறிப்பு.

குறுகுறுத்தது, கறுகறுத்தது என்பன பண்பு.

இவை குறுத்தது குறுத்தது என ஒரு சொல் முழுதும் வாராமையின் அடுக்கன்று. இவை மக்கள் இரட்டையும் விலங்கு இரட்டையும் போல் அன்றிப் பூஇரட்டையும் காய்இரட்டையும் இலை இரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாய் வரும். (சஅ)

**49. ஒரு [1]பெயர்ப் பொதுச்சொ லுள்பொரு ளொழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

---

47 - 1 "தி" (ந, த மாருட்டம்)

2 "ஊனறு சுவைகறி சோறுண்டு வருந்தும் "

48 - 1 "இரட்டு',

49 - 1 "பெயர் பொதுச்சொல்,'

எ - து:—ஒரு பெயர்பட நின்ற பொதுச்சொற்களைச் சொல்லுங்கால் ஆண்டுள்ள பொருளெல்லாம் எடுத்துச் சொல்லாது உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் தெரிந்து வேறாகத் தலைமையானும் பன்மையானும் கூறுக. ஒருபெயர்ப்பொதுச்சொல்லாவது, ஒரு பெயருமாய்ப் பொதுச் சொல்லுமாய் வருவது. அது சேரி, நாடு, தோட்டம், காடு என்பன.

உ - ம்:—

சேரி, நாடு, உயர்திணைப் பொதுச் சொல்,
தோட்டம், காடு, அஃறிணைப் பொதுச் சொல்.

சேரி என்பது பலருமிருப்பது, அதனுள் சில பார்ப்பனக்குடியுளவேல் அதனைப் பார்ப்பான் சேரி என்பர், பார்ப்பாரது தலைமைபற்றி. இது உயர்திணைக்கண் தலைமை பற்றி வந்தது.

எயினர் நாடு, குற்றிளைஞர் [2]நாடு என்பன பிறரும் ஆண்டுறைவார் உளராயினும் எயினர், குற்றிளைஞர் பலராதலால் உயர்திணைக்கண் பன்மை பற்றிவந்தன.

தோட்டம் என்பது பல பொருளும் தொக்கது. அதனுள் பிற புல்லும் மரனும் உளவேனும், கமுகாயினும் தெங்காயினும் சிலவுளவாகலிற் கமுகந் தோட்டம் தெங்கந்தோட்டம் என்பன அஃறிணைக்கண் தலைமை பற்றி வந்தன.

ஓடுவங்காடு காரைக்காடு என்பன பிற புல்லும் மரனும் உளவேனும் ஓடுவைகாரை பல வாதலால் அஃறிணைக்கண் பன்மையாற்பெயர் பெற்றன என்று அறிக.

பார்ப்பார் பலராயின் தலைமையான் பன்மையானும் பெற்ற பெயர்என்க. ஒன்றினம் முடித்தலான் அரசர் பெருந் தெரு, வயிரகடகம், ஆவுரிஞ்சுதூற்றி என்பனவும் பொதுச்சொல் எனக் கொள்க. (சகூ)

50. பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

எ து:-உயர்திணைக் கண்ணும் அஃறிணைக்கண்ணும், பெயரினும் தொழிலினும் பிரிந்து வரும் அவை எல்லாம் வழுவாகா; வழக்குவழிப்பட்டன வாகலான். உயர்திணை அஃறிணை என்பன மேனின்ற அதிகாரத்தாற் கொள்க.

---

49 - 2 "ஞாடு"

அவை மயங்காது வழங்கும் இடத்துப் பெண்ணொழிமி[1]குசொல்லும், ஆணொழி மிகுசொல்லும் என்று இரண்டு வகைப்படும்.

உ - ம்:—

வடுகர் ஐயாயிரவர் மக்களையுடையர் என்றக்கால் மக்கள் என்பது பொதுவாயினும் இது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல்.

பெருந்தேவி[2] கருவுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்றால்இது பெயரிற் பிரிந்த ஆணொழி மிகுசொல்.

அரசர்ஆயிரவர் மக்களொடு தாவடி போயினர்.

இன்று இச்சேரியாரும் அச்சேரியாரும் பொருப. இவை தொழிலிற்பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

இன்று இவ்வூரெல்லாந் தைந்நீராடுப; குறுங்காணம் பேர்ப, இவை தொழிலிற்பிரிந்த ஆணொழி மிகுசொல்.

உயர்திணைக்கண் பெயரானும் தொழிலானும். ஆண் பெண் பிரிந்தவாறு காண்க.

நம்மரசன் ஆயிரம் யானையை உடையன் என இது பெயரிற் பிரிந்தபெண்ணொழி மிகு சொல்.

யானை பெரிது, நம்பி[3]நூறெருமையுடையன் என்றக்கால்இது பெயரிற்பிரிந்த ஆணொழிமிகுசொல்.

எருமை பொது.

இன்று இவ்வூர் பெற்றம் எல்லாம் உழவொழிந்தன என இது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

இன்று இவ்வூர் பெற்றம் எல்லாம் அறத்திற்குக் கறக்கும் எனல் தொழிலிற் பிரிந்த ஆணொழிமிகுசொல்.

பெற்றம் பொது.

அஃறிணைக்கண் பெயரானும் தொழிலானும் ஆண் பெண் பிரிந்தவாறு காண்க.

---

50-1 "மிகீ"
2 "இருவுயிர்த்த"
3 "ஞா"

இனி எல்லாம் என்றதனால் இவர் பெரிதுஞ் சொல்லுமாறு வல்லர், இவர் பெரிதுங் கால்கொண்டோடுவர், இவர் மிகவுஞ் சோறுண்பர் எனத் தொழில் மிகுதி உணர்த்துவனவும் கொள்க.

மற்றையார் சொல்லு மாறறியார் கைகொண்டோடுவர், புற்றின்பார் என்பது சொல்லியதன்று; மிகுதி உரைத்தவாறு காண்க. (ருட)

51. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

எ - து:—பலஇடத்தினும் உயர்திணையும் அஃறிணையும் தம்முள் விராய் எண்ணப்படும்பொருள் செய்யுளிடத்து அஃறிணைச்சொல்கொண்டு முடியும்.

உ - ம் :—

வடுகர் [1]அருவாளர், வான்கரு நாடர்.
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடையார்.—எனவரும்.

பலவயினானும் என்றதனால் சில வயினாற் றிணை விரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவனவும் திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிவனவும் கொள்க.

உ - ம்:—

பாணன், பறையன், றுடியன், கடம்பனென்
[2]றிந்நான் கல்லது குடியு மில்லை.

இது திணை விரவாதுவந்து அஃறிணையான் முடிந்தது

பார்ப்பார். [3]தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப் பிடைப்
போற்றி யெனப்படு வார்.
எருதும் உழவனும் வந்தார் ஒருகுட நீர்
தாராய் (நீ) யாயர் மகள்.

---

51-1 "ரிவாளர்"

2 "றின்று"

3 "தன்வர்"

முர்க்கனும் முதலையுங் கொண்டது விடார்.
நங்கையுங் கிளியும் உண்டார்.
வேந்தன் பெரும்பதி மன்னன் மாக்க
ளிங்கிவர் மூவ ரிதற்குரி யோரே.
வண்டா ரோதி நீயு நல்லை.
தண்டார் மார்பி னிவனும் நல்லன்
ஒலிப்பாட்டினிவ் வூரு நன்றே.
தீயோர் யாவரு மில்லை.

*என இவை திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிந்தவாறு காண்க.* **(டுக)**

52. வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொலென்
றாயிரு வகைய பலபொரு ளொருசொல்.

*எ-து :— வினைவேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும் வினைவேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லும் என இரண்டுவகைப் படும் பல பொருள் ஒரு சொல்.*

*உ-ம் :—*

*அவை* - மா, வாள், கோல் கன்று, தளிர், பூ, காய், பழம் *என்னும் தொடக்கத்தன.* (டுஉ)

53. அவற்றுள்,
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் [1]சார்பினும்
தேறத் தோன்றும் பொருடெரி நிலையே.

*எ-து:—வினைவேறு படூஉம் பல பொருள் ஒரு சொல்லை அறியும் இடத்து வேறுபட்ட வினையினானும் இனத்தினானும் சார்பினானும் பொருள்தெரி நிலை தெளியத் தோன்றும்.*

*உ-ம்:—*

**மா தளிர்த்தது, பூத்தது; காய்த்தது,** *என்ற இடத்து மாமரத்தின்* மேலும், மாவோடு மாப் பாயும் *என்ற இடத்து* விலங்கின் மேலும் **செல்லும். (இவை)** *வினையான் அறியப்பட்டன.*

இனி, மாவும் மரையும் புலம்படர்ந்தன; மாவும் நாயும் ஓடின என்றால் இனத்தால் அறியப்பட்டன.

மாவும்மருதும் ஓங்கினஎன்றால் இதுவும் இனத்தால் அறியப்பட்டது.

விற்பற்றி நின்று கோறு என்ற இடத்துக் கணைக்கோன்மேலும், குதிரையேறி யிருந்து கோறு என்ற இடத்து மத்திகைக் கோன் மேலும் பலகை பற்றி நின்று வாடா என்ற இடத்து கண்டக வாண் மேலும் செல்லும் இவை சார்பாலறியப்பட்டன எனக்கொள்க.(௫௩)

54. ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்.

எ - து:—மேற்சொன்ன மூன்று வகையானும் அன்றிப் பொதுவினையாலும் வினை பொருந்தும்இடத்திற் பொருந்தித் தோன்றுவனவும் உள.

மாவீழ்ந்தது என்ற இடத்து இன்னமா என்று அறியலாகாது.வீழ்தற்றொழில் எல்லாவற்றிற்கும் பொதுவேயாயினும் இவ்இடத்து இக்காலத்து இவன் சொல்லுகின்றது இம்மாவினை என ஒன்றினை உணர்த்தி நின்றவாறு காண்க.

இதன் கருத்து:- வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல் ஒருகால் வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொற் போலவும் நிற்கும் என்பது. (௫௪)

55. வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

எ - து;—வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல் ஆராயுங்காலத்து இது எனக் கிளக்கப்பட்ட ஆராய்ச்சியுடைய இடத்து நடக்கும்.

உ - ம் :—

பல கன்று ஓரிடத்து உள்வழிக் கன்று நீருட்டுக என்றக்கால் எல்லாவற்றிற்கும் நீருட்டும் வினைப் பொதுவாகலான் கன்று நீருட்டுக என்று பொதுவாகச் சொல்லாது ஆன் கன்றை நீருட்டுக.

**எருமைக் கன்றை நீரூட்டுக** எனக் கிளந்து சொல்லுக. மரக்கன்று பல நின்றுழியும் இன்ன கன்றுக்கு நீரூட்டுக எனக் கிளந்து கூறுக.

**நினையுங்காலை** என்றதனால் ஆராய்ச்சியில்லாத இடத்துக் கிளவாது சொல்லுக.

உ - ம்:—

**கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறூஅர்** எனக் கிளவாது கூறியவாறு காண்க. (௫௫)

### 56. குறித்தோன் கூற்றம் தெரித்து மொழிகிளவி.

*எ - து:— தான் ஒரு பொருளைக் கருதிச் சொல்லுமேல் அதனை இற்றென்று தெரித்துச் சொல்லுக.*

உ - ம்:—

அரிதாரச் சாந்தங் கலந்தது போல
உருகெழுத் தோன்றி வருமே - முருகுறபூம்
அன்பன் மலைப் பெய்த நீர் எனத் தெரித்து மொழி.
கலந்தது போல வருமே யிலங்கருவி
யன்பன் மலைப்பெய்த நீர் என்று கூறற்க.

அன்றியும்,

பல்லார்தோள் தோய்ந்து வந்தலர்ற் [1]பாய்புனல்
நல்வய லூரநின் றூர் புலால்-புல்லெருக்க
மாசின் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்றுய் நாறும் எமக்கு எனவும் தெரித்து மொழிந்தவாறு.
ஒல்லேங் குவளை புலாஅல் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது
என்று கூறற்க; கூறில் வழுவாம். (௫௬)

---

௧௬-1. (பூம்பொய்கை.)

57. குடிமை ஆண்மை இளமை மூப்பே
¹அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்
றாவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

எ - து:— குடிமை முதல் ²விறற்சொல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினெட்டும் உட்பட அவைபோல்வன பிறவும் அவற்றொடு தொக்குக் குறிப்பினான் உயர்திணைப் பொருளை உணர்த்தும் சொற்கள் எல்லாம் உயர்திணை முப்பாற் கண்ணும் நிலை பெற்றன, ஆயினும் அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றுழிப்போல அஃறிணை முடிபே கொள்ளும்.

உ - ம்:—

இவர்க்குக் குடிமை நன்று, குடிமை தீது,
இவர்க்கு என்பதனை யாண்டும் ஒட்டிக் கொள்க.
ஆண்மை நன்று - தீது;
இளமை நன்று - தீது; மூப்பு நன்று - தீது.
அடிமை நன்று - தீது; வன்மை நன்று - தீது;
விருந்து வந்தது - போயிற்று; குழு நன்று, பிரிந்தது;
பெண்மை நன்று - தீது,
அரசு வந்தது - போயிற்று; மக நன்று - தீது;
குழவி அழுதது - கிடந்தது.

---

57-1. "அடுமை"
2. "விறற்ச்சொல்"

*இனித் தன்மைத்திரி பெயர் :-*

**அலி வந்தது - போயிற்று,**

*இனி உறுப்பின் கிளவி :-*

[3]குருடுவந்தது - போயிற்று; கூன் வந்தது - போயிற்று.

*இனிக் காதற் கிளவி :-*

என் காதல் வந்தது – போயிற்று; [4]என் பாவை வந்தது – போயிற்று,

*இனிச் சிறப்பு :-*

என் யானை வந்தது - போயிற்று.[5]

*இனிச் செறற் சொல் :-*

கெழியிலி வந்தது - போயிற்று,

*இனி விறற் சொல் :-*

பெருவிறல் வந்தது - போயிற்று *என வரும்.*

*இவை உயர் திணையாயினவாறு என்னை ?*

குடிமை *என்ற இடத்து ஒருவன் மேலானும் ஒருத்தி மேலானும் பலர் மேலானும் நிற்கும், ஒழிந்தனவும் இவ்வாறே காண்க,*

*இனி* அன்னபிறவும் *என்றதனல்,* பேடிவந்தது ; வேந்து வந்தது ; வேள் வந்தது ; குருசில் வந்தது ; பொறியறை வந்தது ; புரோசு வந்தது; உலகு வந்தது ; *எனவும் கொள்க.* *(நஎ)*

58. **காலம் உலகம் உயிரே உடம்பே**
**பால்வரை தெய்வம் வினையே பூதம்**
**ஞாயிறு திங்கள் சொல்என வருஉம்**
**ஆயி ரைந்தொடு பிறவும் அன்ன**
**ஆவயின் வருஉங் கிளவி எல்லாம்**
**பால்பிரிந் திசையா உயர்திணை மேன.**

---

**57-3,** "குரு"

4. ***(இச் சொற்றொடர் இங்கு விடுபட்டுள்ளது .)***

5. ***(இனிக் "காதல் கிளவி என் காதல் வந்தது போயிற்று, பாவை வந்தது போயிற்று" என்று இங்கே மற்றோர் முறை வருகிறது.)***

எ - து :—காலம் முதலாகச் சொல் ஈறுகச் சொல்லப்பட்ட பத்தும் அத்தன்மையன பிறவுமாகிய சொல் எல்லாம் உயர்திணையே எனினும் உயர்திணையிடத்துப்பால் பிரிந்திசையா; அஃறிணைக்கண் இசைக்கும்.

உ - ம் :—

இவற்குக் காலமாயிற்று; வினை நன்று - தீது,

இவனைப் பூதம் புடைத்தது; ஞாயிறெழுந்தது - பட்டது,

திங்க ளெழுந்தது - பட்டது,

சொல் நன்று - தீது,

பிறவும் என்றதனால் வெள்ளி எழுந்தது - பட்டது, வியாழமெழுந்தது-பட்டது. செவ்வாயெழுந்தது-பட்டது, என்பன எல்லாம் கொள்க.

மேற் சூத்திரத்துள் அன்ன பிறவும் என்றதனால் ஆங்கு மீண்டு சூத்திரம் சொல்லியது என்னை எனின், மேற் சூத்திரத்துள் சொல்லின எல்லாம் மக்கண் மேலன. இதனுள் சொல்லின எல்லாம் தெய்வங்கள் மேலன என்பது.

காலம் என்பது கூற்றத்தை; உலகம் உடையான்; உயிர் என்பதனையும் தெய்வம் என்ப.

உடம்பு, ஐம்பெரும் பூதங்களி னியன்றமையின் தெய்வம் [1]என்ப. பால்வரை தெய்வம் எல்லார்க்கும் இன்ப துன்பங்களை அவ்வவர் விதி வழியிற் பயப்பதோர் தெய்வம், வினை வினையைப் படைப்பானையன்றி இருவினையையும் தெய்வம் என்ப

பூதம் என்பது ஓர் தெய்வம். [2]ஞாயிறு திங்கள் என்பனவும் அவை. [3]சொல் சொல்லின் கிழத்தியை என இவ்வாறு கொள்க.

இனி [4]இன்றுமோர் கருத்து:- மேல் உயர்திணை அல்லாதன உயர்திணையாய் அஃறிணையான் முடிபு ஏற்றமை காட்டினார்; இதனால் உயர்திணையான தேவரையும் மக்களையும் உள்ளடக்கி அஃறிணையான் முடிபு எய்தினமை காட்டினார் என்க.

---

58 - 1. "எனப்"

2. "ஞாயறு"

3. "சொல்லி"

4. "முன்றுமோர்"

உலகமும் உயிரும் உடம்பும் மக்கட் பண்பு; அல்லன தெய்வம் எனக் கொள்க.

பால் பிரிந்திசையா வுயர்திணை மேன: உயர்திணைமேற் பால் பிரிந்திசையா என்க. (௫அ)

## 59. நின்றுங் கிசைத்தல் [1]இவண்இயல் பின்றே.

எ-து:—ஈறு திரியாது நின்றுங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல் காலம் உலகம் முதலிய சொற்களிடத்து இயல்பில்லை; எனவே குடிமை முதலிய சொற்களிடத்து நின்றுங்கிசைத்தல் இயல்பாம் என்பதாம்.

காலமுலகம் என்னும் சூத்திரம்.[2]

உ-ம்:—

**குடிமை நல்லன்; ஆண்மை நல்லன்;**

**இளமை நல்லன்; மூப்புத் தீயன்** என ஒட்டிக்கொள்க,

இச் சூத்திரம் குடிமை யாண்மை என்னும் சூத்திரத்துக்குப் புறநடை என்றறிக. (௫௯)

## 60. இசைத்தலும் உரிய வேறிடத் தான.

எ-து:—காலம் முதலிய சொற்கள் உயர்திணையாய் இசைத்தலும் உரிய; ஈறு திரிந்து வாய்பாடு வேறு பட்டவிடத்து, வேறிடமாவது ஈறுதிரிதல்.

**காலம்** என்பது மகரவீறு, அது **காலன்** எனத் திரிந்தது. பிறவும் ஏற்குமாறு திரித்துச் சொல்லுக.

உ-ம்:—

**காலன் கொண்டான்; [1]உலகாப்பன், உயிர்க்கிழவன் போயினன்** என ஒட்டுக.

இச் சூத்திரம் காலமுலகம் என்பதற்குப் புறநடை. (௬0)

## 61. எடுத்த மொழிஇனஞ் செப்பலும் உரித்தே.

---

59-1 "இவணியல்பின்மேல"

2 ("சூத்திரத்தின் ஒழிபு" என்றிருத்தல் வேண்டும் போலும்.)

60-1 ("உலகப்பன்" அல்லது "உலகு காப்பான்" என்றிருத்தல் வேண்டும்.)

எ-து:—இது அருத்தாபத்தி கூறுகின்றது. இனமாகிய பொருட்கண் ஒன்றை விதந்து கூறியவழி அச்சொல் தனக்கு இனமாகிய பிறபொருளைக் குறிப்பான் உணர்த்தலும் உரித்து.

எடுத்த மொழி-விதந்த சொல்.

உ-ம்:—

**அறஞ் செய்தான் துறக்கம்**[1] **புகும்** என்றவழி மறஞ் செய்தான் நிரையம்[2] புகும் என்பது உணர்த்திற்று. **இழிபறிந்துண்பான் இன்பம் எய்தும்** எனக் கழிபேரிரையான் இன்பம் எய்தான் என்பது உணர்த்திற்று. **குடங் கொண்டான் வீழ்ந்தான்** எனக் குடம் வீழ்ந்தது சொல்லாமல் முடிந்தது.

பிறவும் அன்ன.

இனஞ் செப்பலு முரித்தே [3]என்னும் உம்மையாற் [4]செப்பாமையும் உரித்து. **ஆ வாழ்க. அந்தணர் வாழ்க.** என்றால் ஒழிந்தனவும் ஒழிந்தாரும் சாக என்பது அன்று எனக் கொள்க. (சுக)

**62. கண்ணும் தோளும் முலையும் பிறவும்**
**பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி**
**பன்மை கூறுங் கடப்பா டிலவே**
**தம்வினைக் கியலும் எழுத்தலங் கடையே.**

எ-து:—கண்ணும் தோளும் முலையும் அவை போல்வன பிறவும் பன்மையைக் குறித்து நின்ற சினை நிலைமையை உணர்த்திய சொற்கள் தமக்கு உரிய பன்மை வினைக்கு ஏற்ற அகர ஈற்றுக் கூறக் கருதாது, தம் முதல் வினைக்கு ஏற்ற ஒருமை ஈற்றும் பன்மை ஈற்றும் கூறக் கருதிய வழித் தமக்கு உரிய பன்மையாற் கூறப்படும் [1]முறைமையுடைய அல்ல.

உ-ம்:—

**கண் நல்லள், கண் நல்லன், கண் நல்லர்;**
**தோள் நல்லள், தோள் நல்லன், தோள் நல்லர்;**

---

61-1. "புகுதும்"
2. "புகுதும்"
3. "எனின்"
4. "செப்பாமனும்"

62-1. "முறைமை"

முலைநல்லன்(?) முலைநல்லள், முலைநல்லர் எனவும்
கண் நொந்தான், முலை நொந்தாள் எனவும் வரும்.
பிறவும் என்றதனுற் புருவம் காது கால் முதலியன கொள்க.
²பன்மை கூறுங் கடப்பாடில என்றதனுல் ஒருமைக்கும் கொள்க.

மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என்க. தம்வினைக்கியலு மெழுத்தலங்கடையே, என்றதனுல் தம் முதலுக்கு இயலும் எழுத்தான் முடியும் என்பதாம்.

இச் சூத்திரம் அஃறிணை உயர்திணையான் முடியுமாறு கூறித் திணைவழுவமைத்தது.

தன்னின முடித்தல் என்பதனுற் கோடுகூரிது, குளம்பு கூரிது, குதிரை எனத் திணைவழுவின்றி அஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல் வினையாகிய ஒருமையான் முடிவனவும் கொள்க. (௬௨)

முதலாவது ³ கிளவியாக்க உதாரணம்
முற்றும்.

---

62- 2. "பன்மைக்கூறும்"

3. (பின் "வேற்றுமை இயல் முற்றும்" என்றே உள்ளது. அவ்வாறு-ஞல் "கிளவியாக்கம் முற்றும்" என்றே இங்கு இருத்தல் வேண்டும். ஆனுல், இவ்வுரை உதாரணம் காட்டுவதற்கே எழுந்தது என்பதனை இங்கே உள்ள சொற்றொடர் நன்கு விளக்குகிறது; ஆதலின்" "வேற்றுமை இயல் உதாரணம் முற்றும்" என்று பின்னதனைத் திருத்துவதே நன்றாம்.)

### இரண்டாவது

## வேற்றுமை [1]இயல்

**63. வேற்றுமை தாமே ஏழெனமொழிப.**

எ - து :—வேற்றுமை என்று சொல்லப்படுவன ஏழு வகைய.

வேற்றுமையாவது சொற்களை வேற்றுமை செய்வது. ஏழுவகையாவது: சாத்தனுண்டான் என்ற இடத்து எழுவாயும், சாத்தன் சோற்றை உண்டான் என்ற இடத்து இரண்டாவதும், சாத்தன் [2]கொற்றனொடு வந்தான் என மூன்றாவதும், சாத்தற்குக் கொடுத்தான் என நாலாவதும், சாத்தனின் வலியன் என்ற இடத்து ஐந்தாவதும், சாத்தனதாடை என்ற இடத்து ஆறாவதும், சாத்தனிருந்தான் முற்றத்துக்கண் என ஏழாவதும் ஆம்.

இப்படியாக வேற்றுமைப்படு பொருள் கொண்டு வருதலால் வேற்றுமை ஏழெனப்பட்டது. (க)

**64. விளிகோள் வதன்கண் விளியோ டெட்டே.**

எ - து :—விளி ஏற்கும் பெயரொடு வேற்றுமை எட்டாம். விளி[1]கொள்வதன்கண் என்றதனால் விளி ஏலாதனவும் உள. அவை விளிமரபிற் காண்க. (உ)

**65. அவை தாம்,**
**பெயர் ஐ ஒடு கு**
**இன் அது கண் விளி என்னு [1]மீற்ற.**

எ - து :—எட்டு வேற்றுமையும் விளி வேற்றுமையை[2] இறுதியாக உடைய பெயரும், ஐயும், ஓடும், குவ்வும், இன்னும், அதுவும், கண்ணும், ஆம். (ங)

---

63-1 "மரபு"
2 "கொத்தனொடு"

64 - 1. "கொள்ளதன் கண்"

65-1. "மீதே"
2. "இறுதியாகிய"

66. அவற்றுள்,
எழுவாய்வேற்றுமை பெயர் தோன்று நிலையே.

எ - து:—எழுவாய் வேற்றுமை உருபும் விரியும் ஏலாது, பெயராகவே தோன்று நிலைமை யதுவாம்.

உ - ம்:—

ஆ என வரும். (ச)

67. [1]பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
[2]றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.

எ - து:—எழுவாய் வேற்றுமை பொருண்மை சுட்டல் முதலாகிய ஆறுவகைப்பட்ட பயனிலையையும் ஏற்கும்.

உ - ம்

பொருண்மை சுட்டல்:- ஆவுண்டு என்பது,
வியங்கொள வருதல்:- ஆ செல்க என்பது,
வினைநிலையுரைத்தல்:- ஆகிடந்தது என்பது,
வினாவிற் கேற்றல்:- ஆவோ என்பது,
பண்புகொள வருதல்:- ஆகரிது என்பது,
பெயர் கொள வருதல்:- ஆ ஒன்று, பல என்பது.

பொருள் என்னாது பொருண்மை என்றதனால் ஆ - என்னும் பொருள்[3], கெட்டதேனும் அவ் ஆவினது சாதித்தன்மை எக்காலத்தும் கெடாது நிற்கும் என்பது கொள்க. (ரு)

68. பெயரி னாகிய தொகையுமா [1]ருளவே
அவ்வு முரிய அப்பா லான.

---

67 - 1. "பொருண்மெச்சுட்டல்"
2. "என்றிவையனைத்தும்"
3. "கெட்டதென்றும்"

68 - 1. "று"

எ - து:— பெயரும் பெயரும் தொக்க தொகையும்உள [2]அவையும் உரிய அவ் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கோடற்கு.

உ - ம்:—

யானைக்கோடு உண்டு-செல்க, வீழ்ந்தது, கோடோ,பரிது,பல என வரும்.

உம்மையால் வினையொடு [3]பெயர்தொக்கதூஉம் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும்.

கொல்யானை உண்டு - செல்க என ஓட்டிக்கொள்க. அன்றியும், தொகையு மாருளவே[4] என்றதனால் அறுவகைப்பட்ட தொகைச் சொல்லும் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும் என்க.

உ - ம்:—

யானைக் கோடு கிடந்தது, மதிமுகம் வியர்த்தது, கொல் யானை நின்றது, கருங் குதிரை யோடிற்று, உவாப்பதினான்கு கழிந்தது, பொற்றொடி வந்தாள் என வரும். (சா)

69. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப

எ - து:—தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்துப் பெயரும் விளங்கத் தோன்றி எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கோடல் செவ்விது என்ப. முன் எழுவாய் வேற்றுமைப் பெயர் இன்னது என்று வரைந்தது இன்மையின் அம்மூன்றிடத்துப் பெயருமே எழுவாய் வேற்றுமைப் பெயர் என்று உணர்த்தியவாறு காண்க. (எ)

70. கூறிய முறையின் உருபுநிலை திரியா
ஈறு பெயர்க்காகும் இயற்கைய என்ப.

எ - து :—மேல் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்று கூறிய முறையையுடைய உருபுகள் தத்தம் நிலை திரியாது பெயர்க்கு ஈறும் இயல்பை உடைய என்ப.

---

68 - 2. "அதுவும்"

3, "பெயர்த்தொக்க"

4, "மெ"

உ-ம்:—

சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும். (அ)

71. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழி[1]னிலை யொட்டும் ஒன்றலங் கடையே.

எ-து:—பெயரது நிலையிலே நிற்றலுடைய சொல்[2], காலம் தோன்றாது, ஒரு பொருளது புடை பெயர்ச்சியாய்க் காலம் தோன்றுதற்குப் பொருந்தும் தொழிற் பெயர் அல்லாத இடத்து. ஒட்டும்-பொருந்தும்.

உ-ம்:—

சாத்தன் என்றது காலம் தோன்றாது, உண்டான் எனக் காலம் தோன்றி நின்றது.

தொழிற் பெயர்-இனி ஒட்டு மொன்றலங் கடையே என்றதனால் தொழிற் பெயராய் நிற்கும் சொல்லும் காலம் தோன்றாதனவும் உள.

அவை, உண்டல், தின்றல், பூசல், வேட்டை என்பன. அவை தொழிலது புடை பெயர்ச்சி மாத்திரம் உணர்த்துவதல்லது காலம் தோன்றா.

இனி எல்லாத் தொழிற் பெயரும் காலம் தோன்றும் என்பதுபடச் சொல்லுதல் குற்றம்.

இனி உண்டான் தின்றான் என்புழித் தொழினிலை ஒட்டுவன காலம் தோன்றி நிற்றலும் கண்டுகொள்க. (௯)

72. இரண்டாகுவதே,
[1]ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்று [2]மதுவே.

எ-து:—பெயர், ஐ, ஒடு, கு என்னும் சூத்திரத்து ஐ எனப் பெயர்பெற்ற வேற்றுமைச் சொல் இரண்டாவதாம். அஃதியாண்டு வரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய இரண்டு முதற் கண்ணும் தோன்றும்-அவை பொருளாக என்றவாறு.

---

71-1. "நி"
2. "ற்"

72-1. "ஐய் யெனப் பெயரின்"
2. "மென்ப"

உ - ம் :—

குடத்தை வனைந்தான், குழையையுடையன் என வரும்.

**பெயரிய** என்பது பெயரென்பது முதனிலையாக முடிந்ததோர் பெயரெச்சம். தன்மை உணர்த்துவனவும் பெயர் எனப்படுதலின் ஐ ந் எனப் பெயரிய என்றார்.

வினையே வினைக்குறிப்பென்றாராயினும் அவற்றின் செயப்படுபொருளே கொள்ளப்படும்.

[3]செயப்படுபொருளாவது ஒருவினை செய்யும் தொழிலினை உறுவது.

**அவ்விரு முதலிற்றோன்றும்** என்ற அதனான் முதலாதற்கும் வேற்றுமைப் பொருளாதற்கும் ஏற்பன அவையே யாகலின், முதல்காரணம், அவை முதலாதற்கு ஏற்றவாறு என்னை எனின், செயப்படுபொருண் முதலாயின தொழிற்குக் காரணமாகலான்; ஆயெட்டென்ப தொழின் முதனிலையே என்னும் அவற்றை முதனிலை என்று கூறுப ஆகலான்; அஃதேற் செயப்படுபொருளாவது தொழிற்பயனுறுவதாகலான் குழை முதலாயினவற்றிற்கு அவ் இலக்கணம் [4]ஏலாமையிற்செயப்படுபொருள் அன்மையான் வினைக்குறிப்பு எனல் வேண்டா; எனின், அற்றன்று; அம்முக்காலமுங் குறிப்பொடு கொள்ளுமெய்ந்நிலையுடைய என்றார் ஆகலிற் குறிப்புச் சொற் காலமொடு தோன்றிற் றொழிற் சொல் ஆதலும் குழை முதலாயின தொழிற்பயன் உறுதலும் ஆசிரியரது துணிபு ஆதலின் அவையும் செயப்படு பொருளாம் என்பது, ஆயின் செயப்படுபொருட்கட் டோன்றும் என அமையும்; வினையே வினைக்குறிப்பு எனல் வேண்டா எனின், தெரிநிலை வினைச் செயப்படு பொருளையே கூறினரோ[5] குறிப்பு வினைச் செயப்படு பொருளும் அடங்கப் பொது வகையாற் கூறினரோ என்று ஐயம் [6]அகலாமையின் வினையே வினைக்குறிப்பு எனல் வேண்டும் [7]என்பது.

வினை, வினைக் குறிப்பு என்பன ஈண்டு ஆகு பெயர். எவ்வழி வரினும் என்றதனால், புகழை நிறுத்தான், புகழை நிறுத்தல், புகழையுடையன், புகழை உடைமை[8].....

---

72 3. "செயப்படும் பொருள்" (பின் எல்லாம் இவ்வாறே வரும்)

4. 'ஏருமையின்"

5. "குறிப்புச் செயப்படு பொருளும்'

6. "ஆகாமையின்"

7. "ஆரென்பது"

8. ("என இரண்டா" விடுபட்டுள்ளது)

வது பெயரொடு தொடர்ந்த வழியும் வினைச் செயப்படு பொருளும் குறிப்புச் செயப்படு பொருளும் பற்றியே நிற்கும்.

செயப்படு பொருள், இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதும் என மூன்றும்.

**இயற்றப்படுதலாவது** முன் இல்லதனை உண்டாக்குவது. **வேறுபடுத்தல்** முன் உள்ளதனைத் திரித்தல், **எய்தப்படுவது** தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றல்.

இவ்வுருபை முடித்தற்கு, மேற் **காப்பு** முதலிய வாய்ப்பாடுபற்றி வரும் பொருள்களை இம் மூன்று கூற்றானும் பகுக்கின்றார், வினைமாத்திரையும் வினைப் பெயருமாகப் பகுப்பர்.

ஈண்டு **நடந்தை வனைந்தான்** என்றலும் மேல் வரும் **இழை** என்னும் **இயற்றப்படும்** பொருளை.

அது **எயிலை இழைத்தான்** என வரும்.

என்றது எயிலை யிழைத்தலைச் **செய்தான்** என்னும் பொருட்டு, இழை என்னும் வினை மாத்திரை உணர்த்தும் பெயர் நிலை, முன்னர் **இழைத்தல்** [9]என்னும் பெயரைத் தோற்றுவித்து: **இழைத்தலை** என [10]உருபையும் ஏற்பித்துச் **செய்தான்** என வினை யொழிந்த காரணங்கள் ஏழானும் நிகழும் காரியத்தினையும் தோற்றுவித்து நிற்றலின் இழை என்னும் முதனிலைப் பெயரை வேற்றுமைப் பொருளாக எடுத்து ஓதினார். இப் பொருட்கட் டோன்றிய **செய்தான்** என்னும் காரியத்துட னல்லது, **எயிலை** என்னும் இரண்டாவது முடியாமை உணர்க.

இவ்வாறே மேல் இச் சூத்திரத்தில் ஒழிந்த பொருள்களையும். விரிக்க.

இனி வினைக் குறிப்பிற்கும் **குழையையுடையன்** என்புழி **உடையம்** எனக் கருதல் வினை. அக் கருத்தை நிகழ்த்துகின்றான் வினைமுதல். அக் குழை அவன் கருத்து நிகழ்த்தப்படு பொருளாய்க் கிடக்கின்ற தன்மை; செயப்படு பொருள். இவ்வாறே ஒழிந்தனவும் குறிப்பாற் காண்க. (எ)

---

72 - 9 "என்னை"

10 "உரிமை"

73. காப்பி னொப்பி னூர்தியி [1]னிழையி
னொப்பிற் புகழிற் பழியி னென்று
பெறலி னிழவிற் காதலின் வெகுளியிற்
செறலி[2] னுவத்தலிற் கற்பி னென்று
அறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற் பிரித்தலி
னிறுத்தலி னளவி னெண்ணி னென்று
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னோக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்று
வன்னவும் பிறவு மம்முதற் பொருளி
லென்ன கிளவியு மதன்பால வென்மனார்.

*எ - து :—செயப்படு பொருண் மூன்றனையும் பற்றிவரும் வாய்பாடுகளை விரிக்கின்றார்.*

**காப்பு** *முதலாகச்* **சிதைப்பு** *ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும் அவை போல்வன பிறவுமாகிய அச் செயப்படுபொருண் மேல்வரும் எல்லாச் சொல்லும் அவ்இரண்டாம் வேற்றுமைப் பால என்று சொல்லுவர் புலவர்.*

**என்று** *எண்ணிடைச்சொல்.* **இன்** *எல்லாம் புணரிய னிலை[3] யிடைப் பொருணிலைக்குதலால் எண்ணின்கண் வந்தன.* **அம் முதல்** *என்பது மேற் கூறப்பட்ட செயப்படுபொருள்.*

*உ - ம்:—*

**எயிலை யிழைத்தான்** *என இயற்றப்படுவது இஃது ஒரு தன்மைத்து ஆகலின் ஒருவாய்பாடே கூறினர்.*

**கிளியை ஓப்பும், பொருளை இழக்கும்** *இவற்றிற்கு வேறுபாடு:- ஓர் தொழிலுறுவிக்கப்பட்டுத் தானே போதலும், தொழிற் பயனுற்ற மாத்திரையாய் ஒருவன் கொண்டுபோதலும்.*

---

**73 - 1.** *"னிழைப்பின"*

**2.** *"னுவற்றலிற்"*

**3.** *"யு"*

நாணையறுக்கும்,மரத்தைக் குறைக்கும் இவற்றிற்கு வேறுபாடு சிறிதிழவாமல் வேறுபடுத்தலும் சிறிதிழக்க வேறுபடுத்தலும் பெருமையைச் சுருக்குதலும்,

நெல்லைத் தொகுக்கும், வேலியைப் பிரிக்கும். இவற்றிற்கு வேறுபாடு விரிந்தது தொகுத்தலும் தொகுத்தது விரித்தலும்,

அறத்தை ஆக்கும், நாட்டைச் சிதைக்கும், [4]இவற்றிற்கு வேறுபாடு மிகுத்தலும் கெடுத்தலும்,

இவ் வெட்டும் வேறு படுக்கப் படுவன.

ஊரைக் காக்கும், தந்தையை ஒக்கும், தேரை ஊரும், குருசிலைப்புகழும், நாட்டைப் பழிக்கும், புதல்வனைப் பெறும், மனைவியைக் காதலிக்கும், பகைவரை வெகுளும், செற்றரைச் [5]செறும், நட்டாரை உவக்கும், நூலைக் கற்கும், பொன்னை நிறுக்கும், அரிசியை அளக்கும், அடைக்காயை எண்ணும், ஊரைச் சாரும், நெறியைச் செல்லும், சூதினைக் கன்றும். கருணையை நோக்கும், கள்ளரை அஞ்சும் எனப் பத்தொன்பதும் எய்தப்படுவன. இவைதாம் தொழிலுறுவனவும் தொழிற் பயனுறுவனவுமாய் வரும் வேறுபாடும் உணர்க.

வெகுடலும் செறலும் கொலைப்பொருளாம்வழி வேறு படுக்கப்படுவனவாம்.

செறல் வெகுளியது காரியம், உவத்தல்[6] காதலது காரியம்

வேறு படுக்கப் படுவதும் எய்தப்படுவதும் பல் இலக்கணத்த ஆதலின், பலவாய்பாட்டான் விரித்துக் கூறினர்.

அன்ன பிறவும் என்றதனுன் பகைவரைப் பணிந்தான், சோற்றை அட்டான், குழையை உடையன், பொருளை இலன் என்னும் தொடக்கத்தன கொள்க.

இயற்றப் படுதன் முதலாகிய வேறுபாடு குறிப்புவினைச் செயப்படு பொருட்கண் ஏற்பன கொள்க. (௭௧)

---

73-4. (இவற்றிற்குஆக்குதல்-சிதைத்தல் என்றவற்றிற்கு)

5. "செரும்"

6. "காத்தலது",

74. மூன்றாகுவதே,
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே.

எ - து :—மேல் ஒடு எனப்பெயர் கொடுத்து ஓதிய வேற்றுமைச்சொல் மூன்றாவதாம். அது வினைமுதலும் கருவியுமாகிய இரண்டு காரணத்தையும் பொருளாக உடைத்து. மேல் [1]அதனினியறல் முதலியன ஆன் உருபிற்கு ஏற்ப [2]உடம்பொடு புணர்த்துச் சூத்திரம் செய்தலின் அவற்றிற்கு முன்னர்க் கொண்ட ஒடு என்பதற்கும் ஆன் என்பதற்கும் வினை முதல் கருவி கொள்க.

ஆன் ஆலாய்த் திரிந்து நிற்கும்.

வினை முதல் கருத்தா என்றலும் ஒன்று.

கருத்தா நின்று தன்னை ஒழிந்த கருவி முதலாகிய காரணங்கள் ஏழனையும் காரியத்தின் கண் நிகழ்த்துவது, வினை முதல் :—

அது இயற்றும் வினைமுதலும் ஏவும் வினை முதலும் என இரு வகைப்படும்.

உ - ம் :—

கொடியொடு துவக்குண்டான் என்பது இயற்றும் வினைமுதல். அது கொடி தன்னொடு துடக்குதலைச் செய்யப்பட்டான் சாத்தன் என்னும் பொருட்டு, கொடியினது நெகிழ்ச்சி ஈண்டு கருவி; கொடி சாத்தனைத் தொழிலுறுவிக்குங்கால் தான் அவனை நீங்கா உடனிகழ்ச்சியை விளக்கிற்று ஒடு எனுருபு.

அரசனான் இயற்றப்பட்ட தேவகுலம் என்பது வினைமுதல்.

இனிக் கருவி காரணம் ஏது நிமித்தம் என்பன தம்முள் வேறுபாடுடைய வேனும் ஒத்தபொருட்டு. அக்காரணம் முதற்காரணமும் துணைக் காரணமும் என இருவகைப்படும்.

---

74 - 1. "அதனினிலை"

2. "இன் ஆன் ஏது"

**முதற்காரணமாவது:**-காரியத்தொடு ஒற்றுமையுடையது.

**துணைக்காரணமாவது** (அம் முதல்,) [3]அம் முதற் காரணத்திற்குத் துணையாகிய வினை முதலிய எட்டும், **கருவியாவது** வினை முதற் றொழிற்பயனைச் செயப்படு பொருட்கண் உய்ப்பது. அதுவும் இயற்றுதற்குக் கருவியாகிய காரகக் கருவியும் ஞாபகக் கருவியும் என இருவகைப்படும். ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் என்பது காரகக் கருவி. அது ஊசி கொண்டு சாத்தன் குயிலுதலைச் செய்யப்பட்ட தூசும் பட்டும் என்னும் பொருட்டு; சாத்தன் றொழிற் பயனை ஊசி தூசிலும் பட்டிலும் [4]நிகழ்த்திற்று.

மண்ணான் இயன்ற குடம் என்பது முதற் காரணம், இதுவும் காரகக் கருவி. உணர்வினான் உணராதான், புகையினால் எரி உள்ளது உணர்ந்தான், இவை ஞாபகக் கருவி.

இவற்றிற்கு உணர்வு முதற் காரணம்,

காரகமாவது:- தொழிலை இயற்றுவிப்பது,

ஞாபகமாவது அறிவிப்பது.

இனி, ஆன் :- அகத்தியனாற் றமிழுரைக்கப்பட்டது. [5]வேலான் எறிந்தான் என வரும்.

வினை முதல் கருவிக்கண் ஒடு எனுருபு இக்காலத்து அருகியல்லது வாராது.

ஒடு, உலகத்தோடொட்ட லொழுகல்.

[6]காவோடறக் குளந்தொட்டானும்

நாவிற்றிருந்த புலமா மகளோடு நன்போல்

பூவிற்றிருந்த [7]எனவும். (கஉ)

---

74 - 3 (பிறை வளைவில் உள்ளது வேண்டா)

4 "நிகழ்த்திற்று"

5 "வேலால்"

6 "காலோதடரக்குளம்"

7 "எனவும் வரும்" (இருந்ததில் பின்னைய சொல் விடுபட்டுள்ளது போலும்)

**75.** அதனி னியற லதற்றகு கிளவி
அதன்வினைப் படுத லதனி னாதல்
அதனிற் கோட லதனொடு மயங்கல்
அதனொ டியைந்த வொருவினைக் கிளவி
அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனொ டியைந்த [1]வொப்ப லொப்புரை
இன்னா னேது வீங்கென வரூஉம்
அன்ன பிறவு மதன்பால வென்மனார்.

*எ - து:—அதனினியறல்:-* மண்ணானியன்றகுடம்.

*அதற்றகு கிளவி:-* வாயாற்றக்கதுவாய்ச்சி, அறிவானமைந்த சான்றார், இவை கருவிப் பாற்படும்.

*அதன் வினைப்படுதல்:-* நாயாற் கோட்பட்டான், சாத்தனான் முடியும் இக் கருமம் இவை *வினை முதற்பாற்படும்,*

*அதனினாதல் என்பது:-* வாணிகத்தானாயினான்

*அதனிற் கோடல்:—*காணத்தாற் கொண்ட அரி,

*இவையும் கருவிப் பாற்படும்,*

*[2]இவற்றையும் உரிய போலக் கூறினார்.*

*அதனொடு மயங்கல்:-* [3]எண்ணொடு விராய அரி

*அதனொடியைந்த ஒருவினைக் கிளவி:-* ஆசிரியனொடு வந்தான் மாணக்கன்; *வருதற்றொழிலிருவர்க்கும் ஒத்தலின் ஒருவினைக் கிளவி ஆயிற்று.*

*அதனொடியைந்த வேறுவினைக்கிளவி:-* மலையோடு பொருத மால்யானை. *மலைக்கு வினை இன்மையின் இது வேறுவினைக் கிளவி ஆயிற்று.*

---

**75-1** "ஒப்புலொப்புரை"

**2** "இவையை யுரிய"

**3** "எண்ணொடு......"

அதனொடியைந்த [4]ஒப்பலொப்புரை :- பொன்னொடிரும்பனையர், நின்னொடு பிறர், ஒப்பில்லதனை ஒப்பாகக் கூறுதலின் ஒப்பலொப்புரை ஆயிற்று.

இந் நான்கற்கும் உடனிகழ்தல் பொது என்பதூஉம் அவை ஒடு எனும் உருபிற்கே உரிய என்பதூஉம் உணர்த்திய அதனோடியைதல் நான்கற்கும் கூறினர்.

இன்னனேது :- இன்னுமானு மேதுவின் கண் வரும், முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது, [5]தவத்தான் பெற்றான் வீடு என்க.

அதனினுதல் காரக ஏது முன் கூறப்பட்டமையான் இது ஞாபக ஏதுவாம்.

ஐந்தாவதற்குரிய இன்னுருபு ஈண்டுச் சொல்லியது இன்னும் ஆனும் ஏதுப் பொருண்மைக்கு உரியன என்று வரையறை செய்தற் பொருட்டு. இன்னான் என்பது உம்மைத் தொகை.

இன்னான் என்பது :-கண்ணாற்கொத்தை அவன், காலான் முடவனவன் என்றுமாம்.

சினை வினைமுதற்கேறியவாறு.

என என்பதனைமாற்றி ஏது என்பதன் பின் கொடுத்து இங்கு வருஉ மன்ன பிறவும் என அமைக்க

உறழ் மணியா னுயர்மருப்பின

பெண்டகையாற் பேரமர்க்கட்டு

இவை ஆன் ஒடு உருபு ஆயிற்று.

மனத்தொடு வாய்மை மொழியில், இது ஒடு ஆனுயிற்று. அன்ன பிறவும் என்றதனுன் தூங்கு கையா னோங்கு நடைய,

மதியோ டொக்கு முகம், நூலொடு கழுதை பாரஞ் சுமந்தது.

இது கட்புலனுகா ஒரு வினை ஒடு என்றறிக. (கூ)

---

75-4 "ஒப்பிலொப்புரை"

5 "தவத்ருன்"

76. நான்காகுவதே,
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெப்பொரு ளாயினுங் கொள்ளுமற் றதுவே.

எ - து :— மேல் கு எனப் பெயர் கொடுத்துஓதப்பட்ட வேற்றுமைக் கிளவி நான்காவதாம். அஃது யாதானும் ஒரு பொருளாயினும் அதனைத்தான் ஏற்று நிற்கும் என்றவாறு.

உ - ம் :—

அந்தணர்க்கு ஆவைக் கொடுத்தான், என வரும்.

மாணுக்கற்கு நூற்பொருளை உரைத்தான் எனக் கொடைப் பொருளவாகிய சொல்லான் அன்றிப் பிறவாய்பாட்டாற் கூறப்படுவனவும் மாணுக்கற்கு அறிவு கொடுத்தான் எனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத்தோன்றும் பொருளும் அடங்குதற்கு எப்பொருளாயினும் என்றார். (கச)

77. அதற்குவினை யுடைமையி னதற்குடம் படுதலின்
அதற்குப் படுபொருளி னதுவாகு கிளவியின்
அதற்கியாப் புடைமையி னதற்பொருட் டாகலின்
[1]நட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியு மதன்பால வென்மனார்.

[2]என்றது:-அதற்கு வினையுடைமையின், கரும்பிற்குவேலி; [3]மயிர்க்கு எண்ணெய் ; மேனிக்கு மஞ்சள் ; உயிர்க்கு உண்டி என்பன. வினை ஈண்டு உபகாரம்.

அதற்குடம்படுதலின் :- சாத்தற்கு [4]மகள் உடம்பட்டார் ; சான்றோர் கோலைக்கு உடன்பட்டார் என்பன.

---

77 - 1 "னட்புப் பகைமை"

2 (பொருள் கூறுது உதாரணமே கூறுவது காண்க)

3 "மயிற்க்கெண்ணை"

4 "மக்கள்"

அதற்குப் படுபொருளின்; சாத்தற்குக் கூறுகொற்றன், [5]கொற்றற்குக் கூறு தேவன்என்பன· பொதுவாகிய பொருளைப் பகுக்குங்கால் ஒருவற்குப்படும் பொருள் என அறிக.

அதுவாகு கிளவியின்:- கூடி சூத்திரதிற்குப் பொன். பொன் கூடி சூத்திரமாய்த் திரியும் ஆதலின் அது வாகு கிளவி என்றார். கிளவி = பொருள்.

அதற்கியாப்புடைமையின் : கைக்கியாப்புடையது கடகம் என்பது.

அதற் பொருட்டாகலின் :— கூழிற்குக் குற்றேவல் செய்யும், [6]வரிசைக்கு உழும் என்பன.

[6]நட்பின்:— அவற்கு நட்டான், அவற்குத்தமன் என்பன.

[7]பகையின்:— அவற்குப் பகை ; அவற்கு மாற்றன் என்பன.

[8]காதலின்: — நட்டார்க்குக் [9]காதலன், புதல்வற்கு அன்புறும் என்பன.

சிறப்பின்:— வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர், கற்பார்க்குச் சிறந்தது செவி [10]என்பன.

அப் பொருள் என்றது அதன் பொருள் ; அது அன்ன பிறவும் என்றவாறும். அது [11]இவ்வாடையும் அந் நூலால் இயன்றது என்றது போலக் கொள்க.

அப் பொருட் கிளவியும் என்றதனாற் பிணிக்கு மருந்து ; நட்டார்க்குத் தோற்றலை நாணுதோன்; அவற்குத் தங்கான் இவன்; உற்றூற்குரியர் பொற்றொடி மகளிர் ; இச் சொற்குப் பொருளிது; அவற்குச் சோறு உண்டு ; நினக்கு வலி வாள்; மக்கட்குப் பகை பாம்பு; இவ்வூர்க்கு அவ்வூர் காதம்; மணைக்குப்பாழ் வாணுதலின்மை என்பன கொள்க (கரு)

---

77 - 5 "கொத்தற்கு"

6 "நட்பில் அவற்றிற்கு"

7 "பகையில்"

8 "காதலில்"

9 "காதலின்"

10 "யென்னை"

11 "இவ்வூரடைய மன் னூலாலியன்றது"

78. ஐந்தாகுவதே,
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனி னிற்றிது வென்னு மதுவே.

எ - து.— மேல் இன் எனப் பெயர் கொடுத்து ஓதப்பட்ட வேற்றுமைக் கிளவி ஐந்தாவதாம். அஃது இப் பொருளின் இத் தன்மைத்து இப் பொருள் என்னும் பொருண்மையை உணர்த்தும்.

ஐந்தாவது பொருவும் எல்லையும் நீக்கமும் ஏதுவும் என்னும் நான்கு பொருண்மைத்து.

அவற்றுட் பொரு இருவகைப்படும்; உறழ் பொருவும் உவமைப் பொருவும் என.

உறழ்தல்: ஒன்றின் ஒன்றை மிகுத்தல்.

ஏதுவும் இருவகைப்படும், ஞாபக ஏதுவும் காரக ஏதுவும் என. அவற்றுள் ஞாபக ஏதுப் பொருண்மை மேலே கூறப்பட்டது. காரக ஏதுப் பொருண்மை அச்சம் ஆக்கம் என்பனவற்றாற் பெறப்படும்.

நீக்கப் பொருண்மை:- தீர்தல் பற்றுவிடுதல் என்பனவற்றாற் பெறப்படும்.

ஏனை இரண்டும் இதனினிற்றிது என்பதனாற் கொள்ளப்படும்.

அவ் விரண்டினையும் அஃது இருமுறையான் உணர்த்தும் ஆகலான். எல்லைப் பொருள் - கருவூரின் கிழக்கு இவ்வூர், இதனின் ஊங்கு [1]இது என வரும்.

கிழக்கு ஊங்கு என்பன, அவை வினைக் குறிப்பல்லவேனும் இற்றென்னும் பொருள்பட [2]நிற்றலின் இற்று என்றலேயாம்.

பொருஉப் பொருட்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும். (கஅ)

---

78-1 "எது"

2 "நிற்றலினற்றென்றலேயாம்"

79. வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை யச்ச மென்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்றா
முதுமை யிளமை இறத்த லிழித்தல்
புதுமை பழமை யாக்க மென்றா
யின்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவு மதன்பால வென்மனார்.

*எ - து :*—வண்ணம் *முதலாகப்* பற்று விடுதல் *ஈறாகச் சொல்லப்பட்டனவும் அவை போல்வன பிறவும் ஐந்தாம் வேற்றுமைத் திறத்தனவாம் என்று கூறுவர்.*

*வண்ணம் :-* வெண்மை கருமை *முதலாயின,*
*வடிவு :-* வட்டம் சதுரம் *முதலாயின,*
*அளவு :-* நெடுமை குறுமை *முதலாயின,*
*சுவை :-* கைப்பு புளிப்பு *முதலாயின.*
*நாற்றம் :-* பூதி (?) நாற்றமும் ... நாற்றமும் *முதலாயின.*

*உ - ம்:*—

காக்கையிற் கரிது களம்பழம் *என்புழி* [1]*இதனின் என்பது காக்கையின் ; இற்றென்பது கரிது ; இது என்பது* களம் *பழம்:*— இதனின்வட்டம் இது, இதனின் நெடிது இது, இதனி[2]ற் றீவிது இது, இதனிற்றண்ணிதிது, இதனின் வெய்யதிது, இதனின் நன்றிது, இதனிற் [3]றீதிது இதனிற் சிறிதிது, இதனிற் பெரிதிது, இதனின் வலிதிது, இதனின் மெலிதிது, இதனிற் கடிதிது, இதனின் முதிதிது, இதனினிளைதிது, இதனிற் சிறந்ததிது, இதனினிழிந்ததிது, இதனிற் புதிதிது, இதனிற் பழைதிது, இவனின் இலனிவன், இவனின் உடையனிவன், இதனினாறுமிது, இதனிற்பலவிவை, இதனிற் சில்லிவை *இவற்றிற்கு இருவகைப் பொருளும் விரிக்க.*

---

79 - 1 "இந்தனிற்"
2 "றீதிது"
3 "றீது"

அச்சம் :- **கள்ளரின் அஞ்சும்,**

ஆக்கம் :- **வாணிகத்தானாயினான்,**

தீர்தல் :- **ஊரிற் றீர்ந்தான், தலையினிழிந்த மயிரனையர்.**

பற்றுவிடுதல் :- **காமத்திற் பற்றுவிட்டான்** என வரும்.

அன்ன பிறவும் என்றதனால், அவனின் வள்ளியனிவன், அதனிற் சேய திது, இகழ்ச்சியிற் கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்றான் என்பன போல்வன கொள்க.

அவற்றுள் பொரூஉப் பொருள் பெருஞ் சிறப்பிற்றாகலான் முன்வைத்துப் பல வாய்பாட்டான் விரித்தார். (கஎ)

80. ஆறாகுவதே,
அதுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதன திதுவெனு
[1]மன்ன கிளவிக் கிழமைத் ததுவே.

எ - து :—மேல் அது என்று பேர் கொடுத்து ஓதப்பட்ட சொல் ஆறாவதாம். அது ஒரு பொருளினது உடைமைப் பொருளாய் நிற்கும் தன்னோடொற்றுமையுடைய பொருளானும் ஒரு பொருளினது உடைமைப் பொருளாய் நிற்கும் தன்னின் வேறாகிய பொருளானும் இப்பொருளினுடையது இப் பொருள் என்பது பட நிற்கும். **அன்ன கிளவியாற்** றோன்றும் கிழமையைப் பொருளாக வுடைத்து.

தன்னினும் பிறிதினுமாகிய கிழமைத்து என்றது **இதனதிது எனு மன்ன கிளவிக் கிழமைத்து** என்றது என்னை, பொருட் கிழமையும் பண்புக் கிழமையும் தொழிற் கிழமையும் அவை போல்வன பிறவும் எனக் கிழமை தாம் பலவற்றுள் ஒன்று சுட்டாது இதனதிது என்னும் சொல்லால் தோன்றும் கிழமை மாத்திரம் சுட்டும் என்றற்கு **இதனதிது வெனு மன்ன கிளவிக் கிழமைத்து** என்றார்.

---

80 - 1 "மன்னக்கிளவி"

ஒருமை மாத்திரம் அன்றி இதன இவை என்னும் பன்மையுருபுத் தொடரும் அடங்குதற்கு அன்ன கிளவி என்றார்.

உ - ம் :—

**சாத்தனது ஆடை, தனது வென்வேல், வானவன் கோல்லிமிசை எனவரும்.**

தற்கிழமை ஐந்து வகைப்படும். அவை, ஒன்று பல குழீஇயதும், வேறு பல குழீஇயதும், ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய்திரிந்தாகியதும் என,

**ஐம்பாலுமமையு மன்றதற்கிழமை**

என்பது அகத்திய மாதலின்.

இனி, பிறிதின்கிழமை மூவகைப்படும். பொருளின் கிழமையும் நிலத்தின் கிழமையும் காலத்தின் கிழமையும் என.

இவற்றிற்கு உதாரணம் :- முன்னர்க் காட்டுதும். (மஅ)

**81. இயற்கையி [1] னுடைமையின் [2] முறைமையிற் கிழமையிற்**
**செயற்கையின் முதுமையின் வினையி னென்று**
**கருவியிற் றுணையிற் கலத்தின் முதலி**
**னொருவழி யுறுப்பிற் குழூவி னென்று**
**தெரிந்துமொழிச் [4] செய்தியின் நிலையின் வாழ்ச்சியிற்**
**றிரிந்து வேறுபடும் பிறவு மன்ன**
**கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி**
**யாறன் பால வென்மனார் புலவர்.**

உ - ம் :—

குழூவின் : எள்ளது குப்பை, இது ஒன்று பல குழீஇய தற்கிழமை, படையது குழாம், இது வேறுபல குழீஇய தற்கிழமை, இது யானை தேர் குதிரை காலாள் ஆதலால் வேறாயிற்று.

---

81-1 "னுடைமை (பின்னும் இவ்வாறே ஆம்)

2 "முறமை" (பின்னும் இவ்வாறே ஆம்)

3 "யுருப்பிற்"

4 "செய்தி நிலையின்"

இயற்கை :- சாத்தனது இயற்கை [5]நிலத்தது அகலம் என்பன ஒன்றியற்கிழமை.

நிலை:-சாத்தனது நிலைமை [6]சாத்தனது இல்லாண்மை, என்பன நிலைக்கிழமை. இவையும் ஒன்றியற்கிழமை.

உறுப்பு:- யானையது கோடு, புலியது உகிர், என்பன உறுப்பின்கிழமை, உறுப்பாவது ஒரு பொருளின் ஏக தேசம் என்பது அறிவித்தற்கு [7]ஒருவழியுறுப்பு என்ருர்.

செயற்கை :- சாத்தனது செயற்கை, சாத்தனது [8]கற்றறிவு என்பன செய்கைக் கிழமை, அது தன்மை திரிந்து வேருர் தன்மையாதல்.

முதுமை :-அரசனது முதுமை, அரசனது முதிர்வு என்பன முதுமைக் கிழமை, முதுமை என்பது பிறிதோர் காரணம் பற்ருது காலம்பற்றி ஒருதலையாகப் பொருட்கட் டோன்றும் பருவம் ஆதலிற் செயற்கையுள் அடக்காது வேறு கூறினர்.

வினை :- சாத்தனது தொழில் சாத்தனது செலவு, என்பன வினைக்கிழமை, இவை மெய்திரிந்தாகிய தற்கிழமை,

உடைமை சாத்தனதுடைமை சாத்தனது தோட்டம் என்பன உடைமைக் கிழமை.

முறைமை :- மறிய தாய், மறியது தந்தை என்பன முறைமைக் கிழமை,

கருவி:- இசையது க வி வனை கலத்தது திகிரி என்பன கருவிக்கிழமை.

துணை:-அவனது துணை; அவனது இணங்கு என்பன துணைக்கிழமை.

கலம் :-கலமாவது ஒலை நிலத்தது ஒற்றிக்கலம் சாத்தனது விலைத்திட்டு என்பன கலக்கிழமை,

முதல் :- ஒற்றியது முதல், ஒற்றியது பொருள் என்பன முதற்கிழமை.

---

81 - 5 "நிலத்தது கலம்"

6 "சாத்தனில்லாண்மை"

7 " .... யுறுப்

8 "கறிவு"

தெரிந்து மொழிச் செய்தி :-கபிலரது பாட்டு ; தெரிந்து மொழியாற் செயப்படுதலின் தெரிந்து மொழிச் செய்தியாயிற்று.

பரணரது பாட்டியல் [9]என்பன செய்திக் கிழமை. இவை பாரியது பாட்டு எனவும் நிற்றலின் இரு பொருட்கு உரியவாம். இவை பொருட் பிறிதின் கிழமை.

கிழமை :- முருகனது குறிஞ்சி நிலம் வெள்ளியது ஆட்சி என்பன கிழமைக்கிழமை. இவை முறையே நிலப்பிறிதின் கிழமையும் காலப் பிறிதின் கிழமையும்.

வாழ்ச்சி :- காட்டதியானை இது [10]பொருட் பிறிதின் கிழமை. யானையது காடு இது நிலப்பிறிதின் கிழமை. இவ் வாழ்ச்சி வாழ்தலை உணர்த்துங் கால் தற்கிழமையுமாம்.

திரிந்து வேறு படூஉ மன்ன பிறவும் என்றதனான், [11]எட் சாந்து கோட்டு நூறு என்பன முழுவதூஉந் திரிந்தன.

[12]சாத்தனது ஒப்பு தொகையது விரி, பொருளது கேடு சொல்லது பொருள், இவை சிறிது திரிந்தன, இவ் வாய்பாடுகள் மேற் சொல்லப்பட்ட தற்கிழமை பிறிதின் கிழமை என்பனவற்றை விரித்தவாறு அறிக. (௮௧)

82. ஏழாகுவதே,
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினை[1]செய் யிடத்தி னிலத்திற் காலத்தின்
[2]அனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே.

---

81-9 (என்பது முதலியன என்ற பொருளில் என்பன என்பது வருவது காண்க. இல்லையேல் என்பது என்று இருத்தல் வேண்டும் அல்லது மற்றோர் உதாரணம் விடுபட்டிருத்தல் வேண்டும். கபிலரது பாட்டு இரண்டாவது பாட்டில் என்றும் கொள்ளலாம்)

10 "பொதுப்"

11 "எட்டுச்சாந்து"

12 சாத்தனதேர்புரவி"

82-1 "செயலிடத்தி"

2 "மூவகை"

எ - து:—கண் என்று பெயர் கொடுத்துஓதப்பட்ட வேற்றுமைச்சொல் ஏழாவதாம். அது வினை செய்யா நிற்றலாகிய இடத்தின் கண்ணும், வினை நிகழாது வரையறையுடையதோர் இடத்தின் கண்ணும் வினை நிகழாது வரையறைப்பட்டு நிற்கும் காலமாகிய இடத்தின் கண்ணும் என மூவகைக் குறிப்பின்கண்ணும் தோன்றும். எனவே ஏழாவது இடப்பொருட்டு ஆயிற்று.

உ - ம்:—

தட்டுப்புடைக்கண் வந்தான் மாடத்தின்கணிருந்தான் கூதிர்க்கண் வந்தான் என வரும். இவை இடமும் இடத்தினிகழ் பொருளும் வேறாய் வந்தன.

குன்றத்துக்கட் குவடு, இது அவ்இரண்டும் ஒன்றாய் வந்தது. குறிப்பிற் றோன்றும் என்றவற்றை இடம் எனக் கருதியவழி அவ்வேற்றுமை தோன்றும் இடமாகக் குறிக்கப்படாத வழி அப்பெயர்க்கண் அவ் வேற்றுமை தோன்றாது என்பதாம். (உ௰)

83. கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
அன்ன பிறவு மதன்பால வென்மனார்.

எ - து;—கண் என்னும் பொருளும் கால் முதலாகப் புடை ஈறாக ஓதப்பட்ட உருபுகளும் தேவகை யென்னும் திசைக் கூற்றுப் பொருண்மையும் முன் முதலாக இடம் ஈறாக ஓதப்பட்ட உருபுகளும் அவை போல்வன பிறவுருபுகளும் அவ் ஏழாவதன் கூற்றன என்று கூறுவர் புலவர்.

சிறந்த கண் எனுருபு முற்கூறி மீட்டுங் கண் என்பதனைச் சிறப்பில்லா வுருபுகளோடு எடுத்து ஓதினார்.

கண்ணகன் ஞாலம் என்புழி அக் கண் ஞாலந் தன்னையே உணர்த்தி ஓரிடத்தினை வரையறுத்து உணர்த்தாது நிற்பதோர் இடைச் சொல் என்பது உணர்த்துதற்கு தேவகை என்னும் பொருள் வரையறைபடாது சொல்லுவான் குறிப்பிற்றாய் நிற்றலின் நிலத்துள் அடக்கார் ஆயினார்.

அவ் இரண்டு பொருட்கும் வெவ்வேறோர் சூத்திரம் செய்யாது இவ்வுருபுகளுடனே ஓதினார், சூத்திரம் சுருங்குதற்கு ;

இச் சூத்திரத்தாற் கூறிய உருபுகள் ஓரிடத்தின் ஏக தேசத்தினை வரையறுத்து உணர்த்தும் வழி ஆறுருவதனை யுணர்த்தியும் ஓரிடத்தினை வரையறுத்து உணர்த்தாது, கண் என்பது போல இடம் என முழுதுணர்வு செல நின்றும் ஏழாவதனையே உணர்த்தியும் நிற்கும் சிறப்பின்மை கருதி வேறாக எடுத் தோதினார்.

உ - ம் :—

ஊர்க்கால் இருந்தான், ஊர்ப்புறத்து இருந்தான், மாடத்தகத்து இருந்தான், ஊருள் இருந்தான், சான்றருழைச் சென்றான், மாடத்துக்கீழிருந்தான், மாடத்து மேலிருந்தான், ஏர்ப்பின் சென்றான், காட்டுச்சார் ஓடுங்களிறு, ஊரயல் இருந்தான், ஊர்ப்புடை இருந்தான், வடக்கண் வேங்கடம், தெற்கட் குமரி, கீழ்க்கட்கடல், மேற்கண் மலை, தேர்முன் சென்றான், சான்றரிடை இருந்தான் கோயிற்கடைச் சென்றான். தந்தைதலைச் சென்றான், கையிடத்துள்ளது கொடுக்கும், கையிடத்துப் பொருள்.

அன்னபிறவால் வருவன :—குடத்திலே விளக்கு, ஊரிலேயிருந்தான், கிழவோடேத்து, கிழவி மாட்டு எனவும் பொருட்கண் ணுணர்வு, மலர்க்கணுற்றம், ஆகாயத்துக்கட் பருந்து எனவும் வரும்.

இன்னும் மணியின்கணொளி, கையின்கண் விரல், நிறத்தின்க ணெழில், ஆடற்கணழகு, எனக் கிழமையும் சினையும் பண்பும் வினைப் பெயரும் பற்றி வரும்.

இனிக் கண் கால் முதலியன உருபை விளக்குதற்கு அவ் வுருபின் பொருளாய் நின்று கண்ணெனுருபு விரித்துக்கொண்டு நின்ற நேரின் கண் என்னும் பொருளாவது, கண் என்னும் இடைச் சொல்லான் உணர்த்தப்படும் இடப் பொருண்மை என்று பொருளுரைத்தாற் பின் வருகின்ற இடப் பொருண்மையை முன்னும் கூறிற்றேயாம் ; ஆதலிற் கூறியது கூறிற்றேயாம். அல்லதூஉங் கண்ணகன் ஞாலம் என்புழிக்

**கண்** என்னும் இடைச்சொல்லான் உணர்த்தவே இடப்பொருண்மை குறிக்குமிடத்துக் கண்ணே, கண்ணென் உருபு மீட்டுங் கூறல் வேண்டும்.

அல்லதூஉம் **கண்ணின்றுகூறுத லாற்ரு னவ[1]னுயின்** என்புழி **என்கணின்று** எனத்தோன்ரு எழுவாய் நின்று கண்ணெனுருபு ஏற்று நின்றதாம்.

அல்லதூஉம் **வடக்கண் வேங்கடம்** என்புழிக் கண்ணெனுருபு விரித்தலின் ஒழிந்தவற்றிற்கு ஒவ்வாவாம்.

அல்லதூஉம் **மரத்தின் கீழ்க்கிடந்தவர் மரத்தின் மேலிருந்த குரங்கு** என்பன முதலியவற்றிற்குக் கண்ணெனுருபு கொடுத்து உலகம் வழங்காமையு முணர்க.

ஆதலாற் கண் கால் புறம் அகம் உள் என்பன முதலாயினவற்றது பொருள் வேற்றுமை வழக்கு நோக்கி யுணர்ந்து கொள்க.

ஆசிரியர் கூறிய முறைமையின் உருபு இறுதியும் இடையும் என்னும் சூத்திரங்களாற் பெயர் இறுதிக்கு முடிக்கும் சொற்கு முன்னுற நிற்பது உருபு என்று கூறினமையானும் பொருளிடை நில்லாமையும் பெற்றும். உருபிற்குப் பின்னே அத்துச்சாரியை கொடுத்துமுடிந்தது **பிறிதவணிலையலும்** என்பதனுற் கொள்க.

இச் சூத்திரம் ஏழாவதற்கு மூவகைப் பொருட் பாகுபாடன்றி வேறு பொருட் பாகுபாடின்மையின் முன்னையன போலப் பொருளினைப் பகுத்தோதாது உருபின் பாகுபாடே கூறியவாறும். (உக)

**84. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை**
**ஈற்றுநின் றியலுந் தொகைவயிற் [1]பிரிந்தே**
**பல்லாறாகப் பொருள் புணர்ந் திசைக்கு**
**மெல்லாச் சொல்லு முரிய வென்ப.**

எ - து :—வேற்றுமைத் தொகையை விரிக்குமாறும் அதற்கினமாகிய அன்மொழித் தொகையை விரிக்குமாறும் கூறுகின்ருர்.

வேற்றுமைத்தொகையினின்ற பொருளை பண்பென்றித் தொகையினின்ற பொருளை விரிக்கும் காலத்து அவ்வேற்றுமைப்

83-1 "ஞயினன்"
84-1 "பிரிந்து"

பொருளொடும் அன்மொழிப் பொருளொடும் புணராது பல நெறியாகப் [1]பிரிந்து ஒலிக்கும் எல்லாச் சொல்லும் விரித்தற்கு உரிய என்று கூறுவர் ஆசிரியர்.

அன்மொழித் தொகை ஏனைத் தொகைகளின் இறுதியினின்றியலலின் ஈற்று நின்றியலுமென்றார்.

உ-ம் :—

**கருங்குழற்பேதை, பொற்றொடியரிவை, மட்குடம்** என்னும் வேற்றுமைத் தொகைகள் கருங்குழலையுடைய பேதை, பொற்றொடியை யணிந்தவரிவை, மண்ணாலியன்ற குடம் என விரிந்தவாறும், தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம் என்னும் அன்மொழித்தொகைகள் தாழ்குழலையுடையாள், பொற்றொடியை யணிந்தாள் மண்ணாகிய காரணத்தானியன்றது என விரிந்தவாறும் காண்க.

“ஈற்று நின்றியலுந் தொகைவயின் வேற்றுமைப் பொருளை விரிக்குங்காலை” “ஈற்றினின்றியலுந் தொகைவயிற் பொருளை விரிக்குங்காலை” எனவும் கூட்டுக. [2]சேனாவரையர் கருத்தும் உரை ஆசிரியர் கருத்தும் இரு திறத்தனவாக மேலே கூறுமாறு காண்க.

வேற்றுமைப்பொருளை ... ... ... ... ... ... உரிய வென் என்பது :— மேல் வேற்றுமை விரிந்து நிற்குமாறு கூறினார். இதனால் தொக்குழிப்படுமாறு கூறுகின்றார் :— வேற்றுமை தொக்குழி அவ் வேற்றுமையை விரிக்குமிடத்து அவ் வேற்றுமையேயன்றி ஆண்டுப் பிற சொற்களும் உள ; அவ் வேற்றுமைபோல, வந்து ஒட்டி நிற்பன அவையெல்லாம், வேற்றுமையேபோல ஆண்டே தொகுத்தலும் பின் விரித்தலும் உரிய என்பர்.

உ-ம் :—

**குதிரைத் தேர்** என்புழி குதிரையாற் பூட்டப்பட்ட தேர் என விரியும். ஆன் என்பதுருபு. பூட்டப்பட்ட என்பன பிற சொற்கள். அவையும் தொக்கும் விரிந்தும் நின்றன. **கருப்பு வேலி** என்பதும் அது.

பல்லாறாகப் பொருள் புணர்ந்திசைக்கும் என்பது அங்ஙனம் வேற்றுமைப் பொருட்கு ஏற்ப வந்து ஒட்டுவன பலவும் ஒட்டுதற்கு உரிய.

---

84 - 2 “இக் கருத்துச் சேனாவரையரும் உரை”

இன்னுமோர் கருத்து :- வேற்றுமை தொக்கது விரிக்குமிடத்து ஒருவகைப் பொருளன்றிப் பலவகைப் பொருளும் அச் சொற் பற்றி ஒட்டப்படும் எல்லாச் சொற்கும் உரிய ஆகும்.

உ - ம் :—

நீர் நீந்துடும்பு என்புழி நீரை நீந்துடும்பு, நீர்க்குள் நீந்துடும்பு, நீரினீந்துடும்பு, நீருள் நீந்துடும்பு எனப் பலவகைப் பொருளும் பட நிற்கும். ஒரு தொகை என்பது, குரங்கெறி விளங்காய், இலைமறைகாய் என்பனவும் பல பொருள்பட விரித்துக் காண்க.,

பிறவு மன்ன. (உ௨)

[3] வேற்றுமையியல் உதாரணம் முற்றும்.

1. "வேற்றுமையியல் முற்றும் வாணி துணை"

# வேற்றுமை மயங்கியல்

85. கருமமல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.

எ - து:—இரண்டாவது கருமச்சார்பும் கருமமல்லாச் சார்பும் என இரண்டு வகைத்து. அவ்இரண்டினுள் கருமச் சார்ச்சியல்லாது வருஞ் சார்பு என்னும் பொருண்மைக்கு ஏழாம் வேற்றுமை உரித்தாதலும் உரித்து.

உ - ம்:—

தூணைச்சார்ந்தான் என்பது கருமச்சார்பு, அதனை மெய்யுறச்சார்தலாற் கருமம் ஆயிற்று. அரசரைச் சார்ந்தான் என்பது கரும மல்லாச் சார்பு, ஆண்டு மெய்யுறுதற் றொழிலின்மையாற் கருமம் இல்லையாயிற்று. இனிக் கருமச்சார்ச்சி யல்லாதவிடத்து இரண்டாவதும் ஏழாவதும் மயங்கும்.

உ - ம்:—

அரசரைச் சார்ந்தான் அரசர்கட் சார்ந்தான் என வரும்.

உம்மையாலிது சிறுபான்மை. (க)

86. சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்
வினைநிலை யொக்கும் என்மனார் புலவர்.

எ - து:—சினைப்பொருண்மேல் நிற்குஞ் சொல்லிற்கு இரண்டாவதும் ஏழாவதும் [1]வினைகூறு நிலைமைக்கண் ஒக்கும் என்பர்.

[2]உ - ம்:—

கோட்டைக் குறைத்தான், கோட்டின்கட் குறைத்தான் என்பது. (உ)

87. கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே.

எ - து:—கன்றற்குஞ் செலவிற்கும் வருந்தொழில் ஏழாவதற்கும் ஒக்கும்.

---

86 - 1; "வினைக் கூறு"

2. "ரணம்" இவ்வாறே பின்னும் உள்ளது உதா என்ற எழுத்துக்கள் மூல ஓலையில் செல் அரிக்கப் பெற்றன போலும்.

உ - ம் :—

சூதினைக் கன்றினன், சூதின்கட் கன்றினன், நெறியைச் சென்றான், நெறிக்கட் சென்றான் என வரும். (௩)

88. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே.

எ - து :—முதற் சொல்லொடு தொடர்ந்த சினைச் சொல்லிற்கு ஆறாவது முதற்கண்வரின் இரண்டாவது சினைக்கண் வரும்.

உ - ம் :—

யானையது கோட்டைக் குறைத்தான் என வரும். முதல் யானை, சினை கோடு. (௪)

89. முதன்மு னைவரிற் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருத றெள்ளி தென்ப.

எ - து :—அம்முதற் சினைக்கண் முதன்முன் இரண்டாவது வரின் சினைக்கு ஏழாவது வருதல் தெள்ளிது என்பர்.

உ - ம் :—

யானையைக் கோட்டின்கட் குறைத்தான் என வரும்.

தெள்ளிது என்றதனால் யானையைக் கோட்டைக் குறைத்தான் என இரண்டாவது தானேயும் வரும் என்பது. (௫)

90. முதலுஞ் சினையும் பொருள் வேறுபடாஅ
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே.

எ - து :—முதலாயது முதலேயாய்ச் சினையாயது சினையேயாய்ப் பொருள்கள் தம்முள்வேறுபட நில்லா, சொல்லுங்காற் சொல்லுவானது குறிப்பினானே முதல் என்றும் சினை என்றும் வழங்கப்படும்.

உ - ம் :—

கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டது நுனிக்கட் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான் என வரும்.

ஒரு முதலினது சினையை முதலாகக் குறித்த வழி அதுதான் முதலாய் நிற்கும் என்பது கருத்து. (௬)

91. பிண்டப் பெயரு மாயிய றிரியா
பண்டியன் மருங்கின் மரீஇய [1]பண்பே.

எ - து :—பலபொருட் டொகுதியாய் வரும் பிண்டப் பெயரும் முதலும் சினையுமாய் வரும் இயல்பிற் றிரியா; முன் முதலும் சினையுமாக வழங்கிவாரா நின்ற முறைமையை யுடைத்து.

உ - ம் :—

குப்பையது தலையைச் சிதறினான்; குப்பையைத் தலைக்கட் சிதறினான்; குப்பையைத் தலையைச் சிதறினான் என வரும்.

இது வேறு பல குழீஇய படை முதலியவற்றிற்கும் ஒக்கும். (எ)

92. ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே.

எ - து :—இரண்டு பொருட்கு ஒரு வினைகொண்டு வரும் மூன்றாமுருபு உயர்பு பற்றி வரும்.

உ - ம் :—

அரசரொடு வந்தார் சேவகர் என வரும்.

உயர்பின் வழித்தென்றதனால் குலத்தானும் தவத்தானும் ஞானத்தானும் கல்வியானும் வீரத்தானும் உபகாரத்தானும் உயர்பு கொள்க.

நூற்றுவர் மக்களொடு வந்தார் நாடு காப்பானரசன் எனவும்,

நாயொடு வந்தான் நம்பி எனவும் வருவன உபகார உணர்ச்சி என்க. (அ)

93. மூன்றனு மைந்தனுந் [1]தோன்றக் கூறிய
வாக்கமொடு புணர்ந்த வேதுக் கிளவி
நோக்கோ ரனைய வென்மனார் புலவர்.

எ - து :—மூன்றாம் வேற்றுமைக்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக் கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கத்தோடு கூடிய ஏதுப்பொருண்மையை நோக்கும் இடத்து அவ்இரண்டும் ஈண்டு ஒத்த பொருளவாம் என்பர்.

---

91 - 1. "மரபே"
93 - 1. "தோன்றி"

உ - ம் —

வாணிகத்தா னாயினான்; வாணிகத்தி னாயினான் என வரும். (கூ)

94. இரண்டன் மருங்கி [1]னோக்க னோக்கமவ்
விரண்டன் மருங்கி னேதுவு மாகும்.

எ - து :—இரண்டாவதற்குக் கண்ணால் நோக்கும் நோக்கம், மனத்தால் நோக்கும் நோக்கம் என நோக்கம் இரண்டு வகைப்படும். அவ்விரண்டனுள் மனத்தால் நோக்கும் நோக்கிற்கு மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரிய ஏதுப் பொருண்மையுமாம்.

உ - ம் :—

வானோக்கி வாழும் என்புழி வானை நோக்கி வாழும் என இரண்டாவது விரியும். அவ்வழி வானானாய பயனைக் கருதி வாழும் எனவும், வானினாய பயனைக் கருதி வாழும் எனவும் மூன்றாவதும் ஐந்தாவதும் ஏதுவின்கண் ஒத்தன. நோக்கல் [2]நோக்கமாவது நோக்கல்லாத நோக்கம்; பொறியால் நோக்கும் நோக்கமன்று. மனத்தால் நோக்கும் நோக்கம் என்ப. (ய)

95. அதுவென் வேற்றுமை யுயர்திணைத் [1]தொகைவயி
னதுவெ னுருபுகெடக் குகரம் [2]வருமே.

எ - து :—ஆறாம் உருபும் உயர்திணைக்கண் விரியுழி அது என்னும் உருபு கெட்டுக் குகரம் வரும்.

உ - ம் :—

நம்பி மகன் என்னுந் தொகை நம்பியது மகன் என்னாது நம்பிக்கு மகன் என விரிந்து வரும். நம்பியது மகனெனின் ஆவினது மகனென்றாற் போல வழுவாமாறு காண்க. (கக)

96. தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயி னான.

எ - து :—தடுமாறு தொழிற் பெயர்ப் [1]பொருட்கு இரண்டாவதன் பொருளும் மூன்றாவதன் பொருளும் கடியப்படா, ஒக்கும்.

---

94 - 1. "னோக்கு நோக்கமவ்."
2. "நோக்கமாறு"
95 - 1. "தொகையி"
2. "வரும்"
96 - 1. "பொருட்டு"

உ - ம் :—

புலி கொல் யானை என வரும், என்புழி புலி செயப்படு பொருளாயவழி இரண்டாவதும், புலி வினை முதலாயவழி மூன்றாவதும் விரியும். அது புலியைக் [2]கொன்ற யானை; புலியால் கொல்லப்பட்ட யானை என வரும்.

[3]தடுமாறு தொழிற்கு ஒத்த தொழில் இரண்டற்கும் சேறல். (கஉ)

97. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேறுமை தெரிப வுணரு மோரே.

எ-து:—த(டு)மாறு தொழிலொடு புணர்ந்த இருவகைப் பொருளின் இறுதிப் பெயர் முன்னர் வந்த பொருள் வேறுபாடு உணர்த்தும் சொல்லான் அப் பொருள் வேற்றுமை தெரிவர் உணர்வோர். மெய்யறிபனுவல், பொருள் வேறுபாடு உணர்த்தும் சொல், ஈற்றுப் பெயர் யானை.

உ - ம் :—

புலிகொல்யானைக்கோடு வந்தன எனில், புலியாற் கொல்லப்பட்ட யானை என்பது விளங்கும், புலி கொல் யானை ஓடுகின்றது எனில் யானை புலியைக் கொன்றது என்பது விளங்கும். இது குறிப்பான் உணரப்படுமாறு காண்க. (கங)

98. [1]ஓம்படைக் கிளவிக் கையு மானுந்
தாம்பிரி விலவே தொகைவரு காலை.

எ - து :—பாதுகாத்தலாகிய பொருண்மைக்கு இரண்டாவதும் மூன்றாவதும் ஒத்த உரிமைய வேற்றுமை தொக்க இடத்து.

உ - ம் :—

புலி போற்றிவா என்புழி புலியைப் போற்றிவா என்று விரிப்பினும் அமையும்.

புலி போற்றி வா " வாழிலையய, ஒலிகூந்த னின்னல தியாருமிலன் " இதனுள்ளும் காண்க. (கச)

---

96 - 2. "கொல்யானை"

3, "தடுமாடு தொழிற் கொற்ற"

97 - 1. "சேம்படை"

99. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்
கேழு மாகு முறைநிலத் தான.

எ - து:—ஆறும் வேற்றுமைக்கு ஓதிய வாழ்ச்சிக் கிழமைக்கு உறைநிலப் பெயர் நிலைமொழியாயவழி ஏழாவதும் வரும்.

உ - ம்:—

காட்டதி யானை-காட்டுள் யானை என வரும்.

அந்நிலத்து வாழ்வதனை அதனதெனப்படும். அது பத்துக்கோடாகயுண்டா யஃதின்றி வீடின் வாழ்தல் இல்லாமையின் என்பது. (௯௫)

100. குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி
யப்பொரு ளாறற் குரித்து மாகும்.

எ - து:—நான்காம் வேற்றுமைத் தொகைக்குக் கொடையெதிர்ந்து நின்றவழி ஆறுவது கொடுத்துச் சொல்லவும் அமையும்.

உ - ம்:—

நாகர் பலி, நாகர்க்குப் பலி, என விரியும். நாகரது பலி என்றுருவதூஉமாய் விரியும். நாகர்பலி நாகர்க்கு நேர்ந்த பலி எனவே பிறர்க்காகாது அவருடைமை யாயிற்றாகலின் ஆறுவதும் உரித்தாயேற்றது.

சாத்தற்கு நேர்ந்த சோறு என்புழி அது பிறர்க்கு மாதலின் ஆண்டு ஆறுவது ஏலாது.

தெய்வமல்லாத சிறந்தாற்கு நேர்ந்ததேல் ஆண்டு ஆறுவது வரினும் அமையும். (௯௬)

101. அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயி னான.

எ - து:— அச்சப் பொருளுக்கு ஐந்தாவதும் இரண்டாவதும் ஒத்த கிழமைய, வேற்றுமை தொக அவற்றின் பொருள் நின்ற வழி.

உ - ம்:—

புலியஞ்சும் என்பது புலியினஞ்சும், புலியையஞ்சும் என இரண்டும் ஏற்று விரியும், எச்சமில ; மிகுதிக் குறைவுபடாது இரண்டும் ஒக்கும்.

கள்ளரினஞ்சும் என்பது; அவரினும் மிக அஞ்சும் என்பதூஉம் படும்; அது கொள்ளற்க, கள்ளரினாய ஏதமஞ்சும் என்பது கொள்க. (௱௧)

102. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினு மெய்தடு மாறி
யிருவயி னிலையும் வேற்றுமை யெல்லாந்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே.

எ - து:—மேன் மயக்கம் கூறப்பட்ட வேற்றுமையே அன்றி அவை போல்வன பிறவும் தொன்று தொட்டுவரும் வழக்கிற் பிழையாது உருபானும் பொருளானும் ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று பிறிதொன்றன் பொருளும் தன் பொருளுமாகிய ஈரிடத்தும் நிலை பெறும் வேற்றுமை யெல்லாம் திரிபுடைய அல்ல தெரிந்துணர்வோர்க்கு.

உ - ம்:—

புலிபோற்றிவா என்பது புலியைப்போற்றிவா என இரண்டாவதனுருபும் அதன் பொருளும் சென்றது, புலியானாய ஏதம் போற்றிவா என மூன்றாவதனுருபும் அதன் பொருளும் சென்றது. நம்பிக்கு மகனென்புழி உருபே சென்றது அவ்வுருபின் பொருட் சென்றதில்லை எனின், உருபினும் பொருளினும் மெய்தடுமாறி என்றதனால் உருபு சென்றவழி அவ்வுருபின் பொருளும் செல்லும் என்றே கொள்க.

பிறவும் என்றதனால் நோயினீங்கினான், நோயை நீங்கினான், சாத்தனை வெகுண்டான் எனவும், முறைக்குத்து குத்தினா னென்பது முறையிற் குத்தினான், முறையாற் குத்தினான் என விரியும். கடலொடு காடொட்டாது [1]கடலைக் காடொட்டாது, தந்தை யொடு சூளுற்றான், தந்தையைச் சூளுற்றான் என்றும்.

இவை யெல்லாம் தம்முருபினானும், பொருளினானும் உடன்சென்று தடுமாறி ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்றவாறுணர்க. (௱௨)

103. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
யொருசொல் நடைய பொருள்சென் மருங்கே.

எ - து:— பல உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைச்

102-1. "காடலைக் காலைகாட்டொட்டாது."

சொற்கள் இறுதியுருபு முடிந்த முடிபே தமக்கும் முடிபாகவுடைய பொருள் செல்லுமிடத்து.

உ - ம்;—

**யானையது கோட்டை நுனிக்கட்குறைத்தான்** என வரும்.

**உருபு தொடர்ந்தடுக்கிய** என்றதனால் ஒருருபு தொடர்ந்தடுக்கலும் கொள்க.

உ - ம்;—

[1]**என்னொடு-நின்னொடுஞ் சூழாது** எனவும்,

**அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்** எனவும் வரும். (மகூ)

**104. இறுதியு மிடையு மெல்லா வுருபு**
**நெறிபடு பொருள்வயி னிலவுதல் வரையார்.**

எ - து:—இறுதிக் கண்ணும் இடைக் கண்ணும் ஆறுருபும் தமக்கு ஓதிய பொருட்கண் நிற்றலை நீக்கார்.

உ - ம்:—

**கடந்தான் நிலத்தை, வந்தான் சாத்தனொடு, கொடுத்தான் சாத்தற்கு-வலியன் சாத்தனின், ஆடை சாத்தனது, இருந்தான் குன்றத்துக்கண்** என இறுதிக்கண் வந்தவாறு.

**நிலத்தைக் கடந்தான்; சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான், சாத்தனின் வலியன், சாத்தனதாடை, குன்றத்துக்கணிருந்தான்** என்பன இடைக்கண் நின்றவாறு. (உ௪)

**105. பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலும்**
**நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.**

எ - து:—ஓர் உருபு ஓர் உருபினை யேற்றலும் ஆறுருபும் தொக்கு நிற்றலும் நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்தென்பர். ஓர் உருபு ஓர் உருபை ஏற்கு முருபு ஆறும் உருபு, மற்றையன ஏலா. அஃது உருபு ஏற்புழித் தன்னை யொழிய அல்லனவற்றை ஏற்கும்.

---

103-1. நின்னொடு

உ - ம் :—

**சாத்தனதனை, சாத்தனதனொடு, சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதன் கண்** *என வரும்.*

**நிலங்கடந்தான்; தாய்மூவர்; கருப்புவேலி, வரைவீழருவி; சாத்தன்கை; குன்றக்கூகை,** *எனத் தொக்கு வந்தன.*

*[1]சாத்தன் தனது எனத்தன்னை ஏற்றலும் உரையிற்கொள்க.* **(௨௧)**

106. ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான.

*எ-து ;—இரண்டாவது வேற்றுமைப் பொருளும் [2]அல்லாத பிறபொருண்மே னின்ற உருபு தொடர்மொழி இறுதிக்கண் தொக்குநில்லா என அவ் இரண்டுருபும் இறுதிக்கண் தொக்கும் விரிந்தும் நிற்கும். அல்லாதன இறுதிக்கண் விரிந்தே நிற்கும்.*

உ - ம்:—

**கடந்தானிலம், கடந்தானிலத்தை இருந்தான் குன்றத்து, இருந்தான் குன்றத்துக்கண்,** *என இருவகையும் ஆயிற்று.* **வந்தான் சாத்தனொடு, கொடுத்தான் சாத்தற்கு, வலியன் சாத்தனின், ஆடை சாத்தனது** *என விரிந்து நின்றவாறு.* **(௨௨)**

107. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

*எ - து :—ஒரு சொல் யாதாம் ஓருருபினாற் கூறப்பட்டதாயினும் அவ்வுருபிற்குப் பொருளியை யாதவழிப் பொருள் செல்லும் பக்கத்துப் பொருந்தும் வேற்றுமையைச் சாரும்.*

உ - ம் :—

**கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற**
**முளையோரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்** *என்புழி நான்காவது கொள்ளாது* **மணலுளீன்றது** *என ஏழாவது கொள்க.*

---

105-1 *"சாத்தனது"*

106-1 *"கண்ணும"*

2 *"ஏழாவது வேற்றுமைப் பொருளும்" என்பது விடுபட்டது போலும்*

கொக்கினுக் கோழிந்த தீம் பழம் என்புழி, கொக்கினின்றும் என ஐந்தாவதன் பொருளாயிற்று. பிறவும் வந்த வழிக் காண்க. (௨௩)

**108. எதிர்மறுத்து மொழியினுந் தத்த மரபிற்**
**பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே.**

எ - து:—விதி முகத்தான் கூறுது எதிர்மறுத்துக் கூறினும் தத்தம் இலக்கணத்தான் வரும் பொருள் நிலை திரியா வேற்றுமை யுருபுகள்.

உ - ம்—

மரத்தைக் குறைத்தான் என்புழி மரத்தைக் குறையான் எனவும், வேலானெறிவான் என்புழி வேலானெறியான் என்றும் வரும்.

மற்றையவற்றையும் இவ்வாறே மறுத்து ஒட்டிக்கொள்க. (௨௪)

**109. கு ஐ ஆன் என வரூஉ மிறுதி**
**அவ் வொடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே.**

எ - து:— கு ஐ ஆன் என வரூஉம் மூன்று உருபும் தொடரிறுதிக்கண் நின்ற வழி அகரத்தொடு பொருந்தி நிற்றலுடைய செய்யுளுள்.

உ - ம்:—

கடிநிலை யின்றே யாசிரியற்க எனவும்; [1]காவலோனக் களிறஞ்சும்மே, களிறுமஞ்சுங் காவலோன எனவும், புரைதீர் கேள்விப் புலவரான எனவும் கு, ஐ,[2] ஆன் மூன்றும், அகரமாய் வந்தவாறு காண்க. (௨௫)

**110. [1]அவற்றுள்,**
**அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கிற்**
**குவ்வும் ஐயும் இலவென மொழிப.**

எ - து:....அஃறிணையிடத்துக் குவ்வும் ஐயும் அகரத்தோடேயாகா; மற்றையதற்கு அஃறிணைக் கண்ணும் உயர்திணைக் கண்ணும் அகரம் எய்தும்.

---

109-1 "காவலரெனக்"

2 "அவற்றுள்" என்ற வேண்டாச்சொல் இங்கு ஏட்டில் இருக்கிறது.

110-1 "அன்னபிறத்தல்"

உ - ம் :—

உள்ளம் போல வுற்றுழி யுதவும் புள்ளியற் கலிமா வுடைமை யான,

(புள்ளிதான் என அஃறிணைக் கண் நான்காவதோடு வந்தவாறு காண்க.?) (உ௬)

111. இதன திதுவிற் றென்னுங் கிளவியு
மதனைக் கொள்ளும் பொருள்வயி னானு
மதனாற் செயற்படற் கொத்த கிளவியு
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பி னாக்கமும்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியுந் தீர்ந்துமொழிக் கிளவியு
மன்ன பிறவு நான்க னுருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே.

எ - து :—இதனதிது இற்றென்பது முதலாகத் தீர்ந்து மொழிக்கிளவி ஈறாக [1]வருவன ஏனை யுருபுகளோடு நான்கன் உருபு மயங்குமாறு சொல்லியது.

இதனதிது விற்றென்பது: யானையது கோடு கூரிது என்பது. இதனுள் இதனென்பது யானை ; [2]அது ; இது என்பது கோடு ; இற்றென்பது கூரிது ; என்க.

இனி, யானையது கோடு கூரிது என்புழி யானைக்குக் கோடு கூரிது என்றும், அவளைக் கொள்ளு மிவ்வணி என்புழி அவட்குக் கொள்ளுமிவ்வணி என்றும்,

அதனாற் செயப்படற் கொத்த கிளவியும் :- அவனாற் செயத்தகுமக் காரியம் என்புழி அவற்குச் செயத்தகுங் காரியம் என்றும் ; வாயாற்றக்கது வாய்ச்சி என்புழி வாய்க்குத் தக்கது வாய்ச்சி என்றும் ;

முறைக் கொண் டெழுந்த பெயர்ச் சொல் கிளவியும் :- ஆவினது கன்று என்புழி ஆவிற்குக் கன்று என்றும்,

[3]பால்வரை கிளவியும் :- கருவூரின் கிழக்கு என்புழி கருவூருக்குக் கிழக்கு என்றும்,

---

111. 1 "வருமேனை"

2 "அது அது என்பது உருபு என்க."

3 "பால் வரைக்கிளவி"

பண்பினுக்கமும்:– சாத்தனின் நெடியன் என்புழி சாத்தற்கு நெடியன் என்றும்,

காலத்தினறியும் வேற்றுமைக் கிளவியும்:– மாரியின் வந்தான் என்புழி மாரிக்கு வந்தான் என்றும்,

பற்றுவிடு கிளவியும்:-ஊரிற் பற்றுவிட்டான் என்புழி ஊருக்குப் பற்றுவிட்டான் என்றும்,

தீர்ந்து மொழிக்கிளவியும்:-ஊரிற்றீர்ந்தான் என்புழி ஊருக்குத் தீர்ந்தான் என்றும், நான்காமுருபு வந்தவாறு காண்க.

அன்ன பிறவும் என்றதனால் ஊருட் சேயன்; காட்டுளணியன்: ஊரிற்பெரிது கருவூர், ஊருளூற்றது செய்யான் என்புழி நான்காவது கொடுத்துச் சொல்லுக. (௨எ)

112. [1]ஏனை யுருபு மன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான.

எ – து:—நான்கா முருபு அல்லாத பிறவுருபும் ஒன்றன் பொருள் சிதையாமல் மயங்குதல் குற்றமில்லை வழக்கு முறையால்.

உ - ம்:—

நூலது குற்றங் கூறினன், நூலைக் குற்றங் கூறினன், அவட்குக் குற்றேவல் செய்யும், அவளது குற்றேவல் செய்யும் என ஒன்றன் பொருட்கண் ஒன்று வந்தவாறு காண்க. (௨அ)

113. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
[1]வின்னதற் கிதுபய னாக வென்னு
மன்ன மரபி னிரண் டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே.

எ - து:—வினைப் பொருளையும் வினைச் சொல்லையும் தோற்றுவிக்கும், உண், தின், செல், கொல். வினை என்றது முதலாகிய வினையும் அவ் வினையைச் செய்யும் கருத்தாவும் கருத்தாவாற் செய்யப்படும் பொருளும் அது செய்யும் இடமும் அது செய்யும் காலமும் அது

112-1 "ஏனை யுருபு மன்னமரபின மானமில்லையே சொன்மறையான"

113-1 "இன்னுற்கிது பயம்"

செய்தற்குத் துணையாகிய கருவியும் ஆக ஆறும் [1]இன்னதற்கிது பயம்படும் என்று சொல்லப்படும் அத்தன்மைத்தாகிய முறைமையினை யுடைய இரண்டோடுந் தொக்குக் காரியத்திற்கு முன்னிற்கும் காரணம் அவ்வெட்டு என்று சொல்லுவர் ஆசிரியர்.

வனைந்தான் என்றவழி வனை என்னும் வினையும் வனைதற்குக் கருத்தாவும் வனையப்பட்ட குடமும் வனைதற்கு இடமாகிய நிலமும் அத் தொழி னிகழுங்காலமும் அதற்குக் கருவியாகிய திகிரி முதலியனவும் அதனைக் கைக்கொள்வானும் அதனைக் கொண்டதனாற் பெறும் பயனுமாக எட்டுக் காரணத்தானும் தொழில் நிகழ்ந்தவாறு காண்க. ஒழிந்தவற்றிற்கும் இவ்வாறு விரிக்க. இதனை வினையியலுட் கூறுது ஈண்டுக் கூறியது தொழில் வருங்கால் வேற்றுமையோடல்லது வாராது என்றற்கு.

அவை வருமாறு ;—

அட்டான் என்புழி சாத்தன் சோற்றைக் குழிசியாற் பார்ப்பார்க்கு (மச்சிநேர் கொண்டு?) கூரையுள் என்பது விளங்கும். இதனுள் எழுவாயும் இரண்டாவதும் மூன்றாவதும் நாலாவதும் ஐந்தாவதும் ஏழாவதும் வந்தவாறு காண்க. சோறு பார்ப்பாரதாதலின் ஆறாவதூஉம் வந்தது? பிறவுமன்ன. (உ௩)

114. அவைதாம்,
வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்.

எ - து :— மேற் சொல்லப்பட்ட எட்டும் உடன் விளங்காது வழக்கின்கட் சில தொழிற்கண் குன்றத்தகுவன குன்றி வரும்.

உ - ம்:—

கொடியாடிற்று.

இதனுள் செயப்படு பொருளும் இன்னதற்கு இது பயன் என்பதூஉம் குறைந்து வந்தது. பிறவுமன்ன. (உ௪)

115. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரு
மியன்றது மொழிதலு மிருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
யனைமர பினவே யாகுபெயர்க் கிளவி.

எ - து :—முதலிற் கூறும் சினையறி கிளவி முதலாக வினை முதலுரைக்குங் கிளவி ஈறுகக் கூறின ஏழும் ஆகு பெயர்ச் சொன் மரபின.

உ - ம் :—

முதலிற் கூறும் சினையறி கிளவி -: கடுத்தின்றுன், புளித்தின்றுன் என்பன.

சினையிற் கூறு முதலறி கிளவி:- இலை நட்டு வாழும், பூ நட்டுவாழும் என்பன.

இலைக் கொடி, பூமரம் நட்டு வாழ்வானை என்றறிக.

பிறந்த வழிக்கூறல் :- குழிப்பாடி, குழிப்பாடி என்னு மூரிற் பிறத்தலாற் குழிப்பாடி என்று ஆடைக்குப் பெயராயிற்று.

பண்பு கொள் பெயர் :- நீலம் சிவப்பு என்பன, பண்பொடு பொருந்தலாற் பொருட்கு அதுவே பெயராயிற்று.

இயன்றது மொழிதல் :—எறி, குத்து, வெட்டு என்பன. அவை பட்ட இடத்தையும் வடு முதலியவற்றுற் செய்கைப் பெயரவ ... கச் சொல்லுதல்.

இரு பெயரொட்டு பொற்றொடி; பொன்னும் தொடியும் ஆகிய இரண்டுமல்லாத தொடியாளை விளக்கும்மாகலின். வினைமுதலுரைக்குங்-கிளவி; தொல்காப்பியம், கபிலம்-இவ்வாடை, சேணிகன்-கோலிகன் என்பன.

ஆகு பெயர் என்பது ஒன்றன்பெய ரொன்றற்காய் நிற்றல். (நக)

116. அவை தாந்,
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலு
மொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலு
மப்பண் பினவே நுவலுங் காலை.

எ - து :—மேற்கூறப்பட்ட ஆகுபெயர்கள் தாம் தம் பொருளின் நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தலும் பொருத்தமல்லாத கூற்றால் நின்று பிறிது பொருளை யுணர்த்தலு-மாகிய அவ் இரண்டிலக்கணத்தை யுடைய சொல்லுமிடத்து.

கடு, புளி என்பன :-தத்தம் பொருள் வயிற்றம்மொடு சிவணல்.

குழிப்பாடி, நீலம், கோலிகன் என்பன, ஒப்பில் வழியாற் பிறிது-பொருள் சுட்டல். (நஉ)

**117. வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.**

[1]எ - து :—அவ் ஆகுபெயர்கள் ஐ முதலிய அறுவகை வேற்றுமைப் பொருண்மையிடத்தும் இயைபு உடைமையைப் பாதுகாத்தறியல் வேண்டும் ஆசிரியன். ... ... ... ... (௩௩)






117-1 "இச், எனின்"

